554

# ஒன்பது நகரக் கோயில்கள்

டாக்டர். வ. தேனப்பன்
M.A ,Ph.D.,P.G.D.H.E.,C.J.,C.I.A.,

தேன் வள்ளியம்மை பதிப்பகம்,
6, வெள்ளையன் ஊருணி வடக்கு,
தேவகோட்டை - 623 302.

ஒன்பது நகரக் கோயில்கள்
(Nine Nagarathar's Temples)

ஆராய்ச்சிக் கட்டுரை நூல்
(Research Book)

முதற் பதிப்பு
டிசம்பர் 1990


டாக்டர் வ. தேனப்பன்
M.A., Ph.D., P.G.D.H.E., C.J., C.I.A.
தமிழ் விரிவுரையாளர்,
ஸ்ரீ சேவுகன் - அண்ணாமலை கல்லூரி,
தேவகோட்டை (விரிவு) 623 303.

முகப்பு ஓவியம் : கனி

அச்சும் அமைப்பும் :
தெய்வம் அச்சகம்,
6, வெள்ளையன் ஊருணி வடக்கு,
தேவகோட்டை - 623 302.

பக்கம் : 474

விலை ரூ. 75

# அணிந்துரை

'தமிழண்ணல்'
முனைவர் இராம. பெரியகருப்பன்
ஆராய்ச்சிப்பேராசிரியர் (யு.ஜி,சி)
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை-625 021

நகரத்தார்கள் 'கோயிலைச் சார்ந்து வாழும் குடிமக்கள்.' அவர்கள் தங்கள் கோத்திரப் பிரிவுகளையே இவ்வாறு கோயில் களின்பேரால் அமைத்துக்கொண்டவர்கள், பரிமேலழகர்மூவேந்தர் களைப் பற்றி ''படைப்புக்காலந் தொட்டு சிறப்புற்று விளங்கிவரும் குடிகள்'' எனக் குறிப்பிடுவார். மன்னர் பின்னோராகிய நகரத் தாரும் 'பிள்ளையார்பட்டியார், வயிரவன்கோவிலார், இளையாத் தக்குடிக் கிங்கிணிக்கூருடையார், கழனிவாசற்குடியார், மாத்தூர்க் கோவிலார்' என இவ்வாறு குலமர கூறப்படுதலான், இவர்களும் 'படைப்புக் காலந்தொட்டு மேம்பட்டுவரும் குடிகளோ என எண்ணத் தோன்றுகிறது. முன்பு யான் **'நகரத்தார்மலர்'** என்ற மாத இதழில், **நா. இளங்கோவன்** எனும் அதனாசிரியர் கேட்டுக் கொண்டதற்கு இணங்க **'ஒன்பதுநகரக்கோயில்கள்'** பற்றித் தொடர்கட்டுரை எழுதினேன். இதற்காக **மீனாட்சி மைந்தர் வ. நா. சித. சிதம்பரம்** அவர்கள் தம் மகிழ்வுந்தினைத் தந்து, தமது மகனாரையும் துணைக்கு அனுப்பி, ஒன்பது நகரக் கோயில்களையும் ஒரே நாளில் சுற்றிப்பார்த்துவர உதவினார்கள். அதன் வழி யான் திரட்டிய குறிப்புகளை வைத்து அத்தொடரை எழுதினேன். அதற்கு முன்னரும் **'கோயிலைச் சார்ந்துவாழும் குடிகள்'** என யான் சில கட்டுரைகள் எழுதியதுண்டு. இதைப் பற்றித் தனியொருவர் தம் Ph. D. எனும் டாக்டர் பட்டத்திற்கு ஆய்வு செய்யலாமே என்ற எண்ணம் அப்போதே என்னுள் முகிழ்த்திருந்தது. அதனை மலரச்செய்து, மணம் பரப்பியவர் **டாக்டர் வ. தேனப்பன் ஆவார்.**

என்னிடம் ஆய்வு செய்ய எண்ணிய அவர், என் விருப்பத்தை ஏற்று, இச் சீரிய பணியைச் சிறப்புறச் செய்து நிறைவேற்றி யுள்ளார். இந்நூலைப் பார்வையிடுவாரும் படிப்பாரும் இவரது ஆர்வத்தையும் அயரா உழைப்பையும் துடிப்பையும் இதனுட் கண்டு மகிழ்வர்.

நகரக் கோயில்களின் பொது அமைப்பைத்தேடித் தொகுத்துத் தரும் இவர், ஒவ்வொரு கோயிலின் தனித்தனிச்சிறப்புக் கூறுகளையும்ஒன்றுவிடாமல்எடுத்துத்தருகிறார். 'நகரத்தார் திருப்பணி' 'நகரத்தார் கோயிற்கலை' என ஆராய விரும்புவார்க்கு அல்லது இவைபற்றி அறிந்துகொள்ள விழைவார்க்கு இந்நூல் சிறந்ததொரு 'பார்வை நூலாகப்' (Reference Book) பயன்படும். இங்குள்ள கல்வெட்டுகளைத் தேடிக்கண்டுபிடித்து, அவற்றின் உள்ளடக்கம் பற்றி விரித்துரைத்தல் குறிப்பிடற்பாலது. அக் கல்வெட்டு வாசகங்கள் அனைத்தும் இதனுட்தரப்பட்டுள்ளன. நூறு பேரை இவர் தம் ஆய்வு தொடர்பாகப் பேட்டி கண்டுள்ளார். இந் நூலின் பின்னிணைப்புகள் மிகவும் பயன்பாடு உடையன.

நகரக் கோயில்கள் எங்ஙனம் நீதிமன்றங்களாகவும் செயற்பட்டன, என இவர் ஆராயும் பகுதி மிகுந்த சிறப்புடையதாகும். அவற்றின் சமுதாயப் பயன்பாடு, நகரத்தார்களின் அறப்பணிச் சிறப்பு, கட்டிடக்கலைநுட்பம், நகரத்தார்தம் வரலாறு என இவர் இந்நூலுள் எடுத்துரைப்பன ஏராளமானசெய்திகளாகும். சிலைகள் சிற்பங்கள் அனைத்தையும் இவர் நேரில்சென்று, ஒவ்வொன்றாக கண்டு, நுட்பமாக ஆராய்ந்து அதன்பிறகே தம் ஆய்வேட்டை எழுதினார் என்பதற்கு, இவர் அச்சிற்பங்களின் உயரத்தைத் தவறாது தருவதிலிருந்து கண்டு கொள்கிறோம்.

நகரத்தார்களின் கோயில் நிருவாகம்பற்றி, அறிந்தால் பலரும் வியப்படைவர். ஒரு நாட்டு நிருவாகம்கூட, இவ்வாறு நடந்தால் எப்படியிருக்கும் எனப் பாராட்டுமளவு அது சிறப்பாகவுளது இந் நூலுள் இத்தகைய நகரத்தார் கோயில் நிருவாக முறை நன்கு விளக்கப்பட்டுள்ளது. நகரத்தார்கள் 9 கோயில்களிலுமாக 23,544 புள்ளிகள் உள்ளமையை, இவரது புள்ளிவிவரம் காட்டுகிறது. (199) இளையாத்தக்குடிதான் கூடுதலாக இருக்குமென எண்ணும் நமக்கு, இவர் மாத்தூரார் 5426 புள்ளி எனவும், இளையாத்தக்குடி 4,900 புள்ளி எனவும் தரும் விவரம் வியப்பை உண்டாக்குகிறது. வேலங்குடியார் 41 புள்ளிகளே உள்ளனர்.

நகரத்தார் புள்ளி கணக்கிடும் முறையும் கருதத்தக்கதாகும்,

ஒரு புள்ளிக்குச் சராசரி நால்வர் என வைத்தாலும் இவர்கள் இன்னும் சுமார் ஒரு லட்சம்பேரே உள்ளனர் என எண்ணத் தோன்றுகிறது. இவர்தரும் புள்ளி விவரங்களும் செய்திகளும் சொல்லும் முறையும் மிகவும் விறுவிறுப்பூட்டுவனவாகவுள்ளன.

நகரத்தார் பற்றிச்சரியான பார்வையில், விரிவான வரலாற்றுக் குறிப்புகளையும் வாழ்க்கை முறைகளையும் பெற இந்நூல் நிறைவான ஒன்றாகும். **முனைவர் வ. தேனப்பன்** இந்தத் துறையில் மேலும் பல நூல்கள் எழுதுதல் கூடும். தமிழைப்போலவும் சிவநெறியைப் போலவும் நகரத்தார் வாழ்வு மரபுகளும் ஒரு கலைச் சுரங்கம்போல விளங்குவனவாகும். **முனைவர் வ. தேனப்பனை 'நகரத்தார் மரபு ஆராய்ச்சி அறிஞர்'** எனச் சுட்டலாம் எனும் அளவு, அவர் இந்நூலை ஆய்ந்தும் அன்பினால் தோய்ந்தும் எழுதியுள்ளார். 'நகரத்தார்மரபை' ஆராய விரும்புவார்க்கு எல்லாம் இந்நூல் சிறந்த முன்னோடியாக முன்னின்று உதவும். நகரத்தார்கள் 'சைவமும் தமிழும்தழைத்தினிதோங்குதலே' தம் குறிக்கோளாக வாழ்ந்துவரும் சிறப்பை இந்நூல் நன்கு அழுத்தமாகக் கோடிட்டுக் காட்டுகிறது. ஆய்வாளர் தேனப்பனுக்கு என் நெஞ்சார்ந்த வாழ்த்துக்கள் உரியனவாகும்.

மதுரை, (ஒ-ம்)

7-12 - 1990 **'தமிழண்ணல்'**

# நன்றியுரை

'உலகெலாம்' என அடியெடுத்துக் கொடுத்துதவிய இறைவனைப்போல. 'ஒன்பது நகரக் கோயில்கள்' என என் ஆய்வுக்குத் தலைப்பு எடுத்துக் கொடுத்து உதவிய முன்னாள் துணை வேந்தர் டாக்டர் வ. சுப. மாணிக்கனார் அவர்களுக்கு முதலில் நான் நினைவாஞ்சலி செலுத்துகிறேன்.

ஆய்வுப் பக்தனுக்கு அணுக்க குருவாகி. ஆய்வு நெறிமுறைகளை உபதேசித்து மெய்ஞ்ஞானம் பெறுவதற்கு வழிகாட்டிய என் ஆய்வு மேற்பார்வையாளர்மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழ் ஆராய்ச்சிப் பேராசிரியர் டாக்டர் இராம. பெரியகருப்பன் (தமிழண்ணல்) அவர்களுக்கு நன்றி. கோயில் பற்றிய நூலுக்கு அவர்கள் குடமுழுக்கு விழா நடத்தியது போன்ற அணிந்துரையினை வழங்கியமைக்கு மிக்க நன்றி.

ஆய்விற்காக நிதி உதவி அளித்த பல்கலைக்கழக மானியக் குழுவிற்கு என் நன்றி.

"ஒன்பது நகரக் கோயில்கள்" என்னும் இவ்வாய்வினைப் பகுதி நேர ஆய்வாக மேற்கொள்வதற்கு எனக்கு இசைவு வழங்கிய எங்கள் கல்லூரி வள்ளல் உயர்திரு. உ. ராம. மெ. சுப. சேவு. அண அண்ணாமலை செட்டியார் அவர்களுக்கும், கல்லூரி முதல்வர் பேராசிரியர் ந. சீனிவாசன் அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் அர. சிங்காரவடிவேலன் அவர்களுக்கும் என் நன்றி.

ஆய்வுக்கு இன்றியமையாத கருத்துக்கள் பலவற்றைக் கூறி உதவிய அமரர் 'கம்பன் அடிப்பொடி' சா. கணேசன் அவர்களுக்கும், சென்னைத் தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் இரா நாகசாமி அவர்களுக்கும், மாமல்லபுரம் சிற்பக் கல்லூரி மேலவர் கணபதி சிற்பி அவர்களுக்கும் நன்றி.

ஆய்வேட்டை உரிய முறையில் எழுத ஆலோசனை கூறி உதவிய எங்கள் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் கரு, முத்தய்யா அவர்களுக்கும் நன்றி.

நிழற்படங்கள் எடுத்துத் தந்து உதவியதுடன் இரணியூரில் புதிதாகக் கண்டுபிடித்த கல்வெட்டைப் படிக்கவும் படியெடுக்கவும்

உதவிய மதுரைத் தொல்பொருள் ஆய்வுத்துறைக் காப்பாட்சியர் திரு. வெ. வேதாசலம் அவர்களுக்கு என் நன்றி

ஆய்வேட்டைத் திருத்தும் பணியில் துணை செய்த எங்கள் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்கள் டாக்டர். சபா அருணாசலம் அவர்களுக்கும், திரு. நா. சுந்தரமூர்த்தி அவர்களுக்கும் நன்றி.

மிகப் பழைய நூல்களையும் கல்வெட்டுகளையும் நான் பார்வையிட்டுப் படியெடுத்துக் கொள்ள உதவிய மைசூர்த் தொல்பொருள் ஆய்வுத்துறையினருக்கும், தஞ்சாவூர்த் தமிழ்ப்பல்கலைக் கழக நூலகத்தினருக்கும் சென்னை உ.வே.சா. நூலகத்தினருக்கும்கீழ்த்திசை ஓலைச் சுவடிகள் நூலகத்தினருக்கும் கோட்டையூர் இந்தியசேவை நூலகத்தினருக்கும், மதுரை காமராசர் பல்கலைக்கழக நூலகத்தினருக்கும் என் நன்றி உரியது.

ஆய்வேட்டை அழகிய முறையில் தட்டச்சுச் செய்து தந்த எங்கள் கல்லூரித் தட்டச்சர் திரு. அண. இலக்குமணன் அவர்களுக்கு நன்றி.

தட்டச்சுச் செய்தனவற்றை முதலில் நிழற்படப்படி (xerox) எடுத்துத் தந்து உதவி, தற்பொழுது புத்தகவடிவம் ஆக்கித் தந்த தெய்வம் அச்சக உரிமையாளரான என் இனிய வாழ்க்கைத் துணைவி திருமதி தேன். வள்ளியம்மைக்கும், அச்சகத்தில் பணிபுரியும் தொழிலாளர்களுக்கும் என் நன்றி.

இந்நூலை வாங்கிப் பயன் கொள்ளும் வாசகர்களுக்கு மிக்க நன்றி.

தேவகோட்டை
27—12—1990

அன்பிற்கினிய,

வ. தேனப்பன்

# உள்ளுரை

# முன்னுரை

## 1. ஆய்வுத் தூண்டல் :

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

தூய அறிவு வடிவாக விளங்கும் கடவுளின் நற்றாளைத் தொழுவதைக் கற்ற கல்வியின் பயனாகத் திருவள்ளுவர் கூறியுள்ளார்.

அந்த இறைவனின் நற்றாளைத் தொழுவதற்காக அமைக்கப் பெற்றவையே கோயில்கள். எனவே அக்கோயில்களைப்பற்றி ஆராய்வது கற்றதனால் ஆய நற்பயனாக அமையும்.

குறிப்பிட்ட ஒரு சில கோயில்களைப் பற்றி மட்டுமே ஆராய்ந் தால் தான், ஆய்வு ஆழமாக அமையும் என்பதாலும் தமக்கு நெருங்கிய, ஒரு தொகுதியான கோயில்களை ஆய்வது எளிதாக இயலும் என்பதாலும், ஆய்வாளர், அவரது பகுதியில் உள்ள ஒன்பது நகரக் கோயில்களைத் தேர்வு செய்துள்ளார்.

ஒன்பது நகரக் கோயில்கள் நகரத்தார் எனும் குறிப்பிட்ட சமூகத்திற்குரியவை: அவை பழம் பெறும் சிறப்பு வாய்ந்தவை. அவை தோன்றிய காலம், வளர்ந்தமுறை, அவற்றின் அமைப்பு முறை பற்றிப் பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. அங்கு நடை பெறும் வழிபாட்டுமுறை, நிருவாகமுறை, அவை மேற்கொள்ளும் சமயப்பணி, சமுதாயப்பணி பற்றி முழுமையான நூல் எதுவும் இது வரை வெளிவரவில்லை.

எனவே அவற்றை ஆராய்ந்து ஒன்பது நகரக் கோயில்கள் பற்றிய அரிய செய்திகளை உலகறியச் செய்ய வேண்டும் என்ற ஆய்வுத் தூண்டலே இவ்வாய்வினைத் தொடங்குவதற்குக் காரண மாக உள்ளது.

## 2. ஆய்வுந் தலைப்பு :

"ஒன்பது நகரக் கோயில்கள்"
(Nine Nagarathar's Temples)

ஒன்பது நகரக் கோயில்கள் என்னும் தலைப்பு, ஒன்பது நகரங்களில் (Town) உள்ள கோயில்களைக் குறிக்காது. நகர் என்னும் சொல்லுக்குக் கோயில் என்று ஒரு பொருள் உண்டு. கோயிலையே தங்களது ஆதிமுதலாகக் கொண்டு அவற்றின் அடிப்படையிலேயே 22 பிரிவுகளாக (கோத்திரங்களாக) வாழும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களை 'நகரத்தார்' என்று அழைப்பர். அவர்கள் கட்டிய விடுதிகள் நகர விடுதிகள் என்றும், அவர்கள் ஊர்ப்பொதுவில் கொடுக்கும் விருந்து 'நகர விருந்து' என்றும் வழங்கப்படுகின்றன. அவ்வழக்கை ஒட்டியே நகரத்தார் கள் தங்கள் பிரிவுகளுக்கு அடையாளமாகப் பேணிப் பாதுகாத்து வளர்த்துவரும் கோயில்கள் 'நகரக் கோயில்கள்' என வழங்கப் பெற்றன. இவ்வாறு வழங்கும் நகரத்தார்களுடைய ஒன்பது கோயில்களே ஆய்வுக்குரிய பொருளாகின்றன.

## 3. ஆய்வுச் சிக்கல்:

1. நகரத்தார்கள், கோயிலையே தங்கள் வாழ்வின் மைய மாகக் கொண்டது ஏன்?

2. ஒன்பது நகரக் கோயில்களின் தோற்றம் எக்காலத்தைச் சார்ந்தது? தோன்றும்போதே ஒன்பது கோயில்களாகத் தோன்றி னவா? அல்லது குறைந்த எண்ணிக்கையில் தோன்றி, பின்னர் ஒன்பது ஆயினவா?

3. நகரத்தார் சிற்பக் கலை வளர்ச்சியாக விளங்கும் ஒன்பது நகரக் கோயில்களில் காணப்படும் தனிச்சிறப்புகள் யாவை?

4. ஆகமங்களில் குறிப்பிட்டுள்ளது போன்ற வழிபாடு இக்கோயில்களில் நடைபெறுகின்றதா?

5. ஒன்பது நகரக் கோயில்களின் அருகில் உள்ள அம்மன் கோயில்களிலும் நகரத்தார்கள் விழா எடுப்பது ஏன்?

6. கோயில் திருவாக முறை எவ்வாறு நடைபெறுகின்றது?

7. ஒன்பது நகரக்கோயில்கள் பற்றிய கல்வெட்டுகள் கூறும் செய்திகள் யாவை? ஒன்பது நகரக்கோயில்கள் பற்றிய இலக்கியங்கள் யாவை? அவை கூறும் செய்திகள் யாவை?

8. ஒன்பது நகரக் கோயில்களின் சமயப் பணிகள் யாவை?

9. ஒன்பது நகரக் கோயில்களின் சமுதாயப் பணிகள் யாவை?

10. பிள்ளையார் பட்டியில் உள்ள தேசி விநாயகப் பிள்ளையார் (கற்பக விநாயகர்) சிற்பம், வடிவமைக்கப் பெற்ற சரியான காலம் எது?

மேற்கண்ட வினாக்களை மையமிட்ட சிக்கல்களுக்கு விடை கூறும் முகமாக இவ்வாய்வு அமைகிறது.

## 4. ஆய்வின் நோக்கம்:-

நகரத்தார்கள், சங்க காலத் தமிழர்களின் பண்பாடு மிக்க வாழ்க்கை நடைமுறையினை இன்றும் கைக்கொள்பவர்கள். இவர்கள், வாழ்க்கையில் பலவிதமான துன்பங்களில் உழன்று, வாழ்வின் மெய்ப் பொருளைக் கண்டவர்கள். வீடு பேறு அடையத்தக்க முழுமையான வாழ்வினை மேற்கொள்ளச் சிலப்பதிகாரப் பரம்பரையினரான இவர்களது வாழ்க்கைநெறியும் வழிபாட்டுமுறையும் வழிகாட்டுகின்றன.

அவர்கள் வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கு அடித்தளமாக அமைந்தவை தாம் ஒன்பது நகரக் கோயில்கள்.

கோயிலைச் சார்ந்து வாழ்வதால் எவ்வாறு பண்பாடு மிக்க முழுமையான வாழ்க்கையை வாழலாம் என்பதை உணர்த்துவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

பல மன்னர்களிடம் குடிமக்களாக இருந்து பலவாறு துன்புற்ற நகரத்தார்கள் துன்பமில்லாத வாழ்வு வாழ, இறைவனது குடிமக்களாக மாறுவது ஒன்றே வழியெனக் கண்டனர்.

தமிழர்களின் பண்பாடு மிக்க வாழ்க்கைக்குச் சான்றாக விளங்கும் ஒன்பது நகரக் கோயில்கள் பற்றிய ஆய்வினால் பல்வேறு உலகியல் துன்பங்களில் சிக்கித் துன்புறும் மாந்தர்கள், இறை நெறி சார்ந்து இன்புற்று வாழ வழி கிடைக்கும். இக்காலத் திருக்

கோயில் சில வியாபாரத் தலங்களாக மாறி வருகின்றன. அவை ஒன்பது நகரக் கோயில்களின் நிருவாக முறையை அறிந்தால், சமயப் பணியோடு பல சமுதாயப் பணிகளையும் ஆற்றமுடியும். பிறவிப்பெருங்கடல் நீந்தவும், மனக்கவலை மாற்றவும், நிலமிசை நீடுவாழவும், உதவுகின்ற வழிகளை ஒன்பது நகரக்கோயில்களின் மூலமாக விளக்கிக் கூறுவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## 5. ஆய்வுத்துணை :

இவ்வாய்விற்கு ஒன்பது நகரக் கோயில்களே இன்றுள்ள நிலையில் அடிப்படைச் சான்றாதாரங்களாகின்றன. சான்று மூலத்துணையாக நகரத்தார் வரலாறுகூறும் 8 நூல்களும், ஒன்பது நகரக் கோயில் பற்றிய 5 தல வரலாற்று நூல்களும், 4 இலக்கிய நூல்களும், 67 கல்வெட்டுகளும், 6 திறனாய்வு நூல்களும் 4 சிறப்பு மலர்களும் இடம்பெறுகின்றன. இந்நூல்கள் பற்றிய முழுச் செய்திகள் சான்று மூலாதாரப் பட்டியலில் தரப்பெற்றுள்ளன.

கள ஆய்வு முறையில் ஆய்வாளர் ஒன்பது நகரக் கோயில்களுக்கும் அவை சார்ந்த பிற இடங்களுக்கும் நேரில் சென்று திரட்டிய தகவல்களும் இவ்வாய்வுக்குத் துணை செய்கின்றன.

## 6. முன்னைய ஆய்வுகள் :

"பிள்ளையார்பட்டித் தலவரலாறு" என்ற தலைப்பில் கம்பன் அடிப்பொடி எழுதிய நூலும், தமிழண்ணல் எழுதிய "ஒன்பது நகரக் கோயில்கள்" என்ற தொடர் கட்டுரையும் மட்டுமே ஒன்பது நகரக் கோயில்கள் பற்றி ஆய்வுப் போக்கில் இதுவரை வெளிவந்துள்ள நூல்களாகும். இத்தலைப்பில், முதலாவதாக விரிவான அளவில் மேற்கொள்ளப்பெறும் ஆய்வு இதுவேயாகும்.

## 7. ஆய்வு முறை :

இவ்வாய்வில் விளக்கமுறை, பகுப்பாய்வுமுறை, ஒப்பாய்வு முறை திறனாய்வுமுறை, மதிப்பீட்டுமுறை ஆகிய ஆய்வு முறைகள் அவ்வப்பகுதிகட்கேற்பப் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

## 8. ஆய்வுப் பரப்பும் சான்றாதாரத் தொகுப்பும் :

பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம், புதுக்கோட்டை மாவட்டம் ஆகிய இரண்டு மாவட்டங்களிலும் அமைந்துள்ள ஒன்பது ஊர்களில் உள்ள திருக்கோயில்களே இவ்வாய்விற்குரிய பரப்பாகும். அவையாவன:

1. இளையாத்தங்குடி
2. மாற்றூர்
3. வயிரவன்பட்டி
4. நேமம்
5. இலுப்பைக்குடி
6. சூரைக்குடி
7. வேலங்குடி
8. இரணியூர்
9. பிள்ளையார்பட்டி

இளையாத்தங்குடி, திருப்புத்தூர் வட்டத்தில் உள்ளது. தேவர்களின் இளைப்பினை ஆற்றியதால் இளைப்பாற்றுகுடி என்று பெயர்பெற்றுப் பின்னாளில் இளையாத்தங்குடி என வழங்குவதாகத் தலபுராணம் கூறுகிறது. இளைய ஆதன்குடி என்பதே இளையாத்தங்குடி ஆயிற்று என்பார் கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன். இவ்வூர் திருப்புத்தூரிலிருந்து கீழச்சிவல்பட்டி வழியாக ஆவணிப்பட்டி செல்லும் பாதையில், கீழச்சிவல்பட்டியிலிருந்து மூன்று கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது.

மாற்றூர், காரைக்குடிக்குக் கிழக்கே நான்கு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. இலுப்பைக்குடி, வேலங்குடி, சூரைக்குடி போன்ற பெயர்களைப்போல இவ்வூர்ப் பெயரும் மரப்பெயரின் அடிப்படையில், மாமரங்கள் அதிகமாக இருந்ததால் மாத்தூர் என அமைந்திருக்கலாம் என்பர். இவ்வாறு மா மரங்கள் நிறைந்திருப்பதற்காகப் பெயர் வைத்திருந்தால் மாவூர் என்றே வரும் கொங்கண மாமுனி மாற்றுப் பார்க்கும் இரசவாதத்தை இவ்வூரில் நிகழ்த்தி ஐந்நூறு மாற்றுக்கண்டதால், மாற்று ஊர் எனப் பெயர் வந்திருக்கலாம் என்பார் சிலர் இலுப்பைக்குடித் தலபுராணமும், கொங்கண மாமுனியின் சிற்பமும் இக்கருத்திற்கு அரண் செய்கின்றன.

வயிரவன்பட்டி, காரைக்குடிக்கும் திருப்புத்தூருக்கும் இடையே பிள்ளையார் பட்டியை அடுத்து அமைந்துள்ளது. இங்கு வயிரவர் வழிபாடு முதலிடம் பெற்றமையால் வயிரவன்பட்டி என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.

நேமம், குன்றக்குடியின் வடபுறத்தில் குன்றக்குடியிலிருந்து கீழச்சிவல்பட்டி செல்லும் சாலையில் இரண்டு கிலோ மீட்டர்

554



தூரத்தில் உள்ளது நியமம் என்ற சொல்லின் திரிபே நேமம். நியமம் என்பதற்கு வணிகர்களின் தலைமைக்குழு என்றும் கோயில் என்றும் இரு பொருள்கள் உள்ளன.

இலுப்பைக்குடி, காரைக்குடிக்குக் கிழக்கே மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இலுப்பை மரங்கள் பெருகிக் காணப்பட்டதால் இப்பெயர் பெற்றது.

சூரைக்குடி, பள்ளத்தூருக்குத் தெற்கே ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் குன்றக்குடிச் சாலையில் உள்ளது. சூரை மரங்கள் அதிகமாக இருந்ததால் இப்பெயர் பெற்றது.

வேலங்குடி, காரைக்குடி – திருமயம் சாலையில் உள்ள கோட்டையூரின் ஒரு பகுதியாக உள்ளது. வேலமரங்களின் மிகுதியினால் இப்பெயர் பெற்றது.

இரணியூர், கீழச்சிவல்பட்டி அருகிலிருக்கும் விராமதி என்னும் சிற்றூரின் மேற்கில் நான்கு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இரணியனைக் கொன்ற பாவம் தீர நரசிங்கமூர்த்தி, ஆட்கொண்ட நாதரை வழிபட்டதால் இப்பெயர் ஏற்பட்டதாகச் சிலரும் இரணிய சம்காரம் இவ்வூரில் நிகழ்ந்தமையால் இப்பெயர் ஏற்பட்டதாக வேறு சிலரும் கூறுகின்றனர். இப்பெயர்க் காரணம் இன்னும் ஆய்விற்குரியது.

பிள்ளையார்பட்டி, திருப்புத்தூர் - குன்றக்குடிச் சாலையில் வயிரவன் பட்டிக்கு அருகில் உள்ளது. இங்கு பிள்ளையார் வழிபாடு முதன்மை பெற்றதால் இவ்வூருக்குப் பிள்ளையார்பட்டி என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.

இந்த ஒன்பது ஊர்களிலும் உள்ள கோயில்களில் ஆய்வாளர்கள ஆய்வு செய்துள்ளார். கோயில்நிருவாகத்தினர், அருச்சகர்கள், வழிபாடு செய்வோர், ஊர்ப்பெரியவர்கள், அக்கோயில் சார்ந்த புள்ளிகள் ஆகியோரிடம் நேர்காணல் மூலமாகவும், வினாப்பட்டியல் மூலமாகவும் செய்திகளைத் திரட்டியுள்ளார்.

ஒன்பது நகரக் கோயில்கள் பற்றிய கல்வெட்டுகளின் மூலப் படிவத்தை ஆய்வாளர் மைசூரில் உள்ள தொல்பொருள் ஆராய்ச்சித் துறைத் தலைமைக் கல்வெட்டு ஆய்வாளர் அலுவலகத்திலிருந்து படியெடுத்து வந்துள்ளார் அவை பின்னிணைப்பில் தரப் பெற்றுள்ளன. நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்த அறிஞர்கள்,

கோயில் பற்றி ஆய்வு செய்து பட்டம் பெற்றோர், தொல்பொருள் ஆய்வாளர்கள், சிற்பக் கலை வல்லுநர்கள் ஆகியோருடன் கலந்துரையாடிப் பல செய்திகள் திரட்டப்பெற்றுள்ளன.

கோயில் பற்றிய அடிப்படையான கருத்துகளை ஆழமாகப் படித்து அறிவதற்காக ஆய்வாளர், தமிழக அரசின் தொல் பொருள் ஆராய்ச்சித்துறை 1981ஆம் ஆண்டு, திருநெல்வேலியில் நடத்திய கோடைக்காலக் கல்வெட்டுப் பயிற்சி முகாமில் கலந்து கொண்டார்.

## 9. ஆய்வின் கருதுகோள்:

1) கோயிலையே தங்கள் வாழ்வின் மையமாகக் கொண்டு கோயில் வழி நாகரிகத்தில் தலைசிறந்து விளங்குவதாலேயே "நகரத்தார்" என்ற சிறப்புப் பெயரினை நாட்டுக்கோட்டை நகரத்தார் பெற்றனர்.

2) இரணியூர்க் கோயில், பிள்ளையார்பட்டிக் கோயில் ஆகியவற்றைத் தவிரப் பிற ஏழு கோயில்களும் எட்டாம் நூற்றாண்டிலிருந்து நகரத்தார்களால் பேணிப் பாதுகாத்து வளர்க்கப்பெறுகின்றன.

3) இரணியூர்க் கோயில் பிரிவும், பிள்ளையார்பட்டிக் கோயில் பிரிவும் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் இளையாத்தங்குடிக் கோயிலிலிருந்து பிரிந்து வந்த திருவேட்பூருடையார் என்ற பிரிவின் அண்ணன் தம்பி வழிமுறையினரால் தொடங்கப் பெற்றவை

4) பிள்ளையார்பட்டியிலுள்ள தேசி விநாயகப் பிள்ளை யாரின் சிற்பம்தான் தமிழகத்தில் மிகத் தொன்மையான பிள்ளையார் சிற்பமாகும். அச்சிற்பம் முக்காலப் பாண்டியர் காலத்தைச் சேர்ந்தது. அதன் தோற்றம் கி.பி ஆறாம் நூற்றாண்டாகும்.

5) "நகரத்தார் வளர்த்த சிற்பக்கலை" என்று சொல்லு மளவிற்குச் சிற்பக்கலையினை வளர்த்துள்ளனர்.

6) "காரியக்காரர்கள்" என்னும் நிருவாக அமைப்பு முறை யால் கோயில் நிருவாகம் சிறப்பிக்கப்படுகிறது. நகரத்தார்கள் சமூகப் பரிணாம வளர்ச்சி நிருவாகக் கலையில் வெளிப்படுகிறது.

7) நகரத்தார்கள் தங்களது சமூகக் கட்டு திட்டங்கள் வகுக்கின்ற சட்ட மன்றமாகவும் (Legislature) ஆட்சி மன்றமாகவும் (Executive) நீதி மன்றமாகவும் (Judiciary) இக்கோயில்களை அமைத்திருந்தனர்.

8) நகரக் கோயில்கள் மிகுதியான சமய, சமுதாயப் பணிகளை ஆற்றி வருகின்றன.

9) பழமையைப் போற்றும் மரபு காணப்படுவதால் ஆகமங்களில் குறிப்பிட்டுள்ளது போன்ற வழிபாடும், விழாக்களும் நகரக் கோயில்களில் நடைபெற்று வருகின்றன. அழுத்தமான சிவநெறி வாழ்வு இதனால் வெளிப்படுகின்றது.

10) நகரத்தார்கள் சமயப் பொதுமையும், எல்லாச் சமய நெறிகளையும் தம் நெறிக்கு ஒப்பப் பேணும் பெருந்தன்மையும் கொண்டவர்கள் என்பன வெளிப்படுகின்றன.

11) வீடு பேறு அடைய வழிகாட்டும் முழுமையான வழிபாட்டு முறைகள் ஒன்பது நகரக் கோயில்களில் காணப்படுகின்றன.

## 10. ஆய்வுப் பகுப்பு:

இவ்வாய்வு பத்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

1) நகரத்தார்களும் கோயில்களும்
2) நகரக் கோயில்களின் தோற்றமும் வளர்ச்சியும்
3) நகரக் கோயில்களின் அமைப்பு:-
    1. சிற்பக் கலை
    2. கட்டடக் கலை
    3. ஓவியக் கலை
    4. வழிபாட்டு முறை.
        1. நாள் வழிபாடு.
        2. சிறப்பு வழிபாடு.
    5. நிருவாக முறை.
    6. கல்வெட்டுகள் கூறும் செய்திகள்.
    7. இலக்கியங்கள் கூறும் செய்திகள்.
    8. நகரக் கோயில்களின் சமயப் பணிகள்.
    9. நகரக் கோயில்களின் சமுதாயப் பணிகள்.
    10. ஆய்வு முடிவுகள்.

## 11. பின்னிணைப்பு :

1. வரைபடங்கள்.
2. நிழற்படங்கள்.
3. நகரக்கோயில் கல்வெட்டுகள்
4. வினா நிரலும் விடை அளித்தோர் நிரலும்.
5. நகரத்தார் கோயில் திருப்பணிப் பட்டியல்
6. இசைவுப் பிடிமானம்.
7. ஊடல் நீங்கியமைக்கு உவந்தளித்த உரிமை.
8. இளையாத்தங்குடி மகப்பேறு மருத்துவமனைக் கட்டிட வரவு செலவுக் கணக்கு விவரம்.
9. சான்று மூலாதாரப் பட்டியல்.
10. கருவி நூற்பட்டியல்.

# I. நகரத்தார்களும் கோயில்களும்

1 "நகரத்தார்கள் சமயச் சார்பு மிக்கவர்கள். அவர்களுடைய சிவநெறி வாழ்வு மிகவும் அழுத்தமானது: அவர்கள் கோயிலைச் சார்ந்து வாழும் குடிமக்கள்" என்பார் டாக்டர் தமிழண்ணல். [1]

அவ்வாறு அழுத்தமான சிவநெறி வாழ்வினை அவர்கள் எவ்வாறு அடைந்தனர் என்ற வரலாற்றினைக் காண்பது நலம் பயக்கும்.

## 1. 1. நகரத்தார் வரலாறு:

நகரத்தார், நாட்டுக்கோட்டை நகரத்தார், இரத்தின தன மகுட வைசியர், பூபால தனவைசியர், பிரதான வைசியர், உபய குல பூபால வைசியர், சந்திர கங்காகுல வைசியர், சிவகோத்திர வைசியர், இளையாத்தங்குடி நகர வைசியர், நாட்டுக்கோட்டைச் செட்டியார் எனப் பல்வேறு பெயர்களால் அழைக்கப்பெற்றனர். [2] இப்பொழுது 'நகரத்தார்'. 'நாட்டுக்கோட்டைச் செட்டியார் என்ற பெயர்களே பரவலாக வழங்கப்படுகின்றன.

நகரத்தார் கி. மு. 2898க்கு முன்பே சம்புத்தீவில் உள்ள நாகநாட்டில் சாந்தியாபுரி என்ற நகரில் வாழ்ந்து வந்தனர் எனப் பூங்கொன்றை வேலங்குடிக் கல்வெட்டு, கூறுவதாக அறிஞர்கள் பலர் எழுதியுள்ளனர். [3] எனினும் அப்படி ஒரு கல்வெட்டு காணக்கிடைக்கவில்லை எனத் தொல்பொருள் ஆய்வுத் துறையினர் கூறுகின்றனர் [4]

சாந்தியாபுரியிலிருந்து குடிபெயர்ந்த அவர்கள் கி.மு. 2897 முதல் கி.மு. 790 வரை காஞ்சிபுரத்தில் வாழ்ந்தனர். [5]

பிறகு காஞ்சிபுரத்திலிருந்து புறப்பட்டுக் கி மு. 789 முதல் கி பி. 706 வரை காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்தனர்.

பின்னர் கி.பி, 707ஆம் ஆண்டு பாண்டிய நாட்டிற்கு வந்தனர். இவர்கள் இப்போதைய பசும்பொன், புதுக்கோட்டை மாவட்டங்களில் உள்ள 96 கிராமங்களில் 18ஆம் நூற்றாண்டு வரை வசித்து வந்தனர்.

கடந்த இரண்டு நூற்றாண்டுகளாக நகரத்தார், தொழில் காரணமாகத் தென் இந்தியாவின் பல பகுதிகளிலும் தென்கிழக்கு ஆசிய நாடுகள் பலவற்றிலும் குடியேறினர். எனினும் பழைய 96 கிராமங்களில் 78 கிராமங்களை இன்றும் தங்கள் வாழிடங்களாகக் கொண்டுள்ளனர்.

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் வாழ்ந்த 96 கிராமங்களுக்கும் 'செட்டிநாடு' எனப் பொதுப்பெயர் உண்டு. அது 1700 சதுர கிலோ மீட்டர் பரப்பளவுள்ளது. (நகரத்தார் வாழிட வரைபடம் பின்னிணைப்பில் உள்ளது — படம் எண். 1)

நகரத்தார்களின் இப்போதைய மக்கள் தொகை சற்றேறக் குறைய ஓர் இலட்சம் ஆகும்

## 1.2. நகரத்தார் பெற்ற மெய்ஞ்ஞானம்:

நகரத்தார் பெற்ற உலகியல் துன்பங்களே அவர்களை இறையியல் நெறியில் பழுத்த சிவபக்தர்களாக மாற்றியுள்ளது என்பது ஆய்வாளரின் கருத்து.

### 1.2.1. நாகநாட்டில் அரசன் கொடுமை செய்தல்:

சம்புத்தீவில் உள்ள நாகநாட்டில் சாந்தியாபுரி நகரத்தில் வாழ்ந்த போது கோபதீசுவர சுவாமியினை வழிபட்டுள்ளனர். சதாசிவ குருபீடத்தில் சிவதீட்சை பெற்றுள்ளனர். மரகத விநாயகரைப் பூசை செய்து வந்துள்ளனர். மன்னனுக்கு இணையான மன்னிணை மரியாதையோடு வாழ்ந்த அவர்களுக்கு அந்நாட்டு அரசன் செய்த கொடுமையால், அவர்கள் கி. மு. 2897ஆம் ஆண்டு காஞ்சிபுரத்திற்குக் குடிபெயர்ந்து சென்றனர் என்று வரலாற்று நூல்கள் கூறுகின்றன. [6]

அரசன் எவ்விதமான கொடுமை செய்தான் என்பதைப் பற்றிய குறிப்பு காணப்படவில்லை.

கல்லில் கடவுளின் சிற்பத்தை வடித்து வழிபடுவதைக் காட்டிலும், மரகதக் கல்லில் விநாயகரின் சிற்பத்தைச் செய்து வழிபட்டதிலிருந்தே அக்கால நகரத்தார்களின் செல்வச் செழிப்பு தெரிய வருகின்றது.

மன்னர் பின்னோர் என்றழைக்கப்பட்ட இவர்களுக்கும், மன்னர்களுக்கும் செல்வச் செழிப்பால் யார் பெரியவர் என்ற போட்டி இருந்து வந்திருக்கிறது. இப் போட்டி பற்றிய செய்திகள் காவிரிப்பூம்பட்டின வாழ்வின்போது பலவாறாக விவரித்துக் கூறப்பட்டுள்ளன. இதுபோன்ற பொருளாதாரப் போட்டிகளினாலேயே நகரத்தார்களின் வணிகத்திற்கு எதிராக நாகநாட்டு மன்னன் சிலபல தடைகளைச் செய்திருக்கக்கூடும் அதனையே அரசன் செய்த கொடுமை என வரலாற்று நூல்கள் குறிப்பிடுகின்றன போலும்.

## 1.2.2. காஞ்சி மன்னன் கொடுமை செய்தல்:

சாந்தியாபுரியிலிருந்து காஞ்சிபுரத்திற்கு, கி.மு. 2897இல் குடிபெயர்ந்த நகரத்தார்களுக்கு அந்நாட்டரசன் எல்லாவிதமான மன்னணை மரியாதையையும் கொடுத்தான். நகரத்தார்கள் மரகத விநாயகரை வழிபாடு செய்துகொண்டு இரத்தின வணிகத்தில் ஈடுபட்டனர்.

பின்பு அந்நகரத்து அரசனாகிய பிரதாபராசன் அநீதியாய் அபராதம் முதலிய தண்டனைகளை விதிக்கத் தொடங்கியதால் கி.மு. 789ஆம் ஆண்டு காஞ்சிபுரத்திலிருந்து குடிபெயர்ந்து காவிரிப்பூம்பட்டினத்திற்கு வந்தார்கள் [7] என வரலாற்று நூல்கள் கூறுகின்றன.

## 1.2.3. காவிரிப்பூம்பட்டினத்தில் பெற்ற துன்பங்கள்:

நகரத்தார்களின் காவிரிப்பூம்பட்டின வாழ்க்கையினை மிகச் சுருக்கமாகப் புதுக்கோட்டை அரசின் வரலாற்று நூல் பின் வருமாறு கூறுகிறது.

"நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து வந்தவர்கள் எனக் கூறப்படுகிறது. அவர்கள் சோழ மன்னர்களால் ஆதரிக்கப்பட்டு வந்தவர்கள்; முடி சூட்டு விழாவின்போது மன்னரின் தலையில் முடிசூட்டும் கௌரவத்தையும்

அவர்கள் பெற்றிருந்தனர். சோழ மன்னன் ஒருவன் ஒரு செட்டி குலமாதை மானபங்கம் செய்யச் சூழ்ச்சிகள் செய்தான் என்றும், எனவே செட்டியார்கள் சோழ நாட்டிலிருந்து கூண்டோடு குடி பெயர்ந்து, சோழ நாட்டின் தெற்கெல்லையான வெள்ளாற்றுக்குத் தெற்கே குடியமர்ந்தனர் என்றும், தமது பெண்களை வெள்ளாற்றைக் கடந்து சோழ நாட்டு எல்லைக்குள் பிரவேசிக்க அனுமதிக்கக் கூடாது என்று சபதம் செய்து கொண்டனர் என்றும் ஒரு பழைய கதை கூறுகிறது.''[8]

இதே கருத்தைத் ''தென்னிந்தியச் சாதிகளும் குடிகளும்'' எனும் நூலை எழுதிய எட்கர் தர்சுடன் என்பவரும் எழுதியுள்ளார்.[9]

அவ்வாறு கொடுமைப்படுத்திய சோழ அரசன் பெயர் பூவந்திச் சோழராசன் என நகரத்தார் சரித்திரம் குறிப்பிடுகிறது[10].

சோழ மன்னன் செட்டிகுலப் பெண்ணை அடைய விரும்பியது பற்றிய கதை ஒன்று சூடாமணிப் புலவர் இயற்றிய வைசிய புராணத்தில் காணப்படுகிறது. அதில் அப்பெண்ணின் பெயர் அன்புப்பிரியாள் எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது. மன்னன் அப்பெண்ணைப் பலவந்தமாக மணப்பது என்ற முடிவுடன் திருமணப் பந்தல் போடுமாறு உத்தரவிட்டதாகவும், ''எம் வீட்டுப் பெண் நாய்க்கும் நீ தகுந்தவன் அல்ல'' என்பது விளங்க ஓர் ஆண் நாயைப் பந்தற்காலில் கட்டிவிட்டுச் சோழனுக்குத் தெரியாமல் தம் சுற்றத்தாருடன் திருவிடைமருதூருக்கு அன்புப்பிரியாள் குடும்பத்தினர் ஓடிவிட்டதாகவும், அது கண்டு ஏமாற்றமும் அவமானமும் அடைந்த சோழன் இதனால் கடுங்கோபம் கொண்டு வணிகர்களையெல்லாம் கொடுமைப்படுத்தினான் என்றும் வைசிய புராணம் கூறுகிறது.

''... ................ஆங்கு அரசனும் வெகுண்டு கணங்கொள் வீரரை ஏவித் தன் கழனிசூழ் நாட்டில் வணங்கொள் வாணிபர் யாரையும் வருத்தினன் மன்னோ'' என்னும் பாடல் அடிகள் அக்கருத்தினை இயம்புகின்றன.

சோழ மன்னனுக்கும் புகார் நகர வணிகர்களுக்கும் இடையே கசப்பும் பகைமையும் ஏற்பட்டதைப் பல கதைகள் கூறுகின்றன. அவை புகார் வணிகர்களது குலச்செருக்கையும் பணப் பெருக்கையும் பலவிதத்திலும் சோழன் குலைக்க முனைந்தான் என்று கூறுகின்றன.

காவிரி நதி கரையுடைத்துப் பெருகிய போது ஊரவர்கள் எல்லோரும் மண் சுமந்து வந்து கொட்ட வேண்டும் என்று உத்தரவிட்டான். ஆனால் வணிகர்களோ, மண் சுமக்க மறுத்து, தமது பங்குக்குரிய இடத்தைத் தமது பண்டகசாலைகளிலிருந்த பஞ்சுப் பொதிகளைப் போட்டு அடைத்தனர். இச்செய்தி, சோழமன்னன் வணிகர்களைக் கூலியாட்களைப் போல வேலை வாங்கி அவர்களது குலச் செருக்கை அடக்க முனைந்ததையும், வணிகர்களோ அதற்குப் பணியாமல் தமது குலச்செருக்கையே மீண்டும் நிலைநாட்டிக் கொண்டதையும்தான் உணர்த்துகிறது.[11]

இதைக் கண்டு கோபமும் பொறாமையும் கொண்ட அரசன், செல்வத்தின் பலத்தாலும் வளத்தாலும் தருக்குற்று நின்றவணிகர்களின் செருக்கை மேலும் பல வழிகளில் அடக்க முயன்றான்.

ஒரு நாள் அவன் வணிகர்களை அழைத்துத் தனது பட்டத்து யானையை நிறுத்து எடை சொல்லுமாறு பணித்தான் வணிகர்களோ யானையைத் தராசில் ஏற்றாமலேயே. யானையின் எடையை மதித்து நிறுத்து எடை சொல்லி விட்டார்கள்.

அதன்பிறகு அரசன் மோசமான தங்கத் தகட்டைக்கொடுத்து மாற்றுச் சொல்லுமாறு கேட்டான். அவர்களும் மேற்பூச்சுத் தங்கத்தின் மாற்று என்ன என்று கண்டு சொல்லிவிட்டனர்.

இதனால் மேலும் கோபம் கொண்ட அரசன் வணிகர்களிடம் நீளம் போதாத கயிறு ஒன்றைக்கொடுத்துத் தனது கோட்டையிலுள்ள கிணற்றில் தண்ணீர் இறைக்குமாறு கட்டளையிட்டான்; வணிகர்களோ தாம் அணிந்திருந்த பொன் நகைகளையே கயிறாகக் கட்டி முடிந்து கிணற்றுத் தண்ணீரை இறைத்துக் காட்டினர்.

இதனால் கோபாவேசமுற்ற மன்னன், வணிகர்கள் தமது வீடுகளுக்கு வெள்ளியாற் செய்து பூட்டியிருந்த கதவுகளையெல்லாம் கழற்றி வருமாறு தனது பணியாட்களுக்கு உத்தரவிட்டான். அவர்கள் அவ்வாறு வெள்ளிக் கதவுகளைப் பிடுங்கி எடுத்துச் சென்ற பிறகோ, வணிகர்கள் அன்றிரவுக்குள்ளேயே வெள்ளிக் கதவுகள் இருந்த இடத்தில் பசும் பொன்னால் கதவுகளைச் செய்து பூட்டிவிட்டனர்.

இதனையும் கண்டு வெகுண்ட பின்னரே, சோழ மன்னன் வணிகர்குலப் பெண்களையெல்லாம் சிறையெடுக்கத் திட்டமிட்ட

தாகவும், அதனால் வணிகர்கள் பெண்களையெல்லாம் கொன்று விட்டுச் சிறுவர்களை ஆத்துமநாத சாத்திரியாரிடம் ஒப்படைத்து விட்டுத் தாமும் தற்கொலை புரிந்து கொண்டதாகவும் கூறப்படு கிறது [12]

இந்தக் கதைகளும் கர்ணபரம்பரையாக நெடுங்காலமாகவே வழங்கி வந்திருக்கின்றன என்பது.

''சோழ மண்டலமாகிய காவேரிப்பூம்பட்டினத்தில் பிறந்த வர்கள்;... மதயானையை நிறைகண்டவர் ... காவேரியைப் பஞ்சா லடைத்தவர்கள் .. கலியாண வாசலுக்குப் பவளக்கால் நாட்டிய வர்கள்... தண்ணீர் கயிறுக்குத் தங்கக்கயர் போட்டவர்கள்...'' என்றெல்லாம் 1608இல் எழுதப்பட்ட ''ஏழு நகரத்தார் தரும சாசனத்'' திலிருந்தும் தெரிய வருகிறது. [13]

''ஏழு நகரத்தார் பள்ளு'' என்ற நூல் இவ்வாறு பாடுகிறது:

''பஞ்சுப் பொதி கொண்டு காவேரியூரைப்
பரவா தடைத்த வணிகேசர்
பட்டத்து யானைக்குக் கிட்டத்திற் போகாமல்
பார்த்து நிறுத்த வணிகேசர்
பகட்டான தங்கத்தகட்டைக் கிள்ளி மாற்றுப்
பார்த்துரை சொல்லும் வணிகேசர்
பற்றாக் கிணற்றுக் கயிற்றுக்குப் பொன்மணி
பாய்ச்சி இறைத்த வணிகேசர்
பாங்கான வெள்ளிக் கதவுபிடுங்கப்பின்
பைம் பொன்னாலிட்ட வணிகேசர்
பாண்டிய நாட்டிற் குடியேறும் ஏழ்நகர்
பார்த்திபராம் வணி கேசர்களே!'' [14]

இதே போல், ''ஏழு நகரத்தார் குழுவ நாடகமும்''

''மிஞ்சு காவேரி வெள்ளை நீரதனைப்
பஞ்சுப் பொதியால் பருவணை பணைத்தோர் ..
கொங்கை மின்னிடையார் கூவ நீரிறைக்கத்
தங்கச் சுவடி தாம்பாய்க் கொடுத்தோர்...
மாணிக்கம் பிச்சை வழங்கிய திறலோர்
ஆணிக்கையா மதயானையை நிறுத்தோர் [15] ''

என்று நகரத்தார் புகழ்பாடுகிறது.

18 ஆம் நூற்றாண்டில் பாடப்பெற்ற "கண்ணுடையம்மன் பள்ளு" என்ற சிற்றிலக்கியமும் ஒரு பாடலில் கீழ்வருமாறு கூறுகிறது:

"கண்ணரினால் மதயானையை நிறுத்தும்
கடலில் விட்ட கனகம் அழைத்தும்...
விண்ணுயர்ந்த பொன் மேருவுரைத்து முன்
மீனவர் முடி சூட்டிய மெய்யாய்
நண்ணுகீர்த்தி படைத்த வணிகர்
நகரமெங்கள் நகரங்காண் ஆண்டே![16]

பாடுவார் முத்தப்ப செட்டியார் எழுதிய "திருமுக விலாசத்" திலும் பின்வரும் அடிகள் காணப்படுகின்றன.

"மேரு கிரியுரைத்தும் வேழந் தனைநிறுத்தும்
பேருலகின் மிக்கான பேரானார் - யாரும்
அதிசயிக்கக் காவேரி யாறுதனைப் பஞ்சுப்
பொதியா லடைத்த புகழானர் - மதியார்
கடலி லெறிந்த பொன்னைக் காசினியோர் தாமெச்
சிடவழைத்த வேலேல சிங்க - நெடுங்கிணற்றில்
வீம்புக்குத் தம்வீட்டில் வெள்ளாட்டி பாற்சுவடி
தாம்பிட்டு நீரிறைத்த தாட்டியர்கள் - தேம்பவே
கல்யாண வாயிலிலே காவணக் காலுக்குயர்ந்த
நம்பவளக் காலதனை நாட்டினோர் - வல்லிரவில்
மற்கதவு வெள்ளிதனை வாங்கிவிட அக்கணமே
பொற்கதவு நாட்டிப் புகழ் படைத்தோர்[17]"

இவ்வாறு நாட்டுக்கோட்டை நகரத்தார் பற்றிக் கூறப்படும் கதைகள் சிலவற்றைக் கீர்த்தி பெற்ற வணிகர்கள் 38 பேரின் கதைகளைப் பாடும் "வைசிய புராணமும்" சிற்சில மாற்றங் களுடன் கூறுகிறது.

வைசிய புராணத்தில் வணிகரின் செல்வச் செழிப்பு சோழ மன்னனின் செல்வத்தைக் காட்டிலும் பன்மடங்கு உயர்ந்தது என்று வலியுறுத்தும் கதை ஒன்று காணப்படுகிறது. கோப்பர கேசரி என்ற சோழ மன்னன் நவமணிகள் ஒவ்வொன்றிலும் ஒரு கோடி சேர்த்திருந்த பெருமையைக் காண்பிப்பதற்காக, அவன் தனது பட்டத்து யானையின் முன்னால் எப்போதும் ஒரு பொற் காளத்தை ஊதிக்கொண்டு போகுமாறு செய்தான். இவ்வாறு அவன் தனது பொற்காளம் ஒலிக்கக் காவிரிப்பூம்பட்டி

னத்திற்குள் வந்துநுழைந்தான். அங்குள்ள ‘‘கடவுளான்’’ எனும் வணிகன் அக்காளத்தின் ஒலி கேட்டு, அவனிடமே அதற்குக் காரணம் என்ன என்று கேட்டான். சோழ மன்னனோ

‘‘கோதிலா நவகோடி நாராயணன்
ஆதலால் இவ் அவனி அறியவே
ஊதுமென்றனன் என்ன உரைத்தனன்’’

இதைக் கேட்ட கடவுளன், ‘‘உம்மிடமுள்ள செல்வத்துக்கு இந்தக் காளம் அடையாளம் ஆகுமானால், இதைக் காட்டிலும் அதிகச் செல்வம் படைத்தவர்கள் என்ன அடையாளம் வைத்துக் கொள்வது?’’ என்று கேட்டான். வணிகனிடம் நவமணிகள் ஒவ்வொன்றிலும் ஒன்பது கோடி இருந்ததைக் கண்டதும், சோழ மன்னன் வெட்கப்பட்டுத் தனது பொற்காளத்தையே அந்த வணிகனிடம் ஒப்படைத்துவிட்டான்! என்று வைசிய புராணம் தெரிவிக்கிறது [18]. வணிகர்களது செல்வ வளத்தினை இப்புராணம் கூறுகிறது

வணிகர்கள் தமது செல்வ வளத்தின் மூலம் சமுதாயத்தில் பெற்று வந்த செல்வாக்கினால், அவர்கள் மணிமுடி ஒன்றைத் தவிர - அதாவது நாட்டை ஆளும் உரிமை ஒன்றைத்தவிர - மற்றபடி அரசனுக்குரிய ஏனைய மரியாதையையும் சிறப்புக்களையும் அரசனுக்குச் சமமாகவே அனுபவித்து வந்தனர்.

அதேசமயம் அரசனுக்கு முடிசூட்டும் உரிமை புகார் நகர வணிகருக்கு இருந்ததால் ‘‘சிவகோத்திர வைசிய விருத்தி’’ நூலாசிரியர் வணிகர்களை மகுட வைசியர் என்று கூறுகிறார். இதனையே பாடுவார்.முத்தப்ப செட்டியாரின் நகர வாழ்த்தும் ‘‘மூவேந்தர் தங்களுக்கு முடிபுனையவல்லவர்கள்’’ என்றும், ஏழு நகரத்தார் குழுவ நாடகம்.

‘‘நாவாலுயர்ந்த நவமணி ஏந்து
மூவேந்தருக்கு முடிபுணைந்திட்டோர்’’

என்றும் பாராட்டிப் புகழுகின்றன.

இவ்வாறு அரசனோடு சரிநிகர் செல்வாக்குக் கொண்டவர்களாகப் புகார் நகர வணிகர்கள் இருந்தனர்.

அப்படிப்பட்ட உயர்ந்த செல்வாக்குமிக்க வணிகர்கள் காவிரிப்பூம்பட்டிணத்தில் அரசனின் கொடுமை தாங்கமாட்டாமல்

தற்கொலை செய்து கொண்டனர் என்ற கூற்றிலிருந்து, அவர்கள் உயிரினும் சிறந்த மானம் காரணமாகவே தற்கொலை செய்து கொள்ளுமளவிற்கு முடிவு செய்துள்ளனர் எனத் தெரிகிறது.

## 1.2.4. பாண்டியன் அழைத்து வந்தது உண்மையா?

''சுந்தர பாண்டியன் என்னும் பாண்டிய மன்னன் சோழ நாடு சென்று, சோழ மன்னனின் ஒப்புதலுடன் வணிகர்களை அழைத்துவந்து தன் நாட்டில் குடியேற்றினான் [19]'' என்று நகரத்தார் வரலாற்று நூல்கள் கூறுகின்ற கருத்தை ஆராய வேண்டியுள்ளது.

பாண்டிய நாடு பொருளாதாரத்தில் தலைசிறந்து விளங்கியதாகவும், நிறைந்த வணிகர்களைப் பெற்றிருந்ததாகவும் இலக்கியங்கள் சான்று பகர்கின்றன [20].

புகார் நகரத்து வணிகர்கள் கொழுங்குடிச் செல்வர்களாக விளங்கியது போலவே மதுரை வணிகரும் வளம்கெழு செல்வராகவே விளங்கியுள்ளனர். எனவே சோழ நாட்டிலிருந்து வணிகர்களை அழைத்து வந்துதான் பாண்டிய நாட்டை வளப்படுத்த வேண்டும் என்ற நிலை பாண்டிய மன்னனுக்கு இல்லை என்பது வெளிப்படையாகத் தெரிகின்றது.

பாண்டிய நாட்டை வளப்படுத்தும் அளவிற்குத் திறமை வாய்ந்த வணிகர்களைத் தன் நாட்டிலிருந்து அனுப்புவது சோழ நாட்டுக்கு இழப்பு என்றல்லவா சோழ மன்னன் எண்ணியிருப்பான்? எனவே உயர்ந்தோங்கு செல்வமுடையவர்களைச் சோழ மன்னன் பாண்டிய மன்னன் அழைத்ததற்காக அனுப்பியிருக்க மாட்டான்.

ஆனால் பதிஎழு அறியாப் புகார் நகரத்திலிருந்து நகரத்தார்கள் புறப்பட்டு வந்தது உண்மை.

## 1. 2. 5 .பாண்டிய நாடு வந்ததன் உண்மைக் காரணம்:

அவ்வாறாயின், எக்காரணத்திற்காகப் புகாரிலிருந்து வந்தனர் என்பது ஆராயப்பட வேண்டிய ஒன்றாகும்.

பூங்கொன்றை வேலங்குடியில் நகரத்தார் தீர்மானம் செய்த சாதிமுறை நியாயங்கள் பற்றிய விவரத்தில் பின்வருமாறு கூறப்படுகிறது

''கடலுக்கு மேற்கு, பிரான்மலைக்குக் கிழக்கு, வைகைக்கு வடக்கு, வெள்ளாற்றிற்குத் தெற்கு, இந் நான்கெல்லைக்குட்பட்ட வேளாளர் பூமியாகிய இந்நாட்டிலேயே குடியிருக்கிறது வேறிடங்களிற் குடும்பத்தோடு போய்க் குடியிருத்தல் கூடாது. பெண்டுகள் சுவாமி தெரிசனம் தீர்த்தயாத்திரைகளுக்குப் புருஷர்களோடு போய் வரவேண்டும் இதர காரிய நிமித்தம் அன்னிய தேசங்களுக்குப் பெண்டுகள் போகிறதில்லை[21].''

இதற்குச் செட்டிநாட்டு எல்லைகளைப் பற்றிக் கூறும் பாடுவார் முத்தப்ப செட்டியாரது பாடல் அரணாக அமையும்.

வெள்ளாறது வடக்காம் மேற்குப் பிரான்மலையாம்
தெள்ளார் புனல்வைகை தெற்காகும் - ஒள்ளியநீர்
எட்டிக் கடல் கிழக்காம் இஃதன்றோ நாட்டரசன்சேர்
செட்டிநாட் டெல்லையெனச் செப்பு [22].

கால்டுவெல் பாதிரியாரின் கூற்று இக்கருத்திற்கு மேலும் வலிமை சேர்க்கின்றது.

''வெள்ளாறு பற்றிய இந்தக் குறிப்பானது, **நாட்டுக் கோட்டைச் செட்டியார்களிடையே தமது பெண்களை வெள்ளாற்றைத் தாண்டிச்செல்வதற்கு என்றுமே அனுமதிக்கக் கூடாது** என்றதொரு பழைய வழக்கம் நிலவி வந்த காரணத்தால் ஊர்சிதமாகிறது. பெண்கள் எல்லைகளைத் தாண்டிச் செல்வது ஓர் அபசகுண காரியமாகக் கருதப்பட்டது'' என்று கால்டுவெல் பாதிரியார் எழுதியுள்ளார் [23]''.

மேற்கண்ட இரு குறிப்புகளும் புகார் நகரத்து வணிகர்கள் பாண்டிய மன்னன் அழைத்ததற்காகவே சோழ மன்னனின் அனுமதியின் பேரில் பாண்டிய நாட்டிற்கு வந்தனர் என்ற கூற்றைப் பொய்ப்பிக்கின்றன.

அவ்வாறு சோழ மன்னனின் அனுமதியின் பேரில் மனம் ஒப்பி வந்திருந்தால், தமது பெண்கள் பாண்டிய-சோழ நாட்டின் எல்லையான வெள்ளாற்றைக் கடந்து வடக்கே சோழ நாட்டுக்

குள் செல்லவே கூடாது என்று ஒரு கட்டுப்பாட்டை விதித்திருக்க மாட்டார்கள்.

சோழ மன்னனுக்கும் வணிகர்குலத்தினருக்கும் இடையே ஏற்பட்ட போட்டி மனப்பான்மையினால், சோழன். வணிகர்குலப் பெண்களைச் சிறையெடுக்க முயன்றதாலேயே நாடு பெயர்ந்தனர் என்னும் கூற்றை இவ்விரு குறிப்புகளும் மெய்ப்பிக்கின்றன.

அடுத்துவரும் ஐயப்பாடும் நன்கு சிந்திப்பதற்கு உரியது. வெள்ளாற்றைத் தாண்டிச் சோழ நாட்டுக்குள் தமது பெண்கள் போகக் கூடாது. எனக்கட்டுப்பாடு வகுத்த நகரத்தார், தமது நாட்டின் தெற்கெல்லையாக வைகை நதியைத் தீர்மானித்தது ஏன் என்று சிந்திக்க வேண்டும்.

வைகை நதியின் தென்கரையில் உள்ள பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரையிலும், தங்கள் குலப்பெண்கள் சென்று குடியிருக்கக்கூடாது என்றே கட்டுப்பாடு செய்திருந்தது இதனால் வெளிப்படுகிறது.

சோழ மன்னன் ஒரு பெண்ணைக் கவர்ந்தது போலவே பாண்டிய மன்னன் ஒருவனும் நகரத்தார் குலப் பெண் ஒருத்தியை கவர்ந்து சென்றுள்ளான்.

ஏற்கனவே நாகரிகம் கருதிச் சாந்தியாபுரி மன்னனும், காஞ்சி மன்னனும் கொடுமை செய்தனர் என்று மட்டுமே எழுதினர். என்னென்ன கொடுமைகள் என எழுதவில்லை. அதுபோலச் சோழ மன்னன் ஒரு பெண்ணைச் சிறையெடுத்தான் என்று மட்டுமே எழுதினர் சிறையெடுக்கப்பட்ட பெண்ணின் பெயரையோ சிறையெடுத்த மன்னன்பெயரையோ நாகரிகம் கருதி வெளியிடவில்லை என்றே கொள்ள வேண்டும்.

ஆனால் மானம் ஒன்றே பெரிதெனக்கொண்டு, அடைக்கலமாகப் பாண்டிய நாட்டிற்கு வந்தபோது, அப்பாண்டிய மன்னன் ஒருவனும் அதே தவற்றைச் செய்தபோது அவர்களுடைய கோபம் பன்மடங்காக அதிகமாகியிருக்கவேண்டும்

''காவேரிப்பூம்பட்டினத்தை விட்டுப் புறப்படும்போது... ராஜாவினுடைய **உபத்திரவம் பொண்ணு விஷயமாய்ப் பொறுக்க முடியாத படியால்**, இளையேத்துக்குடி வந்து சேர்ந்தோம்'' எனத் தரும சாசனத்தில் எழுதியுள்ளனர். [24]

உபத்திரவம் என்னும் சொல்லும், பொறுக்க முடியவில்லை என்னும் சொல்லும் மிகச் சூடான சொற்களாகும்.

அந்த உபத்திரவமும் பொறுக்க முடியாத செயலும் பாண்டி நாட்டிலும் பாண்டிய மன்னனாலேயே ஏற்பட்டவுடன் நகரத்தார் களால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. எனவே நாகரிக மில்லாது நடந்து கொண்ட மன்னனிடம் நாகரிகம் பாராட்டக் கூடாது என்பதனால் அம்மன்னன் பெயரையும், அது உண்மை நிகழ்ச்சியே என உலகுக்கு முழுமையான செய்தியைத்தெரிவிக்கத் தூக்கிச் செல்லப்பட்ட பெண்ணின் பெயர், பெற்றோர் பெயர், சார்ந்த கோயில், வசித்த தெரு, வாழ்ந்தவூர் உட்பட அனைத் துச்செய்திகளையும் தெரிவித்துள்ளனர். [25]

பெண்ணைத் தூக்கிச் சென்ற அரசன் பெயர், காருண்ய பாண்டிய மன்னன். பூங்கொன்றை வேலங்குடியில் மாணிக்கப் பெருமாள் தெருவில் வசித்து வந்த நேமம் கோயிலைச் சேர்ந்த, இளநலமுடையான் முத்து வீரப்ப செட்டியார் குமாரனாகிய அருணாசலம் என்பவருடையமகள் ஐந்து வயதான முத்துமீனாள் என்பவளையே அம்மன்னன் தூக்கிச் சென்றான்.

பாண்டிய மன்னனிடம் நேரில் சென்று பெண் பிள்ளையைத் திருப்பி அனுப்பும்படி வேண்டியபோது அம்மன்னன், "சிறை யெடுத்துச் சென்ற பெண்ணைத் திருப்பி அனுப்பினால், உங்கள் குல வழக்கப்படி அவளைச் சிரச்சேதம் செய்துவிடுவீர்கள். அவ் வாறு செய்தால் ஒரு தலைக்கு எட்டுத்தலையும் எண்ணாயிரம் பொன்னும் உங்களிடத்து வாங்குவோம்!" என்று சொல்லி அப் பெண்ணை அவர்களிடம் கொடுத்தான்.

அவர்கள் அரசன்பால் விடைபெற்றுக்கொண்டு வரும் வழியி லேயே அப்பெண்ணைச் சாதிநியாய முறைப்படி சிரச்சேதம் செய்துவிட்டனர். ஊருக்கு வந்து, "ஏழு கோயில் வழியார் தான் இருக்கின்றோம்!" எட்டாவது தலையாக யாருடைய தலையைக் கொடுப்பது?" என்று சிந்தித்திருக்கிறார்கள்.

இளையாத்தங்குடிக் கோயிலில் ஒரு பிரிவினராகிய ஒக்கூரு டையார் எழுந்து கூடுதலாகக்கொடுக்க வேண்டிய ஒரு தலையைக் கொடுக்க முன்வந்தனர்.

மானம் பெரிதேயன்றி உயிர் பெரிதில்லை என்று கூறி நகரத் தார்கள் எட்டுத் தலையினையும் எண்ணாயிரம் பொன்னையும்

கொடுக்கத் தாமாகவே முன்வந்தனர். அது கேட்டு அரசன் மிகத் துன்பமுற்று அவர்களை நோக்கி, ''ஒரு பெண்பழி போதும்; நீங்கள் ஒன்றும் தரவேண்டாம். போய் வாருங்கள்!'' என்று சொல்ல நகரத்தார்கள் திரும்பி வந்தார்கள்

## 1. 2. 6. நகரத்தார் எடுத்த புதுமுடிவு :

சாந்தியாபுரி, காஞ்சிபுரம், காவிரிப்பூம்பட்டினம் ஆகிய பகுதிகளில் எல்லாம் மன்னர்களுடன் செல்வச் செழிப்பில் போட்டி போட்டு, அதனால் கொடுமைப்படுத்தப்பட்ட நகரத்தார்கள், அக் கொடுமைகளுக்கு மாற்றாகவேறு ஒரு பகுதியைத் தேர்ந்தெடுத்துப் பாண்டிய நாட்டிற்கு வந்தனர். பாண்டிய மன்னனை மதித்து அவனுக்கு வரி செலுத்தி வந்தனர்.

அடைக்கலம் புகுந்த இடத்திலும் அதே துன்பங்கள் தொடர்ந்ததும், வேறு ஒரு பகுதியை நாடி அவர்கள் செல்ல வில்லை.

தங்கள் வாழ்வின் மையமாக அரசர்களைக் கொண்டு வாழ்ந்த தால் தான் துன்பம் ஏற்பட்டது. பொருளையே பெரிதாக மதித்த தாலேயே இன்னல்கள் ஏற்பட்டன என்ற மெய்யுணர்வினைப் பெற்றார்கள்.

நாம் யாருடைய குடிமக்கள் என்று ஆழமாகச் சிந்தித்திருக்க வேண்டும். சோழனின் குடிகளல்லர்;பாண்டியனின் குடிகளல்லர். பிறகு? நாம், தெய்வத்தின் குடிமக்களே என்பதை மனமார உணர்ந்தார்கள்.

தெய்வத்தை வாழ்வின் மையமாகக் கொண்டுவிட்டால் வேறு யாருக்கும் அஞ்சவேண்டியதில்லை. நகர வேதனை வராது; யாருக்கும் பணியவேண்டியதில்லை. துன்பமே இல்லாத இன்ப மான வாழ்வு வாழக் கோயிலைச் சார்ந்து வாழ்வது ஒன்றே மெய் யான வழி என்று கண்டுணர்ந்தனர்.

நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளும் துன்ப மில்லை
தாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்னற் சங்கவெண் குழையோர் காதிற்

கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே[25]அ

என்னும் திருநாவுக்கரசு சுவாமிகளின் சிவஞானம் நகரத்தார்களுக்குத் தோன்றியது.

நாட்டை ஆண்ட அரசனுக்கும் செல்வத்தை ஆண்டுவந்த வணிகர்களுக்கும் இடையே செங்கோல் உரிமைக்கும் செல்வத்தின் உடைமைக்கும் இடையே, நிகழ்ந்த சமுதாயத் தலைமைக்கான போராட்டத்தையே, அதாவது வர்க்கப் போராட்டத்தையே பழைய நிகழ்ச்சிகள் பிரதிபலிக்கின்றன என்பார் திரு. இரகுநாதன்[26].

அப்போராட்டம் வெவ்வேறு துன்பங்களினால் ஏற்பட்ட மெய்ஞ்ஞானத்தின் உதவியால் முற்றுப் பெற்றது.

பல்வேறு செல்வங்களை "உடையவர்கள்" என்று தங்களைப் பற்றிப் பெருமை பேசிக் கொண்ட நகரத்தார்கள், இறைவனை "உடையவர்" என்று குறிப்பிட்டனர். இறைவனின் உடைமைப் பொருளாகத் தம்மை எண்ணிக் கொள்ளுமளவிற்கான பணிவுடைமை அவர்களிடம் தலையெடுத்தது.

அரசர்களுடன் ஏற்பட்ட முரண்பாடுகளினால் மனம்வெறுத்த நகரத்தார்கள் மாதா, பிதா, குரு, தெய்வம், குலதேவதை இவர்களை மட்டுமே வணங்குவது எனச் சாதி முறை நியாயத்தை நிருணயம் செய்து கொண்டனர்.

இதனைக் "கண்ணுடையம்மன் பள்ளு",

"........மாதா பிதா குரு
தெய்வம் தன்னை வணங்குவதல்லால்
விம்பமா முடி வேந்தரையும் புவி
மீதினில் வணங்காத நகரம்[27]... .."

என்றும், பாடுவார்முத்தப்ப செட்டியாரின் "திருமுகவிலாசம்"

"அன்னை தந்தை தெய்வமுதல்
ஆசானைப் போற்றுதலால்
மன்னவரைக் கூட வணங்காதார்"[28]

என்றும் பாடி வலியுறுத்துகின்றன.

மன்னர்களை வணங்குவதில்லை என முடிவெடுத்ததாலும், தெய்வத்தையே தங்களது மன்னராக ஏற்றுக்கொண்ட காரணத்தாலும், கோயில்களையே தமது வாழ்வின் மையமாகக் கொள்ளத் தலைப்பட்டனர். குடியிருக்கும் ஊர்களிலெல்லாம் கோயில்களைக் கட்டியுள்ளனர். அவர்கள் கோயில்களுக்காகச் செலவிடும் முறையினைப் பின்னிணைப்பில் காணலாம்.

அதனாலேயே அரசுக்கு வரி செலுத்துவது போன்று, கோயிலுக்கு வரி செலுத்த ஆரம்பித்தனர். தங்கள் குடும்பங்களைப் 'புள்ளிகள்' எனச் சொல்லிக் கோயிலில் பதிவு செய்து வருகின்றனர். திருமணத்திற்கான அடிப்படைப் பிரிவுகளுக்குக் (கோத்திரங்களுக்குக்) கோயில் பிரிவுகளையே வைத்துக் கொண்டுள்ளனர்.

நகரத்தார்கள் அவரவர்கள் கோயிலில் உள்ள இறைவன் இறைவியின் திருவருளாலேயே திருமணம் நடைபெறுவதாக அழைப்பிதழ் அச்சிட்டு அனுப்பும் மரபினை உடையவர்கள்.

திருமணத்திற்கு, முதலில், உரிய கோயில்களில் பதிவு செய்த பிறகே பிறருக்கு அழைப்பு அனுப்புகின்றனர். அரசனின் ஆணை போல உரியகோயில்களிலிருந்து மாலை வந்தால்தான் திருமணம் நடைபெறும் என விதி வகுத்துள்ளனர்.

நகரத்தார்கள், திராவிட நாகரிகத்தில், பல ஆயிரக்கணக்கானஆண்டு பண்பாடுமிக்க வாழ்க்கையினைத் தொடர்ந்து நடத்திவருபவர்கள். எனவே அவர்கள் பல்வேறு மன்னர்களின் கீழ்ப் பெற்ற துன்பங்களே ஞானத்தை-வாழ்வாங்கு வாழும் முறையைக் கற்பித்துள்ளன என்று கூறலாம்.

பல்வேறுநாடுகளில் அவர்கள் பட்டதுன்பங்கள் அவர்களைச் சுடச்சுடரும் பொன்போல மாற்றியிருக்கின்றன. வாழ்க்கையில் உய்யும் ஒரே வழி தெய்வத்திடம் அடைக்கலம் புகுதலே நன்கு உணர்ந்துள்ளனர்.

எனவேதான் நகரத்தார்கள் முழுமையான ஈடுபாட்டோடு கோயில்களைக் கட்டுகின்றார்கள்; வழிபாடு செய்கின்றார்கள்; பேணிக்காக்கின்றார்கள்.

கோயிலே தங்கள் வாழ்வின்மையம் என்ற மெய்ப்பொருளைச் 'சிக்கெனப்' பிடித்துவிட்டதாலேயே, கோயிலைக் குறிக்கும் சங்க காலச் சொல்லான 'நகரம்' என்பதனையே தங்களது சாதிப் பெயராகக் கொண்டுள்ளனர்.

## 1. 2. 7. நகரத்தார் பெயர்க் காரணம் ;

நகரத்தார் என்ற பெயர் ஏற்பட்டதற்குப்பலரும் பல காரணங் களைக் கூறுகின்றனர்.

நகரம் என்றால் காஞ்சி. எனவே காஞ்சிபுரத்திலிருந்து வந்த தால் 'நகரத்தார்' எனப் பெயர் ஏற்பட்டது. என்பார் கம்பன் அடிப்பொடி சா கணேசன் அவர்கள். [29]

'நகரேஷு காஞ்சி' என்ற பழமொழியின் அடிப்படையில் அவர்கள் கூறுகிறார்கள். அங்கு அதிகமான கோயில்கள் இருப்பதாலேயே அவ்வூருக்கு நகர் என்ற பெயர் வழங்கியது என்று ஏன் கருதக் கூடாது?

நகர் என்னும் பெயர்ச் சொல்லுக்குக் கோயில், அரண்மனை, வணிகக் குழுமம் எனப் பலபொருள் உள.

அரண்மனை போல வீடமைத்து வாழ்வதால் நகரத்தார் என்ற காரணப்பெயர் ஏற்பட்டு வழங்கலாயிற்று என்பது பேராசிரியர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் கருத்தாகும். [30]

நகரத்தார் பல வணிகக் குழுமங்களை நடத்தியதால், அது குறித்தே நகரத்தார் எனப் பெயர் வந்தது என்பார் திரு இரகுநாதன். [31]

பூங்குன்ற நாட்டு வேலங்குடி
வணிக நகரத்தொம், எங்கள்
தெருவில் பாடிகாவல் நாயநர்க்கு
குடுத்தொம் நகரத்தொம் சனத்தி
ஊட, பகல் வணிக நகரத்தொம்
கல்வெட்டிக் குடுத்தொம் [32]

எனவரும் வேலங்குடிக் கல்வெட்டு, வணிக நகரத்தார் என்றே குறிப்பிடுகிறது. இதனால் வணிகர் எனும் தொழிற் பெயர் வேறு என்றும், நகரத்தார் எனும் காரணப் பெயர் வேறு என்றும் புரிந்து கொள்ள முடிகின்றது.

இணன் காரிகுடி ஐஞ்ஞூற்றுவப்
பெருந்தெருவில் நகரத்தார்க்குப்
பிடிபாடு பண்ணிக்குடுத்த பரிசாவது......

எனவரும் பிள்ளையார்பட்டிக் கல்வெட்டிலும்[33] ஐஞ்ஞூற்றுப் பெருந்தெரு என்றும் வணிகர் தெருப்பெயர் தனியாகவும் நகரத் தார் என்ற காரணப்பெயர் தனியாகவும் அமைந்துள்ளன.

எனவே வணிகக்குழு என்ற பொருளில் நகரத்தார் என்ற சிறப்புப் பெயர் அமையவில்லை என அறிகிறோம்.

''முக்கன் செல்வன் நகர்''[34]
''கடவுட் கடிநகர்''[35]
''நீ மேய கடி நகர்''[36]
''வரை கெழு செல்வன் நகர்[37]
''பூமுடி நாகர் நகர்[38]
''குளவாய் அமர்ந்தான் நகர்''[39]

எனவரும் சங்க இலக்கிய வரிகளில் உள்ள 'நகர்' என்னும் சொல் கோயிலையே குறிக்கின்றது.

''கோயில் வழியதாகக் குடிகளை அமைத்துக்கொண்ட ஒப்பற்ற நாகரிகம் இன்று நகரத்தார் சமூகத்தில்தான் நிலவுகிறது. அதனால் அச் சமுகத்தினர் திருக்கோயில்களுக்கு வழங்குவதில் கணக்குப் பார்ப்பதில்லை. வழங்குவதோடு மட்டுமின்றி முறையாக வழிபாடுகள் செய்வதிலும் ஈடுபட்டார்கள்'' என நகரத்தார், கோயில்வழி நாகரிகத்தைக் கைக்கொண்டு வருவது பற்றிப் பாராட்டிக் கூறுவார் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்[40]

பிறப்பு முதல் இறப்பு வரை கோயிலைச் சார்ந்து வாழ்ந்து கோயிலையே வாழ்வின் மையமாகக் கொண்டு கோயில்வழி நாகரிகத்தைக் கடைப்பிடிப்பதால் அக் கோயில் எனும் பொருளி லேயே நகரத்தார் என்ற சிறப்புப் பெயர் ஏற்பட்டது என்று ஆய்வாளர் கருதுகிறார்.

## 1.3 முடிபுகள்:

**1.3 1.** நகரத்தார்கள் பெற்ற உலகியல் துன்பங்களே அவர்களை இறையியல் நெறியில் பழுத்த சிவபத்தர்களாக மாற்றியுள்ளது.

**1.3.2.** சோழ மன்னனுக்கும் வணிகர்களுக்குமிடையே ஏற்பட்ட போட்டி மனப்பான்மையினால், சோழன், வணிகர்குலப்

பெண்களைச் சிறையெடுக்க முயன்றதாலேயே பாண்டிய நாட்டிற்கு வந்தனர் பாண்டியன் அழைத்ததற்காகப் பாண்டிய நாட்டிற்கு வரவில்லை. .

1. 3 3. காருண்ய பாண்டிய மன்னன் முத்துமீனாள் என்ற பெண்ணைத் தூக்கிச் சென்றதால் அவன்மீது வெறுப்பு ஏற்பட்டது. அதனாலேயே வைகை ஆற்றைத் தாண்டிச் செல்லக் கூடாது என முடிவெடுத்தனர்.

1. 3. 4. தங்கள் வாழ்வின் மையமாக அரசர்களைக் கொண்டு வாழ்ந்தாலும் பொருளையே பெரிதாக மதித்தாலும் பல்வேறு நாடுகளில் அவர்கள் பட்ட துன்பங்கள் அவர்களைச் சுடச்சுடரும் பொன்போல மாற்றியிருக்கின்றன. வாழ்க்கையில் உய்யும் ஒரே வழி தெய்வத்திடம் அடைக்கலம் புகுதலே என்ற ஞானத்தை இதனால் அவர்கள் பெற்றனர். எனவே கோயில்களையே தமது வாழ்வின் மையமாகக் கொண்டனர்.

1. 3. 5. பிறப்பு முதல் இறப்பு வரை கோயிலைச் சார்ந்து வாழ்ந்து, கோயிலையே வாழ்வின் மையமாகக் கொண்டு, கோயில் வழி நாகரிகத்தைக் கடைப்பிடிப்பதால் அக் கோயில் (நகர்) எனும் பொருளிலேயே நகரத்தார் என்ற சிறப்புப் பெயர் ஏற்பட்டது.

---

## குறிப்புகள்

## நகரத்தார்களும் கோயில்களும்

1. டாக்டர் தமிழண்ணல், ''நகரக் கோயில்கள்''- நகரத்தார் மாநில மாநாட்டு மலர் - ப.25
2. ராம. சோம. கதிரேசன், தனவணிகர் தன்மை ப. 13
3. 1. வீர. லெ. சின்னயச் செட்டியார், தன வணிகராகிய நாட்டுக் கோட்டை நகரத்தார் சரித்திரம். ப. 7
   2. அ. இராமநாதன் செட்டியார், நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு ப.9
   3. சு. சேசாத்திரி சர்மா, நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு ப.3
   4. Dr. V. SP. Manickam, Collected Papers, p 99

4. நேர்காணல் டாக்டர் கே. சி. கிருட்டிணன் & டாக்டர் சுரேசு மைசூர் 18-10-1982.

5. இங்கும், இதனைத் தொடர்ந்தும் குறிப்பிடப் பெறுகின்ற ஆண்டு எல்லைகள் எல்லாம் அறிஞர் வ.சுப. மாணிக்கத்தின் கருத்தைப் பின்பற்றியவை.

6. 1. வீர லெ. சின்னயச் செட்டியார். மு. நூ., ப.5
   2. அ. இராமநாதன் செட்டியார், மு. நூ., ப. 4

7. 1. வீர. லெ. சின்னயச் செட்டியார், மு. நூ., ப. 6
   2. அ. இராமநாதன் செட்டியார், மு. நூ., ப. 3

8 A Manual of the Pudukkottai State Vol. ii Part I pp. 549-550.

9. Edgar Thurston, Caste and Tribes of South India Vol. v, p. 262.

10. 1. வீர. லெ. சின்னயச்செட்டியார், மு. நூ., ப. 7.
    2 சூடாமணிப்புலவர், வைசியபுராணம்,. மருதவாணிபன் சருக்கம், சருக்கம் 11, பாடல் 24,

11. இரகுநாதன், இளங்கோவடிகள் யார்? ப. 376

12. அ. இராமநாதன் செட்டியார், மு. நூ பக். 11-12

13. வ, சுப. மாணிக்கம், நகரத்தார் அறப்பட்டயங்கள் ப. 31 இரகுநாதன், மு. நூ , பக். 377–378 இல் மேற்கோளாக வந்துள்ளது,

14. அ. இராமநாதன் செட்டியார், மு நூ., பக். 15. 16.

15. ''ஏழு நகரத்தார் குழுவநாடகம்'' இரகுநாதன், இளங்கோ வடிகள் யார்?-ப. 378இல் மேற்கோளாக வந்துள்ளது.

16. முத்துக்குட்டிப் புலவர். கண்ணுடையம்மன் பள்ளு -பாடல் 23.

17. பாடுவார் முத்தப்பசெட்டியார், செயங்கொண்டார் சதகமும் ஏழு நகரத்தார் பெயராற்பாடிய திருமுக விலாசமும், பக். 83. 84.

18. சூடாமணிப்புலவர், வைசியபுராணம்-கடவுளான் சருக்கம் சருக்கம் 27.

19. வீர. லெ. சின்னயச் செட்டியார், மு. நூ., பக். 10–12

20. மது. கா., 77-83, 315-324, 431-452, 501-506 511-518.

அகநா., 140, 228.
சிறுபாண்,, 55-61
பட். பாலை., 20-25.
பெரும்பாண்., 327-336.
புறம்., 56.

21. வீர. லெ. சின்னயச்செட்டியரர், மு. நூ. ப. 44

22, மெ. கதிரேசன், தனவைசியர் பெருமை, ப. 8

23 சேர்ம. லெ. செட்டிநாடும் செந்தமிழும்-ப. 6 .

24. வ. சுப. மாணிக்கம், நகரத்தார் அறப்பட்டயங்கள். பக்.37-38.

25. மேலது. ப. 16

25அ. திருநாவுக்கரசு சுவாமிகள்-தேவாரம்-மறுமாற்றத் திருத்தாண்டகம்-பாடல் 1.

26. இரகுநாதன், மு. நூ. ப. 386.

27. முத்துக்குட்டிப் புலவர். மு. நூ. பாடல் 21

28. பாடுவார் முத்தப்பர் திருமுகவிலாசம்-பாடல் 193.

29. கம்பன் அடிப்பொடி சா. கணேசன், நகரத்தாரும் காஞ்சியும், காஞ்சிபுரம் மலர்-பக். 21-22.

30. சோம.லெ ப.ஆ. நகரத்தார் மாநில மாநாட்டு மலர், ப. 143.

31. இரகுநாதன், மு. நூ. பக். 323-326.

32. வேலங்குடிக் கல்வெட்டு

33. பிள்ளையார்பட்டிக் கல்வெட்டு-147.

34. புறம்-6-18

35. கலி. 84-6.

36. பரி. 19-28.

37. பரி. திரட்டு 1-49.

38. பரி திரட்டு 1-59.

39. பரி. திரட்டு 1-63.

40. சோம. லெ., ப. ஆ., மு. நூ., ப. 291.

# 2. நகரக் கோயில்களின் தோற்றமும் வளர்ச்சியும்

## 2. 1. நாகநாட்டில் மேற்கொண்ட வழிபாடு :

நகரத்தார்கள், நாகநாட்டின் சாந்தியாபுரியில் கி. மு. 2898 ஆம் ஆண்டில் வாழும் போதும் சைவ சமய நெறியிலேயே ஏற்பாடு செய்துள்ளனர் எனப் பூங்கொன்றை வேலங்குடிக்கல்வெட்டு கூறுவதாகப் பலநூல் ஆசிரியர்களும் மேற்கோள் காட்டியுள்ளனர் [1] வழிபாடு பற்றிய செய்திகளைஅடுத்துக் காணலாம்.

திருமணத்தில் கொள்வினை கொடுப்பினைக்காக ஒவ்வொரு சமூகத்தினரும் தங்களுக்குள் சில வகைகளைப் பிரித்து வைத்துக் கொண்டுள்ளனர்.

அந்தணர்கள் பல முனிவர்களின் (ரிஷிகளின்) பெயரில் தமக்குள் பல கோத்திரங்களை வகுத்துக்கொண்டுள்ளனர். நகரத்தார்கள் ஒன்பது நகரக் கோயில்களின் அடிப்படையிலேயே தமக்குள் ஒன்பது கோத்திரங்களைக் கொண்டுள்ளனர்.

நாகநாட்டின் சாந்தியாபுரியில் வாழும்போது இவர்களது கோத்திரம் சந்திர குலக்கோத்திரம் என்றே பெயர் பெற்றுள்ளது, அந்த ஒரு கோத்திரத்திற்குள் பல வகைகளைப் பிரித்துவைத்துக் கொண்டு கொள்வினை கொடுப்பினைகளை மேற்கொண்டிருப்பார்கள் என்று எண்ணத்தோன்றுகிறது.

சந்திரகுல கோத்திர வைசியர்கள் என்னும் பெயரில், கோபதீசுவர சுவாமியினை வழிபட்டுள்ளனர். சதாசிவ குருவினிடத்தில் சிவதீட்சை பெற்றுள்ளனர். மரகத விநாயகரை வழிபாடு செய்

துள்ளனர். சிவகாம புராண சித்தாந்தத்தைப் படித்துச் சைவ தீட்சையுடன் எப்போதும் விபூதியினையும் உருத்திராட்ச மாலையினையும் அணிந்துள்ளனர். சிவ தருமங்களையும் குலதருமங்களையும் செய்துவந்துள்ளனர்.

## 2. 2. காஞ்சிபுரத்தில் மேற்கொண்ட வழிபாடு :

நகரத்தார்கள் காஞ்சிபுரத்தில் சத்திபுரீசுவரரை வழிபாடு செய்துள்ளனர். அருணகிரி சிவசங்கராசாரியார் என்னும் குருவினிடத்தில் சிவதீட்சைபெற்றுள்ளனர். மரகத விநாயகரை வழிபாடு செய்துள்ளனர்.

காவிரிப்பூம்பட்டினம் செல்வதற்கு முன் காஞ்சிபுரத்தில் சமணசமயத்தைத் தழுவிப் பிறகு மீண்டும் சைவ சமயத்திற்கே வந்திருப்பதாகக் கம்பன் அடிப்பொடியும், டாக்டர் தமிழண்ணலும் கருதுகின்றனர்.[2]

இளையாத்தங்குடி சென்ற பிறகும் சிலரிடம் சமண வழிபாடு இருந்திருக்கிறது என்பதற்கு அங்கு தற்பொழுது ஆய்வாளரால் கண்டுபிடிக்கப்பட்ட சமணர் சிலையும் ஒரு சான்றாகிறது அது கண்டுபிடிக்கப்பட்ட இடத்திற்குப் பெயர் சமணம் காடு என்பதாகும். பழைய பெருமாள் கோவிலின் தென்புறம் இச்சமணம் காடு உள்ளது. அங்கு மிகவும் சிதைந்த ஒரு கல்வெட்டும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இது குலசேகர தேவன் காலக் கல்வெட்டாகும்.

சைவ சமயம் தலைசிறந்து விளங்கியதால் சமணர் வழிபாடு முற்றிலும் இளையாத்தங்குடியில் மறைந்து விட்டது அதனாலேயே சமணம் காட்டிலிருந்த சிலையை யாரும் பேணிப் பாதுகாக்கவில்லை. அச் சிலையின் உடைந்த கீழ்ப்பகுதி மட்டுமே தெற்கு இளையாத்தங்குடி, கல்லூரணியில் சுடுகாட்டுச் சாலையில் கிடைத்துள்ளது. தலைப் பகுதியைக் காணவில்லை. கழுத்திலிருந்து உள்ளங்கால் வரையுள்ள சிலைப் பகுதி மட்டுமே கிடைத்துள்ளது.

இடதுகை மேல் வலதுகையை வைத்து அருத்தப் பிரியாங்காசன நிலையில் காணப்படுகிறது. இச்சிலையின் உயரம் 1.50 மீட்டர். (நி.ப.எண்.1). நின்ற கோலத் திகம்பரர் சிற்பம் ஒன்று 1962 வரை இவ்விடத்தில் இருந்ததாக இப்பகுதி மக்கள்

கூறுகின்றனர். 'அம்மனச்சாமி' என்று அதனை அழைத்துள்ள னர். அச்சிலை தற்பொழுது காணக் கிடைக்கவில்லை.

## 2.3. காவிரிப்பூம்பட்டினத்தில் மேற்கொண்ட வழிபாடு:

காவிரிப்பூம்படினத்தில் கிழக்குத் தெரு, மேற்குத் தெரு, தெற்குத் தெரு ஆகிய மூன்று தெருக்களிலும் நகரத்தார்கள் வசித்துள்ளனர். தங்கள் வீட்டில் சிங்கக் கொடியினை ஏற்றி யுள்ளனர். தங்கள் மாளிகைகளில் தங்கக் கவசத்தை வைத்துக் கொண்டுள்ளனர்.

உருத்திராபதீசுவர சுவாமியினை வழிபட்டுள்ளனர். சிதம்பரத் திலுள்ள பத்ஞ்சலி என்னும் பகுதியில் இருந்த ஈசான குருவினி டத்தில் சிவதீட்சை பெற்றுள்ளனர். மரகத விநாயகரை வழிபாடு செய்துள்ளனர். சைவ சமய நெறியில் வழுவாது ஊருணிகளை யும் ஆலயங்களையும் புதிதாகக் கட்டிக் கொடுத்துள்ளனர்.

காவிரிப்பூம்பட்டினத்தில் எவ்வகையான கோத்திரங்களை மேற்கொண்டிருந்தனர் என்பதற்கான சான்றுகள் கிடைக்க வில்லை. மூன்று தெருக்களில் பிரிந்து வாழ்ந்தனர் என்றுமட்டுமே குறிப்புக் கிடைக்கின்றது.

பூவந்திச் சோழன் நகரத்தார் குலப் பெண்ணைச் சிறை வைத்ததனால் எண்ணாயிரம் குடும்பத்தினரும் தங்கள் ஆண் பிள்ளைகளை ஆத்துமநாத சாத்திரியாரிடம் விட்டுவிட்டுத் தற் கொலை செய்து கொண்டனர். அவ்வாறு எஞ்சிய பிள்ளைகளைப் பற்றிக் குறிப்பிடும் போது மேலத்தெரு ஆறுவழியில் அறுநூறு பிள்ளைகளும், தெற்குத் தெரு நான்குவழியில் நானூறு பிள்ளை களும், கீழத்தெரு ஏழுவழியில் ஐந்நூற்றிரண்டு பிள்ளைகளும், ஆக ஆயிரத்தைந் நூற்றிரண்டு பிள்ளைகளும் ஆத்துமநாத சாத் திரியாரிடம் வாழ்ந்ததாகக் குறிப்பிடுகின்றனர்.

மூன்று தெருக்களில் வசித்ததால் இவர்களை "மூவகையார்" (மூன்று வகையினர்) என்றே குறிப்பட்டுள்ளனர். இந்த மூன்று வகைகளே அன்றைய கோத்திரங்களாக இருந்திருக்கலாம் என்று எண்ண இடமளிக்கிறது. இன்று ஒரு கோயிலுக்குள் சில உட் பிரி வுகள் இருப்பது போல மேற்கண்ட ஆறுவழி நான்கு வழி,ஏழுவழி ஆகியன அமைந்திருக்கலாம் என்று கருத வாய்ப்பளிக்கின்றது.

மூன்று வகுப்பாய் உள்ள வேளாளர் குலத்தில் அவர்கள் திருமணம் செய்து கொண்டது மேற்கண்ட எண்ணத்தை உறுதிப் படுத்துகிறது.

இதனால், காவிரிப்பூம்பட்டினத்தில், வசித்துவந்த தெருவினை அடிப்படையாக வைத்தே மூன்று கோத்திரங்கள் அமைந்திருந்தன என்பதை உணர முடிகின்றது.

நகரத்தார்களின் வகை, வழி, கரை, பிரிவு என்னும் பிரிப்பு முறைக்குக் காவிரிப்பூம் பட்டினத்திலேயே கால்கோள் விழா நடத்தியுள்ளனர் என இதன்மூலம் தெரியவருகிறது.

## 2.4. பாண்டிய நாட்டில் ஏற்பட்ட முதல் மூன்று பிரிவுகள்:-

காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து பாண்டிய நாட்டுக்கு வந்த வணிகர்களுக்குச் சவுந்திர பாண்டியன் மூன்று ஊர்களையும் அம் மூன்று ஊர்க்கோயில்களையும் விட்டுக் கொடுத்தான்.

அரியூர் நகரமும் பிரான்மலைக் கோயிலும், சுந்தரபட்டண மும்-அவ்வூர்க் கோயிலும், இளையாத்தங்குடி நகரமும் அவ்வூர் கோயிலும் விட்டுக் கொடுக்கப்பட்டன.

மூன்று வகுப்பாயுள்ள வேளாளர் குலத்தில் திருமணம் செய்து கொண்டதனால் எப்போதும் ஒற்றுமையாக இருக்க முடியாது என்று எண்ணினார்கள். அதனால் மூன்று வகையாரும் மூன்று பிரிவினர்களாகப் பிரிந்து வாழத் தலைப்பட்டனர்.

காவிரிப்பூம்பட்டினத்தில் மேலத் தெருவில் வாழ்ந்த ஆறு வழியாருக்கு அரியூர் நகரமும் பிரான்மலைக் கோயிலும் அமைந்தன. தெற்குத் தெரு நான்கு வழியாருக்குச் சுந்தர-பட்டணமும், அவ்வூர்க்கோயிலும் அமைந்தன. கீழத்தெரு ஏழு வழியாருக்கு இளையாத்தங்குடி நகரமும் அவ்வூர்க் கோயிலும் அமைந்தன. மூன்று வகையாருக்கும் பொதுவாய் உள்ள மரகத விநாயகரை அரியூர்க் கோயிலில் வைத்து வழிபடலாயினர். அரியூருக்கும் சுந்தரபட்டணத்திற்கும் சென்ற வணிக மரபினர், தொலைவு காரணமாகவும், பழக்க வழக்கங்கள் காரணமாகவும் இளையாத்தங்குடியில் குடியேறியவர்களுடன் கொள்வினை கொடுப்பினையின்றிப் பிரிந்துவிட்டனர். எனவே இளையாத்தங்

குடியில் குடியேறியோரின் வழிமுறையினரே நகரத்தார்கள் என அழைக்கப்படுகின்றனர். மேற்கண்ட மூன்று வகையினரின் வரலாறு, நாகரிகம் இக்கால வாழ்க்கை நலம் ஆகியன எதிர்கால ஆய்வாளர்கள் ஆராய்தற்குச் சிறந்த களமாகும்.

## 2. 5 .நகரக் கோயில்களின் தோற்றம்:-

ஏழு வழி இளையாத்தங்குடி நகரத்தார் என்னும் பெயருடன் நகரத்தார்கள் நெறி வழுவாமல் இளையாத்தங்குடியில் வாழ்ந்து வந்தார்கள்.

பின்பு தங்களுக்குள் ஒற்றுமைப்படாமல் சிலர் தவிர மற்றை யோரெல்லாம் எண் வகையான கூட்டத்தாராகித் தங்கள் தங் களுக்கு வெவ்வேறு கோயில்கள் விட்டுக்கொடுக்க வேண்டுமென்று பாண்டிய மன்னனைக் கேட்டுக் கொண்டனர்.

கி .பி. 712 ஆம் ஆண்டில் நகரத்தாரின் இரு வகையினருக்கு மாற்றூர்க் கோயிலையும், வயிரவன்பட்டிக் கோயிலையும் பாண்டிய மன்னன் அளித்துள்ளான்.

கி. பி, 714 ஆம் ஆண்டில் பாண்டிய மன்னன் நகரத்தாரின் நான்கு வகையினருக்கு இரணியூர்க் கோயிலையும், பிள்ளையார் பட்டிக் கோயிலையும், நேமம் கோயிலையும், இலுப்பைக்குடிக் கோயிலையும் அளித்துள்ளான்.

கி பி. 718 ஆம் ஆண்டில் நகரத்தாரின் இரு வகையினருக் குச் சூரைக்குடிக் கோயிலையும் வேலங்குடிக் கோயிலையும் பாண்டிய மன்னன் அளித்துள்ளான்.

மேற்கண்ட செய்திகளைப் பூங்கொன்றை வேலங்குடிக் கல்வெட்டு கூறுவதாக அறிஞர் வ. சுப. மாணிக்கம் குறிப்பிட்டுள் ளார்கள்.

இதன்படி ஒன்பது நகரக் கோயில்களும் ஏறத்தாழ ஒரே காலகட்டத்தில் தோன்றியது போலக் காணப்படினும், அவை தோன்றிய காலம் பற்றிய ஆய்வு பின்னர் இடம் பெறுகிறது.

நகரத்தார்களுக்குப் பாண்டிய மன்னன் எட்டுக் கோயில் களையும் அளித்தான் என்ற செய்தி மட்டும்தான் தெரிகின்றது. எந்தப் பாண்டிய மன்னன் அளித்தான் என்ற முழுமையான செய்தி கிடைக்கப் பெறவில்லை.

எனினும் எட்டுக் கோயில்களிலும் கோயிலைத் தோற்றுவித்தவர் யார் என்ற குறிப்பு மட்டும் காணக்கிடைக்கின்றது. அதனைஅறிஞர் வ. சுப. மாணிக்கம் அவர்களின் அட்டவணைப்படி காண்போம்.

| வ. எண் | ஊர்ப் பெயர் | கோயிலைத் தோற்றுவித்தவர் | அவ்வூருக்கான காரணப் பெயர்கள் |
|---|---|---|---|
| 1. | மாற்றூர் | திரிபுவனசக்கரவர்த்தி | அதிவீரபாண்டியபுரம் |
| 2. | வயிரவன்பட்டி | வளவேந்திர ராசன் | |
| 3. | இரணியூர் | காருண்ய பாண்டியன் | சொர்ணபுரம். |
| 4. | பிள்ளையார்பட்டி | நந்திராசன் | நந்திபுரம் |
| 5. | நேமம் | நேமராசன் | மதுநந்திபுரம். |
| 6. | இலுப்பைக்குடி | திரிபுவன சக்கரவர்த்தி | அதிவீரபாண்டியபுரம். பிரமபுரம். |
| 7. | சூரைக்குடி | | பெதரிகாபுரம். |
| 8. | வேலங்குடி | | கெந்தகாபுரி. |

## 2.6. முதலில் தோன்றிய ஏழு கோயில்கள்:

பூங்கொன்றை வேலங்குடிக் கல்வெட்டு இளையாத்தங்குடிக் கோயிலிலிருந்து பிரிந்து சென்றவர்கள் கி பி.712 முதல் கி.பி. 718 வரையான ஏழு ஆண்டுகளுக்குள் பிற எட்டுக் கோயில்களையும் தனித்தனியாகப் பெற்றனர் எனத் தெரிவிக்கிறது பூங்கொன்றை வேலங்குடிக் கல்வெட்டின்படி ஒன்பது நகரக்கோயில்களின் தோற்றம் கி.பி. 718 இல் நிறைவு பெற்றுள்ளது என்றாகிறது.

ஒருகோயிலிலிருந்து எட்டுக்கோயில்கள் பிரிந்து வர, ஒன்பது கோயில்கள் தோன்றியதாக அக் கல்வெட்டு உணர்த்துகிறது.

ஆனால் ஏழு நகரக் கோயில்களிலிருந்துதான் ஒன்பது நகரக் கோயில்கள் தோன்றின என்பது கள ஆய்வின் மூலம் நேர்காணலின் போது வெளிப்பட்டது.

''ஏழு நகரத்தார்'' என்ற சிறப்புப்பெயர் அதனாலேயே ஏற்பட்டது. அதனால்தான் பாடுவார் முத்தப்ப செட்டியார் நகரத்தார் பற்றிப் பாடிய திருமுக விலாசத்திற்கு ஏழு நகரத்தார் பெயராற் பாடிய திருமுக விலாசம்'' என்று பெயரிட்டார் எனலாம்.

''இருநிதியஞ் சேருகின்ற வேழ்நகரத் தார்மேற்
திருமுக விலாசமது செப்ப- வருளாற்
குணபதியா மீசன் குழவியென வுற்ற
கணபதிபொற் றாண்மலரே காப்பு''

எனவரும் காப்புச் செய்யுளே அக்கருத்திற்குக் காப்பாக அமையும். ஏழு நகரத்தார் பெயரில் குழுவ நாடகம், ஏழு நகரத்தார் பள்ளு என்னும் நூற்பெயர்களும் இக்கருத்திற்கு அரண் செய்யும்.

இளையாத்தங்குடியிலிருந்து ஏனைய ஆறு பிரிவினர்களும் ஆறு ஊர்களுக்குப் பிரிந்து சென்றனராதலின் ''ஏழு கோயில் நகரத்தார்கள்'' என்ற பெயர் ஏற்பட்டது என்பதை உறுதிப் படுத்துவார் அறிஞர் தமிழண்ணல்.[3]

## 2.7.நகரக் கோயில்களின்வளர்ச்சி:-

இளையாத்தங்குடியில் தங்கியவர்கள் ஏழு பிரிவினராவர். அவர்கள் முறையே ஒக்கூருடையார், அரும்பூர்க்கிழார், பெருமருதூருடையார், கழனிவாசற்குடியார், கிங்கிணிக்கூருடையார்,

பேரசெந்தூருடையார், சிறுசேத்தூருடையார் என்பவராவர். பிற்காலத்தில் இங்கிருந்து பிரிந்து சென்றவராகிய திருவேட்பூருடையார் (பிள்ளையார்பட்டிக் கோயிலாரும் இரணியூர்க் கோயிலாருமாகிய அண்ணண் தம்பியார் இருவரும்) என்ற பிரிவினரும் நெடு நாள் இளையாத் தங்குடியிலேயே வாழ்ந்தனர்.

இவ்விரு கோயில்களும் தோன்றிய காலம் எது என்பது ஆராயத்தக்கது.

“பிள்ளையார்பட்டி கிராமம் - திருவீங்கைக்குடி, மருதங்குடி ஊர்கள் நகரத்தார்க்கு உரிமையான ஆண்டு கி. பி. 12ஆம் நூற்றாண்டு என்று ஒரு கருத்து கல்வெட்டுகளால் அறியப்படுகிறது. எனவே ஏழு, ஒன்பதான பிரிவும் அதை ஒட்டியே ஏற்பட்டிருக்க வேண்டும்” என்பார் அறிஞர் தமிழண்ணல்.[4]

இரணியூர்க் கோயில் கருவறைச் சுவரில் கி. பி 1501 ஆம் ஆண்டில் கல்வாச நாட்டில் இளையாத்தங்குடியான குலசேகரபுரத்தில் திருவேட்புடையான் என்ற ஒருவருக்கு, பத்திரகாளியம்மன் கோயிலுக்குத் தென்புறம், ஓர் அம்மன் கோயிலை அமைத்து வழிபடுவதற்கு, இரணியூரில் வசிப்பவர்களால் சுதந்திரமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று குறிக்கப்பட்ட கல்வெட்டு இருந்தது என்பதைச் சென்னைக் கல்வெட்டு ஆய்வாளர்கள் பதிவு செய்துள்ளனர். (1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண்-8) இக் கல்வெட்டுச் செய்தியையும் நகரத்தார் இசைவுப் பிடிமானங்களில் எழுதும் கல்வாச நாட்டில், இரணியூர் மருதங்குடியான இராச நாராயணபுரத்தில், இரணியூர்த் திருவேட்பூருடையார் என்ற செய்தியையும் ஒப்பிட்டுக் காண்க. இதிலிருந்து கி. பி. 16 ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் இவ்விரணியூர்க் கோயிலாரும், பிள்ளையார்பட்டிக் கோயிலாரும். இளையாத்தங்குடிக் கோயிலிலிருந்து தனித்தனியே பிரிந்து சென்றனர் என்றும் அது முதல் ஏழு நகரக் கோயில் பிரிவுகள் ஒன்பது நகரக்கோயில்களாகப் பிரிந்தன என்றும், இந்நகரத்தார் ஏழு கோயில் பிரிவினராக இருந்தது கி. பி. பதினோராம் நூற்றாண்டிற்கு முற்பட்ட செய்தி என்றும் தெளிவாக அறியலாம் என்பார் அறிஞர் தமிழண்ணல்.

ஏழுகோயில், ஒன்பது கோயில்களாக வளர்ந்தது கி பி. 12 ஆம் நூற்றாண்டா?கி. பி. 16ஆம் நூற்றாண்டா? என்ற ஐயம் எழுகிறது.

ஏழு கோயில்கள்தான் முதலில் இருந்தன என்பதை இரணியூர்க் கல்வெட்டு (1926ஆம் ஆண்டுக் கல்வெட்டு எண். 2) மெய்ப்பிக்கின்றது. அதில் உள்ள, ''ஏழகத்தார் தர்மம் கொடுத்தார்'' என்ற வரி மிக இன்றியமையாத சான்றாதாரமாக விளங்குகிறது.

இதை அடுத்துள்ள இரணியூர்க் கல்வெட்டு (1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண். 3) சக ஆண்டு 1423இல் வெட்டப்பட்டதாகும்

சக ஆண்டிலிருந்து கிறித்துவ ஆண்டைக் காணத் தொல் பொருள் ஆய்வுத் துறையினர் 78 என்ற இலக்கத்தைக் கூட்ட வேண்டும் என்பார்கள். அவ்வாறு 1423 உடன் 78ஐக் கூட்ட கி.பி. 1501 வருகின்றது.

எனவே கி. பி. 1501இல் தான் இளையாத்தாங்குடியான குலசேகரபுரத்துத் திருவேட்பூருடையார்களுக்குப் பத்திர காளி அம்மன் கோயிலுக்குத் தென் புறம் ஓர் அம்மன் கோயில் அமைத்து வழிபட அக்கிராம மக்களால் சுதந்திரமாகக் கொடுக்கப் பெற்றிருக்கிறது.

இக்கல்வெட்டின் அடிப்படையில்தான் 16ஆம் நூற்றாண்டில் ஏழு கோயில்கள் ஒன்பது கோயில்களாக மாறின என அறிஞர்கள் கூறிவந்துள்ளனர்.

ஆனால் பிள்ளையார்பட்டியில் உள்ள இரண்டு கல்வெட்டு-கள் (1936ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண்கள் -147, 150) பதின்மூன்றாம் நூற்றாண்டில் பிள்ளையார்பட்டிக் கோயிலுக்கு நகரத்தார்கள் வந்தனர் என்று கூறுகின்றன.

''(இண)ன் காரிக்குடி ஐஞ்ஞூற்றுவப் பெருந்தெருவில் நகரத்தாற்குப் பிடிபாடு பண்ணிக் கொடுத்த பரிசாவது இவர்கள் கீழ் குண்டாற்று மருதங்குடி ஊரார் பக்கல் விலை கொண்டுடைய புரவுக்கு விரிசை நீக்கி நாலுமாப் புரவுக்கு நாட்டு விழுக்காட்டுப் படி இறை குடிமை கொள்ளக் கடவதாகவும் ''[5]

''(இண)ன் காரிக்குடி ஐஞ்ஞூற்றுவப் பெருந்தெருவில் நகரத்தார் தாங்கள் வல்லத் தொற்று (வப்பற்)றில் விலை கொண்டுடைய கீ(ழ்கு)ண்டாற்று மருதங்குடியில் இவ்வூர் வயலும் உட்

(ப)ட பிடிபாட்டின்படி புரவு நிலம் நாலு மாவுக்கு நாட்டு விழுக் காட்டுப்படி பதினொன்(றாவது) முதல் கடமை கொள்வதா... ராசநாராயணபுர மென்று நகர......குடிபெறுவதாகவுஞ் சொன் (னோ)ம்'' [6]

மேற்கண்ட கல்வெட்டுகளுள் முதலில் குறிக்கப்பெற்ற கல் வெட்டு, திரிபுவனச் சக்கரவர்த்திகள் எம்மண்டலமுங் கொண்டரு ளிய சிறீ குலசேகரதேவர் ஆட்சிக்கு வந்தபிறகு பதினெட்டு ஆண் டுகள் கழித்து வெட்டப்பட்டது. இரண்டாவது குறிக்கப்பெற்ற கல் வெட்டு அவ்வரசன் ஆட்சிக்கு வந்த பிறகு பத்து ஆண்டுகள் கழித்து வெட்டப்பட்டது. இக்குறிப்புகள் அக்கல்வெட்டுகளிலேயே காணப்படுகின்றன.

குலசேகரதேவ பாண்டியன் கி.பி. 1268 இல் ஆட்சிப்பொறுப் பில் அமர்ந்ததால், இரண்டாவது குறிக்கப்பெற்ற கல்வெட்டு கி பி 1278 இலும் முதலிற் குறிக்கப்பெற்ற கல்வெட்டு கி.பி. 1286இலும் வெட்டப்பட்டிருக்கின்றன.

இதனால் பிள்ளையார்பட்டிக் கோயிலுக்கு நகரத்தார்கள் 13 ஆம் நூற்றாண்டில் வந்துள்ளனர் எனத் தெரிய வருகின்றது.

இரணியூர்க் கல்வெட்டு,பிள்ளையார்பட்டிக் கல்வெட்டுகளால் இரண்டு உண்மைகள் காணக் கிடைத்துள்ளன. அவையாவன:

1. நகரத்தார்களில் ஒரு பகுதியினர் பதின்மூன்றாம்நூற்றாண் டில் பிள்ளையார்பட்டிக் குடிமக்களாயினர். பதின்மூன்றாம் நூற் றாண்டில் ஏழு நகரக் கோயில்கள், எட்டு நகரக் கோயில்களாக வளர்ந்தன.

2 பதினாறாம் நூற்றாண்டில் நகரத்தார்களின் ஒரு பகுதி யினர் இரணியூர்க் குடிமக்களாயினர். இதனால் பதினாறாம் நூற் றாண்டில்தான் எட்டு நகரக் கோயில்கள், ஒன்பது நகரக் கோயில்களாக வளர்ந்தன.

மேற்கண்ட செய்திகள் ஆழமாக ஆராயத்தக்கன.

ஆய்வாளர் மேற்கண்ட கள ஆய்வின் நேர்காணலின் போது ஏழு நகரக் கோயில்களிலிருந்து ஒன்பது நகரக் கோயில்கள்தோன் றியது ஒரே கால கட்டத்தில்தான் என்ற செய்தி நூறு விழுக்காடு பதிவாகியுள்ளது. எந்தக் கால கட்டத்தில் இரணியூர்க் கோயிலும் பிள்ளையார்பட்டிக் கோயிலும்தோன்றினஎன்பதை மட்டும் சரிவர

நேர்காணலின் போது பெற இயலவில்லை. ஆனால் முன்னோர்கள் சொன்ன செவிவழிச் செய்தி இதுதான் என்பதை மட்டுமே உறுதியாகக் கூறினர்.

இளையாத்தங்குடியிலிருந்து வந்த திருவேட்பூருடையார் என்ற பிரிவில் அண்ணன் தம்பி இருவரும் முறையே இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய இரு ஊர்களிலும் வாழத் தலைப்பட்டனர் என அறிகின்றோம்.

அவ்வாறு வந்த ஒரு பிரிவில் தம்பியின் வழிமுறையினர் 13 ஆம் நூற்றாண்டில் பிள்ளையார்பட்டிக்கு வந்தனர் எனக் கல்வெட்டு கூறுகின்றது. அண்ணன் வழிமுறையினர் 16 ஆம் நூற்றாண்டில் இரணியூருக்கு வந்தனர் எனப் பிறிதொரு கல்வெட்டு கூறுகின்றது, அவ்வாறாயின் அண்ணன் வழிமுறையினர் அந்த 300 ஆண்டுகள் எங்கிருந்தனர் என்ற வினாவிற்கு விடை வேண்டும்.

இதற்கான விடையினை நகரத்தார் குடும்பத் திருமணத்தின் போது எழுதப்படும் "இசைவுப் பிடிமானம்" என்னும் திருமணப் பதிவேடு தெரிவிக்கின்றது. பழமையைப் பொன்னேபோல் நகரத்தார்கள் போற்றும் சிறப்பு அவர்களுக்கு இருப்பதால், பண்டைக் காலத்திலிருந்து இந்த இசைவுப் பிடிமானத் தொடர்களை ஒரு மாற்றமும் இன்றி எழுதிவருகின்றனர். எனவே ஒரு கல்வெட்டுக்குரிய இன்றியமையாத தன்மையை இவ்விசைவுப் பிடிமான வரிகளுக்கும் வழங்கலாம்.

பிள்ளையார்பட்டிக் கோயிலைக் கோத்திரமாய்க் கொண்டவர்கள் எழுதும் வரி:

"கல்வாச நாட்டில் இளையாத்தாங்குடியான குலசேகர புரத்தில் இரணியூர் மருதங்குடியான ராசநாராயணபுரத்தில் பிள்ளையார் பட்டியான திருவேட்பூருடையார்" எனத் தொடர்கிறது.

இரணியூர்க் கோயிலைக் கோத்திரமாகக்கொண்டவர்கள் எழுதும் இசைவுப் பிடிமான வரி:

"கல்வாச நாட்டில் இளையாத்தங்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான ராசநாரயணபுரத்தில் இரணியூர்த் திருவேட்பூருடையார்" என்று தொடர்கிறது.

கல்வெட்டுகள் தரும் செய்திகளின் அடிப்படையில் பார்த்தால் பிள்ளையார்பட்டிக் கோயிலைக் கோத்திரமாய்க் கொண்டவர்கள் எழுதும் இசைவுப் பிடிமானத்தில் இரணியூர் என்ற பெயர் முதலில் வரக் கூடாது. பிள்ளையார்பட்டியின் பழம் பெயர்களான மருதங்குடியான இராசநாராயணபுரம் மட்டுமே வரவேண்டும். ஆனால் இரணியூர் எனும் பெயர்தான் முதலில் வந்துள்ளது.

இரணியூர்க் கோயிலைக் கோத்திரமாய்க் கொண்டவர்கள், எழுதும் இசைவுப்பிடிமான வரிகளிலும் மேற்கண்ட இரு பெயர்களுமே அதே வரிசைமாறாது இடம் பெற்றுள்ளன.

எனவே இரணியூர்க் கோயில் பிள்ளையார்பட்டிக் கோயிலுக்குப் பிறகுதான் தோன்றியது என்ற கூற்று சரியன்று. ஆகவே கல்வெட்டு கூறும் செய்திகளை மேலும் ஆராய வேண்டியுள்ளது.

பிள்ளையார்பட்டிக் கல்வெட்டு, நகரத்தார்கள் எப்பொழுது அவ்வூருக்கு வந்தார்கள் என்ற காலத்தை உறுதியிட்டுக் கூறுகின்றது.

இரணியூர்க் கல்வெட்டு நகரத்தார்கள் எப்பொழுது அவ்வூருக்கு வந்தார்கள் என்பதைக் கூறவில்லை. அம்மன் கோயில் அமைக்க எப்போது நிலம் இனாமாகக் கொடுக்கப் பெற்றது என்பதை மட்டுமே கூறுகின்றது.

நகரத்தார்கள், கோயில்களில் முழுமையாக வழிபாடு செய்து, நன்கு கோயில்களைப் பேணிப் பாதுகாப்பதைக் கண்ட ஒன்பது நகரக் கோயில்கள் உள்ள கிராமத்து மக்கள் தங்களது கிராம தேவதைகளாக அம்மன் கோயில்களையும் நிருவகிக்கும் பொறுப்பை நகரத்தாரிடம் அளித்துள்ளனர். இதற்கு ஒன்பது நகரக் கோயில்களிலும் சான்றுகள் உள்ளன. நகரக்கோயில்களின் பக்கத்தில் உள்ள அம்மன் கோயில்களை நகரக் கோயில்களே எப்போதும் நிருவகித்து வருகின்றன.

இரணியூர் நகரத்தார்களின் கோயில் வழி நாகரிக வாழ்க்கையினைப் பார்த்து இரணியூர் மக்கள் அம்மன் கோயிலை அமைக்க இடமளித்துள்ளனர் என்பதையே இரணியூர்க் கல்வெட்டு குறிக்கின்றது. நகரத்தார்கள் சிவன் கோயிலையே தலைமையாகக் கொண்டவர்கள். நகரத்தார்கள் ஆட்கொண்ட நாதர்கோயிலுக்கு எப்பொழுது வந்தனர் எனக் கல்வெட்டு குறிப்பிடவில்லை.

எனவே திருவேட்பூருடையாரின் ஒரு பிரிவினர் பிள்ளையார் பட்டிக்குச் சென்ற கி.பி. 1278லேயே மற்றொரு பிரிவினர் இரணி யூருக்குச் சென்றிருக்க வேண்டும் என்பதை இசைவுப் பிடிமான வரிகளும், நேர்காணல் செய்திகளும் உறுதிப்படுத்துகின்றன.

அவ்வாறு 13 ஆம் நூற்றாண்டில் இரணியூருக்கு வந்தவர்கள் ஆட்கொண்ட நாதர் கோயிலில் வழிபாடு செய்து நிருவகித்த பாங் கினைக் கண்டு பாராட்டியே 16 ஆம் நூற்றாண்டில் அம்மன் கோயில் கட்ட இடம் கொடுத்தனர் எனக் கொள்ள வேண்டும்.

இதனால் 13 ஆம் நூற்றாண்டிலேயே ஏழு நகரக் கோயில்கள் ஒன்பது நகரக் கோயில்களாயின என்பதும் இரணியூர்க்கோயிலும் பிள்ளையார்பட்டிக் கோயிலும் அக்காலகட்டத்திலேயே ஒன்றா கத் தோன்றின என்பதும் அறியப் படுகின்றன.

## 2.8. நகரக்கோயில்கள் எனும் பிரிவுகளின் அமைப்பு முறை:

நகரக் கோயில்களின் வளர்ச்சி நிலைமையினை ஒவ்வொரு கோயிலிலும் அமைந்துள்ள உட்பிரிவுகளே வெளிப்படுத்தும்.

ஒரு கோயிலைச் சார்ந்தவர்கள் வேறு ஒரு கோயிலைச் சார்ந் தவர்கள் வீட்டில்தான் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற கோத்திரக் கட்டுப்பாடு இருக்கின்றது.

ஒரே கோயிலைச் சார்ந்தவர்கள் 'பங்காளிகள்' என்றுஅழைக் கப் படுவார்கள். அவர்கள் அண்ணன் தம்பி போன்றவர்கள். எனவே ஆண்மகனைத் தத்தெடுத்துக் கொள்ளும் போது தன் கோயிலைச்சார்ந்த குடும்பத்தார் வீட்டிலிருந்தே 'பிள்ளைகூட்டிக் கொள்வது' வழக்கம்.

இளையாத்தங்குடி, மாற்றூர் ஆகிய இரு கோயிலைச் சார்ந்த நகரத்தார்களின் மக்கள் தொகைப் பெருக்கம் (புள்ளிகள்) அதிகம் என்பதால், ஒரே கோயிலுக்குள்ளேயே திருமணம் செய்து கொள் ளும் வழக்கம் வந்துள்ளது.

இளையாத்தங்குடி, மாற்றூர் ஆகிய இரு கோயிலிலும் ஏழு உட்பிரிவுகள் உள்ளன. எனவே ஒரு பிரிவினர் மற்ற ஆறு பிரிவி னருள் யாரேனும் ஒருவர் வீட்டிலிருந்து பெண் எடுத்துக் கொள்ளு

கின்றனர். ஆனால், பிள்ளை கூட்டிக் கொள்ளும் போது, தங்கள் பிரிவிலிருந்து மட்டுமே கூட்டிக் கொள்வர்.

ஒரு கோயில் சார்ந்த மக்களின் எண்ணிக்கை பெருகியதாலேயே இப் புதிய வழக்கம் தோன்றியுள்ளது.

ஒன்பது நகரக் கோயில்களிலும் உள்ள இறைவன், இறைவி திருப்பெயர்களையும், உட்பிரிவுகளையும் இசைவுப் பிடிமானங்களில் வரும் தொடர் அமைப்பில் அடுத்துக் காணலாம். இப்பட்டியல் நகரக் கோயில்களின் வளர்ச்சியைக் காட்டும்.

## 1. இளையாத்தங்குடிக் கோயில்:

இறைவன் பெயர் : கைலாசநாதர்.
இறைவி பெயர் : நித்திய கல்யாணி

கேரளசிங்க வளநாடாகிய கல்வாசநாட்டில் இளையாத்தங்குடியான குலசேகர புரத்தில்,

### உட்பிரிவுகள் :

1 ஒக்கூருடையார்.
2. அரும்பாற்கிளையாரான பட்டணசாமியார்.
3. பெருமருதூருடையார்.
4. கழனிவாசல்குடியார்.
5. கிங்கிணிக்கூருடையார்.
6. பேரசெந்தூருடையார்.
7. சிறுசேத்தூருடையார்.

## 2. மாற்றூர்க் கோயில் :

இறைவன் பெயர் : ஐந்நூற்றீசர்.
இறைவி பெயர் : பெரியநாயகி

கேரளசிங்க வளநாடாகிய பிரம்பூர் நாட்டில் மாற்றூரான வீரபாண்டியபுரத்தில்

### உட்பிரிவுகள் :

1. உறையூருடையார்.
2. அரும்பாக்கூருடையார்.

3. மணலூருடையார்,
4 மண்ணூருடையார்.
5. கண்ணூருடையார்.
6. கருப்பூருடையார்.
7. குளத்தூருடையார்.

## 3. வயிரவன்பட்டிக்கோவில்

இறைவன் பெயர் : வளரொளிநாதர்.
இறைவி பெயர் : வடிவுடையம்மை.

கேரள சிங்க வளநாடாகிய ஏழகப் பெருந் தெருவான வீரபாண்டிய புரத்தில்

1 சிறுகுளத்தூருடையார் இதன் உட்பிரிவுகள் :
1. பெரிய வகுப்பு
2. தெய்யனார் வகுப்பு (தெய்வநாயகர் வகுப்பு)
3. பிள்ளையார் வகுப்பு.

## 4. நேமம் கோயில்

இறைவன் பெயர் : செயங்கொண்ட சோழீசர்,
இறைவி பெயர் : சவுந்தரநாயகி.

கேரளசிங்க வளநாட்டில் நேமமாகிய குலசேகரபுரத்தில்
1. இளநலமுடையார்.

## 5. இலுப்பைக்குடிக்கோயில்

இறைவன் பெயர் : தான்தோன்றி ஈசர்
இறைவிபெயர் : சவுந்தரநாயகி

கேரளசிங்க வளநாடாகிய பிரம்பூர் நாட்டில் இலுப்பைக்குடியான புகழிடங் கொடுத்த பட்டணத்தில்
1. சூடாமணிபுரமுடையார்.

## 6. சூரைக்குடிக் கோயில்

இறைவன் பெயர் ; தேசிகநாதர்.
இறைவி பெயர் : ஆவுடைநாயகி.

கேரளசிங்க வளநாட்டில் சூரைக்குடியான தேசிகநாராயண புரத்தில்

1. புகழ் வேண்டிய பாக்கமுடையார்

## 7. வேலங்குடிக் கோயில்

இறைவன் பெயர் : கண்டீசுவரர்.
இறைவி பெயர் : காமாட்சி அம்மை.

கேரளசிங்க வளநாட்டில் வேலங்குடியான தேசிக நாராயண புரத்தில்

(1) கழனி நல்லூருடையார்.

## 8. இரணியூர்க் கோயில்:

இறைவன் பெயர்: ஆட்கொண்ட நாதர்.
இறைவி பெயர்: சிவபுரந்தேவி.

கல்வாச நாட்டில் இளையாத்தங்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான இராசநாராயணபுரத்தில்

(1) இரனியூர்த் திருவேட்பூருடையார்.

## 9. பிள்ளையார்பட்டிக் கோயில்.

இறைவன் பெயர்: தேசி விநாயகப் பிள்ளையார்
என்ற கற்பக வினாயகர்.
திருவீசர்
மருதீசர்

இறைவி பெயர்கள்: சிவகாமவல்லி.
வாடாமலர் மங்கை.

கல்வாச நாட்டில் இளையாத்தங்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான இராசநாராயணபுரத்தில்

(1) பிள்ளையார்பட்டியான திருவேட்பூருடையார்.

## 2. 9. முடிபுகள்:-

2. 9. 1. நகரத்தார்கள் நாகநாட்டில் வாழும் போது கோபதீசுவர சுவாமியை வழிபட்டுள்ளனர். சந்திரகுல கோத்திரம் என்ற ஒரே கோத்திரத்துடன் வாழ்ந்துள்ளனர். அந்த ஒரு கோத்திரத்திற்குள் பல வகைகளைப் பிரித்து வைத்துக் கொண்டு கொள்வினை கொடுப்பினைகளை மேற்கொண்டிருப்பார்கள் என எண்ணத் தோன்றுகிறது.

2.9.2. காஞ்சிபுரத்தில் சந்திரபுரீசுவரரை வழிபாடு செய்துள்ளனர். அங்கு எவ்வகையான கோத்திரப் பிரிவுகளை மேற்கொண்டிருந்தனர் என்பதற்கான சான்றுகள் கிடைக்கவில்லை.

2.9.3. காவிரிப்பூம்பட்டினத்தில் உருத்திராபதீசுவரரை வழிபட்டுள்ளனர். மேலத் தெரு, தெற்குத்தெரு, கீழத்தெரு ஆகிய மூன்று தெருக்களின் அடிப்படையில் மூன்று வகையான கோத்திரங்களைக் கொண்டிருந்தனர். அவற்றுள் முறையே ஆறு வழி, நான்கு வழி, ஏழு வழி என உட்பிரிவுகளும் அமைந்திருந்தன.

2.9.4. பாண்டிய நாட்டிற்கு வந்த பிறகு, முதலில் ஏழு நகரக் கோயில்களை மையமாகக் கொண்டு வாழ்ந்துள்ளனர்.

2.9.5. இளையாத்தாங்குடியின் ஒரு பிரிவினராகிய திருவேட்பூருடையார் என்ற வகையினர் கி.பி. 1278 இல் இளையாத்தங்குடியிலிருந்து பிரிந்து சென்று இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய இரு கோயில் பிரிவுகளைப் புதிதாகத் தோற்றுவித்துள்ளனர். இதனால் 13ஆம் நூற்றாண்டில் ஏழு நகரக் கோயில்கள், ஒன்பது நகரக் கோயில்களாக வளர்ந்துள்ளன.

**குறிப்புகள்.**

நகரக் கோயில்களின் தோற்றமும் வளர்ச்சியும்.

1. வீர. லெ. சின்னயச் செட்டியார், தனவணிகராகிய நாட்டுக் கோட்டை நகரத்தார் சரித்திரம் - ப. 5 (இந்நூலைத் தொடர்ந்து வந்த நகரத்தார் சரித்திர நூல்கள் அனைத்திலும் இக் கல்வெட்டு குறிக்கப்பட்டுள்ளது)

2\. 1. கம்பன் அடிப்பொடி சா. கணேசன்-நேர் காணல் 10-9-1980

2. டாக்டர் தமிழண்ணல்-நேர் காணல்-27-12-1987.
3. சோமலெ-(ப.ஆ.) நகரத்தார் மாநில மாநாட்டு மலர்-ப.27
4. அறிஞர் தமிழண்ணல்-ஒன்பது நகரக் கோயில்கள், ''நகர மலர்'' 1978 சூலை மாத இதழ்-ப 21.
5. 1936 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண் 147.
6. 1936ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண் 150.

ம - ஸ்ரீபுரா

# 3. நகரக் கோயில்களின் அமைப்பு

## 3. கோயில் இலக்கணம்:-

மனிதன் அறிவு, இச்சை, செயல் என்ற மூன்று இயல்பு களைக் கொண்டவன். அவனது இம்மூன்று இயல்புகளுக்கும் உணவளிக்கும்படி மூன்று வகையான முறைகளில் கோயில் இலக் கணம் அமைந்துள்ளது. அவை கோயில் அமைப்பு முறை, பூசை, முறை. வழிபடும் முறை என்பனவாகும்.

இம்மூன்று முறைகளும் தனித்தனியே **அறிகுறிப் பொருள், அருள்நெறிப் பொருள், அனுபவப் பொருள்** என மூவகைப் பொருள்களைக் கொடுக்கும் என்பார் இலஞ்சி ஆ.சொக்கலிங்கம்.[1]

கோயில் அமைப்பு முறை அடியாருடைய இறையியல் **அறிவைப்** பெருக்கும் அறிகுறிப் பொருளாக அமைந்துள்ளது.

பூசை முறை அடியாருடைய **இச்சையைப்** பயன்படுத்தும் அருள்நெறிப் பொருளாக அமைந்துள்ளது. வழிபாட்டு முறை அடியாரை மன அமைதியோடு வீடுபேறு என்னும் ஆன்ம முன் னேற்றத்தை நோக்கிச் **செயல்பட** வைக்கும் அனுபவப் பொரு ளாக அமைந்துள்ளது.

சுருங்கக் கூறுமிடத்துக் கோயில்கள் கல், சுண்ணாம்பு, உலோகம், மரம் முதலியவற்றால் எழுதப்பெற்ற இறையியல் தத் துவக் காப்பியங்களாக அமைந்துள்ளன.

பரிணாம வளர்ச்சியால் விலங்கு நிலையிலிருந்து வளர்ந்த மனிதனைத் தெய்வ நிலைக்கு உயர்த்துவதே கோயிலின் முதல் நோக்கமாகும்.

மனிதனது உண்மை நிலையினைக் கூறி, அவன் தெய்வ நிலையை அடையக் கோயில்கள் தத்துவ விளக்கமாக அமைந்துள்ளன.

''மனிதன் உடம்புஅல்லன்; குணங்களல்லன்; அறிவுமல்லன்; அவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்ட ஆன்மாவே அவன்'' என்ற உண்மையை விளக்குவதே கோயில்களின் தலையாய நோக்கமாகும்.

''சர்வஞானோத்தரம்'' என்னும் ஆகம நூல், ஆன்மாவின் வேறுபட்ட நிலைகளையும் அவற்றிற்கான காரணங்களையும் கூறுகிறது

பூதபரி ணாமத்தால் பூதான்மா ஆவன்
புகல்சத்தம் பொருந்தலின் அந்தரான்மா ஆவன்
மேதகு தத்துவத்தால் தத்துவான்மா ஆவன்
விளம்புபிர கிருதிகுணந் தழீஇச்சுக துக்கங்கள்
தீதறவே புசித்தலினால் சீவான்மா ஆவன்
திகழ்தருமந் திரப்புணர்வால் மந்திரான்மா ஆவன்
யாதுமற விட்டஅவன் பரமான்மா ஆவன்
ஏகான்மா வே ஆறு திறனுமா யிருப்பன்[2]

என்னும் பாடல் ஆன்மாவின் ஆறு நிலைகளை உணர்த்துகிறது.

ஒருவன் தன் பூத உடம்பைத் தானாகக் கொண்டு, அதுவே தானாக உணர்ந்து ஒழுகும் போது அவன் பூதான்மாஎனப்படுகின்றான். தனது விருப்பு வெருப்பு முதலிய இச்சைகளை வெளிப்படுத்தும் போது அந்தரான்மாவாக விளங்குகின்றான். பிருதிவி முதல் புருடத்துவம் வரையுள்ள ஆன்ம தத்துவங்களை அறியும் கருவியாகிய மனத்தையே தானாக ஒருவன் உணரும்போதுஅவன்தத்துவான்மா எனப்படுவான். மேற்கண்ட யாவற்றையும் நான் அடக்கியாளக் கூடியவன் என்ற உணர்வு ஒருவனுக்குப் பிறந்து, அதனால் 'நான் பிரம்மம், என்ற ஆணவ முனைப்பு ஏற்படும் போது அவன் சீவான்மா ஆகின்றான், பின்னர் அவன் யான் எனது என்ற பசு நிலையை நீக்கவும், பேரின்ப வீடு பேற்றைப் பெறவும், விரும்பும் மந்திரஉபாசனையில் ஒன்றி நிற்கும்போது மந்திரான்மா எனப்படுவான். முடிவில் அவன், இறைவனோடு உடனாய், இரண்டறக் கலந்து நிற்கும் நிலையில், யாதுமறவிட்ட அவன் பரமான்ம ஆகின்றான்.

எனவே ஒரே ஆன்மாவே அதன் அறிவு நிலையைப் பொறுத்தும், அது சார்ந்து நிற்கும் பொருளைப் பொறுத்தும் பூதான்மா, அந்தரான்மா தத்துவான்மா, சீவான்மா, மந்திரான்மா பரமான்மா என ஆறுநிலைகளில் விளங்கும் என்பது ஆகமக் கருத்து.

ஆன்மாவின் இந்த ஆறு நிலைகளையும் அறிகுறியாக உணர்த்துவதே கோயிலிலுள்ள

| | | | |
|---|---|---|---|
| 1. | முன்கோபுரம். | தூலலிங்கம். | பூதான்மா, |
| 2. | மகாபலிபீடம். | பத்திரலிங்கம். | அந்தரான்மா. |
| 3 | கொடிமரம். | துவசலிங்கம். | தத்துவான்மா |
| 4. | மூலவர். | சதாசிவலிங்கம். | சீவான்மா. |
| 5. | பூசை செய்வோர் (ஆச்சாரியார்) | ஆன்மலிங்கம். | மந்திரான்மா. |
| 6. | பரவெளி. | அகண்டலிங்கம். | பரமான்மா. |

என்பனவாம். இந்த ஆறுவகையான ஆன்மாக்களைப் பற்றியும் தைத்ரீய உபநிடதமும் கூறுகின்றது.

ஒருவன், கோபுரத்தைக் கண்டவுடன் ''நான் உடம்பல்லன்; ஆன்மா'' என்று நினைவூட்டிக் கொள்ளவேண்டும். கோபுரம் தாண்டிப் பலிபீடம் சென்றதும் நான் இச்சையல்லன் என நினைந்து தன் சுயநல இச்சைகளை அங்கே பலிகொடுக்க வேண்டும். பின் கொடிமரத்தை நோக்கி, நான் மனமல்லன் தத்துவங்களல்லன் என நினைந்து கருவறைக்குள் செல்ல வேண்டும்.

கருவறையின் உள்ளிருக்கும் இறைவனைத் தொழும்போது தன்னைச் சீவான்மாவாக உணர்ந்து சீவான்மாவின் தன்மைகளான யான் எனது என்னும் உணர்ச்சிகளை நீக்கி இறைவனோடு இரண்டறக் கலந்து, இறைவனுடைய அருட் கருவியாக மட்டும் வாழ ஆர்வப்பட வேண்டும்.

பின், அவன் பசுபோதம் நீங்கிப் பதிஞானம் பெறுவதற்கு வேண்டிய சிவ ஆகம வழிபாட்டு முறைகளையும் மந்திரங்களையும் பூசை செய்வோர் உணர்த்த உணர்ந்து கொள்ள வேண்டும்.

மேற்கண்ட வழிபாட்டு முறைகளில் முதிர்ந்ததும், உரிய காலத்தில், இறைவனே திருவுருக் கொண்டு எழுந்தருளி அவனைத் தம் திருவடியில் சேர்த்துக் கொள்வார். அவ்வாறு

இரண்டறக் கலந்து குணம் குறியற்று நிற்கும் நிலையே பரவெளி அல்லது அகண்டலிங்கம் எனப்படுகிறது. இந்நிலையில் பூதான்மாவாக இருந்த ஒருவன் பரமான்மாவாக மாறுகிறான்.

**ஆலய வழிபாட்டின் ஒரே நோக்கம் விலங்குத் தன்மையை ஒழித்து, மனிதத் தன்மையை அடக்கி, தெய்வத் தன்மையை ஒளிவீசச் செய்வதே ஆகும்.**

மனிதனைத் தெய்வமாக்கும் திருப்பணிக்காகக் கோயில்கள் கட்டப்பெற்றதால் கோயிலின் அமைப்பு, மனித உடம்பின் உருவகமாகவே அமைந்துள்ளதை ஆகமங்கள் உணர்த்துகின்றன.

மனிதன் மேற்கில் தலை வைத்துக் கிழக்கில் கால்நீட்டி மல்லாந்து படுத்திருப்பதைப் போலக் கோயில் அமைந்துள்ளது. இதனைக் கீழ்வரும் அட்டவணையும் பின்னிணைப்பில் உள்ள படமும் நன்கு விளக்கும். (படம் எண்.2 ).

| **மனிதனின் உடல் உறுப்பு** | **கோயிலின் அமைப்பு** |
|---|---|
| தலை. | கருவறை. |
| கழுத்து. | அருத்த மண்டபம். |
| இரு தோள். | இரு காவல் தெய்வங்கள். |
| வயிற்றுப் பகுதி. | மகா மண்டபம். |
| கைகளும் பிற உறுப்புகளும். | திருச்சுற்று. |
| முதுகுத் தண்டு. | கொடிமரம். |
| கால்கள். | கோபுரம் |

மனிதனிடம் அடங்கிக் கிடக்கும் தெய்வத் தன்மையைத் தலையெடுக்கச் செய்வதே மனித வாழ்க்கையின் பயன். எனவேதான் மனித உடம்பின் உருவமாகக் கோயிலை ஆகமங்கள் குறிப்பிடுகின்றன.

இந்த மெய்ஞ்ஞானத் தத்துவ இலக்கணத்திற்கு ஏற்றாற் போலவே நகரக் கோயில்கள் அமைந்துள்ளன.

## 31. கோயிலின் வகைகள்:-

கோயில்கள் கட்டப்பெறும் பொருட்களை அடிப்படையாக வைத்தும், கட்டப்பெறும் அமைப்பு முறையை அடிப்படையாக வைத்தும் பல வகைகளாகப் பிரித்துச் சொல்லப்பட்டுள்ளன.

கல் அல்லது மரம் போன்ற ஏதாவது ஒரு பொருளை மட்டுமே கொண்டு கட்டப்படுவது **சுத்தக் கோயில்** எனப்படும். கல்லும் சுண்ணாம்பும் அல்லது மரமும் உலோகமும் போன்ற இரு கூட்டுப் பொருளால் கட்டப்படுவது **மிசிரக் கோயில்** எனப்படும். பல பொருள்களைக் கொண்டு சமைக்கப்படும் கோயில் **சங்கீர்ணக் கோயில்** எனப்படும்.[3]

கோயில் விமானங்களின் அமைப்பை வைத்தும் மூன்று வகைகளைக் கூறுவார்.[4] எண்பட்டையுள்ள சிகரத்தை 'திராவிடம்' என்றும், சதுரசிகரத்தை 'நாகரம்' என்றும், வட்டச் சிகரத்தை 'வேசரம்' என்றும் குறிப்பர்.

கோயில் அமைந்துள்ள இடத்தின் அடிப்படையில் எட்டு வகையாகக் கோயில்களை வகைப்படுத்துவார் அப்பர்சுவாமிகள்.[4] அ

குன்றின்மேல் எடுப்பிக்கப்பட்ட கோயிலும், யானை படுக்கும் முதுகு மட்டத்துக்கு மேல் உயரமாகக் கட்டப்பட்ட பெரிய கோயில்களும் பெருங் கோயில், மாடக்கோயில், மலைமல்குக் கோயில், திருமலைக் கோயில், தூங்கானை மாடக் கோயில் எனப் பலபெயர்கள் பெறும்.

தேர் வடிவமாகச் சக்கரங்களோடு அமைக்கப் பெற்ற கோயிலுக்குக் கரக்கோயில் என்று பெயர்.

மரத்தடியில் அமைக்கப்பட்ட கோயிலுக்கு ஞாழற் கோயில் என்று பெயர்.

முல்லைக் கொடியுள்ள இடங்களில் அமைக்கப்பட்ட கோயிலுக்குக் கொகுடிக் கோயில் என்று பெயர்.

ஆலமரத்தடியில் அமைக்கப்பட்ட கோயிலுக்கு ஆலக் கோயில் என்று பெயர்.

ஆழ்வார்களால் பாடப்பெற்ற கோயிலுக்கு மணிக்கோயில், மாமணிக்கோயில் என்று பெயர்.

பழைய கோயிலைப் புதுப்பிக்கும்போது, அதற்கு அருகில் புதிதாகக் கட்டப்படும் கோயிலுக்கு இளங்கோயில் என்று பெயர்.

கிராமத்தின் மையப் பகுதியில் சிவன்கோயிலும், கிராமத்தைச் சுற்றிலும் சிறுசிறு கோயிலும் அமைந்திருந்தால் அச் சிவன்

கோயிலுக்குச் ஸ்ரீ கோயில் என்றும் மற்ற சிறு கோயில்களுக்குத் திருமுற்றம் என்றும் பெயர்.

நகரக் கோயில்கள் அனைத்தும் மிகப் பழங்காலத்தே தல மரத்தடியில் (தல விருட்சத்தின் அடியில்) அமைந்தனவே. எனவே ஒன்பது நகரக் கோயில்களும் முதலில் ஞாழற் கோயிலாகவே இருந்தன.

பிள்ளையார்பட்டித் தேசிவிநாயகப் பிள்ளையார் கோயில் தூங்கானைமாடக் கோயில் அமைப்பு வகையைச் சார்ந்தது.

பிற எட்டுக் கோயில்களும் ஸ்ரீ கோயில் வகையைச் சார்ந்தவையாகும்.

விமான அமைப்பு முறையில் பார்க்கும் போது அனைத்து நகரக் கோயில்களும் திராவிடக் கோயில் வகையைச் சார்ந்தவையாகும்.

கோயில் கட்டப் பயன்படும் பொருள்களை வைத்துப் பார்த்தால் அனைத்தும் சங்கீர்ணக் கோயிலாகவே அமையும.

## 3.2, நகரக் கோயில்களின் அமைப்பு:

ஒன்பது நகரக் கோயில்களின் அமைப்பு முறையும் ஒரே அமைப்பு முறையுள் அடங்குகின்றது. ஒரு சில வேறுபாடுகளைத் தவிரப் பொதுமைக் கூறுகள் அதிகம் காணப்படுகின்றன.

பிள்ளையார்பட்டிக் கோயில் குடைவரைக் கோயில் எனினும் அதனுடைய பிற்சேர்க்கையான மருதீசுவரர் கோயில் இப்பொது அமைப்பு முறையுள் அடங்குகிறது.

### 3.2.1. நகரக் கோயில்களின் பொதுமைக் கூறுகள்:

சிவ வழிபாடே நகரத்தார்களின் தலையாயவழிபாடுஆனதால் கோபுர வாயிலின் நேராகக் கருவறையுள் சிவலிங்கம்கிழக்கு நோக்கியதாக அமைந்திருக்கிறது.

கருவறையை அடுத்து அருத்த மண்டபம் அமைந்துள்ளது. அருத்த மண்டபத்தின் வடபுறம் நடராசப் பெருமான் சிவகாமி அம்மன்,மாணிக்கவாசகர் சிற்றாலயம் அமைந்துள்ளது. நடராஜர்

திருமுன்பாக ஒரு வாயில் அருத்த மண்டபச் சுவரில் காணப்படுகிறது. அருத்த மண்டபத்தின் சுற்றுச்சுவர்களை ஒட்டிக்கல்மேடை (திண்டு) அமைக்கப் பெற்று, அதில் செப்புத் திருமேனிகள் நிறுத்தப் பெற்றுள்ளன.

அருத்த மண்டபத்திற்கும் கொடி மரத்திற்கும் இடையே மகா மண்டபம் கட்டப் பெற்றுள்ளது. மகாமண்டபத் தூண்களில் தெய்வச் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. அருத்தமண்டப நுழைவாயிலில் இருவாயிற்காவலர்களின் (துவார பாலகர்களின்) நின்ற கோலச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

கருவறையில் உள்ள இலிங்கத்திற்கு நேராக அருத்த மண்டபத்தில் சிறிய அளவிலான ஒரு நந்தியின் சிற்பமும் பலிபீடமும் செம்பினாலான கண்ணாடியும் காணப்படுகின்றன. மகாமண்டபத்தின் கிழக்குப் பகுதியில் பெரிய அளவிலான நந்தியும் பலிபீடமும் கொடிமரத்திற்கு முன்பு காணப்படுகின்றன.

அருத்த மண்டபத்தின் வடக்குத் திசையில் அம்மன் சிற்றாலயம், பள்ளியறை, வயிரவர் சிற்றாலயம் ஆகியன அமைந்துள்ளன அம்மன் சிற்றாலயத்தின் வாயிலில் இரு காவற் பெண்களின் (துவார சக்திகளின்)நின்ற கோலச் சிற்பங்கள் காணப்படுகின்றன

அம்மன் சிற்றாலயமும் வயிரவர் சிற்றாலயமும் கருவறை, அருத்த மண்டப அறை எனும் இரண்டு அறை அமைப்புகளைக் கொண்டுள்ளன. பள்ளியறையில் கண்ணாடி வேலைப்பாடுகள் அமைந்த வெள்ளி ஊஞ்சல் உள்ளது. அதில் அம்மன் சிற்பம் அமர்ந்த கோலத்தில் காணப்படுகின்றது. இரவுநேரப் பூசை (அருத்தசாமப் பூசை) நடைபெறும்போது இலிங்கம் அமைந்துள்ள கருவறையிலிருந்து சிவபெருமானின் அமர்ந்த கோலச் செப்புத் திருமேனி பல்லக்கில் கொண்டுவரப் பெற்று அம்மன் சிற்பத்தில் அருகே இணைக்கப் பெறுகிறது.

கருவறையின் வெளிப்புறத்தில் ஐந்து தெய்வக் கோட்டங்கள் (தேவகோட்டங்கள்) நிறுவப் பெற்றுள்ளன. கருவறையின் வலப் பகுதியில் -தெற்குத் திசையில்-கூத்தாடும் விநாயகர், (நர்த்தன விநாயகர்) சிற்பமும், தென்முகக் கடவுள் (தெட்சிணாமூர்த்தி சிற்பமும் அமைந்துள்ளன. தென்முகக் கடவுளின் தெய்வக் கோட்டம் முன்பாக அழகிய சிறு மண்டபம் உள்ளது. கருவறையின் பின்புறத்தில் -மேற்குத் திசையில்- அடிமுடி காட்டாநாதரின்

[அண்ணாமலையாரின்] சிற்பம் உள்ளது. கருவறையின் இடப் புறத்தில் வடக்குத் திசையில் நான்முகக் கடவுளின் [பிரம்மாவின்] சிற்பமும், துர்க்கையின் சிற்பமும், அமைந்துள்ளன.

திருச்சுற்றில் நான்கு சிற்றாலயங்கள் அமைந்துள்ளன. அவை கிழக்கு நோக்கியதாகக் கட்டப்பெற்றுள்ளன. தென்மேற்கு மூலையில் கந்தனுடனான சோமனின் (சோமாசுக்கந்தர்) செப்புத் திருமேனி அம்மன் திருமேனியுடன் காணப்படுகிறது, இதனையடுத்து விநாயகர், வள்ளியம்மை, தெய்வானை உடனாய ஆறுமுகன், கயலெட்சுமி ஆகியோரின் சிற்றாலயங்கள் அமைந்துள்ளன.

திருச்சுற்றின் தென்புறத்தில் பொல்லாப் பிள்ளையார் திரு உருவம் அறுபத்துமூன்று நாயன்மார்களின் திருஉருவங்களும் அமைந்துள்ளன. திருச்சுற்றின் வடகிழக்குப் பகுதியில் ஒன்பது கோள்களின் திருஉருவங்கள் நிறுவப் பெற்றுள்ளன. திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில், வாயிலின் உட்பகுதியில் இருபுறமும் ஞாயிறு (சூரியன்), திங்கள் (சந்திரன்) ஆகியோரின் சிற்பங்கள் அமைந்துள்ளன. திங்களின் அருகில் சனிக் கோளின் நின்ற கோலச் சிற்பம் உள்ளது.

கருவறையின் வடபுறம், கொற்றவையின் எதிர்ப்புறமாகச் சண்டேசுவரர் சிற்றாலயம் அமைந்துள்ளது.

இதே அமைப்பு முறைதான் ஒன்பது நகரக் கோயில்களிலும் காணப்படுகிறது. ஒரு சில மாற்றங்கள் சில கோயில்களில் காணப்படினும் ஒன்பது நகரக் கோயில்களிலும் காணப்படும் பொதுமைக் கூறு இவ்வமைப்பே ஆகும்.

நகரத்தார்கள் நிறுவியுள்ள எல்லாக் கோயில்களும் இப் பொதுமைக் கூற்றின்படியே கட்டப் பட்டுள்ளன.

சிவனின் அருஉருவத் தோற்றமான இலிங்கம் கருவறையில் இருக்க, அம்மன், வயிரவர், சோமாசுக்கந்தர், விநாயகர், ஆறுமுகன், கயஇலக்குமி, சண்டேசுவரர், ஆகியோருக்கான ஏழு சிற்றாலயங்களும் நவகோள், அறுபத்து மூவர் ஆகியோரின் சிற்பங்களும் அமையப் பெற்று இருப்பதே நகரத்தார் கோயிற்பாணியாகும். (படம் எண் 3-15).

## 3. 2. 2. கோயில் கட்டிய முறை:-

கோயில் கட்டுவதற்கான பொறுப்பைப் பல சிற்பிகளிடம் கொடுத்து ஆளுக்கு ஒரு சிற்பத்தைச் செய்யச் சொல்வார்களா அல்லது ஒரே தலைமைச் சிற்பியிடம் ஒப்படைக்கப்படுமா? என்ற வினாக்கள் கள ஆய்வின்போது பலரிடம் கேட்கப்பட்டது. அதற்குச் சரியான விடை 50 விழுக்காட்டினருக்குத் தெரியவில்லை. நாற்பது விழுக்காட்டினர் அப்படித்தான் இருக்கவேண்டும் என்று பதில் கூறினர். பத்து விழுக்காட்டினர் மட்டுமே பொறுப்பு ஒரு தலைமைச் சிற்பியிடம் மட்டுமே ஒப்படைக்கப்படும் என்று பதில் கூறினர். (கள ஆய்வில் வினாப் பட்டியலுக்கு விடையளித்தோர் பட்டியலும் வினாப்பட்டியலும் பின்னிணைப்பில் உள்ளன).

இக்கால விழாக்களும் வீடு கட்டுவதற்கும் பலரிடம் பல பொறுப்புக்களை ஒப்படைத்துவிடும் பழக்கம் இருப்பதாலேயே நாற்பது விழுக்காட்டினர் அவ்வாறு பதில் கூறினர்.

கோயில் கட்டுவது என்பது தெய்விகப் பணி; தெய்விகக்கலை எனவே ஒவ்வொரு சிற்பியும் அவரவர் விருப்பப்படி பல்வேறு அளவுகளில் சிற்பங்களைச் செய்தால், கோயில் கலையின் அழகு முழுமையாகவும், இலிங்கத்திலிருந்து கோபுரம் வரை ஒரே சீரான அளவு வளர்ச்சிமுறையிலும் அமையாது.

சிற்பங்களை வடிவமைத்தபின் கோயிலைக் கட்டுவார்களா? அல்லது கோயிலைக் கட்டி விட்டுப் பிறகு சிற்பங்களைக்கொண்டு வந்து பிரதிட்டை செய்வார்களா? என்பது இன்றியமையாதவினா.

முதலில் இலிங்கத்திற்கான அளவினை 25 வகையான (பஞ்ச விம்ச) பொருத்தங்களுக்கு ஏற்ப முடிவெடுப்பார்கள். பின்னர் அதற்கேற்பவே பிற சிற்பங்களும் கோயிலின் கட்டட அமைப்பும் வடிவமைக்கப்படும் எனவே இலிங்கத்தின் அளவு அடிப்படையிலேயே கோயில் முழுமையும் உருவாக்கப்படுகிறது என்பது ஆய்வாளர்கள் ஆய்வின்போது கண்ட உண்மையாகும்.

## 3.2.3. அடிப்படைச் சிற்பங்கள் அமையும் முறை :

கோயில் கட்ட முன்வருபவர்கள் சிற்பியினை அழைத்துக் கோயில் கட்ட வேண்டியபோது, சிற்பி கீழ்வருவனவற்றின் அடிப்படையிலேயே சிற்பங்களின் அளவை முடிவெடுக்கின்றார்.

1. கிராமப் பெயர்.
2. இறைவனின் திருஉருவப் பெயர்.
3. கோயில் கட்ட முன்வந்தவர் பெயர்.

இந்தப் பெயர்களுக்குரிய நாள்மீனைக் (நாம நட்சத்திரத்தைக்) குறித்துக் கொண்டு, அதன் அடிப்படையிலேயே சிற்பங்களின் அளவை முடிவெடுக்கின்றார்.

சிற்பங்களுக்குரிய அளவை முடிவெடுக்கும் போது கீழ்வரும் 25 (பஞ்ச விம்ச) பொருத்தங்களைப் பார்க்கின்றார்கள். அவை யாவன:

1 கற்பப் பலன், 2. ஆதாயப் பலன், 3. விரையப்பலன் 4. யோனிப்பலன். 5. வாரப்பலன் 6. திதிப்பலன் 7. நாள்மீன் பலன். 8. பெண் இராசிப் பலன். 9. ஆண் இராசிப் பலன் 10. யோகப் பலன். 11. கரணப் பலன். 12. அம்சப் பலன். 13. வமிசப் பலன். 14. வயதின் பலன். 15. பூதப் பலன். 16. நேத்திரப் பலன். 17. சூத்திரப் பலன். 18. கணப் பலன். 19. அமுத ஆதி யோகப் பலன். 20. பஞ்சகப் பலன். 21. எட்டு வகை இலக்குமிப் பலன். 22. எட்டுத் திக்குப் பாலகர் பலன். 23. அதி தேவதைப் பலன். 24. தாரப் பலன். 25. சந்திரப் பலன்.

இவ்வாறு 25 பொருத்தங்களுக்கு ஏற்ற அளவில் மூலவர் சிற்பத்தை வடிவமைப்பார்கள்.[1] அதற்கு ஏற்றாற் போலவே பிற தெய்வச் சிற்பங்களும் கருவறை முதலிய கட்டட அமைப்புகளும் அமையும்.

சிற்பக் கலையினை நான்கு வகைகளாகப் பிரித்துக் காண்பது நலம் பயக்கும். அவையாவன:-

1. கற்சிற்பங்கள்.
2. உலோகச் சிற்பங்கள்.
3. சுதைச் சிற்பங்கள்.
4. மரச் சிற்பங்கள்.

## 3. 3. கற் சிற்பங்கள்:-

ஒன்பது நகரக் கோயில்களிலும் விநாயகர், சிவலிங்கம், அம்மன், முருகன், வயிரவர், நடமாடும் விநாயகர், தென்முகக்

கடவுள். அடிமுடி காணா நாதர், பிரமன், துர்க்கை, இலக்குமி, ஒன்பது கோள்கள், சனி ஈசுவரன், சூரியன், சந்திரன், சண்டிகேசுவரர் ஆகியோரின் கற்சிற்பங்கள் காணப்படுகின்றன.

பிற்காலச் சேர்க்கையாகத் திருமால், சீதை, ஆகியோரின் கற் சிற்பங்கள் உள்ளன. வெளி விமானம் இன்றிப் பல கோயில்களில் இவற்றிற்கு மட்டும் கோயில் மேல் தளத்திற்குள்ளேயே விமானம் இருப்பது, இவை பிற்காலச் சேர்க்கை என்பதற்குச் சான்றாகும்.

இளையாத்தங்குடி, வேலங்குடி, இரணியூர் ஆகிய ஊர்களில் தனித்தனியாகப் பெருமாள் கோயில்களும் உள்ளன. அவற்றில் பெருமாள், இலக்குமி, பூமிதேவி இலக்குவன், கருட ஆழ்வார், அனுமன் ஆகியோரின் கற்சிற்பங்கள் காணப்படுகின்றன.

வழிபாட்டில் உள்ள இச்சிற்பங்கள் தவிரப் பல கற்சிற்பங்கள் தூண்களிலும் உத்திரங்களிலும் கருவறைச் சுவரின் வெளிப்பக்கத் திலும் காணப்படுகின்றன.

## 3. 3. 1. விநாயகர் சிற்பம்:-

நகரத்தார்கள் கி.மு. 2898க்கு முன்பே நாகநாட்டின் சாந்தியாபுரி என்ற நகரில் வாழும்போது மரகத விநாயகரை வழி-பட்டு வந்தனர் என்று பூங்கொன்றை வேலங்குடிக் கல்வெட்டு கூறுவதாக நகரத்தார் வரலாறு எழுதிய அனைவரும் குறிப்பிட்டுள் ளனர். பச்சை மரகதக் கல்லில் செதுக்கப்பெற்ற அம் மரகத விநாயகர் சிற்பம், கோட்டாற்றுப் பகுதியில் உள்ள சுந்தரத்தார் என்னும் பிரிவினரிடம் வழிபாட்டில் உள்ளது என்று கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் குறிப்பிட்டுள்ளார்கள்.[5]

விநாயகர் வழிபாட்டில் அதிக ஈடுபாடு கொண்ட நகரத்தார் கள் எச்செயலைத் தொடங்கினாலும் "உ" எனப் பிள்ளையார் சுழி, சிவமயம் என்று எழுதிவிட்டுத்தான் தொடங்குவார்கள். எங் கெங்கு சென்றாலும் முதலில் ஒரு பிள்ளையார் கோயிலைக் கட்டி விடுவார்கள். இதனால் செட்டி நாட்டுப் பகுதியில் ஒவ்வொரு ஊரிலும் பல பிள்ளையார் கோயில்கள் காணப்படுகின்றன.

இளையாத்தங்குடிக் கோயில் ஏழு பிரிவினரும் ஏழு பிள்ளையார் கோயிலையும் ஏழு ஊருணிகளையும் கட்டியிருப்பது குறிப்பிடத் தக்கது.

மரகத விநாயகர் என்ற பெயரில் நகரக் கோயில்களில் விநாயகர் சிற்பம் காணப்பெறவில்லை. தேவகோட்டை நகரச் சிவன்கோயிலில் மட்டும் இதே பெயரில் ஒரு சிற்பம் காணப் படுகிறது.

பிள்ளையார்பட்டி தவிரப் பிற கோயில்களில் உள்ள விநாயகர் சிற்பங்கள் ஏறத்தாழ ஒரே அமைப்பில் உருவாக்கப்பெற்றவை.

75 செ. மீட்டர் உயரத்திலிருந்து 1 மீட்டர் உயரம் வரையான அவ் விநாயகர் சிற்பங்களில் ஒரே சிற்ப அமைதி காணப்படுகிறது. பொது இலக்கணத்தில் அமைந்த எட்டு நகரக் கோயில்களில் உள்ள விநாயகர் சிற்பத்தை முதலில் காண்போம்.

விநாயகர் சிற்பத்தில் மூன்று கண்களும் ஐந்து கைகளும் காணப்படுகின்றன. இம் மூன்றாவது கண் நெற்றிக் கண்ணாகும். இந் நெற்றிக் கண் நீட்டுவாக்கில் நெற்றியில் காணப்படுகிறது.

யானைத் தலையுடைய விநாயகர் வலமேற் கையில் அங்கு சத்தையும், இடமேற் கையில் பாசத்தையும் ஏந்தியுள்ளார். வலக் கீழ் கையில் ஒடித்த தந்தத்தையும் இடக்கீழ்க் கையில் வரதமுத்தி ரையையும் பெற்றுள்ளார். ஐந்தாவது கையான தும்பிக்கையை இடமாக வளைத்து அதில் மோதகத்தை வைத்துள்ளார். தலை யினைக் கரண்ட மகுடம் அழகு செய்கிறது.

பீடத்தில் இரண்டு கால்களையும் வைத்து அமர்ந்து ஒரு காலைப் பீடத்தின் மீது மடக்கிப்படுக்கையாக வைத்து, மற்றொரு காலை மடக்கி நிறுத்தியமைந்த லலிதாசன அமைதியில் விநாயக ரின் அமர்ந்த கோலத்தைக் காணமுடிகிறது. மார்பில் கண்டிகை, பூணூல் சன்னவீரம் ஆகியன அழகாக அமைந்துள்ளன. பீடத்தில் பெருச்சாளி வாகனம் செதுக்கப்பட்டுள்ளது.

மிக அரிய சிற்பமாகப் பிள்ளையார்பட்டியில் .இரண்டு கை களை உடைய குடவரைப் பிள்ளையார் சிலையைக் காண்கிறோம் (நி. ப. எ. 2.)

இச்சிற்பம் 1.83மீட்டர் உயரத்தில் அமர்ந்ததிருக்கோலத்தில் அருத்தசித்திரமாக (Bas-Relief) வடக்குநோக்கி அமைந்துள்ளது இரண்டே திருக்கைகள், வலப் பக்கமாக வளைந்த தும்பிக்கை, இலிங்கத்தை வலது கையால் ஏந்திப் பூசைசெய்யும் அமைப்பு ஆகியன மிகவும் தனித்தன்மை பெற்றதாகக் காணப்படுகின்றன.

இரண்டு திருக்கைகளுடன் அமைந்த விநாயகர் சிற்பம் இது ஒன்றேயாகும். இதே போன்ற சிற்ப அமைதியில் 75 செ மீ உயரத்தில் ஒரு சிற்பம் குன்றக்குடிக் குடைவரைக் கோயிலில் காணப்படுகிறது. இவை போன்ற சிற்பம் வேறு எங்கும் காணக் கிடைக்கவில்லை என்று தமிழ்நாடு தொல் பொருள் ஆய்வுத்துறை இயக்குநர்அறிஞர் இரா. நாகசாமி நேர்காணலின்போது கருத்துத் தெரிவித்துள்ளார்.[6] இந்தியாவில் தற்போது காணக்கிடைத்துள்ள விநாயகர் சிற்பங்களுள் இச் சிற்பம் மிகத் தொன்மையான சிற்பமாக அமைந்துள்ளது.

இச் சிற்பம் பல்லவர் காலச் சிற்பம் என்று தொ. மு. பாசுக்கரத் தொண்டைமானும், என். கிருட்டிணசாமியும் கூறுவர்.[7]

முற்காலப் பாண்டியர்களின் சிற்பம் என்று கம்பன் அடிப்பொடி திரு சா. கணேசனும். இரா. நாகசாமிவும், கே. ஆர். சீனிவாசனும் எழுதியுள்ளனர் [8]

இச்சிற்பம் உருவான சரியான காலத்தைத் தேசி விநாயகப் பிள்ளையார் குடவரை வாயிற்படிக்குமேற்கே தாழ்வாரஅறைக்குத் தெற்கில் மேற்புறச் சுவரில் உள்ள கல்வெட்டு தெரிவிக்கிறது. (நி.ப.எ.உ.அ.)'

கல்வெட்டு (தமிழ் எழுத்துக்களில்)

எக்காட்டுரு

க்கோன் பெருந்தசன்

என்ற இரண்டு வரிக் கல்வெட்டு தமிழ் எழுத்தில் செதுக்கப் பெற்றுள்ளது. [9] அச்சிற்பத்தைச் செதுக்கிய சிற்பியின் பெயரை இக் கல்வெட்டு குறிக்கிறது. பிள்ளையார்பட்டியின் பழையபெயர்களுள் ஒன்று எக்காட்டூர் என்பது அவ்வூரின் தலைமைச் சிற்பி பெருந்தச்சன் செதுக்கியதற்கான சான்றே இக் கல்வெட்டு.

கல்வெட்டு அறிஞர்களின் கருத்துப்படி இக்கல்வெட்டு கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும் [10] இக்காலத்தினையே அறிஞர் இரா. நாகசாமி அவர்களும் பிள்ளையார்பட்டிக்கு நேரில் வந்திருந்தபோது நேர்காணலின் போது உறுதிப்படுத்தினார்கள்[11]

எனவே 1400 ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றிய சிற்பம் இதுவாகும் என்பது உறுதி.

ஏழாம் நூற்றாண்டின் வாதாபியிலிருந்து விநாயகர் சிற்பத்தை சிறுந்தொண்டர் கொண்டுவந்த பிறகுதான் விநாயகர் வழிபாடு தமிழகத்தில் உண்டானது என்ற ஒரு கருத்து நிலவுகின்றது. அக் கருத்திற்கு மாறாக இக்கல்வெட்டு புதிய உண்மையைந் தோற்று வித்துள்ளது

கி.பி, ஐந்து, ஆறாம் நூற்றாண்டுகளில் களப்பிரர்களின் ஆட்சி நிலவியதாலும் அதிகமான இலக்கியங்கள் தோன்றாமை யினாலும், இப்பிள்ளையார் பற்றிய செய்திகள் வெளிவரவில்லை போலும்.

இலக்கியங்களில் முன்பு இடம் பெறவில்லை எனினும் சிற்பியின் பெயரே இலக்கியமாக நின்று காலத்தை உணர்த்துவது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

கல்வெட்டுஉணர்த்தும் காலத்தாலும், இருதிருக்கரங்களுடன் அமைந்த சிற்ப இலக்கணத்தாலும் இவ்விநாயகரின் சிற்பமே, இந்தியாவில் நமக்குக் காணக்கிடைத்துள்ள விநாயகர் சிற்பங் களுள் மிகத்தொன்மையான ஒன்றுஎன்பது ஆய்வாளரின் கருத்து.

இறைவனின் வல்லமையைப் பெருக்கிக் காட்டவே பிற்காலத் தில் தெய்வ உருவங்களுக்குத் திருக்கரங்களை அதிகமாகப் படைத்துக் காட்டினர் ஆகவே நமக்குக் கிடைக்கும் ஐந்து திருக் கைகளுடனான விநாயகர் சிற்பங்கள் பிற்காலத்தைச் சார்ந்தவை என்பது புலனாகிறது.

## 3.3.2. சிவலிங்கச் சிற்பம்:-

ஒன்பது நகரக் கோயில்களிலும் மூலவராக அமைந்திருப்பது சிவபெருமானின் அருஉருவத் திருமேனியான இலிங்கம்தான்.

சைவ வழிபாட்டில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தாலேயே, பிள்ளையார்பட்டியில் குடைவரைக் கோயிலில் உள்ள திருவீசரது இலிங்கம் அதிகமாகப் பார்வையில் படாத குறையைத் தவிர்க்க, மருதீசர் என்னும் புதிய இலிங்கத்தைத் தோற்றுவித்தனர்.

சிவலிங்கமானது மூன்று பகுதிகளைக் கொண்டது. அதன் அடிப்பகுதி பிரமனின் பகுதியாகும். ஆவுடையார் எனும் நடுப் பகுதி விட்டுணு பகுதி எனப்படும்; திருமாலின் பகுதியாகும்.

இலிங்கம் எனும் மேற்பகுதி சிவபெருமானின் உருத்திரப் பகுதியாகும் மேற்பகுதியில் தெரியும் சிவபெருமானின் பகுதியே பூசைக்குரிய பகுதியாகும் இச் சிற்ப அமைப்புடைய இலிங்கம் மானுட இலிங்கம் என்று பெயர் பெறும் என்பார் வை. கணபதி சிற்பி.[12] ஒன்பது நகரக் கோயில்களிலும் மேற்கண்ட மானுட இலிங்கங்களே அமைந்துள்ளன.

இளையாத்தங்குடிக் கோயிலில் உள்ள கைலாசநாதரின் இலிங்கம் 75 செ.மீ. உயரம் உடையது. சிவபெருமானின் உருத்திரப் பகுதி 38 செ.மீ. திருமாலின் பகுதி ஆவுடையார் 37 செ.மீ. ஆவுடையார் வட்ட வடிவம் கொண்டது. உருத்திர பகுதியின் உச்சிப்பகுதி குவிந்த அரை வட்ட வடிவமானது. (நி.ப.எண்.3)

மாற்றூர்க் கோயிலில் உள்ள ஐந்நூற்றீசுவரரின் இலிங்கம் 61 செ.மீ. உயரமுடையது. (உருத்திரப் பகுதி 30 செ.மீ. விட்டுணுப் பகுதி ஆவுடையார் 31 செ. மீ.) ஆவுடையார் வட்ட வடிவம் கொண்டது. உருத்திரப் பகுதியின் உச்சிப்பகுதி தட்டையானது. (நி. ப. எண்.4.)

வயிரவன் கோயிலில் உள்ள வளரொளி நாதரின் இலிங்கம் 61 செ. மீ. உயரமுள்ளது. (உருத்திரப் பகுதி 33 செ. மீ. விட்டுணுப் பகுதி - ஆவுடையார் - 55 செ மீ.) (நி ப. எ. 5).

நேமம் கோயிலில் உள்ள செயங்கொண்ட சோழீச இலிங்கம் 1.25 மீட்டர் உயரமுடையது. (உருத்திரப் பகுதி 70 செ மீ. விட்டுணுப் பகுதி ஆவுடையார் - 55 செ. மீ. ) (நி.ப.எ.6).

இலுப்பைக்குடிக் கோயிலில் உள்ள இலிங்கம் தனிச் சிறப்பு வாய்ந்தது. சிற்பி ஒருவரால் செதுக்கப்படாமல் தானாகவே தோன்றிய இலிங்கம் இது. இதனைச் சுயம்பு இலிங்கம் என்பர் வடமொழி நூலார். சுயம்பு இலிங்கத்திற்குச் சரியான தமிழ் மொழி பெயர்ப்பாகத் தான்தோன்றிசுவரர் என்ற பெயர் அமைந்துள்ளது (நி.ப.எ.7).

இந்த இலிங்கத்தில் மொத்த உயரம் 44 செ.மீ. (உருத்திரப் பகுதி 14 செ.மீ. விட்டுணுப் பகுதி 30 செ மீ).

சூரைக்குடி கோயில் தேசி நாதர் இலிங்கம் 60 செ .மீ. உயரமுள்ளது. (உருத்திரப் பகுதி 30 செ .மீ. விட்டுணுப் பகுதி 30 செ .மீ. ) (நி.ப.எ. 8)

வேலங்குடிக் கோயில் கண்டீசுவரர் இலிங்கம் 60 செ.மீ. உயரமுள்ளது. (உருத்திரப் பகுதி 30 செ.மீ. விட்டுணுப் பகுதி 30 செ.மீ.) (நி.ப.எ.9)

இரணியூர்க் கோயில் ஆட்கொண்டநாதர் இலிங்கம் 82 செ.மீ. உயரமுள்ளது. (உருத்திரப் பகுதி 50 செ.மீ. விட்டுணுப் பகுதி 32 செ.மீ. (நி.ப.எ.10)

பிள்ளையார்பட்டிக் கோயில் திருவீசர் இலிங்கம் 1.10 மீட்டர் உயரம் உள்ளது. (உருத்திரப் பகுதி 70 செ.மீ. விட்டுணுப் பகுதி 40 செ.மீ.) மருதீசர் இலிங்கம் 90 செ.மீ உயரமுள்ளது. (உருத்திரப் பகுதி 60 செ.மீ. விட்டுணுப் பகுதி 30 செ.மீ.) (நி.ப.எ.11)

ஒரே நிறமாகவும், கனமாகவும் வழவழப்பாகவும் அல்லது. மனோகரமாகவும், அடிமுதல் நுனிவரையில் நேராக (கோணலில்லாமல்) இருப்பதும், யானையின் மணியைப் போன்ற ஒலியுடையதுமான சிலையானது புருட சிலை. (புருஷ சிலை) என்றும், இலிங்கத்தினைச் சிறந்த அறிவாளி இவ்வாறே செய்யவேண்டும் என்றும்மயமதம் குறிப்பிடுகிறது.[13] ஒன்பது நகரக் கோயில்களிலும் மயமதம் குறிப்பிட்டுள்ளவாறே புருட சிலையாக இலிங்கங்கள் அமைந்திருக்கின்றன.

## 3. 3. 3. அம்மன் சிற்பம்

"பொதுவாக நான்கு கைகளுடனும் மூன்று கண்களுடனும் சாந்தம் தவழும் முகத்துடனும் இறைவியை வடிக்க வேண்டும். தலையில் கரந்த மகுடமும் ஏனைய அணிகலன்களும் அணிந்து, பட்டாடை உடுத்தியிருக்க வேண்டும் பின்இரு கைகளில் பாசமும் அங்குசமும் இருக்க வேண்டும். தன் நாயகனுக்கு அருகில் இறைவியை அமைப்பதாயின், இரு கைகளும் இரு கண்களும் தாம் இருக்க வேண்டும். ஒரு கை கடக முத்திரையிலும் மற்றொரு கை தொங்கிய நிலையிலும் இருக்கும். இவ்வாறு இறைவியைச் சிலை வடிவத்தில் வடிக்க வேண்டும் எனச் சிற்ப சாத்திரங்கள் கூறுகின்றன" என்பார் தி. இராசமாணிக்கம்.[14]

சூரைக்குடிக் கோயிலில் உள்ள ஆவுடைநாயகியின் சிற்பம் மட்டுமே நான்கு திருக்கைகளுடன் அமைந்துள்ளது. மூன்று கண்களும் சாந்தம் தவழும் முகமும் காணப்படுகின்றன, தலையில் கரண்ட மகுடம் உள்ளது. (நி. ப. எ. 12).

சூரைக்குடி தவிரப் பிற எட்டுக் கோயில்களிலும் இரண்டு திருக்கைகளுடனேயே இறைவியைக் காண முடிகிறது. இக் கோயில்களில் அமைந்துள்ள சிற்பங்கள் 75 செ. மீ. முதல் 1.06 மீட்டர் வரை உயரமுள்ளவை. இச்சிற்பங்களுக்கு இரண்டு திருக் கைகள் உள்ளன. வலக்கையில் நீலோற்பலமலரும் இடக்கையில் உடோல முத்திரையும் அமைந்துள்ளன. (நி. ப. எ. 13, 14, 15, 16, 17, 18, 19, 20),

இடக்காலைச் சற்று முன் நகர்த்தி, வலக் காலைச் சற்று பின்னே ஒதுக்கி நிற்கும் நிலையில் சிற்பம் "திரிபங்க நிலையில்" அமைந்துள்ளது. தலைமுடியினைத் தூக்கி முடிந்த கேசபந்த நிலை காணப்படுகிறது.

தொய்யகம், சந்திரபிரபை, சூரியப்பிரபை ஆகிய தலையணி களும் பத்திரகுண்டலம் என்னும்காதணியும், கண்டிகை, சரப்பளி அரும்புச்சரம், சவடி முதலிய கழுத்தணிகளும், சன்னவீரம், பூணூல் ஆகிய மார்பணிகளும் தோள்வளை, கடகவளை, கை வளை ஆகிய கை அணிகளும்,முடிச்சு அணி பொருந்திய மேகலை, அரைப் பட்டிகை, தாரகைச்சும்மை, குறங்கு செறி ஆகிய இடை அணிகளும், சிலம்பு, காற்சதங்கை, மிஞ்சி ஆகிய பாத அணி களும் காணப்படுகின்றன. பட்டாடையின் அமைதி இடைக்கட்டு களின் தொங்கு நிலையோடு அழகுமிக்கதாக அமைந்துள்ளது. இறைவியின் அருட்பார்வையும், புன்னகை தவழும் இதழும், மலர்ந்த முக அழகினை மிகுவிக்கின்றன.

## 3. 3. 4. முருகன் சிற்பம்:-

ஒன்பது நகரக் கோயில்களிலும் முருகன், வள்ளி, தெய்வானை யுடன் ஆறுமுகன் எனும் பெயரில் வழிபடு தெய்வமாக விளங்கு கின்றான். தண்டாயுதபாணி என்னும் பெயரில் முருகன் மட்டும் தனித்து நிற்கும் பாங்கிலும் பிள்ளையார்பட்டியில் ஒரு சிற்பம் காணப்படுகிறது.

ஆறுமுகன் சிற்பம் அமைய வேண்டிய இலக்கணத்தைப் வாசுத்து சாத்திரம் கூறுகிறது.[15] அதில் குறிப்பிடப் பெற்ற இலக் கணப்படியே ஆறுமுகன் சிற்பம் அமைந்துள்ளது.

ஆறுமுகன், காலை நேர இளஞ்சூரியனைப் போன்ற உடல- மைப்பும் சிவப்பு நிற உடை அமைப்பும் பெற்றவர். குழந்தைமை யும் இளமையும் ஒன்று கலந்த வடிவம் கொண்டவர். அழகும்

இனிமையும் கவரும் தன்மையும் உடையவர். முகத்தில் புன்னகையும் தலையில் திருமுடியும் அலங்கரிக்கும். முத்து மாலை அணிந்தவர். ஆறுமுகங்கள் கொண்டவர். பன்னிரு கைகளில் வலப்பக்கம் சத்தி, அம்பு, வாள், வச்சிரம், மழு, ஈட்டி ஆகிய ஆறு ஆயுதங்களை ஏந்தி அபய அத்த (அபய உறஸ்த) முத்திரையும் இடப் பக்கம் வில், வெற்றிக்கொடி, கேடயம், மணி, கதை, சேவல் ஆகியவற்றை ஏந்தி வரத அத்த (வரத உறஸ்த) முத்திரையையும் கொண்டவர்.

வள்ளியம்மையும் தெய்வயானையும் ஆறுமுகனின் இரு பக்கமாக வைசாக தானகத்தில் இடையைச் சற்று வளைத்து நிற்பது போலச் சிற்பங்கள் செதுக்கப் பெற்றுள்ளன. வள்ளியம்மை வலது கையிலும் தெய்வயானை இடது கையிலும் நீலோற்பல மலரைக் கையிலேந்தி நிற்பதாகவே அமைக்கப் பெற்றுள்ளன. ஆனால் இளையாத்தங்குடிக் கைலாசநாதர் கோயிலில் மட்டும் இருவரும் நீலோற்பல மலரை இடதுபக்கமே பிடிந்துள்ளதாகச் சிற்பம் அமைந்துள்ளது. வலக்கை வரத முத்திரையில் காணப்படுகிறது.

ஆறுமுகனின் சிற்பத்தில் முன்பக்கமுள்ள உறுப்புகள் மட்டும் செதுக்கப்பட்டும் பின்புறம் உள்ள உறுப்புகள் புலப்படுத்தப்படாமல் புடைஓவியமாக (சித்ரார்த்தமாக) அமைந்துள்ளன. எனவே மூன்று முகங்கள் மட்டுமே தெரியுமாறு ஆறுமுகனின் சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன.

இரணியூர் ஆட்கொண்ட நாதர் கோயிலில் இருக்கும் ஆறுமுகனுக்கு ஒரு முகமும் ஆறு கைகளும் உள்ளன. வயிரவன்பட்டிக் கோயிலில் உள்ள சுப்பிரமணியருக்கு ஒரு முகமும் நான்கு கைகளும் உள்ளன.

பழனிமலை மேல், தண்டத்தைமட்டும் ஆயுதமாகக்கொண்டு மொட்டைத்தலையுடனும் உருத்திராக்க மாலையுடனும் இடுப்பில் ஒற்றை ஆடையுடன் சிறிதே இடையைவளைத்து நின்ற கோலத்தில் ஆபங்க அமைதியில் நிற்கும் திருக்கோலமே தண்டாயுத பாணியின் அமைப்பாகும். முருகனிடத்தே பெரிதும் ஈடுபாடு கொண்ட நகரத்தார்கள் வெளி நாடுகளில் தண்டாயுதபாணியின் சிற்பத்தையே வழிபட்டு வருவது இங்கு குறிப்பிடத்தக்கது. இளையாத்தங்குடியில் கருவறைக்கு நேர் பின்னால் கிழக்கு நோக்கிய சிற்றாலயத்தில் இவ்வாறு அமைந்த தண்டாயுத பாணியின் சிற்பம் உத்தம தசதாள அளவில் உருப்பெற்றிருப்பதைக்

காணமுடிகிறது. தேவர்கள் குறைதீர்க்க சூரபதுமனை முருகன் கொன்றான் என்ற இளையாத்தங்குடி, வயிரவன்பட்டி, இலுப்பைக்குடி, தலபுராணங்களின் அடிப்படையில் துன்பங்களை வெல்ல முருகனை வழிபட்டு வருகின்றனர்.

## 3. 3. 5. வயிரவர் சிற்பம் :

ஒன்பது நகரக் கோயில்களில் இறைவன், இறைவி ஆகியோருக்கு அடுத்தசிறப்பு வயிரவருக்கு வழங்கப்பெற்றுள்ளது

இளையாத்தங்குடி, வயிரவன்பட்டி ஆகிய இரு கோயில்களிலும் இறைவியின் சாமகோட்டம் அமையவேண்டிய இடத்தில் வயிரவருக்கான சிற்றாலயம் கட்டப்பெற்றுள்ளது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. பிள்ளையார்பட்டியில் பள்ளியறைக்கு அருகில் மேற்குத்திசையை நோக்கியதாக வயிரவரின் சிற்றாலயம் அமைக்கப்பெற்றுள்ளது

பண்டை வாழ்க்கையில் வெவ்வேறு துன்பங்களில் உழன்ற காரணத்தால். துன்பங்களை உடனே அழிக்கும் வல்லமை பெற்ற வயிரவரை நகரத்தார்கள் மிகவும் போற்றியிருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. அசுரர்களை அழித்துத் தேவர்களை வயிரவர் காத்தார் என்னும் இளையாத்தங்குடி, வயிரவன்பட்டி இலுப்பைக்குடி ஆகிய ஊர்த்தலபுராணங்களின் அடிப்படையில் வயிரவர் வழிபாடு சிறப்புப்பெற்றது எனலாம்.

வயிரவர் சிவனுடைய வடிவங்களுள் ஒருவர். திருவடிகளில் சிலம்பும், மார்பில் தலைமாலையையும் அணிந்தவர். முக்கண் உடையவர், கைகளில் சூலம். மழு, பாசம், உடுக்கை ஆகியவற்றை ஏந்தியவர். கோரப் பற்களும், எரிசடையும் உடையவர்.

வயிரவரின் உருவ இலக்கணத்தைத் திருப்புத்தூர்ப் புராணம் கீழ்வருமாறு கூறுகின்றது:

''கரம்இரண்டிலும் தண்டமும் கபாலமும் கவின
தாளாமாலை, மஞ்சிரம், அங்கதம் முதல்தயங்க
பொருளில் மந்திர பூடணனாய் வடுவாகிப்
பரமயோகி யாய்நின்றனன் ஆண்டெழு பகவன்''[15] அ

ஒன்பது நகரக் கோயில்களிலும் காணப்படும் வயிரவர் சிற்பங்களின் உயரம் 1.10 மீட்டரிலிருந்து 1.25 மீட்டர் வரை உள்ளது.

சமபாத தானக நிலையில் நின்ற திருக்கோலத்தில் வயிரவர் காட்சி தருகின்றார். நான்கு திருக்கைகளில் மேலிரு கைகளில் உடுக்கையினையும், பாம்பினையும், கீழிரு கைகளில் சூலத்தினையும் மண்டை ஓட்டினையும் கொண்டுள்ளார். நாய் வாகனம் அவருக்குப் பின்னால் நின்ற நிலையில் காணப்படுகிறது. நெற்றிக் கண் பெற்ற திருமுகத்தில் புன்னகை தவழ்கிறது. தலைக்கோலம் சுடர்முடி அமைப்பில் உள்ளது தீச்சுடர் போல அடுக்கடுக்காய் மேல் நோக்கி ஒரு சீராய் - அரசிலைத் தோற்றத்தைப் போல அமைக்கப்பட்டுள்ளது. இவ்வகைத் தலைக்கோல அமைப்பிற்கு 'அக்கினிகேசம்' என்றும் பெயர் உண்டு.[16]

கண்டிகை, சரப்பளி, சவடி ஆகிய கழுத்தணிகளும் வீரச் சங்கிலி, பூணூல்முதலிய மார்பணிகளும் தோள்வளை, சூடகம் முதலிய கையணிகளும் வீரக்கழல் என்னும் காலணியும் காணப் படுகின்றன. வயிரவரைச் சுற்றியுள்ள திருவாட்சியில் பதினெட்டுத் தீப்பிழம்புகளும் யாளித் தலையமைப்பும் காணப்படுகின்றன.

சூரைக்குடியில் உள்ள வயிரவர் சிற்பத்தில் சூலத்திற்குப் பதிலாக'கதை' ஆயுதம் காணப்படுகிறது. (நி.ப.எ.21).

இலுப்பைக்குடியில் உள்ள வயிரவர் சிற்பத்தில் ஒரு நாய் வாகனத்திற்குப் பதிலாக இரண்டு நாய்களின் உருவங்கள் காணப் படுகின்றன. (நி.ப.எ.22). வயிரவரின் அதிக வல்லமையைக் காட்டவே இரண்டு நாய்கள் இடம் பெற்றுள்ளதாக அக்கோயில் நிருவாகி திரு. அருணகிரிச் செட்டியார் கூறுகிறார்.[17]

## 3.3.6. தென்முகக் கடவுள்:-

இறைவன் அருவ மேனியன் என்ற கருத்தை இலிங்க வடிவம் விளக்கிக் கூறுகிறது. படைத்தல், காத்தல், ஒடுக்குதல் ஆகிய முப்பெரும் செயல்களை அவனே ஆற்றுகிறான் என்பதை கருவறைக் கோட்டங்களில் உள்ள பிரமன், திருமால், தென்முகக் கடவுள் ஆகியோரின் உருவங்கள் காட்டுகின்றன என்பார் வை. கணபதி சிற்பி.[18]

திருமால் (விட்டுணு) சிற்பத்திற்குப் பதிலாக விட்டுணு துர்க்கையின் சிற்பம்தான் வடபுறக் கோட்டத்தில் காணப்படுகிறது.

நடமாடும் விநாயகர், தென்முகக்கடவுள் ஆகியோர் தெற்குத் தேவ கோட்டத்திலும், அடிமுடி காட்டா நாதர் (அண்ணாமலை

யார், இலிங்கோற்பவர்) மேற்குக் கோட்டத்திலும், பிரமன் விட்டுணு துர்க்கை, ஆகியோர் வடக்குக் கோட்டத்திலும் காணப் படுகின்றனர்.

நான்கு வகையான தென்முகக் கடவுளரின் சிற்பங்கள் பற்றி வாசுத்து சாத்திரம் கூறுகின்றது.[19] அவையாவன:

''1. யோகதட்சிணாமூர்த்தி. 2. வீணாதார தட்சிணாமூர்த்தி 3. ஞான தட்சிணாமூர்த்தி 4 வியாக்கியான தட்சிணாமூர்த்தி.''

ஒன்பது நகரக் கோயில்களிலும் ஞான முத்திரையுடன் கூடிய ஞானத் தென்முகக் கடவுளையே காணமுடிகிறது.

இத்தென்முகக் கடவுளின் உருவ இலக்கணம் பற்றி சகளாதி காரம் என்னும் நூல் விரிவாகக் கூறுகிறது.[20]

''இடது பாதம் வலது முழங்காலின் பேரில் வைக்கப்பட்டு வலது பாதம் தொங்கவிடப்பட்டு, நான்கு கைகளுடன் கூடியிருக்க வேண்டும், ஒரு வலக்கையில் சந்தம்ச முத்திரையும் மற்றொரு வலக்கையில் உருத்திராட்ச மாலையும் ஒருஇடக்கையில் வரதமுத் திரையும், மற்றொரு இடக்கையில் அக்னியை ஏற்றியோ அல்லது யோக தண்டத்தின் பேரில் வைக்கப்பட்டோ இருக்கவேண்டும். விரிந்த சடையுடனும் அல்லது ஜடா மகுடத்துடனும் அல்லது உயர்ந்த ஜடா மகுடத்தின் மத்தியில் கபாலத்தோடும் இருக்க வேண்டும். பூணூல்தரித்தும்உத்தரியம் (மேலாடை) தொங்கவிடப் பட்டும்இருக்க வேண்டும். மூன்று கண்களோடும்சங்கு, மல்லிகைப் புஷ்பங்களைப் போன்ற பிரகாசத்தோடும் உருத்திர மாலையைத் தொங்கவிட்டுக்கொண்டும், கையில் அழகிய உபதேச முத்திரை யைக் காதுக்குச் சமீபமாக வைத்துக் கொண்டும், இலேசாகத் திறந்த கண்களோடு, யோக பந்த நிலையில் இருந்து கொண்டும், புலித்தோல் ஆடையணிந்தும், காதில் குண்டலமோ அல்லது கர்ணபூர (தோடு) மோ அணிந்தும் யாதொரு கவலையுமற்ற மனத்தோடு அமர்ந்திருக்க வேண்டும்.''

''வலது புறத்தில் நாரதர், ஜமதக்கினி, வசிஷ்டர், பிருகு ஆகிய நான்கு மஹரிஷிகளும், பரத்வாஜர், அகஸ்தியர், சனகர், பார்க்கவர் ஆகிய நால்வரும் இடப்புறத்திலும் அமர்ந்திருக்க வேண்டும்''.

"கயிலாச பர்வதத்தில் கின்னரர்களால் வணங்கப்பட்டு ஆல மரத்தடியில் சாந்த ரூபமாய் உலகுக்கெல்லாம் ஈசனாகிய மகேச்-வரன் வீற்றிருக்கிறார். தொங்கவிட்டுக் கொண்டிருக்கும் பாதத்தின் கீழ் அபஸ்மாரன் என்னும் முயலகனின் உருவத்தை அமைக்க வேண்டும். அவன் கையில் பாம்பை வைத்து விளையா-டிக் கொண்டிருக்க வேண்டும். கறுத்த மேனியும் பூதங்களைப் போன்ற உருவமும் அமைந்திருக்க வேண்டும்".

மேற்கண்ட இலக்கணங்களுடன் ஒன்பது நகரக் கோயில்களில் உள்ள தென்முகக் கடவுளின் உருவ அமைதி காணப்படு-கிறது.

கருவறையைச் சுற்றியுள்ள ஐந்து தேவகோட்டங்களுள் தென்முகக் கடவுளின் தேவகோட்டம் மட்டும் தனி மண்டபம் அமைக்கப் பெற்றுள்ளது ஆய்விற்குரியது.

திருச்சுற்றில் அமைந்துள்ள சிற்றாலயங்களை விட உயர்வான சிற்பக்கலை இம் மண்டபத்தில் மட்டும் இடம் பெறக் காரணம் என்ன என்பது சிந்தனைக்குரியது.

நகரத்தார்கள் சைவ சமயப் பற்று மிக்கவர்கள். நாள்தோறும் சிவபூசை செய்பவர்கள். அதற்கான சமய தீட்சையினையும் உபதேசத்தினையும் சைவ ஆசிரியர் (சிவாச்சாரியார்) மூலமாக முறையாகப் பெறுபவர்கள். ஆண்கள் சமய தீட்சை பெறப் பாதரக் குடியில் ஒரு சைவ மடத்தையும் பெண்கள் சமய தீட்சை பெறக் கிளா மடத்தில் ஒரு சைவ மடத்தையும் தனித்தனியே இன்றும் பேணிப் பாதுகாத்துப் பயன் கொள்பவர்கள். நாள்தோறும் சிவனை மனத்தில் நினைத்து உருத்திராட்ச மாலையைக் கையி-லேந்தித் தியான நிலையில் இறைவனை வழிபட்டு உலகம் மாயை நிறைந்தது; நிலையாமை மிக்கது என்பதை உணர்த்தும் திரு-நீற்றை அணிந்து சிவமயமாய் ஆவதே சிவபூசையின் நிகழ் முறையாகும்.

ஆணவம், கன்மம், மாயை என்னும் உலக இன்பங்கள் மூன்றையும் விடுத்து, உயிர் இறைவனைச் சார்வது ஒன்றே வீடுபேறு அடைவதற்கான வழி என்பதையே தென்முகக் கடவுளின் சின் முத்திரை தெரிவிக்கும் தத்துவமாகும். ஆட்காட்டி விரல் உயிரைக் குறிப்பது. கட்டைவிரல் இறைவனைக் குறிப்பது. பிற மூன்று விரல்களும் ஆணவம்,கன்மம்,மாயை ஆகிய மூன்றையும் குறிக்கும்

இயல்பாகக் கைவிரல்களை விரித்துப் பார்க்கும் போது ஆட்காட்டி விரல் மற்ற மூன்று விரல்களோடு தான் சேரும். கட்டை விரல் தனித்து நிற்கும். ஆட்காட்டி விரலை முன்னோக்கி வளைத்துக் கட்டை விரலின் மீது வைத்தால் மற்ற மூன்று விரல்களும் தாமாகவே விலகிவிடும். இறைவனைச் சாரச்சார உலக ஆசைகள் துன்பங்கள், அழுக்குகள் எல்லாம் தாமாகவே விலகிவிடும். இறைவனைப் பணிந்து சார்வாருக்கு இன்பமே, எந்நாளும் துன்பமில்லை என்பதை உணர்த்துவதே தென்முகக் கடவுளினுடைய சின்முத்திரையின் உயரிய தத்துவமாகும்.

உலக ஆசைகளின் காரணமாக அரசருடன் பொருளாதாரச் செழிப்பில் காவிரிப்பூம்பட்டினத்தில் நகரத்தார் போட்டி போட்டதைப் பற்றி முன்னரே விளக்கப்பெற்றுள்ளது. அந்த ஆணவம், கன்மம், மாயத்தால் துன்பமே விளைந்தது, ''இறைவனே தலைவன். அவனுக்கே யாம் குடிமக்கள். இனி நாமார்க்கும் குடியல்லோம்!'' என ஞானம் பெற்று நகரத்தார் எடுத்த முடிவு சின் முத்திரையில் விளக்கமாகவே அமைந்துள்ளது.

இறைவன் திருவடியைச்சார்ந்தோர்க்கு இன்பமே; எந்நாளும் துன்பமில்லை என்பதை உணர்த்தவே தென்முகக் கடவுளின் திருமுகத்தில் எப்போதும் ஒரு இனிய புன்னகை நிலைபெற்றிருக்கிறது.

நகரத்தார்கள் தங்களது பழைய வரலாற்றில் பெற்ற உலகியல் துன்பங்களினால் நிலையான இன்பத்தை நாடினார்கள். உண்மையானதும் முழுமையானதுமான பேரின்பம் இறைவன் திருவருளைச் சிந்திப்பதும் அவனை ஆழ நினைந்து தியானம் செய்வதுமே என்ற ஞானத்தைப் பெற்றனர். எனவேதான் ஞான தட்சிணாமூர்த்திக்கு மற்ற சிற்றாலயங்களை விட மிகச் சிறந்த கலைச்சிறப்பு மிக்க மண்டபத்தைத் தோற்றுவித்தனர் எனலாம்.

வயிரவன்பட்டி, இலுப்பைக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய கோயில்களில் உள்ள தட்சிணாமூர்த்தி மண்டபங்கள் மிக உயர்ந்த கலைத்தன்மை கொண்டவை. சூரைக்குடியில் உள்ள தட்சிணாமூர்த்தியின் சிற்பத்தின் பின்புறம் உள்ள ஆலமரத்தில் அழகு தனிச்சிறப்புடையது.

பிறகோயில்களில் தட்சிணாமூர்த்தியின் முதுகுப் பகுதியோடு ஆலமரத்தில் தண்டுப் பகுதியைச் சேர்த்தே சிலைவடித்துள்ளனர்.

ஆனால் சூரைக்குடியில் அவ்விரண்டு பகுதிகளும் தனித்தனியாகப் பிரித்து ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ளது. ஆலமரத்தின் தண்டுப்பகுதி தனியாக வளைந்து மேல் சென்று பல்வேறு கிளைகளாகப்பிரிந்துள்ள காட்சி மீண்டும் மீண்டும் காணத்தக்கது.

தட்சிணாமூர்த்தி வழிபாட்டில் மிகுந்த ஈடுபாடு காட்டியதனாலேயே இவ்வாறு கலைச்சிறப்பு மிக்க மண்டபத்தை அமைத்துள்ளனர் எனலாம். அம்மண்டபத்தின் அழகினைத் திரு மா. சந்திரமூர்த்தி அவர்கள் சொற்படம் எடுத்துள்ளார்கள்.[21] பின்வரும் அப்பகுதியைப் படித்தால் நகரத்தார்களின் ஞான நாட்டம் நன்கு தெரியவரும்.

"சுவாமி கருவறையின் தென் திசையில் உள்ள தட்சிணாமூர்த்திக்குக் கருவறையை ஒட்டித் தனி மண்டபம் எடுக்கப்பட்டுள்ளது. இம்மண்டபத்தின் அடிமுதல் கல்கூரைவரை, சிற்பிகள் மிகுந்த கவனத்துடன் சிற்ப வேலையைச் செய்து முடித்துள்ளனர். அதிட்டானப் பகுதியில் உள்ள கபோதங்களும் தாமரைகளும் குமுதங்களும் நுணுக்கமான வேலைப்பாட்டுடன் திகழ்கின்றன. இம்மண்டபப் பீடத்தில் முன்புறம் மரத்தைச் செதுக்கியது போன்று சிற்ப வேலைப்பாடு கொண்ட தூண்களைக் காணலாம். இத் தூண்கள் கால், உடல், இடை, கலசம், குடம், கண்டம், விரிந்த பத்மம், பலகை, நந்தி மேடை, போதிகை, உத்திரம் ஆகிய பகுதிகளைக் கொண்டு விளங்குகிறது. இத்தூண்களின் உடல் மேலிருந்து கீழாக வரிவரியாக வெட்டப்பட்டு வனப்பூட்டுகிறது."

"இத்தூண்களின் மேலுள்ள குடத்திற்கும் பலகைக்கும் நடுவே உள்ள கல்லிலே விரிந்த தாமரை அக்காலத்துச் சிற்பியின் படைப்புக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது 48 பூவிதழ்களைக் கல்லிலே மிக இயற்கையாகப் படைத்துத் தட்டினால் கூட ஒலிக்கும் அளவில் மிக மென்மையான தாமரை இதழ்களைத் தோற்றுவித்துள்ள பாங்கு போற்றத்தக்கது."

"இத்தூண்களின் மேலுள்ள போதிகை வளைந்த வாழைப் பூத்தாரை ஒத்து வனப்பூட்டுகிறது. தூணின் மேலுள்ள பலகைப் பகுதியின் நான்கு மூலைகளிலும் ஒரு தலையையும், இரு உடலையும் பெற்ற நந்தியின் உருவங்கள் அமர்ந்த கோலத்தில் காட்டப்பட்டுள்ளன. உத்திரத்திற்கு மேலுள்ள கூரை, தேக்கு

மரத்தால் நுட்பமாகச் செதுக்கிய மரக்கூரை போன்று ஆங்காங்கே இடைவெளியும், இடுக்குகளும் விட்டு பொருத்தமான இடத்தில் பல்வகைச் சட்டங்களை இணைத்து ஆணி அறைந்தது போன்று கல்கூரையாகச் செதுக்கப்பட்டுள்ளது. இது அந்நூற்றாண்டின் சிற்பிகளுக்கு இருந்த சீரிய திறனையும், அனுபவத்தையும் பறை சாற்றுகிறது''.

''மண்டபத்தின் முன்புள்ள இரு தூண்களின் பக்கங்களில் இரு பிள்ளைத் தூண்கள் ஒரே கல்லில் இணைக்கப்பட்டுக் காட்சி யளிக்கின்றன. இத்தூண்களின் கீழேயுள்ள சதுரப்பட்டையில் மேலிரு கைகளில் தாமரை ஏந்தி அருள் பாலிக்கும் அன்னையும் கிளியின்மீது அமர்ந்து கரும்பு வில்லை வளைத்து மலரால் பானம் எய்து ஆலின் கீழ் அமர்ந்துள்ள அண்ணலின் தியானத்தைக் கலைக்க முயற்சிக்கும் மன்மதனுடைய உருவமும், மன்மதன் எதிரேயுள்ள தூணில் அழகான உருவமாக அன்னத்தில் அமர்ந்து மலர்கொண்டு எறியும் இரதியின் உருவத்தையும் பொருத்தமான இடத்தில் சிற்பிகள் செதுக்கியுள்ள பாங்கு போற்றத்தக்கது. இதைத்தவிர கருப்புசாமி, பூக்குடளை ஏந்திய பெண், பைரவர், தாருகாவனத்துப் பெண்டிர், பிட்சாடனர், குழல் ஊதும் கண்ணன், இராதை, வீணாதரமூர்த்தி. திருவிக்கிரம அவதாரம், கோதண்ட-ராமர், ஓலைக்குடை, ஏந்திய முதியோன், மாணிக்கவாசகர் சிற்-பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இவை ஒவ்வொன்றும் 14 செ. மீ. உயரமுள்ளவை. இங்குள்ள பெரிய தூண்களுக்கும் பிள்ளைத் தூண்களுக்குமிடையே கொடிக்கருக்கணியைப் போன்று அமைக்கப்பட்டுள்ள அழகிய வேலைப்பாடுகள் அமைந்த சன்னல்களின் கீழ் ஒரு புறம் தாடி தரித்த முனிவன் ஒருவனும் அவ்வுருவத்தின் பின்புறம் அழகிய கொடிப்பெண் ஒருத்தியும் காட்டப்பட்டுள்-ளனர். 20 செ. மீ. உயரமுள்ள இவ்வுருவம் ஒவ்வொருவரும் தவறாது காணவேண்டிய சிற்பமாகும்''

''பிள்ளைத் தூண்களைத் தாங்கி நிற்கும் சிறப்பாயும் சிம்மங்களின் திறந்த வாயினுள் வாயைவிடப் பெரிய கல் குண்டுகளை வைத்துச் சிற்பி செதுக்கியுள்ள பாங்கு விசயநகரநாயக்கர் காலக் கலையின் தொடர்ச்சி எனக் கூறலாம். இச்சிங்கங்களின் பருத்த கண்களும், புடைத்த மூக்கும், கூரிய பற்களும், படர்ந்த தாடியும் கூரிய நகங்களும் கூட மிக நுட்பமாகக் காட்டப்பட்டுள்ளன.''

''இம்மண்டபத்துப் பீடங்களைச் சுற்றிலும் யாளிவரி அமைக்கப்பெற்றும், அதன்கீழ் உள்ள கபோதங்களின் மேல் தாயின்

தனம் பற்றித் தாய்முகம் நோக்கிய குழந்தையும் தாயும் காட்டப் பட்டுள்ளன. இச்சிற்பம் கீழ்த்திசையில் உள்ளது. தென்திசையில் சீறிவரும் நாகத்தைத் தன் மகுடியின் நாதத்தால் அடக்கும் மகுடிக்காரனும் அவன் முன் ஆடும் அரவமும், மிக இயற்கையாக வடிக்கப்பட்டுள்ளது. வடதிசையில் உள்ள கபோதத்தில் இளங்கண்ணன் உரியிலுள்ள வெண்ணையை கலயத்துடன் கவர்ந்து வந்து அதை யசோதைக்குத் தெரியாமல் தின்பதும், மறுபுறத்தில் யசோதை அக்காட்சியைக் கண்டு வியந்து நிற்பதும் அற்புதமான கலையாக விளங்குகிறது ''

''இம்மண்டபத்தின் நடுவே இடது காலை மடித்து வலது காலை முயலகன் மேல் வைத்து வீராசனத்தில் அமர்ந்து அறம் உரைக்கும் நிலையில் தட்சிணா மூர்த்தியின் உருவத்தைக்காணலாம். மேற்கைகளில் அரவமும், உடுக்கையும் பற்றி கீழ் இடக்கையை முழங்கால் மேற்கொண்டு வலக்கையால் சின்முத்திரை காட்டி, தன் முன்னுள்ள சனகாதி முனிவர்கள் நால்வருக்கும் அறம்உரைக்கும் அண்ணலாகத்தோன்றும், தட்சிணாமூர்த்தியின் வடிவம் இன்றும் வழிபாட்டில் உள்ளது''. (நி, ப. எ. 23)

## 3. 3. 7. பிற கோட்டச் சிற்பங்கள் :-

கருவறையின் மேற்கில் அடிமுடி காணா நாதராகிய அண்ணாமலையாரின் சிற்பமும், வடக்குத் திசையில் பிரமன், கொற்றவை (துர்க்கை)யின் திருஉருவங்களும் இடம் பெற்றுள்ளன.

## 3. 3. 8. சிற்றாலயச்சிற்பங்கள் :-

சிற்றாலயச் சிற்பங்களாக விநாயகர், ஆறுமுகன், இலக்குமி ஆகியோரின் சிற்பங்கள் காணப்படுகின்றன.

இளையாத்தங்குடி, மாற்றூர் நேமம் ஆகிய ஊர்க்கோயில்களில் பெருமாளின் சிற்றாலயமும் காணப்படுகின்றது.

இளையாத்தங்குடியில் ஆதிகேசவப் பெருமாளாகவும், மாற்றூரில் வரதராசப் பெருமாளாகவும். இரணியூரில் நீலமேகப் பெருமாளாகவும், பெருமாளின் வடிவங்கள் வழிபடப்பெறுகின்றன சிறீ சரசுவதீய சித்திரகரும சாத்திரமும், பிராமீய சித்திரகரும சாத்திரமும் கூறும் தசரத ராமன் வடிவத்தில் சீதை இலக்குமணருடன் மேற்கண்ட பெருமாள் சிற்பங்கள் அமைந்துள்ளன.

மகா இலக்குமியின் சிற்றாலயம் கோயில் திருச்சுற்றில் வட மேற்கு மூலையில் அமைந்துள்ளது. இம் மகா இலக்குமியின் உருவ அமைதி மானசாரத்தில் கூறப்பெற்றுள்ள சிற்ப இலக் கணத்திற்குப் பொருத்தமாக அமைந்துள்ளது.

மகா இலக்குமி தாமரை மலரில் பத்மாசனமிட்டுக் காணப்படு கிறாள். நான்கு கரங்களில் அபயமுத்திரை, வரத முத்திரை, செப மணி மாலை, தாமரைமலர் ஆகியன காணப்படுகின்றன. கிரீட மகுடம் என்னும் தலையணியிலிருந்து இரத்தின மோதிரங்கள் நிறைந்த கால் விரலணிகள் வரை எல்லாவிதமான அலங்காரங் களுடனும் காணப்படுகிறாள். இத்தேவியின் இருபுறத்திலும் ஐரா வதம் எனும் இந்திரனின் வெள்ளை யானைகள் இரண்டு காணப் படுகின்றன.

பிள்ளையார்பட்டி, நேமம் ஆகிய ஊர்க்கோயில்களில் மகா இலக்குமி சிற்றாலயத்துள் துர்க்கை, சரசுவதி ஆகியோருக்கும் சிற்பங்கள் அமைக்கப்பெற்று வழிபாடு செய்யப்படுவது குறிப்பிடத் தக்கது.

வயிரவன்பட்டியில் சரசுவதி சிற்பம் வழிபாட்டில் உள்ளது. ஆனால் அதற்கான ஒரு தனிச்சிற்றாலயம் அமைக்கப்படவில்லை.

நவக்கிரகங்களின் சிற்பங்கள் ஒன்பது நகரக் கோயில் களிலும், முதல் திருச்சுற்றின் வடக்குப்பகுதி அல்லது வடகிழக்கு மூலையில் அமைக்கப்பட்டுள்ளன. சூரியன் நடுவில் காணப்படு கிறார். அவரைச் சுற்றிலும் கேது, இராகு, செவ்வாய், சந்திரன், சுக்கிரன், புதன், குரு, சனீசுவரன் ஆகியோரின் சிற்பங்கள் காணப்படுகின்றன.

## 3. 3. 9. தலவிருட்ச சிற்பங்கள்:-

மர வழிபாடு மிகப் பழங்காலத்திலிருந்தே கைக்கொள்ளப் பட்டுள்ளது. மரத்தின் அடிப்பகுதியிலேயே கந்துஎன்னும் இலிங்க வடிவில் இறைவனை வழிபட்டதனைத் தொல்காப்பியம், அக நானூறு, புறநானூறு, திருமுருகாற்றுப்படை, பட்டினப்பாலை ஆகிய இலக்கியங்கள் கூறுகின்றன.

கடம்ப மரத்தின் அடியிலேயே முருகனை வழிபட்டுள்ளனர் என்பதைப் பரிபாடல், திருமுருகாற்றுப்படை, பெரும்பாணாற்றுப் படை ஆகியன குறிப்பிடுகின்றன.[22]

இவ்வாறு எந்த மரத்தின் அடியில் தெய்வ உருவங்கள் வைத்து வழிபடப்பட்டனவோ, அந்தமரத்தினைத் 'தலவிருட்சம்' என்றபெயரில் வழிபடுவது நகரத்தாரின் மரபு.

தலவிருட்சம் இன்றும்உயிரோடிருந்தால் அதனைச் சுற்றிலும் மேடையமைத்து வழிபடுகின்றனர். மாற்றூரில் உள்ள மகிழமர வழிபாடு இதற்குச்சரியான சான்றாகும்.

தலவிருட்சம் அவ்வாறு உயிரோடு இல்லாதிருப்பின் பட்டுப் போன மரத்தின் தண்டுப் பகுதியை வழிபடுவர். மருதமரத்தின் அடிப்பகுதியை பிள்ளையார்பட்டியில் வழிபடுகின்றனர். (நி.ப.எ,24). பட்டுப்போன மரமும் கிடைக்காதபோது அம்மரம் இருந்த இடத்தில் அம்மரத்தினைப் போன்ற சிற்பத்தைச் செதுக்கி வைத்து வழிபடுவதை வயிரவன்பட்டியிலும் இலுப்பைக்குடியிலும் காணமுடிகிறது. அதுதான் பண்டைக்காலத்தில் கோயில் இருந்த இடம் என்பதால் அமிஞ்சி மரத்தில் வடிவம் மட்டும் வயிரவன்-பட்டியில் வழிபாட்டில் உள்ளது. (நி.ப.எண். 25) இலுப்பைக்-குடியில் முன்னர் தலவிருட்சம் இருந்த இடத்தில் கொங்கணச் சித்தர் சிவபெருமானை வழிபட்டதாக மரபு. எனவே அதே இடத்தில் கல்லாலான தலவிருட்சத்தினைச் செதுக்கி அதன் நடுவே கொங்கணச் சித்தர் இலிங்கத்திற்குப் பூசை செய்வதாக அமைந்துள்ள சிற்பம் மிகவும் அழகு வாய்ந்தது. இச்சிற்பம் இலுப்பைக்-குடிப் புராணத்தின் அடிப்படையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. (நி. ப. எ 26).

## 3. 3. 10. பிற சிற்பங்கள்:-

ஒன்பது நகரக் கோயில்களிலும் இடம்பெறும் பிற சிற்பங்களைப் பற்றியும் குறிப்பிட்டால்தான் சிற்பங்களைப் பற்றிய செய்தி முழுமையாக அமையும். எனவே வயிரவன்பட்டி, இரணியூர்க் கோயில்களில் உள்ள சிற்பங்களைச் சான்றாகக் காண்போம்.

1. இராச கோபுரம்
   - 1. 1. முன்மண்டப விநாயகர்.
   - 1. 2. முப்பலிக் கருப்பர்.
   - 1. 3. சப்தமாதர் பீடங்கள்.

2. கொடிமர மண்டபம்
   - 2. 1. கொடிமர பீடம்.

2. 2. பலி பீடம்
2. 3. நந்தி

3. வளரொளி நாதர் சன்னிதி

3. 1. வளரொளிநாதர்
3. 2. விநாயகர்
3. 3. முருகன்
3. 4. ஆகாச வைரவர்
3. 5. துவார பாலகர்
3. 6. துவார பாலகர்

4. வயிரவர் சன்னிதி

4. 1. வயிரவர்
4. 2. துவாரபாலகர்
4. 3. துவாரபாலகர்
4. 4. தெய்யனாஞ் செட்டியார் சதாசேவைச் சிற்பம்

5. வடிவுடையம்மை சன்னிதி

5. 1. வடிவுடையம்மை
5. 2. துவார சத்தி
5. 3. துவார சத்தி

6. கருவறைக் கோட்டங்கள்

6. 1. நர்த்தன விநாயகர்
6. 2. தென்முகக் கடவுள்
6. 3. அடிமுடி காட்டா நாதர்
6. 4. துர்க்கை
6. 5. பிரம்மா

7. முதல் திருச்சுற்று

7. 1. சூரியன்
7. 2. விசுவநாதர்
7. 3. நந்தி
7. 4 விசாலாட்சி
7. 5. விநாயகர்
7. 6. திருஞானசம்பந்த சுவாமிகள்

7. 7. திருநாவுக்கரசு சுவாமிகள்.
7. 8. மாணிக்கவாசக சுவாமிகள்.
7. 9. சுந்திரமூர்த்தி சுவாமிகள்.
7. 10. தில்லைவாழ் அந்தணர்.
7. 11. திருநீலகண்ட நாயனார்.
7. 12. இயற்பகை நாயனார்.
7. 13. இளயான்குடி மாற நாயனார்.
7. 14. மெய்ப்பொருள் நாயனார்.
7. 15. விறன்மிண்ட நாயனார்
7. 16. அமர்நீதி நாயனார்
7. 17. எறிபத்த நாயனார்
7. 18. ஏனாதி நாயனார்.
7. 19. கண்ணப்ப நாயனார்
7. 20 குங்கிலியக்கலய நாயனார்.
7. 21. மானக்கஞ்சாற நாயனார்.
7. 22. அரிவாட்டாய நாயனார்.
7. 23. ஆனாய நாயனார்.
7. 24. மூர்த்தி நாயனார்.
7. 25. முருக நாயனார்.
7. 26. உருத்திர பசுபதி நாயனார்.
7. 27. திருநாளைப் போவார் நாயனார்.
7. 28. திருக்குறிப்புத் தொண்ட நாயனார்.
7. 29. சண்டேசுர நாயனார்.
7. 30. திருநாவுக்கரசு சுவாமிகள்
7. 31. குலச்சிறை நாயனார்.
7. 32. பெருமிழலைக் குறும்ப நாயனார்.
7. 33. காரைக்கால் அம்மையார்.
7. 34. அப்பூதி அடிகள் நாயனார்.
7. 35. திருநீலநக்க நாயனார்.
7. 36. நமிநந்தி அடிகள் நாயனார்.
7. 37. திருஞான சம்பந்த சுவாமிகள்.
7. 38. ஏயர்கோன் கலிக்காம நாயனார்.
7. 39. திருமூல நாயனார்.
7. 40. தண்டியடிகள் நாயனார்.
7. 41. மூர்க்க நாயனரர்.
7. 42. சோமாசிமாற நாயனார்.
7. 43. சாக்கிய நாயனார்.
7. 44. சிறப்புலி நாயனார்.

7. 45. சிறுத்தொண்டநாயனார்
7. 46. சேரமான் பெருமாள் நாயனார்
7. 47. கணநாத நாயனார்
7. 48. கூற்றுவ நாயனார்
7. 49. பொய்யடிமையில்லாத புலவர்
7. 50. புகழ்ச்சோழ நாயனார்
7. 51. நரசிங்க முனையரைய நாயனார்
7. 52. அதிபத்த நாயனார்
7. 53. கலிக்கம்ப நாயனார்
7. 54. கலிய நாயனார்
7. 55. சத்தி நாயனார்
7. 56. ஐயடிகள் காடவர்கோன்
7. 57. கணம்புல்ல நாயனார்
7. 58. காரி நாயனார்
7. 59. நின்றசீர் நெடுமாற நாயனார்
7. 60. வாயிலார் நாயனார்
7. 61. முனையடுவார் நாயனார்
7. 62. கழற்சிங்க நாயனார்
7. 63. இடங்கழி நாயனார்
7. 64. செருத்துணை நாயனார்
7. 65. புகழ்த்துணை நாயனார்
7. 66. கோட்புலி நாயனார்
7. 67. பத்தராய்ப் பணிவார்
7. 68. பரமனையே பாடுவார்
7. 69. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்
7. 70. முப்பொழுதும் திருமேனி தீண்டுவார்
7 71. திருவாரூர்ப் பிறந்தார்
7. 72. முழுநீறு பூசிய முனிவர்
7. 73. அப்பாலும் அடிசார்ந்தார்
7. 74. பூசலார் நாயனார்
7. 75. மங்கையர்க்கரசியார்
7. 76. நேச நாயனார்
7. 77. கோச் செங்கட் சோழ நாயனார்
7. 78. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்
7. 79. சடைய நாயனார்
7. 80. இசை ஞானியார்
7. 81. சுந்தரமூர்த்தி சுவாமிகள்
7. 82. விநாயகர்

7.83. சொக்கஞ் செட்டியார் சதாசேவைச் சிலை
7.84. ஆறுமுகன்
7.85. தெய்வயானை
7.86. வள்ளியம்மை
7.87. மயில்
7.88. மகாலெட்சுமி
7.89. சரசுவதி
7.90. அழிஞ்சி மரம்
7.91. நாகலிங்கம்
7.92. நாகலிங்கம்
7.93 சூரியன்
7.94. சனீசுவரன்
7.95. கேது
7.96. இராகு
7.97. செவ்வாய்
7.98. சந்திரன்
7.99. சுக்கிரன்
7.100. புதன்
7.101. குரு
7.102. சனீசுவரன்
7.103 சந்திரன்

ஆக மொத்தம் 127 கற்சிற்பங்கள் வயிரவன்பட்டிக் கோயிலில் வழிபாட்டில் உள்ளன.

## 3.3.11. சதாசேவைச் சிற்பங்கள் :-

மேற்கண்டவற்றுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன தெய்யனாஞ் செட்டியார் சொக்கஞ் செட்டியார் ஆகியோருடைய சதாசேவைச் சிற்பங்களாகும்.

இறை அடியார்களுடைய சிற்ப அமைப்பிற்கும் மானசாரம் இலக்கணம் கூறுகின்றது. இறைவனிடத்தே கொண்டுள்ள பக்தியின் அடிப்படையில் இறையடியார்களுடைய பக்தி நிலையில் நான்கு வகையினைக் குறிப்பிடுகின்றது. அவையாவன :

1. சாலோக்கியம்
2. சாமீப்பியம்
3. சாருப்பியம்
4. சாயுச்சியம்

பக்தியின் முதிர்ந்த நிலையில்இறைவனுடன் கலந்திருத்தலை சாயுச்யம் எனக் கூறுகின்றது. வயிரவன்பட்டியில் உள்ள சதா சேவை பக்தர்கள் சாயுச்ய நிலையில் நின்று வணங்குவதைக் காணமுடிகின்றது.

## 3.3.11.1. தெய்யனாஞ் செட்டியார் சதாசேவை :-

வயிரவர் சன்னிதிக்கு முன்பாகத் தெய்யனாஞ் செட்டியார் சிற்பம் காணப்படுகிறது. இச் சிற்பம் 1.35 மீட்டர்உயரம்உள்ளது (நி ப.எண்.27)

தலையைத் தலைப்பாகை அலங்கரிக்கிறது. நெற்றியில் திருநீரும், கழுத்தில் உருத்திராட்சமும், காதில் நான்குவளையங்களும் கையில் கைச்சங்கிலியும் மோதிரமும் காணப்படுகின்றன. பஞ்சகச்ச பாணியில் வேட்டி கட்டப்பட்டுள்ளது. அஞ்சலி அத்த (உறஸ்த) முத்திரையில் எப்போதும் இறைவனை வணங்கும் நிலையில் கைகள் அமைந்துள்ளன. தலையில் நாயக்கர் பாணிக் கொண்டை காணப்படுகிறது. இது ஒன்றே குறைபாடாகக் காணப்படுகிறது. நாயக்கர் சிற்பங்களின் பாதிப்பாக இச் சிற்பம் அமைந்துள்ளது.

## 3.3.11.2. சொக்கஞ்செட்டியார்சதாசேவைச் சிற்பம்:

இச்சிற்பம் 1.40 மீட்டர் உயரம் உள்ளது. மிக அழகான சிற்பமாக இது வடிவமைக்கப்பட்டுள்ளது.

இயற்கையான இளஞ்சிவப்பு நிறம் கொண்ட கல்லில் வழுவழுப்பாகச் சிலை செய்யப்பட்டுள்ளது. இச் சிலையில் அமைந்துள்ள கூர்மையான மூக்கும், செல்வ வளத்தைக் காட்டும் அணிகலன்களும்,முழுமையான பக்தியினை உணர்த்தும் சிவச் சின்னங்களும், வசதியான வாழ்க்கையைக் காட்டும் இளம் தொந்தியும் காண்போர் கண்களை விட்டகலாது நிற்கும் திறமை கொண்டவை (நி. ப எ. 28)

இதயப் பகுதியின் கீழ் வயிறு சிறிதே உயர்ந்து தொப்புளை அடுத்து வேட்டி கட்டியதால் அடங்கி, அவ்வழுந்தத்தால் இருபுறமும் படர்ந்து சதுர வடிவில் தொந்தி காணப்படுவதை மிகஇயற்கையாகச் சிற்பி வடித்துள்ளார் தொந்தியில் காணப்படும் தொப்புள் அளவாகக் குடையப் பெற்றுள்ளது.

தலைப்பாகையில் அமைந்த சரிகை நெசவும், உருத்திராட்சத்தில் அமைந்த இயற்கையான மேடு பள்ளங்களும், அணிகலன்களில் அமைந்த அழகு வேலைப்பாடுகளும் மிக நுட்பமாகச் செதுக்கப்பட்டுள்ளன.

நகரத்தார் பாணிச் சிற்பக் கலையில் இன்றியமையாத ஓர் இடத்தினை இச் சிற்பம் பெற்றுள்ளது.

## 3.3.11.3. கல்லாப்பேட்டை சமீன்தார் சதாசேவைச் சிற்பம்:

இளையாத்தங்குடிக் கோயிலில் நித்திய கல்யாணி அம்மன் சிற்றாலயத்தின் எதிரே கல்லாப்பேட்டை சமீன்தாரின் சதாசேவைச் சிற்பம் உள்ளது வீரம் மிக்க சமீன்தார்என்பதைஅவரது தோற்றப் பொலிவே விளக்குகிறது முறுக்கேறிய அடர்த்தியான மீசை, இடையில் காணப்படும் குத்துவாள், வீரம்மிக்க பார்வை, மிக நெடிய தோற்றம் ஆகியன மாபெரும் வீரர் என்பதைப் பறைசாற்றுகின்றன. (நி. ப. எண்.29).

கல்லாப்பேட்டை பெரிய சமீன்தாரின் இயற்பெயர் பெரிய நம்பித் தேவர். இவரைப் 'பட்டத்துஐயா' என்று போற்றி வழிபடுகின்றனர்.

இளையாத்தங்குடியைச் சுற்றியுள்ள எட்டு கிராமத்து மக்கள் இவரைக் குலதெய்வமாக மதித்து வழிபட்டு வருகின்றனர். கோயிலைக் காவல் காத்துவரும் மெய்க்காவலர்களே இவருக்கான பூசைகளைச் செய்து வருகின்றனர்.

குழந்தை பிறந்ததும் முதன் முதலாகப்பெரியநம்பித்தேவரின் திருவடிகளில் தாங்கள் விரும்பும் பெயர்களைத் திருவுளச் சீட்டாக எழுதிப் போட்டு ஒரு பெயரைத் தேர்ந்தெடுக்கின்றனர். இக் கிராம மக்கள் வெளியூர் செல்லும்போது வீட்டுச்சாவியை இச்சிற்பத்தின் கைகளில் வைத்துவிட்டுச் செல்கின்றனர். வெளியூரிலிருந்து வந்ததும் சாவியை எடுத்துக்கொள்கின்றனர் கிராம மக்களின் நம்பிக்கைக்குரிய கண்கண்ட தெய்வமாகப் பெரிய நம்பித் தேவர் மதித்து வழிபடப் பெறுகிறார்.

சதாசேவைச் சிற்பங்களும் தூண் சிற்பங்களும் வழிபாட்டில் இடம்பெறும் தனிச் சிறப்பு நகரக் கோயில்களில் காணப்படுகிறது.

பெரிய சமீன்தாரைத் தொடர்ந்து பல சிறிய சமீன்தார்களின் சதாசேவைச் சிற்பங்களும் இம் மகாமண்டபத்தில் உள்ளன.

மாற்றூரில் திருப்புனவாசல் முதல் திருமெய்யரின் சதா சேவைச் சிற்பம் சூரியன் சிற்பத்துக்கு அருகில் காணப்படுகிறது. சிவ தீட்சை அளிக்கும் குருவின் வடிவமாக அச்சிற்பம் காணப் படுகிறது.

## 3. 3. 12. தூண் சிற்பங்கள்:-

வழிபாட்டில் இல்லாமல், தனியாகத் தூண்களிலும் கருவறைச் சுவர்களிலும் உள்ள சிற்பங்கள் இங்கு எடுத்தாளப்படுகின்றன.

''பார்க்குமிடம் எங்கணும்
நீக்கமற நிறைகின்ற பரிபூரனானந்தமே!''

என்ற பாடல் வரிகளை மெய்ப்பித்துக் காட்டுவது, ஒன்பது நகரக் கோயில்களிலும் காணப்படும் புதுமையாக உள்ளது. பார்க்குமிட மெங்கனும் சிற்பங்கள் நீக்கமற நிறைந்திருக்கின்றன. கருவறைச் சுவர், அதன் கூடுகள், தூண்கள் ஆகிய எல்லா இடங்களிலும் சிற்பங்களை வைத்துள்ளனர்.

## 3. 3. 12. 1. வயிரவன் பட்டியில் உள்ள தூண் சிற்பங்கள்:-

1. வளரொளிநாதர் சன்னிதியில் உள்ளவை:-

1. 1. இராமர் (1. 55 மீட்டர் உயரம்)
1 2. சீதை (1. 45 மீட்டர் உயரம்)
1. 3. வேடன் (1. 60 மீட்டர் உயரம்)
1. 4. வேட்டுவச்சி (1. 50 மீட்டர் உயரம்)
1. 5. மன்மதன் (1. 70 மீட்டர் உயரம்)
1. 6. இரதி (1. 65 மீட்டர் உயரம்)
1. 7. யாழ்மங்கை (1. 40 மீட்டர் உயரம்)
1. 8. துவார சத்தி (1. 10 மீட்டர் உயரம்)
1. 9. இராசராசேசுவரி (1. 15 மீட்டர் உயரம்)
1.10. துவார சத்தி (1. 10 மீட்டர் உயரம்)
1.11. மாணிக்கவாசகர் (1. 50 மீட்டர் உயரம்)
1.12. நடராசர் (1. 25 மீட்டர் உயரம்)
1.13. அக்னி வீரபத்திரர் (1. 10 மீட்டர் உயரம்)

1. 14. உருத்திர சம்கார மூர்த்தி (1. 20 மீட்டர் உயரம்)
1. 15. தெய்யனாஞ் செட்டியார் (1. 35 மீட்டர் உயரம்)
1. 16. வயிரவர் (1 00 மீட்டர் உயரம்)
1 17. நடனமாடும் காளி (1. 00 மீட்டர் உயரம்)
1. 18. உருத்திர தாண்டவர் (1. 20 மீட்டர் உயரம்)

2. நடராசர் சன்னிதியில் உள்ளவை:-

2. 1. குதிரை வீரர்கள் (2.10 மீட்டர் உயரம்)
2. 2. குதிரை வீரர்கள் (2. 20 மீட்டர் உயரம்)
2. 3. கலியாண சுந்தரர் (1. 10 மீட்டர் உயரம்)
2. 4. கண்ணப்பர் கண்கொடுத்தல் (95 செ. மீ. உயரம்)
2. 5. யானைத் தோலுரித்தவர். (40 செ. மீ. உயரம்)
2. 6. ஆறுமுகன் (30 செ. மீ. உயரம்)
2. 7. அகோர வீரபத்திரர் (46 செ. மீட்டர் உயரம்)
2. 8. காளி (40 செ மீ உயரம்)

3. முதல் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் உள்ளவை:

3. 1. இலக்குமணன் (1. 50 மீட்டர் உயரம்)
3. 2. சதாசேவை (1. 60 மீட்டர் உயரம்)
3. 3. யாளியும் யானையும் (2. 00 மீட்டர் உயரம்)
3. 4. யாளியும் யானையும் (2. 00 மீட்டர் உயரம்)

4. கருவறைச் சுவரில் உள்ளவை -

4. 1. யானைக்குக் கரும்பு, கொடுக்கும் சிவன் (87. செ. மீ. உயரம்)
4. 2. உமையொரு பாகன் (90 செ. மீ. உயரம்)
4. 3. சுந்தரர் (80 செ. மீ. உயரம்)
4. 4. வீரபத்திரர் (90 செ. உயரம்)
4. 5. வயிரவர் (82 செ. மீ. உயரம்)
4. 6. யானைக்குக் கரும்பு கொடுக்கும் சிவன் (90 செ. மீ. உயரம்)
4. 7. தண்டாயுதபாணி (70 செ. மீ. உயரம்)
4. 8. குழலூதும் கண்ணன் (82 செ மீ உயரம்)
4. 9. அனுமன் (85 செ. மீ. உயரம்)
4. 10. அனுமனை வணங்கும் இராமர் (77 செ. மீ. உயரம்)

வயிரவன்பட்டிக் கோயில் தூண்களில் உள்ள பெரிய சிற்பங்கள் முப்பது. கருவறைச் சுவரில் உள்ள பெரிய சிற்பங்கள் பத்து.

இவை தவிரச் சிறிய அளவில் தூண்களிலும் கருவறைச் சுவரிலும் உள்ள சிற்பங்கள் அறுநூறுக்கும் மேற்பட்டவை.

## 3. 3. 12. 2. இரணியூரில் உள்ள தூண் சிற்பங்கள்:-

### 1. ஆட்கொண்டநாதர் சன்னிதியில் உள்ளவை:-

1. 1. வல்லபை விநாயகர் (1.10 மீட்டர் உயரம்)
1. 2. காலசம்கார மூர்த்தி (1. 13 மீட்டர் உயரம்)
1. 3. உருத்திர மூர்த்தி (1. 05 மீட்டர் உயரம்)
1. 4. தலாடரூபர் (1. 02 மீட்டர் உயரம்)
1. 5. கல்யாண சுந்தரர் (1. 06 மீட்டார் உயரம்)
1. 6. உருத்திர துர்க்கை [1. 06 மீட்டர் உயரம்]
1. 7. தூல துர்க்கை [1. 06 மீட்டர் உயரம்]
1. 8. மகிடசம்காரி [1 05 மீட்டர் உயரம்]
1. 9. மகா துர்க்கை (1. 06 மீட்டர் உயரம்)
1.10. சல துர்க்கை (1. 06 மீட்டர் உயரம்)
1. 11. சூலினி துர்க்கை (45 செ. மீ. உயரம்)
1.12. நவ துர்க்கை (45 செ. மீ. உயரம்)
1.13. விட்டுணு துர்க்கை (1. 03 மீட்டர் உயரம்)
1.14. பிரம்ம துர்க்கை (1. 02 மீட்டர் உயரம்)
1.15. மாதொரு பாகர் (1. 02 மீட்டர் உயரம்)
1.16. விடைப் பாகர் (1. 02 மீட்டர் உயரம்)
1.17. பிட்சாடனர் (1. 02 மீட்டர் உயரம்)
1.18. அகோர மூர்த்தி (1. 02 மீட்டர் உயரம்)
1.19. வீரபத்திரர் (1. 05 மீட்டர் உயரம்)
1.20. முப்புரம் எரித்தவர் (1. 78 மீட்டர் உயரம்)
1.21. ஆறுமுகன் (1. 10 மீட்டர் உயரம்)

### 2. அட்டலெட்சுமி மண்டபத்தில் உள்ளவை :-

2. 1. விசயலெட்சுமி (1. 46 மீட்டர் உயரம்)
2. 2. மகாலெட்சுமி (1. 46 மீட்டர் உயரம்)
2. 3. ஆதிலெட்சுமி (1. 46 மீட்டர் உயரம்)
2. 4. தனலெட்சுமி (1. 46 மீட்டர் உயரம்)
2.5. சௌபாக்கிய லெட்சுமி (1. 46 மீட்டர் உயரம்)
2.6. வீரலெட்சுமி (1. 46 மீட்டர் உயரம்)
2.7. தான்யலெட்சுமி (1. 46 மீட்டர் உயரம்)
2.8. சந்தானலெட்சுமி (1: 46 மீட்டர் உயரம்)
2 9. யாளி

2.10. யாளி
2.11. யாளி
2.12. யாளி

3. இராச கோபுரத்தின் தளச் சுவரில் உள்ளவை :

3. 1. தட்சிணாமூர்த்தி (93 செ. மீ. உயரம்)
3. 2. எமதருமன்
3. 3. வயிரவர்
3. 4. காளி
3. 5. மாதொருபாகர்
3. 6. திருவேங்கடமுடையான்
3. 7. அக்கினி மூர்த்தி
3. 8 துருவாசர்
3. 9. கூத்தாடும் விநாயகர்
3.10. துவார பாலகர்
3.11. துவார பாலகர்
3.12. பாலசுப்பிரமணியர்
3.13. மாணிக்க வாசகர்
3.14. இந்திரன்
3.15. முப்புறம் எரித்தவர்
3.16. வீரபத்திரர்
3.17. ஈசானமூர்த்தி
3.18. கௌரி
3.19. அங்காரமூர்த்தி
3.20. பிரமன்
3.21. குபேரன்
3.22. குதிரை வீரன்
3 23. மகிடாசுரமர்த்தினி.
3.24. ஊர்த்துவ தாண்டவர்
3 25 வாயு பகவான்
3.26. கூத்தாடும் காளி
3.27. இரதி
3.28. மன்மதன்
3.29. இரணியன் நரசிம்மன் போர்
3.30. இரணிய சம்காரம்
3.31. கலியாண சுந்தரர்.
3.32. வருணன்
3.33. திருமால்

3.34. நரசிங்கம்
3. 35. நிருதி (அக்னி) மூர்த்தி
3. 36. மன்மதன்
3. 37. இரதி
3. 38. விடைப்பாகர்

இரணியூர்க் கோயில் தூண்களில் உள்ள பெரிய சிற்பங்கள் முப்பத்துமூன்று. இராசகோபுரத் தளச்சுவரில் உள்ள பெரிய சிற்பங்கள் முப்பத்தெட்டு.

## 3 3. 13. குறிப்பிடத்தக்க தூண் சிற்பங்கள்:

### 3. 3. 13. 1. வேடன் வேட்டுவச்சி சிற்பங்கள்:

வேடன் வேட்டுவச்சியின் சிற்பங்கள் வயிரவன்பட்டி, இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய ஊர்க் கோயில்களின் முன் மண்டபத்தில் -கோயிலுள் நுழைந்ததும் பார்வையில் பதியுமாறு கொடிமரத்தின் இருபுறமும் அமைந்துள்ளன.

திருவிளையாடற்புராணம், மாபாதகம் தீர்த்த படலத்தில் இறைவன் வேடனாகவும் இறைவி வேட்டுவச்சியாகவும் வந்து மாபாவிக்கு அருள் செய்தமையை நினைவூட்டும் சிற்பங்களே வேடன் வேடுவச்சியின் சிற்பங்கள்.

அவந்தி நகரில் மாபாவி என்பவன் தன் தாய்க்குப் பேரிழிவு செய்தான்; தந்தையைக் கொன்றான். அதனால் பேயாகத் திரிந்தான் மதுரைக்கு அவன் வந்தபோது அக்கடயனையும் கடைத்தேற்றுவதற்காக அம்மையப்பன் வேட்டுவக் கோலத்தில் மாபாவி முன்னே தோன்றினான்.

பாவ விலங்கை வேட்டையாடி அழிக்கவல்ல பெருமான் திருப்பார்வை பட்ட அளவில், மாபாவி உள்ளம் கலங்கியது. கசிந்து உருகியது; கண்ணீர் வழிந்தோடியது; அக் கண்ணீருடன் அவன் செய்தபாவமும் கரைந்தோடியது. இறைவன் இறைவியுடன் மாபாவிமுன் தோன்றிய தோற்றத்தைத்தான் சிற்பி, இவ் வழக்குச் சிலைகளாக வடித்துள்ளான்.

"விடுவகை யின்றி வேறு
களைகணும் இன்றி, வீயக்
கடவனைக் காப்பதன்றோ
காப்பென்றான்" - கருணைமூர்த்தி.[23]

ஆதலால், 'எவர் துணையும் இல்லானுக்கு இறைவனே துணையாகி நின்று பாவம் தீர்ப்பான்' என்பது இச்சிற்பத் தத்துவத்தால் விளங்குகிறது.

கோயிலுக்கு வருபவர் எத்தகைய பாவியர் எனினும், உண்மையன்பால் உருகித் தாம் செய்த பாவத்தை உணர்ந்து, திருந்தி, நல்வழிப்படுவார்களானால், அவர்களுக்கு இறைவன் திருவருள் பாலிப்பது உறுதி என்பதை உலகோர்க்கு வெளிப்படையாகக் காட்டுவதற்காக இச்சிலைகளைத் திட்டமிட்டு வைத்தனர் என்பர்.[24]

வேடன் சிலையின் உயரம் 1. 60 மீட்டர். இது வேட்டுவக் குலத்தினரின் அந்த இலக்கணம் அனைத்தும் அமையப் பெற்ற சிற்பம் ஆகும் தலையில் கேசபந்தமும் முகத்தில் முறுக்கிவிட்ட மீசையும் வேடனின் தனித்தன்மையைக் காட்டுகின்றன. பல்வேறு கழுத்தணி, காதணி, மார்பணி, இடையணி, காலணிகளுடன் வேடன் குத்துவாளை ஒரு கையில் தாங்கியிருப்பதும் அவனுக்குக் கீழே ஒரு சிங்கம் பதுங்கியிருப்பதும் உண்மையான ஒரு வேட்டையாடும் காட்சியை நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்துகின்றன.

வேட்டுவச்சியின் தலைக்கோலம் தம்மில்லம் (தமிழம்) எனும் வகையைச் சார்ந்தது. முடியை முறுக்கிக் கொடியாக்கி வளைத்துத் தலையின் பின்னணியில் சேர்த்து அமைத்துத் தலை உச்சிக்குமேல் தெரியுமாறு சேர்த்துக்கட்டி அமையும் தலைக்கோலமாகும். அதில் தொய்யகம், புல்லகம், கடிப்பு முதலிய தலையணிகளும், கண்டிகை, சரப்புளி, அரும்புச்சரம், சவடி, தோள்மாலை, வாகுமாலை முதலிய கழுத்தணிகளும், சன்னவீரம், உதரபந்தம், பூணூல் முதலிய மார்பணிகளும், தோள்வளை, கடகவளை, சூடகம் முதலிய கை அணிகளும், முடிச்சு அணிபொருந்திய மேகலை அரைப்பட்டிகை, தாரகைச்சும்மை, குறங்கு செறி முதலிய இடை அணிகளும் காற் சதங்கை எனும் கால் அணியும் அணிந்து வேட்டுவச்சி மிக அழகாகக் காணப்படுகின்றாள்.

### 3.3.13.2. இராமர்-சீதை-இலட்சுமணர் சிற்பங்கள்:-

வயிரவன்பட்டியிலுள்ள இராமர் சீதை இலட்சுமணர் சிற்பங்கள் இரண்டு வகையில் குறிப்பிடத்தக்கதாக அமைந்துள்ளன.

சிவன்கோயிலில் வைணவச் சிற்பங்கள் அதன் வாயிலில் இருப்பது புதுமையானது. அழகு மிகுந்த சிற்ப அமைதியோடு

கண்ணைக் கவரும் வகையில் சிலை வடிக்கப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது.

இராமர் சிலையின் உயரம் 1.55 மீட்டர் கிரீட மகுடத்தோடு கண்டிகை, சரப்பளி, சவடி முதலிய கழுத்தணிகளும் சன்னவீரம், பூணூல் முதலிய மார்பணிகளும், தோள்வளை, தோள்மாலை கடகவளை, சூடகம் முதலிய கையணிகளோடு அரைப்பட்டிகை. தாரகச்சும்மை, உதரபந்தம் முதலிய இடையணிகளோடும் வீரக் கழல் மோதிரம் முதலிய காலணிகளோடும் அழகின் திருவுருவாக இராமர் சிலை வடிக்கப்பட்டுள்ளது. இரண்டு திருக்கரங்களில் ஒன்றினால் வில்லையும் மற்றொன்றினால் வாளையும் பற்றியிருக்கின்றார்.

சீதை சிலையின் உயரம் 1.45 மீட்டர். புன்னகை தவழும் முகம் அழகூட்டுகிறது. அனைத்து அணிகளும் பூண்டுள்ளாள். ஒரு கையில் தாமரை மலரும் மறு கையில் உடோல அத்த (ஹஸ்த) முத்திரையும் காணப்படுகின்றன. கேச பந்த முடி அலங்காரமும் பட்டாடையின் அமைதியோடு இடைக்கட்டுகளின் தொங்குநிலையும் மிக அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன.

இலக்குமணரின் உருவம் 1.50 மீட்டர் உயரம் உள்ளது. இராமர் சிலையில் காணப்படும் அலங்காரங்களுடன், ஒரு கையில் வில்லையும் மறு கையில் உருஅத்த (ஹஸ்த) முத்திரையினையும் கொண்டுள்ளார்.

## 3. 3. 13. 3. இரதிமன்மதன், சிற்பங்கள்:

அழகு மிக்க பெண்ணான இரதியின் சிற்பம் 1.65 மீட்டர் உயரத்தில் அமைந்துள்ளது. குந்தள அமைப்பில் கூந்தலை அள்ளிக் கொண்டை போட்டுத் தலைக்கு மேல் அழகாகத் தலைக் கோலத்தினைச் சிற்பி அமைத்துள்ளார். இரதியின் வலக்கையில் மலர் காணப்படுகிறது. இடக்கையில் அமுத கலசத்தினை ஏந்தி நடந்து வருவது போன்ற பாவனையில் சிற்பம் அமைந்துள்ளது. நெற்றிச்சுட்டி, மூக்குத்தி, மேகலை. பட்டாடையின் அமைதி, இடைக்கட்டுகளின் தொங்குநிலை ஆகியன மிக எடுப்பாகத் தெரிகின்றன. சற்றே வலக்காலை முன்மடக்கி இடக்காலையும் இடையையும் நன்கு வளைத்து வைசாக தானக நிலையில் இரதி நிற்பதால் அவளது உடல் அழகு மிகச் சிறப்பாகத் தெரிகின்றது.

மன்மதன் உருவச்சிலையின் உயரம் 1.70 மீட்டர். ஒரு கையில் கரும்பு வில்லும் மறுகையில் மலர்க்கணையும் காணப்படுகின்றன. கண்டோரை மயக்கும் மன்மதனின் சிற்ப அழகு சிறப்பதற்காகச் சிற்பி பெரு முயற்சிகொண்டு மிக நுட்பமாகச் சிலையினைச் செதுக்கியுள்ளார். மன்மதனின் கரண்ட மகுடம், தோள் மாலை, தோள்வளை, கடகவளை, அரைப்பட்டிகை, தாரகைச் சும்மை, கார்சிலம்புஆகியன மிகஅழகாகச் செதுக்கப்பட்டுள்ளன இச்சிற்பங்கள் வயிரவன்பட்டி, இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய ஊர்க் கோயில்களில் காணப்படுகின்றன.

## 3. 3. 13. 4. குதிரை வீரர் சிற்பங்கள்:-

வயிரவன்பட்டிக் கோயிலில் நடராசர் சன்னிதியில் இரண்டு குதிரை வீரர் சிற்பங்கள் காணப்படுகின்றன. (நி. ப. எ. 29. அ.)

முன்னிரு கால்களை மேலே தூக்கிப்பாயும் நிலையில் குதிரையின் சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. குதிரையின் மேலே ஒரு வீரன் குத்துவாளை வலக் கையில் வைத்திருக்கின்றான். இடக் கையில் கடிவாளத்தைப் பற்றியிருக்கின்றான். குதிரையின் கழுத்தின் மணிகள் பதினொரு வரிசைகளில் அழகாக அமைக்கப் பட்டுள்ளன. குதிரையின் மேல் வேலைப்பாடு மிக்க இரத்தினக் கம்பளம் விரிக்கப்பட்டிருக்கிறது. தொங்கும் மிதி வாரில் (சுங்கபடியில்) வீரன் காலை வைத்திருக்கிறான். கடிவாளக் கயிறும் தொங்கும் மிதிவாரும் மிக நுட்பமாகச் செதுக்கப்பட்டுள்ளன.

இக்குதிரையின் நீளம் 2.10 மீட்டர். அதன் வயிற்றின் சுற்றளவு 1.34 மீட்டர். குதிரை வீரனின் உயரம் 1.25 மீட்டர். அவனது மார்பின் சுற்றளவு 65 செ. மீ. குதிரையைத் தாங்கும் இரு வீரர்களின் உயரம் 95 செ. மீ. குதிரைக்குக் கீழே 45 செ. மீ. உயரமுள்ள யானை ஒன்றும் காணப்படுகிறது.

## 3. 3. 13. 5. கண்ணப்பர் சிற்பம்:-

வயிரவன்பட்டிக் கோயிலில் நடராசர் சன்னிதியில் குதிரை வீரர் சிற்பத்திற்கு வடக்கில் கண்ணப்பர் சிற்பம் உள்ளது.

கண்ணப்பர் ஒரு கண்ணைச் சிவலிங்கத்தில் வைத்துவிட்டு மறு கண்ணை அம்பினால் தோண்டிக் கொண்டிருக்கிறார். இரண்டாவது கண்ணைச் சரியாகச் சிவலிங்கத்தில் வைக்க வேண்டுமே

எனும் ஆறாத பக்தியோடு தனது இடக்கால் விரலைச் சிவலிங்கத்தின் கண்ணை ஒட்டி அடையாளத்திற்காக வைத்துள்ளார். இந்நிலையில் சிவபெருமான் கண்ணப்பர் கையில்உள்ள அம்பினைத் தடுத்து வாங்குவதுபோலச் சிற்பம் அழகாக அமைந்துள்ளது

மொத்தச் சிலையின் உயரம் 95 செ.மீ. சிவபெருமானின் உயரம் 65 செ.மீ. கண்ணப்பரின் உயரம் 60 செ. மீ. சிவலிங்கத்தின் உயரம் 22 செ. மீ.

ஒரு கண் குருடாகியும் மறுகண்ணை அம்பால் பெயர்த்தெடுக்கப்போகும் கண்ணப்பரின் உறுதியான பக்தியும், அச்செயலைத் தடுத்தாட்கொள்ளும் சிவபெருமானின் அருள் பூத்த புன்னகையும் சிற்பத்தின் சிறப்புகளாகும். சிற்பியின் உளி, கல்லுக்கும் ஒரு நரம்பு மண்டலத்தைக் கொடுத்து நவரசங்களையும் சிந்த வைத்திருக்கும் அழகை இச்சிற்பத்தில் காணமுடிகின்றது. இதே போன்ற சிற்பம் இலுப்பைக்குடி, இரணியூர் ஆகிய ஊர்க் கோயில்களிலும் காணப்படுகின்றன.

## 3.3.13.6 அனுமனை வணங்கும் இராமர் சிறபம்:-

இராமரை அனுமன் வணங்கும் சிற்பம் பல இடங்களில் காணக்கூடியது. ஆனால் வயிரவன்பட்டி வளரொளிநாதர் கருவறைச் சுவரின் வடக்குப் பகுதியில் இராமர் அனுமனை வணங்கும் சிற்பம் புதுமையாகக் காணப்படுகிறது. (நி.ப.எண். 30).

கம்பராமாயணத்தில் இந்திரசித்தன் பிரமாத்திரத்தை இலக்குவன்மேல் செலுத்தியதால் இலக்குவன் வீழ்ந்துவிடுகிறான். சஞ்சீவி மலை என்னும் மருந்து மலையை அனுமன் கொண்டு வந்ததால் இலக்குவன் மீண்டும் உயிர் பெற்று எழுகிறான். அப்போது.

"அழியுங்கால் தரும் உதவி, ஐயனே!
மொழியுங்கால், தரும் உயிரும் முற்றுமே?
பழியும் காத்து, அரும் பகையும் காத்து, எமை
வழியும் காத்தனை; நம் மறையும் காத்தனை"

"தாழ்வில் இங்கு இறைப்பொழுது தக்கதே
வாழி எம்பிமேல் அன்பு மாட்ட, வான்
ஏழும் வீயும்; என் பகர்வது? - எல்லை நான்
ஊழி காணும் நீ, உதவினாய் அரோ!"[25]

என்று அனுமனுக்கு இராமன் நன்றி பாராட்டுவதைக் கம்பர் கூறு கின்றார். அக்காட்சியையே சிற்பி இவ்வாறு சிலை வடித்துள்ளார்.

இராமர் சிற்பத்தின் உயரம் 77 செ.மீ. அனுமன் சிற்பத்தின் உயரம் 85 செ. மீ. அனுமனுக்கு நேர் எதிராக நின்று அஞ்சலி அத்த முத்திரையுடன் இராமர் நிற்பது சிறப்பாகக் குறிப்பிடத் தக்கதாகும்.

## 3.3.13.7. காலசம்கார மூர்த்தி சிற்பம்:-

இரஸியூர்க் கோயில் ஆட்கொண்டநாதர் சன்னிதியில் தெற் குப் பக்கம் காலசம்கார மூர்த்தியின் சிற்பம் உள்ளது. (நி. ப. எண். 31).

மார்க்கண்டேயர் உயிரை எடுத்துச் செல்ல எமன் பாசக் கயிற்றை வீசியபோது சிவபெருமான் காவலுக்கும் காலனாக வந்து தனது வலக்காலினால் எமனை வீழ்த்தும் செயலினைச் சிற்பம் சிறப்பாக விளக்கிக் காட்டுகிறது.

எருமைவாகனத்தில் அமர்ந்தவாறே எமன் வீசிய பாசக்கயிறு மார்க்கண்டேயரைச் சுற்றியும் அவர் தழுவியுள்ள சிவலிங்கத்தைச் சுற்றியும் விழுந்து கிடக்கின்றது பாசக்கயிறு மூன்று புரிகளினால் திரிக்கப்பட்டுள்ள நுட்பத்தையும் இச் சிற்பத்தில் காணமுடி கின்றது வலக்காலைத் தூக்கி எமனை உதைக்க வரும் சிவனு டைய முகத்தில் கோபம் கொப்பளிக்கிறது. எமன் முகத்தில் பயம் பொங்குகிறது. மார்க்கண்டேயர் முகத்தில் எந்தச் சலனமும் இல் லாமல் பக்தி மிகுந்த பரவச நிலை காணப்படுகிறது. இவ்வாறு மூன்று வித உணர்ச்சிகளை ஒரே தூண் சிற்பத்தில் இங்கு காண முடிகின்றது இச்சிற்பத்தின் உயரம் 1 13 மீட்டர்.

சம்காரமூர்த்திகளின் சிற்பங்களை நேமத்தில் வரிசையாகக் காணமுடிகின்றது. சிறிவிதித்துவம்சந். அந்தகாசூரசம்காரமூர்த்தி தக்கயாக சம்காரமூர்த்தி, சலந்தரசூரசம்காரமூர்த்தி, மன்மத சம்காரமூர்த்தி, காலசம்காரமூர்த்தி, ஆகிய சிற்பங்களை வரிசை யாகத்தூண்களில் இடம்பெறச் செய்துள்ளனர். சிற்பங்கள் அழகாகச் செதுக்கப்பட்டிருந்தும் சிலைவடிக்கத் தேர்ந்தெடுத்த கல் குறைபாடுடையதாக உள்ளதையும் குறிப்பிட்டாகவேண்டும்.

## 3.3.13.8. முப்புரம் எரித்தவர் சிற்பம்:

இரணியூர்க் கோயில் ஆட்கொண்ட நாதர் சன்னிதியில் வடக்குப்பக்கம் முப்புரம் எரித்தவர் சிற்பம் உள்ளது.

முப்புர அரக்கராகிய தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன் மாலி ஆகியோர் செருக்கை அழிப்பதற்காக அவர்களுடைய மூன்று கோட்டைகளையும் தனது சிரிப்பால் எரித்தார் சிவபெருமான். இக்காட்சியினை மிகச்செம்மையாக இச்சிற்பம்காட்டுகிறது.

முப்புரம் எரிக்க வந்த சிவபெருமான் தனது நான்கு திருக்கரங்களில் அங்குசம், பானம், மான், வில் ஆகியனவற்றைக் கொண்டுள்ளார்.

கரண்டமகுடம், வீரச்சங்கிலி, வீரக்கழல் அணிந்து வந்திருப்பினும் வில்லும் பானமும் கையில் இருப்பினும் அவர் நெற்றிக் கண்ணைத் திறந்து சிவந்து பார்க்காமல் சிரிக்கின்ற முகப்பொலிவினைச் சிற்பம் மிக நுட்பமாகக் காட்டுகின்றது.

திருமால் தேராகவும் பிரம்மா சாரதியாகவும் நான்கு வேதங்கள் நான்கு குதிரைகளாகவும் சூரியன் சந்திரன் இரண்டு சக்கரங்களாகவும் வந்ததாகப் புராணம் கூறுகிறது.

தேர் 1. 78 மீட்டர் உயரம் உள்ளது. நான்கு தலைகளுடன் பிரம்மா நான்கு குதிரைகளைச் செலுத்திக் கொண்டிருக்கிறார். மிக மென்மையும் உறுதியும் வாய்ந்த நான்கு கடிவாளக் கயிறுகள் மிகச் சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளன. சந்திரன் சக்கரமாக உள்ள பகுதியில் அச்சாணி இருக்கிறது சூரியன் சக்கரமாக உள்ள பகுதியில் அச்சாணி இல்லை.

இச் சிற்பத்தின் ஒவ்வொரு சென்டிமீட்டரிலும் கலை நுட்பத்தைக் காணமுடிகின்றது.

## 3.3.13.9. உமையொரு பாகன் சிற்பம்:-

இரணியூர்க் கோயில் ஆட்கொண்டநாதர் சன்னிதியில் வடக்குப் பக்கம் உமைபொரு பாகன் சிற்பம் உள்ளது.

பிருங்கிஎன்னும் முனிவர் இறைவனை மட்டுமே வணங்குவார் இறைவி, தன்னை இம்முனிவர் இகழ்வதாகக் கருதிப் பெருமானு

டன் ஓர் இருக்கையில் ஒன்றி இருந்தாள். முனிவரோ வண்டின் உருவம் எடுத்துக் கழுத்தின் இடைவெளி வழியே இறைவனை மட்டும் வணங்கி வலஞ் சுற்றிச் சென்றார். இதனால் அம்மை அருந்தவம் செய்து இறைவனின் ஒரு கூறாக இணைந்தாள். இஃது உமையொரு பாகமாகிய கதை என்பர்.[26]

அவ்வாறு உமையொரு பாகமாகிய காட்சியினைச் சிற்பம் நுட்பமாக விளக்குகிறது.

சிறீ சாரசுவதீய சித்திரகரும சாத்திரத்தில் கூறப்பட்டுள்ள அர்த்த நாரீச்சுவர இலட்சணத்துடன் இச்சிற்பம் அமைந்துள்ளது.[27]

உமையொரு பாகன் சிற்பத்தில் வலப்பாகம் சிவபெருமானுடையது; இடப்பாகம் உமை அம்மையினுடையது. சிவபெருமானின் வல உட்கையில் அபய அத்த முத்திரையினையும், புறக்கையில் சூழத்தினையும் காணமுடிகின்றது. உமையின் இட உட்கை கச அத்தம் எனும் எழிற்கையாகவும் புறக்கை நீலோற்பல மலரினை ஏந்தியதாகவும் காணப்படுகிறது. வலது காதில் குண்டலமும் இடது காதில் கர்ண பத்திரமும் (ஓலையும்) அமைக்கப் பட்டுள்ளன. இடையின் வலப்பக்கத்தில் புலித்தோலும் இடப்பக்கத்தில் பட்டாடையும் காணப்படுகின்றன.

இதுபோன்ற உமையொருபாகன் சிற்பம்இலுப்பைக்குடியிலும் பிள்ளையார் பட்டியிலும் காணப்படுகின்றன.

## 3.3.13.10. இரணிய சம்காரச் சிற்பங்கள்:

இரணியனை நரசிங்கமூர்த்தி கொன்ற இடம் இரணியூர். அந்தப் பாவத்தினைப் போக்கவும் தனது இயல்பான திருமால் வடிவத்தைப் பெறவும் நரசிங்க மூர்த்தி சிவனை வழிபட்டார். அவரை ஆட்கொண்டு அருளியதால் சிவனுக்கு ஆட்கொண்டநாதர் எனப் பெயர் ஏற்பட்டது என்பர்.

இரணியனுக்கும் நரசிங்கமூர்த்திக்கும் நடைபெற்ற போரினை இராசகோபுரத் தளச் சுவரின் வடக்குப் பகுதியில் காணமுடிகின்றது. 93 செ மீ. உயரச் சிற்பத்தில் இரணியனும் நரசிங்க மூர்த்தியும் காலொடு காலும் தோளொடு தோளும் பின்னப் போர் புரியும் காட்சியைக் காணமுடிகிறது.(நி.ப.எண். 82)

அப்போரின் இறுதியில் இரணியனை நரசிங்கமூர்த்தி தனது தொடையில் படுக்கவைத்து அவன் வயிற்றைக் கிழித்துக் குடலை உருவி மாலையாகச் சூடிக் கொண்டார். இதனைக் கம்பர்-

ஆயவன் தன்னை, மாயன், அந்தியின், அவன் பொன்கோயில்
வாயிலில், மணிக் கவான்மேல், வயிர வாள் உகிரின் வாயின்
மீஎழு குருதி பொங்க, வெயில்விரி வயிர மார்பு
தீஎழப் பிளந்து நீக்கி, தேவர்கள் இடுக்கண் தீர்த்தான்

எனச் சொல்லில் வடித்துக் காட்டியிருக்கின்றார்.[28] இதே காட்சியைக்கல்லில் வடித்துக் காட்டியிருக்கும் அழகினை இராசகோபுரத் தளச் சுவரின் தெற்குப் பகுதியில் உள்ள சிற்பத்தின் மூலம் காண முடிகின்றது.

## 3.3.14. அரிய சிற்பங்கள்:-

### 3.3.14 1. எட்டுத் திக்குக் கடவுள்கள்:-

எல்லாக் கோயில்களிலும், பரவலாகக் காணுவதற்கு அரிதான எட்டுத் திக்குகளுக்குரிய கடவுள்களான இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன். ஈசானன் ஆகியோருடைய சிற்பங்கள் இரணியூர் இராசகோபுரத் தளத்தின் சுற்றுச் சுவரில் காணப்படுகின்றன.

இந்த எட்டுத் திக்குக் கடவுளரின் திருமேனி அமைப்பு வாசுத்து சாத்திரத்தில் கூறப்பட்டுள்ளது.[29] அச்சிற்ப அமைதி இங்கு பட்டியலிடப்பட்டுள்ளது. இந்த இலக்கணம் அனைத்தும் பொருந்தியிருப்பது இங்குள்ள சிற்பங்களின் சிறப்பாகும்.

| திக்குப்பாலகர் | வாகனம் | கைகளில் உள்ளவை | திசை |
|---|---|---|---|
| 1. இந்திரன் | வெள்ளையானை | வரதம், வச்சிரம், அங்குசம், குண்டிகை. | கிழக்கு |
| 2. அக்கினி | ஆடு | வரம், சக்தி, துளசி, கெண்டி (கமண்டலம்) | தென்கிழக்கு |
| 3. எமன் | எருமை | பாசம், புத்தகம், குக்குடம் தண்டம். | தெற்கு |
| 4. நிருதி | பூதம் | வாள், விசிறி, கேடயம் அரிமத்தகம் | தென்மேற்கு |
| 5. வருணன் | யாளி | வரதம், பாசம், கமலம், கமண்டலம் | மேற்கு |
| 6. வாயு | மான் | வரதம், துசம், படக அத்தம், கமண்டலம் | வடமேற்கு |
| 7. குபேரன் | குதிரை | கடகமுத்திரை, நிதி, வாள், கமண்டலம் | வடக்கு |
| 8. ஈசானன் | காளை | கடகமுத்திரை, திரிசூலம், நாகபாசம், வாள் | வடகிழக்கு |

## 3.3.14.2. பிள்ளையார் சிற்பம்:-

இலுப்பைக்குடித் தான்தோன்றீசுவரர் அருத்த மண்டபத்தின் இடப்பக்கமுள்ள முதல் தூணின் தெற்குப் பகுதியில் 3 செ. மீ. சதிரத்திற்குள் மிக நுட்பமாக ஒரு விநாயகர் உருவம் காணப்படு-கிறது. உருவம் மிகச் சிறியது எனினும் மிகத் தெளிவாக வேழ முகம், மூன்று கண்கள், ஐந்து கரங்கள் ஆகிய உறுப்பினையும் அலங்கார அணிகளையும் காணமுடிகிறது.

## 3.3.14.3. திருநிலைச் சிற்பங்கள்:-

மாற்றூர் இராச கோபுர வாயிலில் உள்ள கதவை ஒட்டிய கல்லாலான திருநிலைச் சிற்பங்கள் வியந்து பாராட்டும் வண்ணம் உள்ளன

முதல் திருநிலையின் இருபுறமும் இரண்டு பருவ எழில் மிக்க கொடிப் பெண்களின் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. அச்சிற்பத்திற்கு மேலே உள்ள பகுதியில் வட்ட வடிவில் அமைந்துள்ள கொடிகளுக்கு இடையே பல்வேறு முனிவர்களின் வரிசையில் காந்தியடிகள், இராமகிருட்டிணர், விவேகானந்தர், இரமண மகரிடி முதலியோரின் சிற்பங்களும் இடம் பெற்றுள்ளது புதுமை-யாகவும் பொருத்தமாகவும் அமைந்துள்ளன.

கொங்கண மகாமுனி மாற்றூரில் அதிக ஒளிமிக்க தங்கத்தில் மாற்றைப் பார்க்க இரசவாதம் செய்ததை நினைவு கூர்வதாக இம் முனிவர்களின் தவக்கோலச் சிற்பங்கள் அமைந்துள்ளன எனலாம். உள்நோக்கிய பிராணாயாமத்தில் மூச்சை உள்ளிழுத்துத் தவமியற்றும் முனிவர்களின் விலா எலும்புகள்கூட நுட்பமாகச் சித்தரிக்கப்பெற்றுள்ளன. இவ்வரிய சிற்பங்களைச் செதுக்கும்போது சிற்பியின் உயிர் உருகிய சத்தம். இன்றும் அச்சிற்பங்களைப் பார்க்கும் போது நம் கண்களின் காதுகளுக்குக் கேட்கிறது.

இரண்டாவது திருநிலையின் இருபுறமும் இரண்டு கொடிப் பெண்களின் சிற்பம் வடிக்கப்பெற்றுள்ளது. காத்தருவர்கள் நாதசுரம், மேளம், புல்லாங்குழல், கஞ்சிரா, வயலின், தாளம் (ஜால்ரா), வீணை ஆகிய இசைக் கருவிகளை இசைக்க, ஒருவர் திருத்தம் பாடுவதாகவும் ஒரு மங்கை நடனமாடுவதாகவும் சிற்பங்கள் வரிசையாக வடிவமைக்கப்பட்டுள்ளன. (நி.ப.எண்.33)

கோயில்கள் கலை வளர்க்கும் கூடங்கள் என்பதை இச் சிற்பங்கள் விளக்குகின்றன. இக் கோயிலில் மேற்கண்ட கலைகளுக்கும் கலைஞர்களுக்கும் சிறப்பளிக்கப்பட்டதற்கு இச் சிற்பங்கள் சான்று கூறுகின்றன.

## 3.3.14.4. கலியாணசுந்தரர் சிற்பம்:-

இலுப்பைக்குடிக் கோயிலின் மகா மண்டபத்தின் தெற்குப் பகுதியில் கலியாண சுந்தரரின் சிற்பம் உள்ளது.

கலியாணசுந்தரர் சிற்பம் வராக புராணத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டது என வாசுத்து சாத்திரம் கூறுகிறது.[30]

இங்கு காணப்படும் கலியாணசுந்தரர் சிற்பம் சகளாதிகாரம் கூறும் சிற்ப இலக்கணத்தோடு 75% ஒப்புமையாக அமைந்துள்ளது.[31] அவ்வாறு ஒப்புமையுடைய பகுதிகள் கீழ்வருமாறு:-

ஈசுவரனுடைய வலக்கை தேவியினுடைய கையோடு சேர்ந்திருக்கிறது. ஈசனின் இடக்கை வரத முத்திரையோடு இருக்கிறது. மற்ற இரு பின்புறக் கைகளிலும் மானும் மழுவும் ஏந்தியிருக்கிறார். முகத்தில் சிருங்கார பாவம் இருக்கிறது.

சர்வாங்க சுந்தரராய், சடாமகுடத்துடன் (சடைமுடி) எல்லா ஆபரணங்களோடும் விளங்குபவராய்ப் பவழ மேனியுடன் மங்களமே உருவெடுத்தாற் போன்ற தோற்றத்துடன் விளங்குகிறார்.

பார்வதி இடக்கரத்தில் மலரேந்தியுள்ளாள். வலக்கரம் ஈசுவரனால் பற்றப்பட்டுள்ளது. எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு நாணத்துடன் விளங்குகிறாள்.

பக்கத்தில் திருமால் திரிபங்கநிலையில் தங்கக்கலசத்துடனும் சங்கு சக்கரம் ஏந்திய கைகளோடும், உதகதாரா பூர்வமாகப் பார்வதி தேவியைத் தாரைவார்த்துக் கொடுக்கும் நிலையில் உள்ளார்.

பார்வதியோடு சீதேவியும் பூதேவியும் இச்சிலையில் வடிக்கப் பெறவில்லை. ஈசுவரனுக்கு முன்னால் பிரும்மா அக்கினியில் ஓமம் செய்து வைக்கும் காட்சி இச் சிற்பத்தில் இடம்பெறவில்லை.

உலோகபாலர்கள், தேவர்கள், சித்தர்கள், யட்சர்கள், பூதகணங்கள், கணநாதர்கள், கின்னரர்கள், நாரதர், சப்தமாதர், பெண் கணங்கள் சூழ்ந்திருப்பதாகவும் இச்சிலையை அமைக்கவில்லை.

மிகவும் இன்றியமையாத மூவரின் உருவங்கள் மட்டுமே சிலை வடிக்கப் பெற்றுள்ளன.

## 3. 3. 14. 5. காலத்திற்கேற்ற சிற்பங்கள்:-

சிற்ப நூல்களில் காணப்படாத சில சிற்பங்களும் நகரத்தார் கோயில்களில் காணப்படுகின்றன. அவற்றுள் மிக இன்றியமையாது குறிப்பிடத் தக்கவை பாரதமாதா, தேசக்கொடி, இராட்டை, காந்தி சிற்பங்களாகும்.

இரணியூர்க்கோயில், சுதந்திரப்போராட்டகாலமான 1944இல் கற்றளியாகக் கட்டப் பெற்றது. எனவே சுதந்திர தாகமுடைய நகரத்தார்கள் பள்ளி அறையின் வெளியே உள்ள தூண்களின் இணைப்புக்கல்லில் பாரத மாதா, தேசக்கொடி, இராட்டை, காந்தி சிற்பங்களை வடித்துள்ளனர். அடிமை இருளில் தூங்கிக் கொண்டிருக்கும் நாடு, விடுதலை பெற்று விழிப்புற வேண்டும் என்பதால் பள்ளி அறையின் வெளியே இச் சிற்பங்களை அமைத்தனரோ என்று எண்ணத் தோன்றுகிறது.

இளையாத்தங்குடி ஆதிகேசவப் பெருமாள் கோயிலின் வடக்குப்பகுதி உத்திரத்திலும் காந்தியடிகளின் சிற்பம் காணப் படுகிறது.

## 3.4. உலோகச் சிற்பங்கள்:-

உலோகச் சிற்பங்கள் என்பது செம்பு, வெள்ளி, தங்கம் ஆகியவற்றால் செய்யப்பட்ட திருவுருவங்களைக் குறிக்கும். இவற்றைப் பொன் செய் பாவை எனக் குறிப்பார் டாக்டர் இரா. நாகசாமி. [32]

பொன் என்பது பண்டைக் காலத்தில் அனைத்து உலோகங்களுக்கும் பயன்பட்ட சொல். இன்று கோயில்களில் உள்ளதெய்வ உருவச் சிலைகளைப் பஞ்ச உலோகத்தில் (ஐம்பொன்னில்) செய்தது என்பர். ஐம்பொன் என்பது செம்பு, தரா (வெண்கலம்), வெள்ளி, தங்கம், பித்தளை, ஆகியவை ஐந்தும் சேர்ந்தது என்று

கூறுவர். இவை ஐந்து தத்துவங்களைக் குறிக்கின்றன ஐந்து பூதங்களான நீர், நிலம், தீ, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதத் தத்துவங்களைக் குறிக்கும் இந்த உருவங்களெல்லாம் பஞ்ச பூதங் களையும் உள்ளடக்கிய தெய்வீகத் திருவுருவங்கள் என்று உரைப்பர் [33]

பெரும்பாலும் தெய்வ உருவங்கள் கனமாகவே செய்யப் பட்டன. ஒரு சில இடங்களில் வாகனங்களும் தெய்வ உருவங் களும் கனப் பொள்ளலாகச் (உள்ளே வெற்றிடம் விட்டுச்) செய் யப்பட்டுள்ளன

## 3.4.1. நகரக் கோயில்களில் காணப்படும் உலோகச் சிற்பங்கள்:

ஒன்பது நகரக் கோயில்களிலும் பிரதோட விநாயகர், சுப்பிர மணியர், வள்ளி, தெய்வானை, நடராசர், சிவகாமி. மாணிக்க வாசகர், அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர், சோமாசுக்கந்தர், சந்திரசேகரர், கௌரி, துர்க்கை, அத்திரதேவர், சண்டிகேசுவரர் ஆகிய ஐம்பொன் சிலைகளைக் காணமுடிகிறது.

இரணியூரில் மட்டும் சிறப்பாகப் பிட்சாடனர், பசுபதிலிங்கம், பத்மலிங்கம், முத்துக்கந்தர், வீரபாகு, நர்த்வனகணபதி, தட்சிணா மூர்த்தி அண்ணாமலையார், பிரம்மா ஆகிய ஐம்பொன் சிலை களும் காணப்படுகின்றன

இரணியூரில் உள்ள ஆட்கொண்டநாதரின் கருவறை பள பளப்பேறி கருங்கற்களால் ஆனது. எனவே அதில் கற்சிற்பங் களை வைத்தால் எண்ணெய் அபிடேகத்தின் போது சுவர் அழுக் கடைந்துவிடுமே என்பதற்காகவே நர்த்தனகணபதி, தட்சிணா மூர்த்தி, அண்ணாமலையார், துர்க்கை, பிரம்மா ஆகிய தேவ கோட்டத்தேவதைகளுக்கும் செப்புச்சிலை செய்தார்கள். எனினும் பிட்சாடனர், பசுபதிலிங்கம், பத்மலிங்கம், முத்துக்கந்தர், வீரபாகு ஆகிய சிலைகள் வேறு எங்கும் இல்லாதவை; புதுமையானவை.

### 3.4.1.1. நடராசர் சிற்பம்:-

தமிழகம் தோற்றுவித்த சிறந்த கலைப் படைப்புகளில், ஆட வல்ல பெருமானான நடராச மூர்த்தியாக உள்ள உருவே உல கோர் அனைவரின் கருத்தையும் கவர்ந்திருக்கிறது.[34].

தேவசேனனான நடராச மூர்த்தியின் வலக் காலானது (பூமியில்) பதிந்து வணங்கியிருப்பதாகும். இடக் காலானது தூக்கப்பட்டிருப்பதாகும். பரபரப்பைக் காட்டும் இடக் கையானது அசைந்து கொண்டிருப்பதாகும். (அசையும் நிலையை உணர்த்துவதாகும்).

வலக் கையானது அபய முத்திரையைத் தரித்திருப்பதாகும். வலப் பக்கம் வெளிக்கையானது உடுக்கையைத் தரித்திருப்பதாகும். இடப் பக்கம் வெளிக்கையானது அக்கினியைத் தரித்திருப்பதாகும். நடராச மூர்த்தியின் வடிவம் இவ்விதமாகக் கூறப்பட்டிருக்கிறது. இவ்வாறு சீறி சாரசுவதீய சித்திர கரும சாத்திரம் நடராசர் உருவம் பற்றிக் குறிப்பிடுகிறது.[35] சகளாதிகாரம் கீழ்க் கண்டவாறு நடராசர் இலக்கணங்களைக் கூறுகிறது:-

தலையின் சடாபாரம் இருபுறங்களிலும் விரிந்து நீண்டிருக்க வேண்டும். புன்சிரிப்பான முகத்தோடும் அங்கம் முழுவதும் விபூதியினால் அலங்கரிக்கப்பட்டும் சில இடங்களில் விபூதி பட்டும் சில இடங்களில் படாததுமாய் அழகாக அமைந்திருக்க வேண்டும். சர்ப்பமும் கங்கையும் செங்கழுநீர்ப் பூவும், ஊமத்தைப் பூவும் தலையில் அலங்காரமாக அமைந்திருக்க வேண்டும். கபாலமும் இரத்தினங்களும் இடது பக்கத்தில் இளம் பிறையும் அணிந்து சிரித்த முகத்தோடு இருக்க வேண்டும். நெற்றிக்கு மேல் இரத்தினத்தால் பூரிமம் என்னும் கொடி பூவேலைப்பாட்டினால் அலங்கரிக்கப்பட வேண்டும். மார்புசிந்தூரத்தினால் அலங்காரம் செய்யப்பட்டும் உருத்திராட்ச மாலையும் தரித்திருக்க வேண்டும். புலித்தோல் ஆடையும், முன்னே தொங்குகிற அக்ரபந்தமும் (அரைக் கச்சையின் துணிகளும்) காலில் கல்லிழைத்த பாதசரமும், கையில் கங்கணமும், அரை ஞாணும், பத்ர வேலைப்பாடுகளோடு கூடிய தோள்வளையும், அணிந்து சர்ப்ப கங்கணத்தோடு கூடிய வலமுன் கையோடும், மலர்ந்த முகத்தோடும், துடிக்கின்ற கண்களோடும், இரத்தின மோதிரங்களும், இரத்தின ஆரங்களும், கழுத்தை ஒட்டின உபக்ரீவம் என்னும் அட்டிகை போன்ற ஆபரணங்களும் அணிந்திருக்க வேண்டும் அபசுமாரன் என்னும் முயலகன் மீது வலது காலை ஊன்றியிருக்க வேண்டும். அந்த அபசுராமன் கறுப்பு வருணத்தோடும், சிவந்த கேசத்தோடும், பயந்த முகத்தோற்றத்தோடும், இடக் கையில் சர்ப்பமும், வலக் கையில் (பாம்புப் படம் போன்ற) முத்திரையும் உள்ளதாகவும் அமைக்கப்படவேண்டும்.

மேற்கண்ட சிற்ப நூல் இலக்கணங்கள் கூறியுள்ள நடராசர் சிற்ப அமைப்புக்கள் அத்தனையும் பொருந்தியுள்ளதாக ஒன்பது நகரக் கோயில்களிலும் நடராசர் சிற்பங்கள் காணப்படுகின்றன.

பிள்ளையார்பட்டி நடராசரின் முன்புறத் தோற்றமும் பின் புறத் தோற்றமும் மிக அழகாக அமைந்துள்ளன. இந் நடராசரின் உடுக்கையில் தட்டினால் உண்மையான உடுக்கை ஒலியே உண்டாவது வியப்புக்குரியது. (நி.ப.எ. 33அ).

நடராசர் மூன்று கண்கள், நான்கு கைகளுடன் காணப்படுகி றார் வலமேற்கரத்தில் துடி எனும் டமருகமும் இடமேற் கரத்தில் தீச்சுடரும் தாங்கியுள்ளார். வலக்கீழ்க் கரம்அபயமுத்திரையோடும் இடக்கீழ்க்கரம் எழிற்கையாகக் கய அத்த முத்திரையோடும் அமைந்துள்ளன.

தலைமுடியில் கொக்கின் இறகுகள் வரிசையாக விசிறிபோல அமைக்கப்பட்டுள்ளன. எருக்கம்பூ, ஊமத்தைப்பூ, கொன்றமலர் ஆகிய பூக்களும் தலையை அலங்கரித்துள்ளன. தலையின் இடப் பக்கத்தில் பிறைச் சந்திரன் உள்ளது. மண்டை ஓடு ஒன்றும் உச் சந்தலையில் காணப்படுகிறது.

நடுஉடலில் கட்டிய உதரபந்தம் (உடற்கட்டு) ஆட்டத்தின் வேகத்தால் அவிழ்ந்து பறந்து ஓடித் திருவாசியைத் தொட்டுக் கொண்டிருக்கிறது.

வலக்கீழ்க்கையில் பாம்பை வளைவாகக் கொண்டுள்ளார். இதைப் புசங்க வலயம் எனச் சிற்ப நூல்கூறும். பாம்பு, முன் நோக் கிப் படமெடுத்துச் சீறி ஆடும் நிலையில் அமைந்துள்ளது.

பொன்னார் மேனியன், இடுப்பில் புலித்தோலைத் தொடையை ஒட்டியவாறு அணிந்துள்ளார். சுழன்று ஆடும் வேகத்தை விரிந்து பறந்து கொண்டிருக்கும் செஞ்சடைகள் காட்டுகின்றன. வலப் பக்க விரிசடையில் கங்கை, அஞ்சலி அந்த முத்திரையோடு காணப்படுகின்றார்.

வலக்கால் முயலகன் மீது பதிந்திருக்கிறது. முயலகன் குப்புறப் படுத்த நிலையில் கையில் பாம்பைப் பிடித்து விளையாடும் பாவனையில் உள்ளான் முயலகனின் தலை படிமத்தின் வலப் புறத்தில் திமிறி, மேலே நோக்குவதாக அமைந்துள்ளது.

இடக்கால் தூக்கிய பாதமாக உள்ளது பீடம், பத்ம பீடமாக அமைந்துள்ளது.

திருவாசி எனப்படும் பிரபாவளி வட்டவடிவில் உள்ளது. திருவாசித்தண்டின் அடிவாரத்தில் மகரங்களை அமைத்து அதன் வாயிலிருந்து திருவாசி தொடங்குவதாக அமைந்துள்ளது. தண்டின் வெளிப் புறத்தில் 21 தீச்சுடர்கள் வரிசையாக அழகுறக் காணப்படுகிறன. திருவாசித் தண்டை இலை. கொடிக்கருக்குகள் அலங்கரிக்கின்றன.

பிள்ளையார்பட்டியில் உள்ள நடராசர்சிற்பம் 12ஆம்நூற்றாண்டைச் சார்ந்தது பிற எட்டுக் கோயில்களில் உள்ள நடராசர் சிற்பங்கள் 18ஆம்நூற்றாண்டைச் சார்ந்தவையாகும். (நி.ப.எண்.34)

## 3. 4. 1. 2 சிவகாமி அம்மன் சிற்பம்:-

ஒன்பது நகரக் கோயில்களில் உள்ள அம்மன் சிற்பங்களில் காலத்தால் பழமையானவை பிள்ளையார்பட்டியில் உள்ளது இது 13 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது இச் சிற்பம் மிக அழகாக வடிவமைக்கப்பட்டுள்ளது.

வலக்கையில் நீலோற்பலம் பிடித்து இடக் கையை எழிற்கையாக கசஅத்த அமைதியில் தொங்கவிட்டுக் கரண்ட மகுடம் அணிந்து பங்கத்தோடு நின்ற கோலத்தில் அம்மன் காணப்படுகின்றாள்.

பத்ர குண்டலக் காதணியையும் கண்டிகை, சரப்பளி, அரும்புச்சரம், சவடி ஆகிய கழுத்தணிகளையும், சன்னவீரம், பூணூல் ஆகிய மார்பணிகளையும், தோள்வளை, கடகவளை, சூடகம், மோதிரம் ஆகிய கையணிகளையும், முடிச்சு அணி பொருந்திய மேகலை, அரைப்பட்டிகை, தாரகைச்சும்மை, குறங்கு செறி ஆகிய இடையனிகளையும், கொசுவம் வைத்த இடைக்கட்டாகச் சேலையையும், காற்சதங்கையையும், கால் விரல்களில் மிஞ்சியையும், அம்மனின் திருஅழகிற்கு மேலும் அழகூட்டும் வகையில் சிற்பி வடித்துள்ளார்.

## 3.4.1.3. சந்திரசேகரர் சிற்பம்:-

ஒன்பது நகரக் கோயில்களுள் மிகப் பழமையான சந்திரசேகரர் சிற்பம் பிள்ளையார் பட்டியிலும், நேமத்திலும் உள்ளன.

பிள்ளையார்பட்டியில் உள்ள சிற்பம் 10 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. நேமத்தில் உள்ள சிற்பம் 11ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. (நி. ப. எண். 35, 36).

சந்திரசேகரரின் உருவ அமைப்புப் பற்றி சகளாதிகாரம்[36] சிறி சாரசுவதீய சித்திரகரும சாத்திரம்,[37] வாசுத்து சாத்திரம்,[38] ஆகிய நூல்கள் குறிப்பிடுகின்றன. அவற்றில் கூறப்பட்டுள்ள சிற்ப அமைதி அனைத்தும் ஒன்பது நகரக் கோயில்களில் உள்ள சந்திர சேகரர் சிற்பத்தில் காணப்படுகின்றன.

சந்திரசேகர மூர்த்தி இரண்டு பாதங்களையும் ஒழுங்காகச் சேர்த்துவைத்து பத்ம பீடத்தில் நிமிர்ந்து நிற்கும் நிலையில் (சம பாத தானக நிலையில்) அமைந்துள்ளார் (நி. ப. எண். 37, 38).

வலக்கையில் அபய முத்திரையும் இடக்கையில் வரத முத்திரையும் தாங்கி நிற்கிறார். வெளிப்புறக் கை இரண்டிலும் வலக் கையில் மழுவும் இடக்கையில் மானும் இருக்கின்றன.

மூன்று கண்களோடும், எல்லாவிதமான அலங்காரத்தோடும் புன்னகை தவழும் முகத்தோடும் சந்திரசேகரர் சிற்பம் அமைந்துள்ளது.

நேமத்தில் உள்ள சந்திரசேகரரின் சிற்பத்தில் இராசராச சோழன் காலத்திய சிற்ப அமைதி காணப்படுகிறது. அழகான வேலைப்பாடு மிக்க கிரீடம், நெற்றிப்பட்டம், எடுப்பான மூக்கு, குவிந்த சிறுவாய், சிறிதே வெட்டிவிடப்பட்ட நீண்ட கண்கள், செழுமையான கன்னம் ஆகியன இராசராச சோழமன்னன் காலத்திய முத்திரைகளாக அமைந்துள்ளன. இராசராச சோழ மன்னன் நாட்டுவளம் இச்சிற்பத்திலும் தெரிகிறது.

வலது காதில் மகர குண்டலமும் இடது காதில் பத்திர குண்டலமும் காணப்படுகின்றன. இடையில் முடியப்பட்ட ஆடை, தோளில் உள்ள தோள் மாலை, மார்பில் உள்ள முப்புரிநூல், வயிற்றின் மீதுள்ள உதரபந்தம் ஆகியன கண்களை உறுத்தும் வண்ணம் பிற்காலச் சிற்ப அணிகளைப் போலத் தூக்கலாக அமையாமல் படிமானமாக அமைந்துள்ளன.

முற்காலச் சிற்பங்கள் மெழுகில் செய்யப்பெற்று உலாவாகக் கொண்டு வரப்பட்டன. அவற்றில் குற்றம் குறை காண்பவர்கள் சிற்பியிடம் கூறலாம். அத்திருத்தங்களும் செய்யப்பெற்ற பிறகு

அம் மெழுகின் மீது பசைப்பிடிப்பு மிக்க செம்மண்ணைக் குழைத்-துப் பூசி அதன் உச்சியில் ஒரு சிறிய துளையினைச் செய்து அதன் வழியாக உருக்கிய சூடான ஐம்பொன்னை ஊற்றுவார்கள். செம்-மண் கூட்டைத் தண்ணீரில் அழுத்திக் கழுவி எடுத்ததும் அழகு மிக்க சிற்பம் வெளிப்படும். இவ்வாறு உளிபடாத சிற்பங்கள் இராசராசன் காலத்துச் சிற்பங்கள். எனவே அணிகலன்கள் புடைப்பாகத் தெரியாது. தெய்வீக அழகு மட்டுமே உயர்வாகத் தெரியும்.

பிற்காலச் சிற்பங்கள் ஒரே வார்ப்பில் வடிவமைக்கப்பட்டுப் பின்னர் உளியினால் செதுக்கப்பட்டதால் அணிகலன்கள் உடற் பகுதியைக் காட்டிலும் புடைப்புடையதாக அமைந்துள்ளன.

பிள்ளையார்பட்டி, நேமம் ஆகிய ஊர்களில் உள்ள சந்திர-சேகரர் சிற்பங்கள் உளிபடாத சிற்பங்கள். நேமத்தில் உள்ள சந்திரசேகரரின் பொலிவான புன்னகை பூத்த முகம் கங்கை கொண்ட சோழபுரத்தில் உள்ள முருகனின் முகம் போல் அழகு ததும்பும் முகமாக உள்ளது குறிப்பிடத்தக்கது.

இச் சந்திரசேகரரின் கன்னச் செழிப்பில் இராசராசனின் நாட்டுவளம் பளபளக்கிறது. அச் செழிப்பு கி. பி. 11ஆம் நூற்றாண்டுச் சிற்பம் தான் இது என முன்மொழிகிறது.

## 3 4.1.4. கௌரி சிற்பம் -

சந்தரசேகரருக்குப் பக்கத்தில் எப்போதும் கௌரியின் சிற்பம் காணப்படுகிறது. கௌரியினைத் 'தனி அம்மன்' என்றும் வழங்கு கின்றனர். ஒன்பது நகரக் கோயில்களுள் பிள்ளையார்பட்டியில் உள்ள கௌரி சிற்பமே காலத்தால் முந்தியது. இதன் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டாகும். (நி.ப.எண். 39, 40)

கௌரி தேவியின் உருவ அமைப்புப் பற்றி மானசாரம் கூறு கின்றது[38]அ. நகரத்தார் கோயில்களில் காணப்படும் கௌரி சிற் பங்கள் இம் மானசார விதிகளின்படியே அமைந்துள்ளன. (நி. ப. எண். 41, 42, 43 44, 45,).

கௌரி தேவி நீண்ட இரு கரங்களையும் அகன்ற கண்தளை யும், மெல்லிடையும், உயர்ந்த மார்புகளையும், உயர்ந்து பரந்த இடுப்பின் கீழ்ப்புறத்தையும் கொண்டிருக்கிறாள். வலக்கரத்தில்

நீலோற்பல மலரினை ஏந்தி இடக்கரத்தினை உடோல அத்த நிலையில் எழிற்கையாக வைத்திருக்கின்றாள்.

புன்னகை மிகுந்த முகமும், அழகிய கழுத்தும், உயர்ந்த கூர் மையான மூக்கும், தேவியின் அழகை மிகுவிக்கின்றன.

இரு காதுகளிலும் மகர குண்டலங்கள் இருக்கின்றன. கழுத்தில் ஆரம் அட்டிகை பாக மாலை ஆகியன காணப்படுகின்றன. பாகூ கடகம், இடை சூத்திரம், பூரிமங்களுடன் கூடிய தோள் வளை, பட்டாடை அமைதியில்இடைக்கட்டுகளின்தொங்குநிலை, பாதச்சிலம்புகள் ஆகியன மிக அழகாக உள்ளன.

## 3.4.1.5. சோமாசுக் கந்தர் சிற்பம்:

சோமனுடன் கந்தனும் உமாதேவியும் அமர்ந்துள்ள சிற்பத்தினையே சோமாசுக்கந்தர் சிற்பம் என்பர். ஒன்பதுநகரக்கோயில் களுள் சூரைக்குடிக் கோயிலில் உள்ள சோமசுக் கந்தர் சிற்பமே பழமை வாய்ந்தது. இதன் காலம் கி.பி. 13 ஆம் நூற்றாண்டு. (நி. ப எண்.46).

இச்சிற்பம் பற்றிச் சகளாதிகாரமும் [39] சாரசுவதீய சிற்ப கரும சாத்திரமும் [40] கூறியுள்ள இலக்கணங்கள் ஒன்பது நகரக்கோயில் களில் முறையாகக் கையாளப் பெற்றுள்ளன. (நி. ப. எண்.37)

சோமன் நேராக நிமிர்ந்து உயர்ந்த ஆசனத்தில் சுகாசன நிலையில் இடக் காலைப் பீடத்தில் படுக்கையாக வைத்து, வலக் காலைத் தொங்கவிட்டபடி அமர்ந்துள்ளார்.

நான்கு திருக்கரங்களில் பின்புற வலக்கையில் மழுவும் இடக் கையில் மானும் முன்புற வலக்கையில் அபய முத்திரையையும் இடக் கையில் கடக முத்திரையையும் கொண்டுள்ளார்.

இடுப்பில் புலித்தோலும் தலையில் சடாமகுடமும் அணிந்-துள்ளார். சன்ன வீரமும் பூணூலும் மார்பில் காணப்படுகின்றன

சோமனின் இடது பாகத்தில் அதே ஆசனத்தில் உமாதேவி இடக்காலைத் தொங்கவிட்டுக் கொண்டும் வலக் காலைப் படுக்-கையாக வைத்துக் கொண்டும் அமர்ந்துள்ளாள்.

தேவியின் திருஉரு சோமனுக்குச் சற்றுப் பின்னால் அமர்ந்து சோமனைப் பார்ப்பது போலத் திரும்பியிருக்கிறது. தேவியின் இடக்கை வரத முத்திரையையும் வலக்கை மலரினையும் தாங்கி-யுள்ளன. தலையில் கேசபந்தமும், காதில் மகர குண்டலமும் மற்ற எல்லா அணிகளுடனும் தேவி அலங்கரிக்கப்பட்டுள்ளாள்,

சோமனுக்கும் தேவிக்கும் நடுவில் கந்தன், உருவம் நின்ற நிலையில் காணப்படுகிறது. இக்கந்தனின் இடக்கையில் முகுள முத்திரையுடன் மலரும் வலக்கையில் வரத முத்திரையும் உள்ளன. சன்னவீரமும் அரைஞாணும் அணியப்பெற்றுள்ளன. இரு கால்களும் சிறிது வளைந்து, நடப்பது போன்ற பாவனையில் அமைந்துள்ளன.

சூரைக்குடியில் உள்ள சோமாசுக்கந்தர் சிற்பம் மிக அழகாக அமைந்துள்ளது.

## 3.4.1.6. வயிரவர் சிற்பம்:-

வயிரவர், பத்ம பீடத்தில் சமபாத தானக நிலையில் நின்ற திருக்கோலத்தில் சிலை வடிக்கப்பட்டுள்ளார்.

அக்கினி கேசத் தலைக் கோலமும் ஆபரணங்கள் நிறைந்த மார்பும் சிலைக்கு அழகூட்டுகின்றன நான்கு திருக்கரங்களில் உடுக்கை பாம்பு, சூலம், கபாலம் ஆகியனவற்றை ஏந்தியுள்ளார். வயிரவருக்குப் பின்புறம் அவரது வாகனமான நாய் நின்ற நிலையில் காணப்படுகிறது. வயிரவன்பட்டி, இரணியூரில் உள்ள வயிரவர் சிற்பங்கள் 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தன. இவ்விரண்டும் மிக அழகான சிற்பங்களாக அமைந்துள்ளன. (நி.ப.எண். 48).

வயிரவன்பட்டியில் உள்ள வயிரவர் சிலை 70 செ.மீ. உயரம் உள்ளது. பத்ம பீடம் 20 செ.மீ. உயரம் உள்ளது. வயிரவரைச் சுற்றிலும் 1.07 மீட்டர் உயரம் உள்ள திருவாசி அமைந்துள்ளது. அதில் 32 தீச்சுடர்கள் காணப்படுகின்றன.

இரணியூரில் உள்ள வயிரவர் சிலை 58 செ. மீ. உயரம் உள்ளது. கீழச்சிவற்பட்டியில் உள்ள வயிரவர் சிலை 70 செ. மீ. உயரம் உள்ளது.

## 3.4.1.7. முருகன்-வள்ளி-தெய்வானை சிற்பங்கள்:-

முருகன், வள்ளி, தெய்வானை ஆகியோருடைய சிலைகள் நின்ற நிலையில் காணப்படுகின்றன. முருகன் நடுவிலும் வள்ளி வலப்பக்கத்திலும் தெய்வானை இடப் பக்கத்திலும் அமைந் துள்ளனர்.

முருகன் கிரீட மகுடம் அணிந்துள்ளார். அவரது நான்கு திருக்கரங்களில் வச்சிரம், சூலம், அபய முத்திரை, வரத முத்திரை ஆகியன உள்ளன.

முருகனின் வலப்புறம் நிற்கும் வள்ளியின் இரண்டு கைகளில் இடக்கை மலரையும் வலக்கை கச அத்த முத்திரையினையும் பெற்றுள்ளது.

முருகனின் இடப்புறம் நிற்கும் தெய்வானையின் இரண்டு கைகளில் வலக்கை மலரையும் இடக்கை உலோல அத்தமுத்திரை யினையும் பெற்றுள்ளது. இரு தேவியரும் சமபங்க நிலையில் கிரீட மகுடத்துடனும் பட்டாடை அமைதியுடனும் அழகாக நிற் கின்றனர். ஒன்பது நகரக் கோயில்களிலும் உள்ள இச் சிற்பங்கள் 18ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும்.

வயிரவன்பட்டியில் உள்ள முருகன் சிற்பம் அழகுமிக்கது. அது 67 செ. மீ. உயரம் உள்ளது. வள்ளி சிலை 52 செ. மீ. உயரம் உள்ளது.தெய்வானை சிலை 52 செ.மீ. உயரம் உள்ளது.

## 3.4 1.8. சமயக்குரவர் சிற்பங்கள்:-

நகரத்தார் கட்டியுள்ள கோயில்கள் எல்லாவற்றிலும் அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகியோரின் சிற்பங் கள் உள்ளன. நால்வர் சிலைகளும் நின்ற திருக்கோலத்தில் காணப்படுகின்றன.

அப்பர் அஞ்சலி அத்த முத்திரையுடனும் வலப்புறம் தோளில் உழவாரப் படையுடனும் காணப்படுகிறார். காதில் குழைகளும் தலை, நெற்றி, தோள், கை ஆகியவற்றில் உருத்திராட்ச மாலை களும் அழகு செய்கின்றன. ஞானசம்பந்தர் இரண்டு கைகளிலும் தாளங்களை ஏந்தியுள்ளார். தலையில் சடா மகுடமும் காலில் சிலம்பும் உள்ளன. சுந்தரர் கொண்டைமுடி, மகர குண்டலங்கள்,

உதர பந்தம், பூணூல், வாகுவளை ஆகியவற்றுடன் காணப்படுகிறார். வலக்கை சிம்ம கர்ண முத்திரை கொண்டுள்ளது. மாணிக்க வாசகர் சின் முத்திரையும் அக்க மாலையும்கொண்டு இடக்கையில் சுவடியுடன் காணப்படுகிறார். சடாகேசம், பூணூல், மோதிரம் ஆகியன காணப்படுகின்றன.

## 3.4.1.9. சண்டேசர் சிற்பம்:

ஒன்பது நகரக் கோயில்களில் விழாக் காலங்களின் போது நடத்தப்படும் திருவீதி உலாவில் விநாயகர், சுப்பிரமணியர், சுவாமி அம்மன், ஆகியோருடைய உற்சவத் திருமேனிகளுடன் கோயிலின் காவல் தெய்வமான சண்டேசுவரர் உற்சவத் திருமேனியும் திருஉலாவில் கொண்டுவருவது வழக்கம். அதற்காக ஒவ்வொரு கோயிலிலும் சண்டேசர் ஐம்பொன் சிலையினை வைத்துள்ளனர்,

சண்டேசுவரர் நின்ற திருக்கோலத்தில் சமபாத தானக நிலையில் உள்ளார். கிரீட மகுடம் தலையில் காணப்படுகிறது. குறைவான அணிகலன்களைக் காட்டிலும் அவரது முகத்தில் பொங்கும் பக்திப் பூரிப்பான பரவசநிலை அதிகமாகத்தெரிகிறது ஒருகையில் வரத முத்திரையினையும் மறுகையில் அபய முத்திரையினையும் தாங்கியுள்ளார்.

இரணியூரில் உள்ள சிற்பம் அழகானது. அச்சிலையின் உயரம் 41 செ.மீ.

## 3.4.1.10. பிற சிற்பங்கள்:-

ஒன்பது நகரக் கோயில்களுள் அண்மையில் கற்றளியாகக் கட்டப்பெற்றது இரணியூர்க் கோயில். எனினும் ஒரு கோயிலில் இன்றியமையாது இடம்பெற வேண்டிய சிற்பங்களுடன் கூடுதலாகவே பல சிற்பங்களும் வடிவமைக்கப் பெற்றுள்ளன. எனவே இரணியூரில் உள்ள பிற செப்புத்திருமேனிகளைப் பட்டியலிட்டுக் காண்பது நலம் பயக்கும்.

## 3.4.1.11. இரணியூர்க் கோயிலில் உள்ள பிற சிற்பங்கள்:-

1. பிரதோட விநாயகர் (46 செ.மீ. உயரம்)
2. அத்திர தேவர் (36 செ.மீ. உயரம்)
3. அம்பாள் (48 செ.மீ. உயரம்)

4. பத்திரகாளி அம்மன் (56 செ.மீ. உயரம்)
5. பசுபதிலிங்கம் (40 செ.மீ. உயரம்)
6. பதுமலிங்கம் (45 செ.மீ. உயரம்)
7. பிரதோட மூர்த்தி (30 செ.மீ. உயரம்)
8. பிரதோட அம்மன் (27 செ.மீ. உயரம்)
9. நர்த்தன கணபதி (36 செ மீ. உயரம்)
10. தட்சிணாமூர்த்தி (55 செ.மீ. உயரம்)
11. அண்ணாமலையார் (56 செ.மீ. உயரம்)
12. துர்க்கை (44 செ.மீ. உயரம்)
13. பிரம்மா (44 செ.மீ உயரம்)
14. முத்துக்கந்தர் (45 செ.மீ உயரம்)
15 வீரபாகு (1.56 மீட்டர் உயரம்)
16. பிட்சாடனர் (53 செ.மீ. உயரம்)
17 அத்திர தேவர் (11) (54 செ.மீ. உயரம்)
18. துவாரபாலகர் (86 செ மீ. உயரம்)
19. துவாரபாலகர் (86 செ.மீ உயரம்)
20 கண்ணாடி (1.10 மீட்டர் உயரம்)
21. நந்தி (32 செ.மீ. உயரம்)
22 பள்ளியறை சுவாமி (22 செ மீ. உயரம்)
23. பள்ளியறை அம்மன் (25 செ.மீ. உயரம்)

## 3.4.1.12. குறிப்பிடத்தக்க ஐம்பொன் சிற்பங்கள் :-

### 3 4.1.12 1. அத்திர தேவர்:-

பேய் பிசாசு போன்றவற்றை விரட்டுவதற்காக அத்திர தேவரைப் பிரதோட காலங்களில் முதன் முதலில் கோயிலைச் சுற்றி வலமாக எடுத்துவருவர். அதற்காக ஒவ்வொரு கோயிலிலும் அத்திர தேவரின் ஐம்பொன் சிலை இன்றியமையாது இடம் பெற்றுள்ளது

சூலத்தினையே அத்திர தேவர் என அழைக்கின்றனர். ஒரு தண்டத்திலிருந்து மூன்றாகக் கிளைத்த அமைப்புடையது சூலம் இது பிறைச்சந்திரன் போன்ற வட்டப் பகுதியின் நடுவில் கூரிய கத்தி செருகிய தோற்றமுடையது இதனை மூவிலை நெடுவேல். முத்தலை வேல் என்றும் கூறுவர்.

முக்கிளைகளானவை ஆரணி, செனனி, ரோதயித்திரி என்ற மூன்று சத்திகளைக் குறிக்கும் என்பர். செனனி ஆக்கலையும்,

ஆரணி அழித்தலையும், ரோயித்திரி காத்தலையும் குறிக்கும் என்பர்.[41] இது சிவபெருமானின் சிறப்பாயுதம் ஆகும். எனவே சிவபெருமானின் குறியீடாகவே இது ஊர்வலமாகக் கொண்டு வரப்படுகிறது

## 3. 4. 1. 12. 2. பசுபதிலிங்கம்:-

வேறு எந்தக்கோயிலிலும் காணப்படாதபசுபதிலிங்கம்,இரணியூர்க் கோயிலில் மட்டும் காணப்படுகிறது. 40 செ. மீ. நீளமும் 29 செ. மீ அகலமும் உள்ள செவ்வகச் செப்புத் தகட்டில் ஒரு பசு, இலிங்கத்தின் மேல் பாலைச் சொரிவது போன்ற சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது.

## 3.4.1.12.3. பதுமலிங்கம்:-

பதுமலிங்கம் உருவமும் இரணியூர்க் கோயிலில் மட்டுமே உள்ளது. 45 செ. மீ. நீளமும், 33 செ.மீ. அகளமும் உள்ள செவ்வகச் செப்புத்தகட்டில் ஒரு இலிங்கம் தாமரை மலரின்மேல் இருப்பது போன்ற சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது.

## 3.4.1.12.4. தட்சிணாமூர்த்தி:-

இரணியூர் ஆட்கொண்டநாதர் கருவறையில் வெளிச் சுவர் பளபளப்பு ஊட்டப்பட்ட (பாலிஷ் செய்யப்பட்ட) கருப்புச் சலவைக் கற்களால் ஆகியது எனவே அதில் கற்சிற்பங்களை வைத்தால் அபிடேகத் திரவியங்கள் பட்டு சுவரின் பளபளப்பு குறைந்துவிடுமே என்று தட்சிணாமூர்த்தி, அண்ணாமலையார், துர்க்கை பிரம்மா ஆகியோருக்குச் செப்புச் சிலைகளை செய்து வைத்துள்ளனர்.

தட்சிணாமூர்த்தியின் உருவ அமைதி சகளாதிகாரம் கூறியுள்ள இலக்கணத்தின்படி அமைந்துள்ளது.[42]

தட்சிணாமூர்த்தி ஆலமரத்தின் கீழ் இராசலிங்காசனமிட்டு அமர்ந்துள்ளார். நான்கு திருக்கரங்களுடன் ஞானத்தைப் போதிப்பதாகச் சின் முத்திரையுடன் காணப்படுகிறார்.

தட்சிணாமூர்த்தி சிலையில் உயரம் 55 செ. மீ. ஆலமரத்தின் உயரம் 88 செ. மீ. ஆலமரம் கிளைகளை உடையது .இரண்டு

கிளிகள் கிளைகளில் அமர்ந்துள்ளன. (ஒரு கிளியின் உருவம் கீழே விழுந்து விட்டது). 35 செ.மீ. உயரமுள்ள நான்கு முனிவர்கள் அஞ்சலி அந்த முத்திரையுடன் சதாசேவை நிலையில் அமர்ந்துள்ளனர்.

## 3.4.1.12.5. அண்ணாமலையார்:-

சாரசுவதீய சித்திர கரும சாத்திரமும்[43] சகளாதிகாரமும்[44] கூறும் இலக்கணப்படி அண்ணாமலையாரின் செப்புத் திருமேனி இரணியூரில் காணப்படுகிறது.

அடிமுடி காணா அண்ணாமலையாரின் அழகுத் திருஉருவம் இலிங்கத்தில் தெரிகின்றது அடியினையும் முடியினையும் தேடிச் செல்லுகின்ற பன்றியின் உருவினையும் அன்னத்தின் உருவினையும் இதில் காணமுடிகின்றது.

அண்ணாமலையாரின் சிலையின் உயரம் 56. செ.மீ. சுற்றளவு 58. செ.மீ.

## 3.4.1.12.6. துர்க்கை :-

ஆபங்க நிலையில் சற்றே வளைந்தவாறு நின்ற திருக்கோலத்தில் துர்க்கையின் சிற்பம் இரணியூரில் உள்ளது. நான்கு திருக்கரங்களில் சங்கு, சக்கரம், அபய முத்திரை, உரு அத்த முத்திரை ஆகியன காணப்படுகின்றன. தலையில் கிரீட மகுடம் உள்ளது. மற்றும் கழுத்தணி, மார்பணி, கையணி, இடையணி, காலணி, விரலணி ஆகியனவும் காணப்படுகின்றன. 44 செ மீ. உயரமுள்ள விட்டுணு துர்க்கை யோகநிலையில் கண்களை மூடி நிற்பதாகச் சிற்பம் அமைந்துள்ளது.

## 3.4.1.12.7. பிரம்மா:-

சமபாத தானக நிலையில் நின்ற திருக்கோலத்தில் பிரம்மாவின் சிலை இரணியூரில் உள்ளது.

கிரீட மகுடம் அணிந்த நான்கு தலைகளுடன் பிரம்மா தனது நான்கு திருக்கரங்களில் சபமாலை, கெண்டி. அபய முத்திரை, வரத முத்திரை ஆகியனவற்றை ஏந்தியுள்ளார். இப் பிரம்மா சிலையின் உயரம் 44 செ. மீ.

## 3.4.1.12.8. முத்துக்கந்தர்:-

கார்த்திகை நாளின் போது கோயிலைச் சுற்றித் திருவீதி உலாவாக எடுத்து வருவதற்காக இரணியூரில் மட்டுமே முத்துக் கந்தர் சிலை காணப்படுகிறது.

45 செ. மீ. உயரமுள்ள இம்முருகன் சிலையில் நான்கு திருக் கரங்கள் உள்ளன. வச்சிரம், சூலம், வரதமுத்திரை, அபய முத்திரை ஆகியனவற்றைக் கைகளில் தாங்கியுள்ளார்.

## 3.4.1.12.9. வீரபாகு:-

கந்தர் சட்டி விழாவின்போது திருவீதி உலாவாக முருக னுடன் எடுத்து வருவதற்காக இரணியூரில் மட்டுமே வீரபாகு சிலை உள்ளது. அடியவர் கோலத்தில் இரண்டு கைகளுடன் காணப்படும் இவ்வீரபாகு சிலையின் உயரம் 56 செ. மீ.

## 3.4.1.12.10. பிட்சாடனர்:-

அட்சய திடுதியை நாளின்போது திருவீதி உலாவருவதற்காக இரணியூரில் மட்டும் பிட்சாடனரின் செப்புச்சிலையினைச் செய்து வைத்துள்ளனர்.

பிட்சாடனரின் சடா பாரத் தலைக்கோலம் மிக அழகாக அமைந்துள்ளது. நான்கு திருக்கரங்கள் காணப்படுகின்றன. பின் இரு கரங்களில் மிக நீளமான ஒரு சூலத்தை ஏந்தியுள்ளார். முன் பக்கமுள்ள இரண்டு கைகளில், ஒரு கையில் கபாலத்தை ஏந்திப் பிச்சை கேட்பது போலவும் மற்றொரு கையில் மானுக்குப்புல்லைக் கொடுப்பது போலவும் அமைத்துள்ளனர். பிட்சாடனரின் உயரம் 53 செ. மீ. மானின் உயரம் 20 செ. மீ.

பிட்சாடனருக்குப் பக்கத்தில் அன்னக்கூடையினைத் தலையில் சுமந்தபடி ஒரு பூதம் நின்று கொண்டிருக்கிறது. அன்னக்கூடை திறந்து மூடும் அமைப்பில் மூடியுடன் உள்ளது. அன்னக்கூடையின் உயரம் 14 செ.மீ. பூதத்தின் உயரம் 19 செ.மீ

பிறந்த மேனிக் கோலத்தில் நடந்து வருவது போன்ற பாவனையில் நிற்கும்பிட்சாடனரின் இடையில் ஒரு நாகப்பாம்பும் காணப்படுகிறது.

## 3.5. சுதைச்சிற்பங்கள்:-

மண்ணாலான சிற்பங்கள் தமிழகத்தில் பழங் காலத்தில் மிகவும் போற்றப்பட்டு வந்தன. மண்ணையிட்டுச் செய்யப் பட்டவை ஆதலின் அவற்றிற்கு மண்ணீடு என்றும், அச் சிற்பங் களைச் செய்பவர்களை மண்ணீட்டாளர் என்றும் நம் இலக்கி-யங்கள் கூறும். களிமண்ணால் பாவை செய்து தீயிலிட்டுச் சுடப் பட்டதை மண்ணீடு என்றும் சுடுமன் பாவை என்றும் கூறுவர். இச்சுடுமண் பாவைகள், வரலாற்றுச் சிறப்பு மிக்க காவிரிப்பூம் பட்டினம், உறையூர், காஞ்சி, அரிக்கமேடு கொற்கை ஆகிய இடங்களில் நடந்த அகழ்வாய்வுகளில் கிடைத்துள்ளன

இம் மண்ணாலான பாவைகள் நெடுநாள் நீடித்துநிலைத்திரா என்பதால் அதைக் காட்டிலும் கடினமான சுதையினைக்கொண்டு சிற்பங்களைச் செய்யத் தொடங்கினர்.

சுண்ணாம்பை நன்கு அரைத்துக் கரும்புச்சாறு, வெல்லச் சாறு, நெல்லிக் கனியின் சாறு முதலியவற்றை ஊற்றி அரைத்து வச்சிரம் போல் செய்து அவற்றைக் கொண்டு உருவங்கள் செய் வது பண்டைய மரபு உருவங்களைச் செய்வதற்கு ஏதுவாக உள்ளே வலிய மரத்தாலான முளை ஒன்று வைக்கப்பட்டுச் செங் கல், கம்பிகள் முதலியவற்றையும் பொருத்திச் சுண்ணாம்புக் காரை பூசி, மேலே சுதை பூசி (சுண்ணாம்புச் சாந்து)உருவங்கள் அமைக் கப்படும். இவற்றையே சுதையாலான உருவங்கள் என்கிறோம்.

### 3.5.1. சுதைச் சிற்பங்கள் காணப்படும் பகுதிகள்:-

விசயநகரப் பேரரசர்கள் உயர்ந்தே கோபுரங்களை எடுத்த போது சில சுதை உருவங்களை வைத்தார்கள். அவர்களுக்குப் பின்வந்த நாயக்க மன்னர்கள் கோபுரங்களின் மேல் நிலைகளில் ஆயிரக் கணக்கான சுதை உருவங்களை வைத்து அலங்கரித்தனர்.

நகரத்தார் கட்டிய ஒன்பது நகரக் கோயில் கோபுரங்களிலும், விமானங்களிலும், திருமதிலிலும், மூலவர், அம்மன் திருநிலைகளி லும் ஆயிரக்கணக்கான சுதை உருவங்களை அமைத்துள்ளனர். ஒன்பது நகரக் கோயில்களுள் வயிரவன் பட்டிக் கோயிலில்தான் அதிகமான சுதைச் சிற்பங்கள் காணப்படுகின்றன. இதை அடுத் துப் பிள்ளயார்பட்டி, இலுப்பைக்குடி, இரணியூர் சுதைச் சிற்பங் களைக் குறிப்பிடலாம்.

## 3. 5. 2. வயிரவன் பட்டிச் சுதைச் சிற்பங்கள் :-

வயிரவன்பட்டி வயிரவன் கோயிலில் உள்ள கிழக்கு இராச கோபுரத்தில் 612 சுதைச் சிற்பங்களும்,தெற்கு இராச கோபுரத்தில் 104 சுதைச் சிற்பங்களும், வளரொளி நாதர் விமானத்தில் 160 சுதைச் சிற்பங்களும், வடிவுடையம்மை விமானத்தில் 96 சுதைச் சிற்பங்களும், வயிரவர் விமானத்தில் 120 சுதைச் சிற்பங்களும் வெளி மண்டப விநாயகர் விமானத்தில் 32 சுதைச் சிற்பங்களும் உள்ளே உள்ள விநாயகர் விமானத்தில் 36 சுதைச் சிற்பங்களும், சுப்பிரமணியர் விமானத்தில் 36 சுதைச்சிற்பங்களும், மகாலெட்சுமி விமானத்தில் 22 சுதைச் சிற்பங்களும், நடராசர் விமானத்தில் 64 சுதைச் சிற்பங்களும், பள்ளியறை விமானத்தில் 26 சுதைச் சிற்பங் களும், நந்தி மண்டப விமானத்தில் 48சுதைச்சிற்பங்களும் சோமா சுக்கந்தர் விமானத்தில் 36 சுதைச் சிற்பங்களும் சண்டேசுவர மண்டப விமானத்தில் 24 சுதைச் சிற்பங்களும் உள்ளன. ஆக மொத்தம் 1416 சுதைச் சிற்பங்கள் வயிரவன் பட்டி வயிரவன் கோயிலில் உள்ளன.

## 3.5.3. அழகிய சுதைச் சிற்பங்கள்:-

சுதைச்சிற்பங்களில் மிகஅழகு வாய்ந்ததாகச்சிவபெருமானின் திருநடனத் தோற்றம், யானைத் தோலை உரித்துப் போர்த்திக் கொண்ட தோற்றம், உமையொரு பாகர், சங்கர நாராயணர், தட்சிணாமூர்த்தி, சதாசிவன், காலவைரவர், அன்னவாகனத்தில் அமர்ந்த பிரம்மன், திருமாலின் பத்து அவதாரக் காட்சிகள், மார்க் கண்டேயபுராணம், கண்ணப்பநாயனார்புராணம், கல்யானைக்குக் கரும்பு கொடுத்த காட்சி, துவார பாலகர்கள், ஏகபாத மூர்த்தி ஆகிய சிற்பங்களைக் கூறலாம்.

## 3.5.4. சுதைச் சிற்பங்களின் நோக்கம்:-

கோபுரத்திலும் விமானத்திலும் உள்ள சுதைச் சிற்பங்கள் புராண விளக்கமாகவும், தெய்வ தத்துவத்தை விளக்குவதாகவும், பண்பாட்டுச்சிறப்புமிக்கதாகவும் கலைநுட்பம் பொருந்தியதாகவும் இலட்சிய வாழ்க்கைக்கு வழிகாட்டுவதாகவும் அமைந்துள்ளன.

கூத்தப்பெருமான், தட்சிணாமூர்த்தி, திருமால், பிரம்மா, பார்வதி முதலிய கடவுளரின் திருவிளையாடல் காட்சிகளும் புராணப் பகுதிகளும் சிலை வடிவாக அமைக்கப்பட்டுள்ளன.

கோபுரங்களின் கீழ்மாடங்களில் அதிகமான மானிடச்சிற்பங்களும் மேல்மாடங்களில் சிவகணங்களுடன் கூடிய தெய்வச்சிற்பங்களும் மட்டுமே காணப்படுகின்றன. (நி. ப. எண். 49.)

ஒவ்வொரு கோபுரத்தின் தென்புறத்தில் உள்ள இரண்டாவது மாடத்தில் நிர்வாணச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. இவ்வாறு சிற்றின்பத்தில் தொடங்கி இறைவனுடன் இரண்டறக்கலக்கும் பேரின்பத்தில் முடிவதே நம் வாழ்க்கை என்று கோபுரச் சுதைச் சிற்பங்கள் நுட்பமாகக்கூறுகின்றன. இதுபண்பாடுமிக்க இலட்சிய வாழ்க்கைக்கு வழிகாட்டியாக அமைந்துள்ளது.

### 3 5. 5. சுதைச் சிற்பங்களில் வண்ணத்தில் பங்கு:-

சுதைச் சிற்பங்களில் வண்ணம் பூசப் பெற்று இருப்பதால் அவை கற்சிற்பங்களைக் காட்டிலும் அதிக அழகோடு கண்ணைக் கவருகின்றன. சிற்பி உணர்த்த விரும்பும் கருத்தை - பாவத்தை - நவரசத்தை வண்ணங்கள் உணர்த்தி விடுகின்றன.

உமையொரு பாகனார் சிற்பத்தில் உமையின் பச்சை வண்ணமும் சிவனாரின் கருநீல வண்ணமும் நேரிலேயே தெய்வத்தைக் காண்பதைப் போன்ற உணர்வினை எழுப்புகின்றன.

நரசிம்மமூர்த்தி இரணியன் வயிற்றைக் கிழித்து அவன் குடலை மாலையாகப் போட்டுக்கொள்ளும் சுதைச் சிற்பம் மிக இயல்பாக வண்ணம் பூசப் பெற்றுள்ளது. கிழிந்த வயிற்றையும் அறுத்த குடலையும் அவற்றிலிருந்து கொட்டும் குருதியையும் சிவப்பு நிற வண்ணம் – உண்மையிலேயே அக்காட்சியை நேருக்கு நேராகக் காண்பது போன்ற தோற்றத்தை ஏற்படுத்துகிறது.

### 3.6. மரச் சிற்பங்கள்:-

மரத்தாலே சிற்பங்கள் செய்யும் பணி தொன்று தொட்டு வருகின்ற கலையாகும். மரத்தாலான பாவையினையும், தேர்களையும் பற்றிச் சங்க இலக்கியம், பெருங்கதை ஆகியன கூறுகின்றன.

### 3.6.1. கடவுள் திருமேனி:-

கோயிலைப் பழுதுபார்க்கும் போது அத்தி முதலிய புண்ணிய மரங்களில் மூலவரைப் போலவே கடவுள் திருமேனியைச் செய்து,

பாலாலயம் எனும் பெயரில் ஒரு சிறிய கோயிலை அமைத்து, அதனுள் அம்மரச் சிற்பங்களை வைத்து வழிபடுவது வழக்கம். இது போல் பாலாலயத்திற்காக அத்தி மரத்தில் கடவுள் திருமேனியை மாற்றூர், இரணியூர் ஆகிய ஊர்களில் செய்துள்ளனர். சூரைக்குடியில் கட்டப்பெற்றபாலாலயம் இன்றும் கோயிலின் எதிரேஅமைந்துள்ளது.

## 3.6.2. நிலைக்கதவு -

நகரத்தார் சிலர் தங்கள் வீட்டின் முகப்புப் பகுதியில் மரச் சிற்பங்கள் நிறைந்த நிலைக் கதவினைப் பொருத்தியுள்ளனர்.

வயிரவன்பட்டி நகரவிடுதி முகப்பில் மிகப் பெரிய நிலைஒன்று உள்ளது. அதில் கசலெட்சுமி, தாமரை, குதிரை வீரர்கள், யானைகள், பல்வேறு மாந்தர்கள், விலங்குகளின் சிற்பங்கள் மிக நுட்பமாகச் செதுக்கப் பெற்றுள்ளன. அந்த நிலையில் உள்ள ஆயிரத்திற்கும் மேற்பட்ட சிற்பங்கள் உள்ளது குறிப்பிடத்தக்கது. அம் மரச்சிற்பங்கள் நிறைந்த நிலைக் கதவினை வெளி நாட்டாரும் வியந்து பாராட்டுகின்றனர். அந்நிலையில் உள்ள சிற்ப வேலைப் பாட்டிற்காக அதனை ஒரு லட்சம் ரூபாய்க்கு விலைமதித்துள்ளார்கள். (நி.ப. எண். 50).

## 3. 6. 3. தேர்:

நகரத்தார் கட்டிய கோயில்களில் பெரும்பாலும் இரண்டு அல்லது ஒரு தேர் உண்டு. அத் தேர்களின் சுற்றுப்புறத்தில் நூற்றுக் கணக்கான மரச் சிற்பங்கள் காணப்படுகின்றன. அதிகமானவண்ணமும், எண்ணைக் காப்பும் சிலைகளின் கலை நுட்ப அழகினை மூடி மறைத்து வருகின்றன.

### 3.6.3.1. இலுப்பைக்குடித் தேர்ச் சிற்பங்கள் :-

இலுப்பைக்குடி ஆலயத்தில் உள்ள தேர் இன்றும்உபயோகத்தில் உள்ளது. சுமார் 10 அடி உயரமுள்ள இத்தேர் கி.பி 19 ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியைச் சார்ந்தது. (நி. ப. எண் 51)

கிழ்த்தட்டில் வலமிருந்து இடமாக மயில் வாகனர், தட்சிணாமூர்த்தி, விநாயகர், பூதகணம். துவாரபாலகர், ரிடபவாகன தேவர் பிட்சாடணர், வீனை ஏந்திய பெண், காளிங்கநர்த்தனர், வேணுகோபாலன்,ஆண்பெண் இன்பக்களிப்பில் உள்ள சிற்பம்,கோமாளி பைரவர். மகிடமர்த்தினி, அம்மன், பூதகணம், கொடிப்பெண்,

அமர்ந்த அம்மன், யாழ் இசைக்கும் வனிதை, கதை ஏந்தியவீரன் வீரபத்திரர், இடையர், சிம்மவாகினி, பணிப்பெண், ஆடையற்ற அணங்கு, ஆண் குறியைப்பற்றி நிற்கும் காமுகன், துவாரபாலகர் ஆகிய சிற்பங்கள் அலங்கரிக்கின்றன இவை ஒவ்வொன்றும் 20 செ.மீ. உயரமும் 10 செ மீ, அகலமும் உடையன.

நடுத்தட்டில், திருமால், சொக்கர், அங்கயற்கண்ணியை மணப்பதற்கு நீர் பார்க்கும் காட்சி மயில் மீது ஆறுமுகப்பெருமான் ரிடப ஆருடர், சிவனும் உமையும் உள்ள கைலாயத்தில் தசமுகன் வீணையைக் கொண்டு சாமகானம் இசைத்தல், வல்லபையின் யோனியை துதிக்கையால் மறைக்கும் வல்லவ கணபதி, சுப்பிர மணியர் சூரசம்காரம் செய்தல், அழகிய பெண்களுடன் கூடும் ஆண்கள், ஆண்களிடம் போகம் துய்க்கும் பெண்கள், பள்ளி யறையில் சிவன் உமையுடன் தோன்றுதல், இராமர் பட்டாபி டேகம் அனுமனுக்கு இராமபிரான் அறம் உரைத்தல், ஐந்துதலை அரவத்தின் கீழுள்ள வைகுண்டப்பெருமாள், இராமனைத்தூக்கிச் செல்லும் அனுமன், இரணிய சம்காரம், வாள், கேடயம் ஏந்திப் போரிடும் இரு வீரர்கள், குனிந்து சோறுவடிக்கும் பெண்ணிடம் பின்புறமாகப் புணரும் ஆண்மகன், அதைக்கண்டு இன்புறும் அணங்கும் ஆடவனும், யானைமீதுவரும் முனிவர், யானையை அடக்கும் வீரன், கன்னியர் அறுவருக்கு அறம் உரைக்கும் சிவ பெருமான், சிவனின் காலடியில் உள்ள முயலகன், யானைத் தோலை உரித்து ஆடையாகப் போர்த்திக்கொள்ளும் பெருமான், நந்திகுடமுழாவாசிக்க, நான்முகன் பிரம்மதாளம்போட, ஊர்த்துவ தாண்டவம் ஆடும்சிவன், பெருமான் எண்தோள்களுடன் தோன்ற சிவனின் ஆடலைக் கண்டு நாணமுற்ற ஆலங்காட்டுக்காளி, இலிங்கத்திலிருந்து தோன்றி, காலனைத் திரிசூலத்தால் சம்காரம் செய்யும் மூர்த்தி, இலிங்கத்தைக் கட்டியணைக்கும் மார்க்கண் டேயன், இதனைக்கண்டு விண்ணிலே இன்புறும் இருகந்தவர்கள் மதங்கொண்ட யானையின் கீழ், தோன்றும் கண்ணன், குதிரை பூட்டிய தேரில் வில்லும் அம்பும் ஏந்தி, சம்காரம்செய்யும் திரிபுரந் தகர், அவ்வண்ணலை வணங்கும் அசுரன் மற்றும் பெண்டிர் குந்தல கூந்தலிட்டு ஆடையற்ற நிலையில் தோன்றும், மோகினி, அவள் அழகைத் துய்க்கவரும் பிட்சாடனர் வடிவில் வந்த சிவன், திண்டின் மீது பெண்ணைக் கிடத்தி இன்பம் துய்க்கும் ஆண்கள். அதற்குச்சாமரம் வீசும் பணிப்பெண், திருமாலைச்சுமக்கும் கருட வாகனர், ஐந்து தலையுடன் தோன்றி, கையில் தராசு பிடித்து ஒருதட்டில் எட்டுத் தலைகளையும், மற்றொரு தட்டில் தெய்வத்

தையும் நிறுத்திப் பிடித்துள்ள பெருமான். எருமைத்தலை அசுரனை, சிம்மத்தின் மீதுஅமர்ந்து அழிக்கும் துர்க்கை,அன்னத்தின் மீதுள்ள அழகி, கோகுலத்துப் பெண்கள் அறுவரின் ஆடையைக்கவர்ந்து பின்ன மரத்தில் ஒளியும் கண்ணன், ஆடையற்ற நிலையில் நிற்கும் கோபியர்கள், கட்டிலின் மீது கணவனுடன் உட்கார்ந்த பெண், குத்திட்டு அமர்ந்த நிலையிலேயே கட்டிலின் கீழ் மல்லாந்து படுத்துள்ள மாற்றானைப் புணரும் காட்சி, அவள் அருகில் நிற்கும் பணிப்பெண், நாட்டியமாடும் இரு தேவர்கள், வேடன், வேட்டுவச்சி, காமனும் இரதியும் கிளிமீதும் அன்னத்தின் மீதும் அமர்ந்து வில்லை ஏந்தி, கணை தொடுத்தல் ஆகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இச்சிற்பங்கள் ஒவ்வொன்றும் சுமார் 30 செ. மீ, உயரம் உடையன.

மேல் தட்டில் இராமன், இலக்குவன், சீதை, அனுமன், அடியார், இலிங்கம் துவாரபாலகர், விநாயகர், தேவர்கள், ஈருடல் ஒரு தலையுடன் தோன்றும் காளை வாகனம், சிம்மம், குதிரை, இலிங்கத்தை வழிபடும் தேவர்கள், வாசுகி என்ற பாம்பின் மீது உள்ள மரா மரத்தை ஒரே அம்பில் வீழ்த்தும் இராமபிரான், வாசுகியின் பின்புறம் தோன்றும் அனுமன், இராமன், இலக்குவன் சீதை, அனுமனுக்கு அறம் உரைக்கும் அண்ணல், வாலி சுக்ரீவன் சண்டை, இராமன் பதுங்கி நின்று அம்பால் வீழ்த்தும் காட்சி, இராமன் மாரீசன் என்னும் மானை அம்பெய்து வீழ்த்துதல், இராமபிரான் சீதைக்கு முன்பு அனுமன் வாய்பொத்தி நிற்றல், அசோக வனத்தில் சீதை, இராமன் ஆடும் அரவத்தை அம்பால் வீழ்த்துதல், கோலாட்டம் ஆடும் பெண்கள், வாலை வட்டமாகச் சுற்றியுள்ள அனுமன், போர்க் காட்சி, அனுமன் இராவணனது கோட்டையை அழித்தல் ஆகிய இராமாயணக் காட்சிகள் இத் தேரில் இடம்பெறுகின்றன.

இங்குள்ள தேர்ச் சிற்பங்களில் பெரும்பாலானவை தான் தோன்றி ஈசுவரர் ஆலயத்தில் உள்ள சிற்பங்களை ஒத்துள்ளன. எனவே இக்கோயில் திருப்பணி செய்து முடிக்கப்பட்ட காலத்திலேயே இத்தேர் உருவாகியிருக்க வேண்டும்.

இத்தேரின் கீழ்த்தட்டிலும் நடுத்தட்டிலும் மேல்தட்டிலும் உள்ள சிற்பங்கள் நகரத்தார் பாணி மரச் சிற்பக்கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்கும்.

## 3.6.4. வாகனங்கள்:-

இறைவன் இறைவியர் எழுந்தருள வாகனங்கள் தேவைப் படுகின்றன. எனவே மரத்தால் அமைந்த இடபம் (காளை), மயில், பெருச்சாளி, அன்னம், காமதேனு, குதிரை, சிம்மம், யாளி, ஆகிய வாகனங்களை ஒன்பது நகரக் கோயில்களிலும் காண முடிகிறது.

## 3.6.4.1. இடப வாகனம்:-

சிவனுக்கு இடப வாகனம். எனவே உலா வருகின்ற சிவனுக்கும், அம்மனுக்கும், சண்டிகேசுவரருக்கும் மூன்று இடப வாகனங்கள் தேவைப்படுகின்றன. எனவே மூன்று இடப வாகனங்களை ஒன்பது நகரக் கோயில்களிலும் காணமுடிகின்றது. மானசாரம் என்னும் சிற்ப நூலில் வாகனத்தின் இலக்கணமும் கூறப்பட்டுள்ளது.[11]அ அவ்வாறே ஒன்பது நகரக் கோயில்களிலும் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

சிறீ மானசாரமென்னும் வாசுத்து சாத்திரத்தில் இடபத்தின் சிற்பத்திற்கு 79 இலக்கணங்கள் கூறப்பட்டுள்ளன.

வயிரவன் பட்டியில் 1.10 மீட்டர் உயரத்தில் உள்ள இடப வாகனத்தில் 75 இலக்கணங்கள் பொருந்தி வருகின்றன. (நி.ப.எண். 52)

சிறிதே வாய் திறந்துள்ள இடபத்தினுடைய நாக்கின் நீளத்தைக் கணக்கிட இயலவில்லை. கழுத்தில் செந்நிறம் கொண்ட மலர்மாலையைத் தவிர உருத்திராட்சங்களாலாகிய மாலை காணப் படவில்லை. முதுகின்மேல் புலித்தோல் காணப்படவில்லை. காதுகளிலும் உடலின் இருபுறங்களிலும் சாமரங்கள் காணப்படவில்லை. மற்ற 75 இலக்கணங்களுக்கும் இலக்கியமாக அவ்விடபச் சிற்பம் அமைந்துள்ளது.

## 3.6.4.2. பிற வாகனங்கள்:-

நகரத்தார் கோயில்களில் மயில், பெருச்சாளி, அன்னம், கருடன், கைலாயம், காமதேனு, சிம்மம், யாளி, வெள்ளையானை ஆகிய மரச் சிற்ப வாகனங்கள் உள்ளன. பிள்ளையார்பட்டியில் உள்ள அன்ன வாகனமும் வயிரவன்பட்டியிலுள்ள மயில் வாகனமும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை (நி.ப.எண். 53, 54).

## 3.6.4.3. வெள்ளி வாகனங்கள் :-

இறைவன் இறைவியருக்கு வெள்ளியில் அங்கி செய்வதுபோல வாகனங்களுக்கும் வெள்ளித் தகட்டினால் அங்கிபோலச் செய்து மரத்தாலான வாகனத்தின் மீது அதனைச் சுற்றிலும் வைத்து ஆணி அடித்து விடுவார்கள் இது போன்ற வெள்ளித்தகடு வேயப் பெற்ற வாகனங்களை வெள்ளி வாகனங்கள் என்பார்கள்

இடபம், மயில், பெருச்சாளி, ஆகிய மூன்றும் வெள்ளி வாகனங்களாக ஒன்பது நகரக் கோயில்களில் காணப்படுகின்றன. மரச் சிற்பங்களில் காணப்படும் அத்தனை கலை நுட்பங்களும் இந்த வெள்ளி வாகனத்திலும் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

## 3.6.4.4. பல்லக்கு, ஊஞ்சல், கேடகம், சகடை:-

நகரத்தார் கோயில்களில் பள்ளியறை உண்டு. அங்கிருந்து மூலவரைக் காலையில் கருவறைக்கு எடுத்துச் செல்வதற்கும், இரவு அங்கிருந்து பள்ளியறைக்குக் கொண்டு வருவதற்கும் மரத்-தினாலான ஒரு பல்லக்கு பயன்படுத்தப்படுகின்றது.

இப் பல்லக்கின் நீளம் 1.30 மீட்டர். அகலம் 56 செ.மீ. உயரம் 30 செ.மீ. ஆகும்.

மூலவரும் அம்மனும் இரவில் ஒன்றாகத் தங்குவதற்குப் பள்ளி யறையில் ஊஞ்சல் உண்டு. இந்த ஊஞ்சலின் நீளம் 97 செ.மீ. அகலம் 60 செ.மீ. உயரம் 1.50 மீட்டர் ஆகும்.

வயிரவன்பட்டி, சூரைக்குடி, வேலங்குடியில் இவ்வூஞ்சல் மரத்தால் செய்யப்பெற்று வண்ணம் பூசப்பட்டுள்ளது.

நேமம், இரணியூர், இலுப்பைக்குடியில் இப்பள்ளியறை ஊஞ் சல் மரத்தால் செய்யப் பெற்று முழுவதும் சிறிய சிறிய சதுரக் கண்ணாடிகள் பதிக்கப்பட்டுள்ளது.

இளையாத்தங்குடி, பிள்ளையார்பட்டி, மாற்றூர் ஆகிய ஊர் களில் இப்பள்ளியறை ஊஞ்சல் மரத்தால் செய்யப்பெற்று முழுவ தும் வெள்ளித் தகடு போர்த்தப் பெற்றுள்ளது.

தெய்வத் திரு உலாவிற்காகப் பல்வேறு உயர அளவைகளில் கேடகங்கள் ஆட்கள் தூக்கிச் செல்லும் அமைப்பில் உள்ளன.

## 3. 7. கட்டடக் கலை:-

கோயில் கட்டடக் கலையினை ஆறு பகுதிகளாகப் பகுத்துக் காணலாம்.

1. கருவறை அமைப்பும் விமான அமைப்பும்.
2. தேவகோட்ட அமைப்பு.
3. திருச்சுவற்றிலுள்ள சிற்றாலயங்களின் அமைப்பு.
4. மண்டப அமைப்பு.
5. வாகனம், கொடிமரம், பலிபீட அமைப்பு.
6. கோபுர அமைப்பும் திருமதில் அமைப்பும்.

## 3. 7. 1. கருவறை அமைப்பு:-

கோயிலில் உள்ள சிவலிங்கத்தின் உயரம், படிம மானம் எனப்படும். இப்படிம உயரத்திற்கு ஏற்றாற்போலவே கருவறையின் பரப்பளவு (நீளம், அகலம், உயரம்),சுவரின் கனம் ஆகியன அமையும்.

படிம உயரத்தைப் போல மூன்று பங்கு அளவில் கருவறையின் பரப்பளவு அமையும். படிம உயரத்தின் அளவிலேயே சுவர் கனம் வைக்கப்படும்.

இலுப்பைக்குடி தவிரப் பிற எட்டுக் கோயில்களிலும் இந்த விதிப்படியே கருவறை அமைந்துள்ளது. இலுப்பைக்குடியில் உள்ள இலிங்கம் சிற்பியால் செதுக்கப்பட்டதன்று. தானாகத் தோன்றிய இலிங்கம் என்பதாலேயே தான்தோன்றி ஈசன் என்று இறைவனுக்குப் பெயர் அமைந்துள்ளது. தான்தோன்றி ஈசனின் இலிங்கத் திருமேனியின் உயரம் 44 செ.மீ. இதற்கு மூன்று மடங்காகக் கருவறையை அமைத்தால் மிகச் சிறியதாகக்கருவறைஅமையும் எனக் கருதி அதிகப் பரப்பளவுடன் விதிவிலக்காகக் கட்டியுள்ளனர்.

பிள்ளையார் பட்டியில் உள்ள மருதீசர், திருவீசர் ஆகிய இரண்டு மூலவர்களின் கருவறைகள் இவ்விலக்கணப்படி அமைந்துள்ளன. கற்பக விநாயகரின் கருவறை குடைவரைக் கோயில் என்பதால் இவ்விலக்கணத்திற்கு ஏற்ப அமையவில்லை.

இரணியூர்க்கோயிலின் கருவறை முழுவதும் சலவைக்கல்லால் அமைக்கப் பெற்றது என்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

கருவறையில் அந்திராளம், அருத்த மண்டபம், மகாமண்டபம் ஒருவாய்ப்பத்தி ஆகியன இலக்கணப்படி அமைந்துள்ளன.

## 3.7.1.1. மூன்று வகைக் கருவறைகள்

கருவறையின் வெளிப்புறத்தில் பல்வேறு அழகு வேலைப்பாடுகள் செய்யப்பெறும். அதன் அடிப்படையில் மூன்று வகையான கரு வறை இலக்கணங்கள் கூறப்பட்டுள்ளன.[15] அவையாவன:

1. உத்திர மட்ட வேலை
2. இரட்ட பஞ்சாங்க வேலை.
3. முகபத்திர வேலை.

கருவறையின் வெளிப்புறம் நான்கு பெரும் பிரிவுகளாக வகுக் கப்பெறும். கருவறையின் அடிப்பகுதி உபபீடம் என்றும், அதற்கு மேல் உள்ள பகுதி அதிட்டானம் என்றும், அதற்கு மேல் உள்ள பகுதி பாதம் என்றும், அதற்கு மேல் உள்ள பகுதி பிரசுத்தரம் என்றும் பெயர் பெறும். (படம் எண். 16). இந்நான்கின் குறைவான அழகு வேலைப்பாடுகள் அமைவது உத்திர மட்ட வேலை எனப்படும். அதைக் காட்டிலும் கூடுதலாக அதிட்டானப் பகுதியாக அழகு வேலைப்பாடுகள் அமைவது இரட்ட பஞ்சாங்க வேலை எனப்படும். உபபீடம் அதிட்டானம், பாதம், பிரசுத்தம் ஆகிய நான்கு பகுதிகளிலும் மிக அதிகமான அழகு வேலைப்பாடு கள் அமைவது முகபத்திர வேலை எனப்படும். (படம் எண். 17-19)

ஒன்பது நகரக் கோயில்களிலும் மூலவரின் கருவறைகள் முக பத்திர வேலைப்பாட்டுடன் அழகாக அமைந்துள்ளன

உபபீடத்தில் பிரதமம், கம்பு, ஊர்த்த பத்மம், கம்பு, குமுதகம் கம்பு கண்டம், உத்திரம், எழுதகம், கபோதகப் பட்டிகை, யாளம் ஆகியன சிறப்பாக அமைந்துள்ளன.

அதிட்டானம் உபானபத்மம், செகதி, குமுதகம், பட்டிகை, வேதிகை, என்ற பெரும் பகுப்புடனும் கனதி, ஊர்த்த பத்மம், கம்பு செகதி, ஊர்த்த பத்மம், அதோபத்மம், குமுதகம், ஊர்த்த பத்மம், கழுத்து, கம்பு, பலகை ஆகிய சிறிய பகுப்புக்களுடனும் அழகாக அமைந்துள்ளது.

பாதப் பகுதி நாகபந்தம், கால், தாடி, அல்லிக்கால், கழுத்து, பலகை, வீர கண்டம், போதிகை ஆகிய பகுதிகளால் சிறப்பாக அமைந்துள்ளது. கும்ப பஞ்சரங்களும், தேவகோட்டங்களும் அழ காக அமைந்துள்ளன.

பிரசுத்தரப் பகுதி உத்திரம், கம்பு, எழுதகம், வாகிமை, கொடி பாலை, கபோதம், கழுத்து, கம்பு, அதோ பத்மம் கம்பு ஆகிய பகு திகளைக் கொண்டுள்ளது. கபோதகத்தில் அமைந்துள்ள கூண்டு கள் மிகச் சிறப்பாக அமைந்துள்ளன.

அம்மன் கருவறையும், வயிரவர்கருவறையும்இரட்டபஞ்சாங்க வேலைப்பாட்டுடன் அமைந்துள்ளன.

பள்ளியறை, சண்டிகேசுவரர் சிற்றாலயம் ஆகியன உத்திர மட்ட வேலைப்பாட்டுடன் அமைந்துள்ளன.

### 3. 7. 1. 2. விமான அமைப்பு :-

விமானங்களின் பல நிலை மாடங்களை உடையனவாகக் கட் டப் பெறுகின்றன. ஒரு நிலைமாடம் கொண்ட விமானத்தை ஏக தளவிமானம் என்பர்.இரண்டு நிலைமாட விமானத்தைத்தி விதள விமானம் என்றும் மூன்று நிலை மாட விமானத்தைத் திரிதள விமானம் என்றும் குறிப்பர். (படம் எண்.20)

மற்ற கோயில்களில் மூலத்தானத்தில் உள்ள இறைவன், இறைவியின் விமானங்கள் மட்டுமே மூன்றுநிலை விமானங்களாக இருக்கும். ஆனால் நகரக் கோயில்களில் அவ்விரண்டுடன் வயிரவ ருக்கான விமானமும் மூன்று நிலை விமானமாகவே அமைந் துள்ளது. இதனால் நகரத்தார் வயிரவ வழிபாட்டில் அதிகப்பற்று வைத்திருப்பது புலனாகிறது.

நகரத்தார்கள் பண்டைய வாழ்க்கையில் பலவகையான துன் பங்களில் உழன்றவர்கள். எனவே எவ்வளவு பெரிய துன்பத்தை யும் அழிக்கும் வல்லமையுடைய வயிரவரை அதிகமாக வழிபட லாயினர் எனக் கருத இடமுள்ளது.

சோமாசுக்கந்தர், விநாயகர், ஆறுமுகன், பள்ளியறை ஆகியனவற்றுக்குரிய விமானங்கள் இருநிலை விமானங்களாக அமைந்துள்ளன.

மூன்று நிலை விமானங்களில் உள்ள கர்ண கூடுகளும் பிரசுத்தளங்களும், கெனம், சிகரம், தூபியும் இலக்கணப்படி அமைந்துள்ளன. (நி. ப. எண். 55)

முதல் கர்ண கூட்டில் கர்ண கூடு, உள்நாட்டுக் கழுத்து, உத்திரம், எழுதகம், கபோதகம், யாளம் முதலியன காணப்படுகின்றன. இரண்டாம் கர்ண கூட்டில் உள்ள மைய காலை சிறப்பாக அமைந்துள்ளது மூன்றாவது நீளகோபுரம் என்னும் மேற்பகுதி கெனம், சிகரம், தூபி என மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. கெனப் பகுதியில் உள்ள மையக்கோட்டமும், சிகரத்தில் உள்ள மகாராசிக்கூடும் மிகச் சிறப்பாக அமைந்துள்ளன. சிகரப்பகுதியில் உள்ள உத்திரம், எழுதகம், தூக்கோடு, மாலைக்கட்டு, பதுமம், மாலைக்கட்டு, இடைக்கட்டு நாகபந்தம் ஆகியன மிக நுட்பமாக அமைந்துள்ளன. அதில் உள்ள மகாபத்மம் ஆயிரம் தாமரை இதழ்களைக் கொண்டு பிரம சக்தியைக் குறிப்பதாக அமைந்துள்ளது. தூபியின் மேற்பகுதியில் கலசம் மிகச் சிறப்பாக அமைந்துள்ளது.

## 3. 7. 2 தேவகோட்ட அமைப்பு :

கருவறையின் வெளிப்புறத்தில் ஐந்து தேவகோட்டங்கள் ஒன்பது நகரக்கோயில்களிலும் காணப்படுகின்றன. நடமாடும் விநாயகர், தென்முகக்கடவுள் (தட்சிணாமூர்த்தி), அடிமுடி காட்டா நாதர், பிரமன், துர்க்கை ஆகியோருடைய தேவகோட்டங்கள் முகப்பத்திர வேலைப்பாடு மிக்க கருவறையில் உள்ளன.

தேவகோட்டத்தின் அமைப்பு ஒரு சிறு கோயிலைப் போலவே அழகாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது அதில் பதினைந்து சிறு உறுப்புகள் உள்ளன. கால், தாடி, கண்டம், குடம், கண்டம், பலகை, கண்டம், உத்திரம், எழுதகம், கபோதகம், யாளம், வேதிகை, கெனம், கெடகம், கலசம் ஆகிய பதினைந்து உறுப்புகளும் சிறப்பாகச் செதுக்கப் பெற்றுள்ளன. தேவகோட்டத்தில் கீழ்ப்பகுதியில் உள்ள அதிட்டானப் பகுதி எவ்விதமான அழகு வேலைப்பாடும் இன்றி வெறும் நீள் செவ்வகமாக அமைப்பதும் உண்டு; அழகு வேலைப்பாட்டுடன் அமைப்பதும் உண்டு.

இளையாத்தங்குடி, மாற்றூர், நேமம், வேலங்குடி. சூரைக்குடி, ஆகிய ஊர்களில் உள்ள கோயில்களில் அதிட்டானப்பகுதி அதிகமான வேலைப்பாடுகள் இன்றி உள்ளது பிள்ளையார்பட்டியில்

இந்த அதிட்டானப் பகுதி மட்டும் குமுதம் செகதி வேலைப்பாடு களுடன் அமைக்கப்பட்டுள்ளது. (நி. ப. எண். 56).

வயிரன்பட்டி, இலுப்பைக்குடி, இரணியூர் ஆகிய ஊர்களில் உள்ள கோயில்களில் அதிட்டானப் புதிய பாணியில் கட்டப் பெற்றுள்ளது. அதிட்டானம் பகுதியும் பாத வருக்கமும் தேவ கோட்டத்தை முன் நிறுத்திப் பிற பகுதிகளை அதற்கு உள்ளடக் கியதாகவும் 'ப' வடிவில் முன்னும் பின்னும் அமைந்ததாகக்கட்டி யுள்ள அழகு வியந்து பாராட்டுதற்குரியது.(நி. ப. எண். 57, 58, 59).

நகரத்தார் வளர்த்த கட்டடக் கலை என்று சிறப்பித்துச் சொல்லுமாறு இக் கட்டட அமைப்பு அமைந்துள்ளது.

தென்முகக் கடவுளின் தேவகோட்டம் மிக அதிகமான அழ குடன் ஒன்பது நகரக் கோயில்களிலும் அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இத்தேவகோட்டத்தைத் தனி மண்டபமாகவே எடுத்துள்ளனர். இலுப்பைக்குடியில் உள்ள இம் மண்டபம்மிகுந்த கவனத்துடன் நுணுக்கமாகச் செதுக்கப்பட்டுள்ளது. அதிட்டானப் பகுதியில் உள்ள கபோதங்களும் தாமரைகளும் குமுதங்களும் நுணுக்கமான வேலைப்பாட்டுடன் திகழ்கின்றன. (நி. ப. எண். 60).

இம்மண்டபப் பீடத்தில் முன்புறம் மரத்தைச் செதுக்கியது போன்ற சிற்ப வேலைப்பாடு கொண்ட தூண்களைக் காணலாம். இத்தூண்கள் கால், உடல், இடை, கலசம், குடம், கண்டம்அரிந்த பத்மம், பலகை, நந்தி மேடை, போதிகை. உத்திரம் ஆகிய பகுதிகளைக் கொண்டுள்ளது இத்தூண்களின் உடல் மேலிருந்து கீழாக வரிவரியாக வெட்டப்பட்டு வனப்பூட்டுகிறது, இத் தூண் களின் மேலுள்ள குடத்திற்கும் பலகைக்கும் நடுவே உள்ள கல் லின் விரிந்த தாமரை மலர் நாற்பத்தெட்டுப் பூவிதழ்களைக் கொண்டுள்ளதை மிகச் சிறப்பாகக் குறிப்பிடலாம். தாமரை இதழ் களைப் போலவே மிக மென்மையாகப் படைத்துள்ள திறம் பாராட் டத்தக்கது.

இத்தூண்களின் மேலுள்ள போதிகை வளைந்த வாழைப்பூந் தாரையினைப் போல அழகாக அமைந்துள்ளது. /தூணின் மேற் பகுதியில் உள்ள நான்கு மூலைகளிலும் ஒரு தலையையும் இரு

உடல்களையும் பெற்ற நந்தியின் உருவங்கள் அமர்ந்த கோலத்தில் காணப்படுகின்றன.

உத்திரத்திற்கு மேலேயுள்ள கூரைப்பகுதி தேக்கு மரத்தால் மிக நுட்பமாகச் செதுக்கிய மரக் கூரையைப் போன்று ஆங்காங்கே இடைவெளியும், இடுக்குகளும் விட்டுப் பொருத்தமான இடத்தில் உருட்டுச் சட்டம், சதுரச்சட்டம், முறுக்குச் சட்டம் முதலிய பல் வகையான சட்டங்களை இணைத்து ஆணி அறைந்தது போன்று கற்கூரையாகச் செதுக்கப்பட்டுள்ளது.

தென்முகக் கடவுளுக்குத்தேவகோட்டம் அமைக்க வேண்டும் என்று தான் ஆலய விக்கிரக நிர்மாண ஆயாதி சிற்பக் கலை நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. மண்டபமாக அமைக்குமாறு குறிப்பிடப்பெறவில்லை. எனினும் ஞானத்தைத் தரும் தென்முகக் கடவுளிடம் மிகவும் ஈடுபாடு கொண்டதாலேயே சைவப்பற்றுமிக்க நகரத்தார்கள் மண்டபம் அமைத்துள்ளனர். இம்மண்டபம் நகரத்தார்களின் ஆழமான சிவப்பற்றையும் ஞானத்தேடலையும் விளக்குகிறது எனலாம்.

## 3. 7. 3. திருச்சுவற்றில் உள்ள சிற்றாலயங்களின் அமைப்பு:-

கருவறையைச் சுற்றியுள்ள முதல் திருச்சுவற்றில் (பிரகாரத்தில்) கீழ்க்காணும் சிற்றாலயங்கள் அமைந்துள்ளன.

1. முருகனுடன் அமர்ந்த சிவன் உமை கோயில். (சோமாசுக்கந்தர் கோயில்).
2. விநாயகர் கோயில்.
3. ஆறுமுகர் கோயில்.
4. இலக்குமிகோயில்.
5. பள்ளியறை
6. வயிரவர் கோயில்.
7. சண்டேசர் கோயில்

இந்த ஏழு கோயில்களும் உத்திர மட்ட வேலைப்பாடுகளுடன் அமைந்துள்ளன.

இளையாத்தங்குடி, பிள்ளையார்பட்டி, இரணியூர் ஆகிய மூன்று கோயில்களிலும் கூடுதலாகக் காசி விசுவநாதர் கோயில்

அமைந்துள்ளது. இக் கோயில் விநாயகர்கோயிலுக்கும்ஆறுமுகன் கோயிலுக்கும் இடையில் அமைந்துள்ளது.

இம்மூன்று சிவன் கோயில்களிலும் திருமாலுக்கான சிறு கோயில்கள் இருப்பது குறிப்பிடத்தக்கது ? ஆனால் அவற்றுக்கு உத்திரமட்ட வேலைப்பாடுள்ள கருவறைகள்சிறியதாக இருக்கின்றன. கோயில் மேல் தளத்திற்கு உட்பட்டதாக விமானங்கள் அமைந்துள்ளன. இதனால் இப் பெருமாள் கோயில்கள் பிற்காலத்தே ஏற்பட்டவை என்பது தெரியவருகிறது.

வயிரவன்பட்டியில் உள்ள சண்டேசுவரர் கோயில் தனித்தன்மை மிக்கது. அது குடைவரைக் கோயிலைப் போன்றது மகாபலிபுரத்தில் உள்ள ஒற்றைக்கல் கோயில் அமைப்பில் அமைந்தது இதை ஒற்றைக்கற்றளி என்பர்.

சிவ வழிபாட்டில் முழுமையாக ஈடுபட்டவர் சண்டிகேசுவரர். அவரது சிவவழிபாட்டிற்கு ஊறு விளைவிக்க அவர் தந்தை முயன்ற போது, சண்டேசர் தந்தை என்றும் பாராது அவரது காலை வெட்டினார் என்று கூறுகிறது பெரியபுராணம்.

எனவே ஆழமான சிவப் பற்றுக் கொண்ட நகரத்தார்கள் அவருக்குச் சிறப்புச் செய்யவும், அவர் போலப் பத்தி கொள்ளவும் ஒற்றைக்கற்றளியைத் தோற்றுவித்துள்ளனர்.

''நான் யார் என் உள்ளம் யார் ஞானங்கள்யார் என்னை யாரறிவார்
வானோர் பிரான் என்னை ஆண்டிலனேல் மதிமயங்கி
ஊனார் உடைதலையில் உண்பலிதேர் அம்பலவன்
தேனார் கமலமே சென்றூதாய் கோத்தும்பி''[45]அ

என்று மாணிக்கவாசகர் கூறியது போன்ற கேள்விகளால் கல் போன்ற மனத்தைக் குடைந்தால்அருள்மயமான இறைத்தன்மைக் காணலாம் என்பதற்கு அறிகுறியாகவே கல்லைக் குடைந்து இக் கற்றளியை உருவாக்கினார்கள் என எண்ணத் தோன்றுகிறது.

## 3. 7. 4. மண்டப அமைப்பு:-

கருவறையை அடுத்துள்ள பகுதி அருத்த மண்டபம் என்றும் அதற்கு முன்னுள்ள பகுதி பெரிய மண்டபம் (மகாமண்டபம்) என்றும் பெயர் பெறும்.

அருத்த மண்டபம் கருவறையினைப் போல ஒன்றே கால் அல்லது ஒன்றரைப் பங்கு பரப்பளவுடன் அமைய வேண்டும் என்பது விதி.

மகா மண்டபம் கருவறையினைப்போல மூன்று பங்குஅகலம் இருக்க வேண்டும். அவ்வாறே ஒன்பது நகரக் கோயில்களிலும் இவ்விரு மண்டபங்களும் அமைந்துள்ளன.

## 3 7.5. வாகனம், கொடிமரம், பலிபீட அமைப்பு:-

இன்றியமையாத தெய்வச் சிற்பங்களை அமைப்பது போலவே அத்தெய்வங்களுக்கான வாகனங்களையும் அமைத்தால் தான் கோயில் கட்டட அமைப்பு நிறைவாக அமையும்.

கருவறையில் உள்ள மூலத் திரு உருவின் உயரத்தில் நேத்திரத்திற்குக் கீழ் மட்டம், அல்லது மூக்கு நுனி, மோவாய்க் கட்டை, தோள், மார்பு, நாபி, பாதம் ஆக ஏழுவிதமான அளவில் எந்த அளவில் வேண்டுமானாலும் வாகனத்தையும் பலிபீடத்தையும் வைத்துக் கொள்ளலாம், அவ்வாறு குறிப்பிட்ட உயரத்தில் வாகனத்தை வைப்பதற்காகக் கீழே பீடம் அமைத்துக் கொள்ளலாம்.

இளையாத்தங்குடி, மாற்றூர், வயிரவன்பட்டி, இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய ஊர்களில் உள்ள நந்தி வாகனம்தனிச்சிறப்புடையது. நந்திக்கு மிகப் பெரிய மேடைஅமைத்துள்ளனர். சிற்பச் சிறப்புமிக்க அம்மேடையை நான்கு சிங்கங்களின் சிற்பங்கள் தாங்கியுள்ளன வயிரவன்பட்டியில் நந்திச்சிற்பத்திற்குத்தனிவிமானம் அமைத்துள்ளது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

சிவஞான போதத்தில் ஊறிய நகரத்தார்கள் பதி, பசு, பாசம் என்னும் தத்துவங்களை நன்கு உணர்ந்தவர்கள். இறைவனே பதி என்றும், மக்கள் பசு என்றும், உலக ஆசைகள் (இன்பங்கள்) பாசம் என்றும் அறிந்தவர்கள். எனவே பசுவாகிய தங்கள் நிலை எப்போதும் பதியினை அடையும் வண்ணம் உயரவேண்டும் என்பதற்காகவே காளை (நந்தி) வாகனத்தை உயர்வான இடத்தில் அமைத்துள்ளனர். (நி. ப. எண். 61)

பதி, பசு, பாசத் தத்துவங்களில் நகரத்தார்க்கு உள்ள ஈடுபாட்டை இச்சிம்ம பீடங்களும், விமானமும் உணர்த்துகின்றன.

கொடிமரம்,கோபுர உயரத்திற்கு முக்கால்பங்கு உயர அளவில் அமைக்கப்படும். இதன் மொத்த உயரத்தில் ஐந்தில் ஒரு பகுதி பூமிக்குள் வைத்துஊன்றப்பட்டுள்ளது.ஒன்பதுநகரக் கோயிலிலும் உள்ள கொடிமரம் சமபீடம் என்னும் வகையைச் சார்ந்தது. இக்கொடிமரத்தின் அடிப்பகுதி அகலமாகவும் சில இடங் களில் சதுரமாகவும் இருக்கிறது. இதைச் சுற்றிச் செப்புத் தகடு வேயப் பெற்றுத் தங்க முலாம் பூசப் பெற்றுள்ளது. இதில் உள்ள கனுக்கள் மிக அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன.

மனித உடலுக்கு முதுகெலும்புபோலக்கொடிமரத்துக்குஅதன் தண்டுப்பகுதி இன்றியமையாதது. இதில் உள்ள தண்டுப் பகுதி வீணைத் தண்டைக்குறிக்கும்.இது33வளையங்களைக்கொண்டது

வீணைத் தண்டு மூலப்பகுதியிலிருந்து (மூலாதாரத்திலிருந்து) பிரம மந்திரம் வரை இருப்பது போலக் கொடிமரமும் மூலவரான இலிங்க மட்டத்திலிருந்து விமானத்தின் மேலேயுள்ள தூபிஉயரம் வரை இருக்கும். குண்டலினி சக்தி நாடி வழியாக ஏறிப் பிரம மந்தி ரந்தை அடைவது போலக் கொடிமரத்தில் விடைக் கொடி ஏற்றப் பட்டு விழாக்கள் தொடங்குகின்றன.

## 3. 7. 6. கோபுர அமைப்பு:

நகரக்கோயில்களில் உள்ள இராச கோபுரங்களில் இளையாத் தங்குடி தவிரப் பிற எட்டுக் கோயில் கோபுரங்கள் அனைத்தும் ஐந்து நிலைக் கோபுரங்களே ஆகும். இளையாத்தங்குடி இராச கோபுரம் மூன்று நிலைக் கோபுரம் ஆகும். உத்திர மட்ட வேலைப் பாடுகள் அமைந்த இக்கோபுரங்கள் கோயிலின் அழகை மிகு விக்கின்றன.

உபபீடம் ஐந்து பகுதிகளாகப் பிரித்து அழகுறச் செதுக்கப் பெற்றுள்ளது. பிரதமம், உபானம், கன்டம், பட்டிகை, உபானம் ஆகிய ஐந்து பகுதிகளும் நன்கு பொழியப்பெற்றுள்ளன. அதிட்டா னத்திற்கு மேல் உள்ள கால்பகுதியில் அமைந்துள்ள கோட்டம் சிறப்புற அமைந்துள்ளது. அதன் மேல் உள்ள கபோதகத்தில் உள்ள கூண்டுகள் கண்ணைக் கவர்கின்றன, (நி. ப. எண். 62 முதல் 70 வரை).

இக் கபோதகத்தின் மீதுதான் ஐந்து நிலைக் கோபுரமும் கட் டப்பெற்றுள்ளது. நான்கு கர்ண கூடுகளும் நான்கு பிரசுத்தலமும்

ஒன்று மாற்றி ஒன்றாக மாறிமாறி அமைந்துள்ளன.

சிகரத்தில் உள்ள மைய மகா நாசிக் கட்டடம் சிறப்பாக வடிவமைக்கப் பட்டுள்ளது. தூபிப் பகுதியில் உள்ள சந்திர வளைவும், சிம்ம வல்லாட கட்டடமும் தனிச்சிறப்புடன் அமைந்துள்ளன இரு சந்திர வளைவுகளுக்குள்ளும் அமைந்து விளங்கும் ஐந்து தூபிகளும் செப்புக் கலசங்களைக் கொண்டு விளங்குகின்றன. (படம் எண். 2)

கோபுரம் கட்டப்பெறும் அளவினை அடிப்படையாக வைத்து ஐந்து வகையான கோபுரங்களைக் கட்டுவர். ஏகபூமம், சாந்தீகக் கோபுரம், பவுட்டிகக் கோபுரம், செய்ங்களக் கோபுரம், அற்புதக் கோபுரம், என்றும் ஐந்து வகைகளுள் நகரக் கோயில் இராச கோபுரங்கள் அற்புதக் கோபுர வகையைச் சார்ந்ததாகக் காணப்படுகின்றன. அற்புதக் கோபுரத்திற்குஅகலம் 1 பங்கும் உயரம் 2பங்குமாக அமைவது இலக்கணமாகும். அவ்வாறே ஒன்பது இராசகோபுரங்களும் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

## 3.7.7. புதிய கட்டட அமைப்புகள் -

ஒன்பது நகரக் கோயில்களின் தனித்தன்மையாகக் கட்டடக் கலையில் குறிப்பிடத்தக்கன கீழ்வரும் நான்கு அமைப்பு முறைகளாகும்.

1. பள்ளபத்தி முறை.
2. முழுமையான கற்கூரை அமைப்பு.
3. கருவறையில் கல்லால் அமைந்த நிலவறையும். பாதுகாப்புப் பெட்டக வசதியும்.
4. கற்சாளரங்கள், கற்குழாய், கற்சங்கிலி அமைத்தல்.

### 3.7.7.1. பள்ளப்பத்தி முறை :-

கோயில் கருவறை, சிற்றாலயங்கள், மண்டபங்கள், நந்தி, பலிபீடம் ஆகியவற்றை உயர்த்திக் கட்டித் திருச்சுற்றினை மட்டும் பள்ளமாக அமைத்துக் கட்டுவது பள்ளப்பத்தி எனும் நகரத்தார் பாணிக் கோயில் அமைப்பு முறையாகும்.

. நகரத்தார்கள் காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த காலத்தில் கடல் கோளினால் வீடு முதலிய பலவற்றை இழந்தவர்கள்.

ஆகவே பழைய பயத்துடனும், தற்காப்பு முன்னெச்சரிக்கை நடவடிக்கையுடனும் அவர்கள் தங்களது வீட்டைக் கட்டும் போதும் தளத்தை உயர்த்தியே கட்டுவது அவர்கள் மரபு. அதே மரபினை ஒன்பது நகரக் கோயில்களிலும் கைக்கொண்டு தெய்வங் களுக்குத் தளத்தை உயர்த்திக் கட்டியுள்ளனர்.

## 3.7..7.2 முழுமையான கற்கூரை அமைப்பு:-

தஞ்சைப் பெரிய கோயில் போன்ற சோழர் காலக் கோயில் களில் திருச்சுற்று வெட்ட வெளியாக மேலே கூரை ஏதும் இன்றி இருப்பதைக் காணலாம்.

அபராசித பல்லவன் (கி. பி. 885 - 903) காலத்தில்தான் கருவறை, அருத்த மண்டபத் தேவகோட்டங்களில் தெய்வங்கள் முதன்முறையாக நிறுவப்பட்டன. அந்த ஐந்து தேவகோட்டங் களிலும் தட்சிணாமூர்த்திக்கு முன்பாக அமர்ந்து தியானம் செய்ய முதன் முதலில் கற்பலகைகளால் அமைந்த கூரை வேயப்பட்டுள்ளது. பிறகு மழை, வெயில் போன்ற இயற்கை சக்திகளிலிருந்து கோயிலுக்கு வருவோரையும் சிற்பங்களையும் காப்பதற்காகக் கோயில் திருச்சுற்று முழுவதும் தூண்கள் அமைக்கப் பெற்று, மேலே கற்பலகைகளால் திருச்சுற்று மண்டபம் கட்டப்பட்டுள்ளது. இப்புதிய அமைப்பு ஒன்பது நகரக் கோயில்களிலும் அமைந்துள்ளது.

## 3.7.7.3. நிலவறையும் பாதுகாப்புப் பெட்டகமும்:-

கோயிலில் உள்ள கற் சிற்பங்களையும், செப்புத் திருமேனி களையும், தங்க வைர நகைகளையும் திருடர்களிடமிருந்து காப்ப தற்காக அருத்த மண்டபத்தில் கருங்கல்லால் அமைக்கப்பெற்ற நிலவறையினைக் (Underground) கட்டியுள்ளனர்.

இளையாத்தங்குடி, வயிரவன்பட்டி, நேமம், சூரைக்குடி ஆகிய ஊர்க்கோயில்களில் இந்நிலவறை அமைப்பு காணப்படுகிறது.

விலையுயர்ந்த நகைகளை மட்டும் பாதுகாத்துத் திருவிழாக்களுக்கு மட்டும் எடுத்துப் பயன்படுத்துவதற்காக அருத்த மண்டபத்தில் கல்லாலேயே அமைக்கப்பெற்ற பாதுகாப்புப் பெட்டகத் தைக் கட்டியுள்ளனர்.

## 3. 7. 7. 4. கல்லால் சாளரம், குழாய், சங்கிலி அமைத்தல்:-

கல்லினால் அமைந்த சாளரம், அருத்த மண்டபத்தில் காற்றோட்ட வசதிக்காகக் கட்டப்பெற்றுள்ளது. திருட்டுப் பயத்தை இச்சாளரம் ஒழிப்பதோடு காற்றோட்ட வசதி பெருக அறிவியல் உதவுவதையும் எடுத்துக் கூறுகிறது. இத்தகு கற்சாளரம் பிள்ளையார்பட்டி மருதீசர் அருத்த மண்டபத்தில் அமைந்துள்ளது. (நி. ப. எண். 71).

மழைநீர் கோயிலின் உள்ளே பெருகி விழுந்து துன்புறுத்தா மலிருக்கத் தூணுக்கான கல்லைக் குடைந்து கற்குழாயை உருவாக்கி அமைந்துள்ளனர். இச்சிறப்பு இரணியூரில் காணப்படுகிறது.

நந்தியின் சிற்பத்துக்கு மேலே ஐந்து வளையங்களால் அமைந்த தொடர் சங்கிலியின் சிற்பம் காணப்படுகின்றது.

இது வயிரவன்பட்டி, இலுப்பைக்குடி, சூரைக்குடி ஆகிய ஊர்களிலும் நாம் காணும் அழகு மிக்க கட்டடக் கலைச் சிறப்பாகும்.

## 3.8. ஓவியக் கலை :-

''கடவுள் கணக்கற்ற தோற்றங்கள் வாயிலாக வெளிப்படுகிறார். அவரது ஒவ்வொரு தோற்றமும் என் வணக்கத்துக்கு உரியது. அதனால் நான் மரவணக்கத்தை ஆதரிக்கிறேன்' என்றார் காந்தியடிகள். இத்தகைய மரவணக்கம் தான் சிற்ப வழிபாட்டிற்கும் கோயில் சார்ந்த ஓவியக் கலைக்கும் ஆணிவேராகும்.[46]

பழந்தமிழர்கள் செழித்துவளர்ந்த மரங்களின் நிழலில் கூடித் தங்கள் பொதுக் காரியங்களினைக் கவனித்தனர். அவற்றின் அடியிலேயே தங்கள் பொது வழிபாட்டிற்குரிய பலிபீடத்தை அமைத்தனர். பலிபீடத்தின் மீது வண்ணம் கொண்டு தங்கள் கடவுளின் உருவத்தை எழுதினர். ஓவிய வடிவிலான கடவுளையே முதலில் வணங்கினர். பிறகுதான்மழை வெயிலில் ஓவியம் சிதைந்ததனால் சிற்பங்களைச் செதுக்கி வழிபடலாயினர். அவ்வாறு எழுதப் பெற்ற கடவுள்ஓவியத்தை 'எழுதணி கடவுள்'' என அகநானூறு [47] குறிப்பிடுகின்றது.

கோயிலின் கருவறையில் தெய்வச்சிற்பம் இடம் பெற்றதும் கோயில் வெளிச்சுவர்களில் ஓவியங்கள் வரையப்பட்டன. காவிரிப் பூம்பட்டினத்துக் கோயிலின் வெளிச் சுவர்களில் வரையப் பெற்ற

ஓவியங்கள் தேர் ஓடுதலால் புழுதி அடைந்தன எனப் பட்டினப் பாலை குறிப்பிடுகின்றது.

> ''தேரோட துகள்கெழுமி
> நீராடிய களிறுபோல
> வேறுபட்ட வினையோவத்து
> வெண்கோயிலின் மாசூட்டும்'' [48]

என்ற வரிகள் குறிப்பிடத்தக்கன. காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து வந்து நகரத்தார்களும் தாங்கள் உருவாக்கிய கோயில்களில் ஓவி யங்கள் இடம் பெறச் செய்துள்ளனர்.

நகரக் கோயில்களில் இடம் பெற்றுள்ள ஓவிபங்களைக் கீழ் வருமாறு ஐந்து வகைளாகப் பகுத்துக் காணலாம்.

1. தலபுராண ஓவியங்கள்.
2. பிற புராண ஓவியங்கள்.
3. காப்பிய ஓவியங்கள்.
4. இறைவன் திருஉருவ ஓவியங்கள்.
5. பாலுறவு ஓவியங்கள்.

இளையாத்தங்குடி, வயிரவன்பட்டி, இலுப்பைக்குடி இரணியூர் ஆகிய ஊர்க்கோயில்களில் அதிகமான ஓவியங்கள் உள்ளன. இளையாத்தங்குடியில் உள்ள ஓவியங்களை வரைந்த ஓவியர் சிதம்பரத்தைச் சேர்ந்த பி. நடேசபிள்ளை ஆவார். பிற ஊர்க் கோயில்களில் ஓவியம் வரைந்த ஓவியர்களைப்பற்றிய குறிப்பு ஏதும் காணப்படவில்லை.

## 3. 8. 1. தலபுராண ஓவியங்கள் :

தலபுராணம் பெற்ற கோயில்கள் இளையாத்தங்குடி, வயிரவன்பட்டி, இலுப்பைக்குடி ஆகிய மூன்று ஊர்களேயாகும். எனினும் இலுப்பைக்குடியில் திருவிளையாடற்புராணம் மட்டுமே ஓவியங்களாக வரையப்பட்டுள்ளன வயிரவன்பட்டியில் மட்டுமே அதிகமான தலபுராண ஓவியங்கள் தொடர் படக்கதையாக இடம் பெற்றுள்ளன. (நி. ப. எண். 72).

இளையாத்தங்குடி மகாமண்டபத்தின் மேற்கூரையில் ''இந்தி ராதிதேவர்கள் இளையாத்தங்குடி வந்து கைலாய நாதரையும்

நித்தியகல்யாணி அம்மனையும் தெரிசனம் செய்து கொண்டது'' என்ற தொடருடன் ஒரே ஒரு ஓவியம்மட்டும் இடம் பெற்றுள்ளது இது ஒன்றுதான் இளையாத்தங்குடித் தலபுராணத்தின் அடிப் படையில் அமைந்துள்ள ஓவியமாகும். (நி. ப. எண். 73).

வில்வமரத்தடியில் 'கைலாசநாதரின் இலிங்கமும் நித்திய கல்யாணி அம்மனும் உள்ள இவ்வோவியம். பண்டைக்காலக் கோயிலின் அமைப்பிற்குச் சான்றாக அமைந்துள்ளது.

வயிரவன்பட்டியில் கொடிமரத்திற்கு எதிரே உள்ள முதல் திருச்சுற்றில் வடமேற்கூரையில் வயிரவன் கோயில் தலபுராண ஓவியங்கள் முப்பத்தேழு தொடர் ஓவியங்களாகக் காணப்படு கின்றன. தென் மேற்கூரையில் இராமாயணக் காட்சிகள் 43 ஓவியங்களாகக் காணப்படுகின்றன. (நி, ப. எண். 74).

தேவேந்திரன் வயிரவன்பட்டிக்கு வந்தது, இலிங்கத்தை வழிபட்டது, வயிரவரின் தோற்றம், அசுரனுடன் நடந்த போரில் வயிரவர் கும்பனை வென்றது முதலிய தலபுராண ஓவியங்கள் அழகுற வரையப்பட்டுள்ளன. சுரதபதி என்னும் தேவடியாள் பற்றிய கிளைக் கதையும் ஓவியமாக வரையப்பட்டுள்ளது. ஒவ் வொரு ஓவியத்திற்குக்கீழும் விளக்கமாக அக்காட்சி எழுதப் பட்டுள்ளது.

**சான்றுகள்:-**

1. ஆதிகாலத்தில் பிரம்மாவின் சபையில் தேவர்கள் இருடிகள் தவத்துக்கு இடம் வேணும் என்று தோத்திரம் செய்த இடம்.

2. பிரம்மதேவர் தற்பையை விடுவிக்க அது அமர்ந்த இடத் தில் நயமி சாரண்யவனம் உண்டாகி, ரிசிகள், தேவர்கள் தவம் செய்யும் போது சூதபுறாணிகர் வந்து வயிரவ தீர்த்தத்தின் பெருமையைச் சொன்னஇடம்.

3 தீர்த்தனிசேடம். வயிரவ சேத்திரத்தில் தேவர்கள் கேட்டுக்கொண்டபடி வயிரவர்சூலத்தால் தீர்த்தம் உண்டாக்கின இடம்.

4. திருப்பத்தூர் தளத்தில் சிவபெருமானிடம் நடித்து வந்த சுரதபதி என்னும் தேவடியாள் மிகுந்த பாவத்தைச் செய்து ........ மண் பிறந்த இடம்.

5. சுறதபதி என்னும் தேவடியாள் இறந்துபோய் நாய் நரிகள் சவத்தை பிடுங்கி அவடத்தில் வைரவ தீர்த்தத்தில் மூழ்கியது. கழுகு மூன்று வர அதன் சிறம் துள்ள தண்ணீரில் விழுந்த இடம்.

6. சுறதபதி என்னும் தேவடியாள் எம படாள் கொண்டு போக வயிரவ தீர்த்தம் பட்டவிசேடத்தால் அவளை சிவகனங்கள் விமானத்தில் வைத்துக்கொண்டு போன இடம்.

7. கைலாயத்தில் சுவாமியை தேவடியாள் தரிசனம் செய்த இடம்.

8. பிரம்மாவும், விட்டுணுவும் தரிசனம் செய்த இடம்,

ஓவியங்களில் உள்ள வடிவஅமைப்பும், வண்ணக் கலவையும் நாயக்கர் பாணி ஓவியக் கலையில் வளர்ச்சியாகக் காணப்படுகின்றன. ஒவ்வொரு ஓவியத்தில் கீழும் உள்ள விளக்கத்தொடர் எழுத்துக்கள் ஓவியத்தில் காலத்தை உறுதிப்படுத்துகின்றன. அதன் மூலம் இவ்வோவியங்களின் காலம் கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முன்பகுதி எனலாம்.

## 3. 8. 2. பிறபுராண ஓவியங்கள் :

திருவிளையாடற்புராண ஓவியங்கள் இளையாத்தங்குடி, இலுப்பைக்குடி ஆகிய ஊர்க் கோயில்களில் காணப்படுகின்றன.

கல்யானைக்குக் கரும்பு தின்னக் கருணை செய்த படலக் காட்சி இளையாத்தங்குடியில் மகா மண்டப மேற்கூரையில் வரையப்பெற்றுள்ளது. வெளிமண்டபத்தில் மீனாட்சியின் பிறப்பு, திக் விசயம், கல்யாணம் ஆகிய மூன்றும் வரையப் பெற்றுள்ளன. (நி ப. எண். 75).

இந்திரன் பழி தீர்த்த படலம், வெள்ளையானைச் சாபம் தீர்த்த படலம், திருநகரங்கண்ட படலம், தடாதகைப் பிராட்டியார் திரு அவதாரப் படலம், திருமணப் படலம், வெள்ளி அம்பலத் திருக்கூத்து ஆடிய படலம், குண்டோதரனுக்கு அன்னம் இட்ட படலம், அன்னக்குழியும் வைகையும் அழைத்த படலம், எழுகடல் அழைத்த படலம், மலயத்துவசனை அழைத்த படலம், உக்கிர பாண்டியன் திரு அவதாரப் படலம், உக்கிர பாண்டியனுக்கு வேல் வளை செண்டு கொடுத்த படலம், கடல் சுவறவேல்விட்ட படலம்,

இந்திரன் முடிமேல் வளை எறிந்த படலம், மேருவைச் செண்டால் அடித்த படலம், மறை பொருள் உணர்த்திய படலம், மாணிக்கம் விற்ற படலம், முதலிய படலங்கள் தொடர்ந்து இலுப்பைக்குடியில் ஓவியமாக்கப்பட்டுள்ளன. (நி. ப. எண். 76).

## 3.8.2.1. ஓவிய விளக்கம் :-

இவ்வழகிய ஓவியங்களின் மேலே தேவேந்திரன் வெள்ளியம்பலத்தில் நடனம் ஆடியது, எழுகடலை அழைத்தது, வருணன் விட்ட கடலினை இறைவன் வற்றச் செய்தது, இந்திரன் முடி தகர்த்தது, மகாமேருவைச் செண்டால் அடித்தது, சிவபெருமான் மாணிக்கம் விற்றது, வயிற்றுக்குப் பொருமினது, சுவாமி வளையல் விற்றது, அட்டமாசித்தி சாபமிட்டது, கங்காதரனாக வந்து ரிஷி பத்தினிகளை மயக்கியது தட்சினாமூர்த்தியாக அருள் பாலித்தது இரசவாதம் செய்தது, சிவலிங்கத்தைப் பூசை செய்தது, வண்ணிக் கிணறு சிவலிங்கம் காட்டியது, சமணரைக் கழுவில் ஏற்றியது, ஓலைகளை அக்கினியில் போட்டது, வெந்ததை வைகையில் போட்டது, கூன் பாண்டியனின் கரம் நீங்கியது, பிட்டுக்கு மண் சுமந்தது, பாண்டியன் பிரம்பால் அடித்தது முதலிய எல்லாத் தலைப்புக்களும் முறையாக எழுதப்பட்டுள்ளன. இவற்றைக் கொண்டு திருவிளையாடற் புராணக் காட்சிகளைத் தொடர்ச்சியாக அறிந்து கொள்ள முடிகிறது. ஓவியம் வரைந்த காலத்தைக் கணிக்கவும் ஓவியங்களுக்குக் குறிப்பாக எழுதப்பட்டுள்ள எழுத்துக்கள் துணை செய்கின்றன.

இவ்வாறு எழுத்தாலும் ஓவியத்தாலும் பரஞ்சோதியாரின் திருவிளையாடற் புராணம் சுவர் முழுவதும் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. இவை நகரத்தார்களின் மகத்தான ஓவியக்கலைக்குச் சான்றாக விளங்குகின்றன.

## 3. 8. 2. 2. பல்வகை வண்ணங்கள் :-

இவ்வோவியங்களில் நீலம், சிவப்பு, பச்சை, கறுப்பு வெள்ளை மஞ்சள், அரக்கு, ஆகிய வண்ணங்கள் பயன் படுத்தப் பெற்றுள்ளன. சிவன், உமை, திருமால், இந்திரன் நான்முகன் ஆகிய தெய்வங்களும், கந்தர்வர், காணவர், விண்ணவர், என் திசைக் காவலர், அரசன், அமைச்சர் அரசி, அடியார், ஆடவர், மகளிர் ஆகிய உருவங்களும் உரிய முறையில் பொருத்தமான வண்ணம் கொண்டு தீட்டப்பட்டுள்ளன.

## 3.8.2.3 காலம் :-

இலுப்பைக்குடிக் கோயில் வடிவுடையம்மன் சந்நிதியில் கபோதகக் கூடுகளில் மூன்று தனங்களுடன் மீனாட்சி ஈசனுடன் போர் தொடுக்கும் காட்சியும் இறுதியில் மூன்றாவது தனம் மறையும் காட்சியும் சிற்பமாக உள்ளன. இவையும் இன்னும் பல சிற்பங்களும் இங்குள்ள ஓவியக் காட்சிகளுடன் ஒப்பிடத்தக்கன இச்சிற்பமும் ஓவியமும் சமகாலத்தன. எனவே இக்கோயில் நகரத்தாரால் திருப்பணி செய்யப்பட்ட காலத்தில் இவ்வோவியங்கள் தீட்டப்பட்டுள்ளன என்பது வெளிப்படுகிறது. ஓவியத்தின் காலம் கி. பி. 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதி ஆகும் என்பார் திரு. மா. சந்திரமூர்த்தி.[49]

## 3 8. 2. 4. நகரத்தார் கலைப்பாணி :-

மதுரை அங்கயற்கண்ணம்மை ஆலயத்தில் பொற்றாமரைக் குளத்தைச் சுற்றியுள்ள சுவர் முழுதும் நாயக்கரும் மராட்டியரும் திருவிளையாடற் புராணத்தை அழகிய ஓவியமாகத்தீட்டியுள்ளனர் அவை நாயக்கர் மராட்டியர் கலைப்பாணிகளில் அமைந்துள்ளன. இலுப்பைக்குடி ஓவியம் முந்திய பாணியில் தொடர்ச்சிக்கு ஒரு குறிப்பிடத்தக்க சான்று எனலாம். நகரத்தார் கால ஓவியப்பாணி மலர்வதற்கு 'இலுப்பைக்குடி ஓவியங்கள்' ஒரு முன்னோடியாக அமைந்து விட்டன.

கட்டடக்கலை, சிற்பக்கலை மற்றும் ஓவியக்கலையில் உள்ள நகரத்தார் கலைப்பாணி பிற்கால நாயக்க மரபின் தொடர்ச்சி எனலாம். பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் அதற்கு முன்பிருந்த சேதுபதி சிவகங்கை மரபுகளைச் சிலவகைகளில் இது இணைத்துக்கொண்டது.

மதுரையில் காணப்படும் திருவிளையாடற்புராண ஓவியத்தின் நயம் இந்த அழகிய ஓவிய வரிசையில் தொடரப் பெற்றிருக்கிறது என்பார் திரு. மா. சந்திரமூர்த்தி.

## 3.8.3. காப்பிய ஓவியங்கள் :-

இராமாயண ஓவியங்கள் 48 காட்சிப் படங்களாக வயிரவன் பட்டியில் வரையப்பட்டுள்ளன. திருச்சுற்றின் தென்புறத்தில் கொடிமரத்தின் அருகில் தொடர் படக் கதைபோல வரையப் பெற்

றுள்ளன. இராமன் பிறப்பு முதல் அனுமன் சீதையைக் காண்பது வரையான 43 படங்கள் வரையப் பெற்றுள்ளன. இராமாயணம் முழுமையும் வரையும் திட்டம் யாது காரணத்தாலோ, பாதியிலேயே நின்று போயிருக்கிறது அதே பாணியில் தொடர்ந்து இராமாயண ஓவியங்கள் இடம் பெறச் செய்தால் எடுத்த பணி முழுமையான நிறைவு பெறும். (நி. ப. எண். 77).

மகாபாரதத்திலிருந்து அமுதம் கடைந்தது பற்றிய ஓவியம் மட்டும் வடிவுடைநாதர் திருமுன்பாக வரையப் பெற்றுள்ளது. பாற்கடலைக் கடைந்த போது வந்த ஆலகால விடத்தை உண்டவனுக்கு முன்னிலையில் இவ்வோவியம் வரையப் பெற்றுள்ளது மிகப் பொருத்தமானதே.

அருச்சுனனுக்கு அத்திரம் வழங்கிய காட்சியினை மகா மண்டபத்தில் உள்ள ஓவியம் அழகுறச் சித்திரிக்கிறது.

பகீரதனுக்காகக் கங்கையை வரவழைத்த காட்சி வெளிமண்டபத்தில் இடம் பெற்றுள்ளது. பகீரத முயற்சி செய்தால் உலகில் எல்லா வளத்தையும் இறைவன் அருள்வான் என்பதை உணர்த்த இவ்வோவியத்தை வெளிமண்டபத்தில் வரைந்துள்ளனர் போலும்.

வள்ளி தினைப்புனம் காத்த ஓவியம் கந்தபுராணக்காட்சியாக உள் மண்டபத்தின் மேற்சுவரில் காணப்படுகிறது.

### 3.8.4. இறைவன் திருஉருவ ஓவியங்கள் :-

இறைவனின் பல்வேறு தோற்றங்களை இளையாத்தங்குடிக் கோயிலில் வரைந்துள்ளனர். தோற்றங்கள் பலவானாலும் இறைவன் ஒருவனே என்ற கருத்தை மெய்ப்பிப்பதற்காக இவ்வோவியங்களை வரைந்துள்ளனர் எனலாம். அங்கு காணப்பெறும் ஓவியங்களின் பட்டியல்.

1. நடராசர் சிவகாமி அம்மன்.
2. இலக்குமி சரசுவதி இலிங்கம் விநாயகர்.
3. அன்னபூரணி அம்பாள்.
4. இடபாரூடர்.
5. கைலாசநாத சுவாமி
6. நித்திய கல்யாணி அம்மன்.

7. காமாட்சி அம்மன்.
8. வயிரவர்.
9. கயலெட்சுமி அன்னபூரணி சரசுவதி.
10. விநாயகர் சோமாசுக்கந்தர் ஸ்ரீ சுப்பிரமணியர் இலட்சுமி.

மேற்கண்ட ஓவியங்கள் அனைத்தும் மிகப் பெரிய அளவில் வரையப்பட்டுள்ளன. வண்ணச் சேர்க்கை கண்களை முத்தமிடுகின்றன இன்று தான் வண்ணம் பூசியது போன்ற புதுமைப் பொலிவு இவ்வோவியங்களின் தனிச்சிறப்பாகும்.

## 3. 8. 5 பாலுறவு ஓவியங்கள்:-

கணவனும் மனைவியுமாக நான்குசுவர்களுக்குள் அனுபவித்து உணரும் இவ்வாழ்க்கையின் பாலுறவுக் காட்சிகள் வயிரவன் பட்டிக் கோயிலில் இடம் பெற்றுள்ளன.

அடிமுடிகாட்டா நாதரின் முன்புறம் உள்ள பகுதியின் மேற்கூரையில் ஆண் பெண் ஆகியோரின் பாலுறவு உறுப்புக்கள் தெரியும் வண்ணம் நான்கு ஓவியங்கள் வரையப் பெற்றுள்ளன. தாடியுடைய ஒரு முனிவரிடமிருந்து ஒரு பெண் பாலுறவு கொள்ளவெறுப்புடன் நீங்குவது போன்ற காட்சியும் ஆறுமுகன் சிற்றாலயத்தை ஒட்டிக் காணப்படுகிறது.

கோயிலின் தென்புறம் உள்ள வாகன மண்டபத்தின் தென் கிழக்குப் பகுதியின் மேற் கூரையில் கணவனும் மனைவியுமாக எதிரெதிரே அமர்ந்த நிலையிலும், ஒருவர் பின்ஒருவராகக்குனிந்த நிலையிலும் பாலுறவு கொள்ளும் காட்சி ஓவியமாக வரையப் பெற்றுள்ளது.

திருச்சுற்றின் தென்பகுதியில் மேலியுள்ள மேற்கூரையின் சாளரத்தின் கீழ், கணவனும் மனைவியுமாகப் படுத்துள்ள நிலையில் பாலுறவு கொள்ளும் காட்சி மிகப் பெரிய ஓவியமாக வரையப் பட்டுள்ளது.

இவ்வகையான ஓவியங்கள் ஒன்பது நகரக்கோயில்களுள் வேறு எங்கும் காணப்பெறவில்லை இலுப்பைக்குடியில் உள்ள தேர்ச் சிற்பங்களில் இவ்வகையான சிற்பங்கள் காணப்படுகின்றன

தெய்விகமான பேரின்பத்தை நோக்கி ஆற்றுப்படுத்த வேண்டிய கோயிலில் சிற்றின்ப ஓவியங்களை ஏன் வரைந்தார்கள் என்பது ஆய்விற்குரியது.

வயிரவன் பட்டிப் புள்ளிகள் இருவரை இது குறித்து வினாவிய போது அவர்கள் அளித்த விடை சாலப் பொருத்தமாக அமைந்திருந்தது.[50]

"அறுபது ஆண்டுகளுக்கு முன் பாலுறவு பற்றிய செய்திகள் மணமகனுக்குக் கூடத் தெரியாது. பெண்களுள் பலர் இதனைப் பாவம் என்று கருதினர். இறைவழிபாட்டிற்குப் பாலுறவு தடையானது என்றும் கருதினர் பாலுறவு கொள்வது தவறான தீய பழக்கம் என்ற கருத்தும் நிலவியது. எனவே மணமானவர்கள் பல மாதங்கள் பாலுறவின்றியே வாழ்ந்துள்ளனர். அதுபற்றித் தெரிந்து உறவு கொள்ள முயன்றால் பெண்கள் பெருங் கூச்சலிட்டுக் கத்தி ஊரைக் கலக்கியதும் உண்டு. இது தவறான ஒழுக்கமன்று. வயிற்றுப் பசியைப் போல இது உடற்பசியாகும். கணவனும் மனைவியும் ஒன்றாகிக் கலந்து வாழ்வதுவே வாழ்வின் பயனாகும். இதற்காகவே ஆண்டவன் பாலுறுப்புகளைப் படைத்துள்ளான். சிற்றின்பத்திலிருந்துதான் பேரின்பத்திற்கு முயல வேண்டும். கோயில் வழிபாட்டிற்காகக் கணவன் மனைவியின் இல்லற வாழ்க்கை பாதிக்கக் கூடாது. அவர்கள் கூடி இன்புற்று வாழப் பல வழிகள் உள்ளன. என்பதையே இவ்வோவியங்கள் காட்டுகின்றன. பாலியல் ஒழுக்கம் கேடானதன்று. மனித இயற்கையேஎன்பதை உணர்த்துவதே இவற்றின் நோக்கமாகும் என்றார் ஒருவர்.

"அக்கால மணமக்கள் பலர் பாலுறவின்றி வாழ்ந்து மலடிப் பட்டம் கட்டிக் கொண்டதும் உண்டு. எனவே படைப்பின் நோக்கத்தை முழுமையாக உணர இவ்வோவியங்கள் உதவும். வளமை வழிபாட்டின் ஒரு பகுதியாகவே இவ்வோவியங்கள் அமைந்துள்ளன, பிற கோயில்களில் இரண்டு பாம்புகள் பின்னிப் பிணைந்திருப்பதைக் குறியீடாக உணர்த்தினார்கள். இக்கோயிலில் மக்கள் இன்புற்று வாழ இது போன்ற ஓவியங்களை வரைந்துள்ளனர்" என்றார் இரண்டாமவர்.

பாலுறவுகொள்வது தவறானஒழுக்கம் என்ற கருத்துஇன்றும் சிலரிடம் உள்ளது. இன்றியமையாத சில இடங்களில் கணவன் மனைவி இருவரும் ஒன்றாக இருக்கக் கூடாது என்று இன்றும் சிலர் தடுத்து விடுகின்றனர். ஆனால் கோயம்புத்தூர், பழனி போன்ற ஊர்களில் உள்ள வயல்களிலும் தோட்டங்களிலும் நன்கு விளைச்சல் பெருகப் புது மணமக்களை அங்கு தங்கச் செய்கின்றனர். கணவனும் மனைவியுமாக இன்புற்ற இடத்தில்

தான் எல்லா வளமும் பெருகும் என்பது வளமை வழிபாட்டின் ஒரு கொள்கையாகும். எனவே இல்லற இன்பத்தை நன்கு அனுபவித்துப் பின்னர் இறையியல் இன்பத்தையும் பெற வேண்டும் என்பதே இவ்வோவியங்களின் நோக்கமாதல் வேண்டும் சிற்றின்பத்திலிருந்து பேரின்பத்திற்கு அழைத்துச் செல்லும் பலகணியாக இந்தப் பாலுறவு ஓவியங்கள் அமைந்துள்ளன.

சொல்லித் தெரிவதில்லை மன்மதக் கலை என்பார்கள். அறுபது ஆண்டுக்கு முன்பு நகரத்தாருள் பலருக்குச் சொல்லாமையால் இக்கலை தெரியவில்லை. எனவே திருமணமானதும் முதலிரவன்று மணமக்களைப் படுக்கை அறைக்கு அனுப்பும்போது மேலோட்டமாக இது குறித்துச்சொல்லி அனுப்பியதாகவும் தெரிய வருகின்றது, இதனாலேயே நகரத்தார் பகுதியில் முதலிரவு நாளினைச் ''சொல்லிக் கொடுத்து அனுப்புதல்'' என்று வழங்குகின்றனர். மணமகனுக்கு நண்பனும். மணமகளுக்கு நாத்தனாரும் சொல்லிக் கொடுத்து அனுப்பியுள்ளார்கள்.

தங்கள் கோயில் புள்ளிகள் குறைந்துவிடக்கூடாது என்றும், பாலுறவு கொள்ளாமலேயே மலடிப் பட்டத்தைச் சூடிக்கொள்ளக் கூடாது என்றும் இன்புற்று வாழவே இறைவன் இணையாகப் படைத்தான் என்றும், பாலுறவின் மூலம் சிற்றின்பத்தை நுகர்ந்து பின்னர் பக்தியின் மூலம் பேரின்பத்தை அனுபவிக்க வேண்டும் என்றும் வயிரவன்கோயில் காரியக்காரர்கள் எண்ணியிருப்பார்கள் போலும். அதனால்தான் கோயிலினுள் பாலுறவு ஓவியங்களை இடம் பெறச் செய்தனர் என்று கருத இடம் உள்ளது.

சமணசமயம் இப்பகுதியில் பரவிய காலத்தில் ஆடல், பாடல், நாடகம், நாட்டியம் போன்றவையும் பாலுறவும் காமத்தைத் தூண்டுவன என்றும் துறவின் மூலமே வீடுபேறு அடைய முடியும் என்றும் சமணர்கள் கூறிய கருத்திற்கு எதிர்ப்பாகவே சைவ சமயத்தினர் இவ்வகை ஓவியங்களைக் கோயில்களில் வரையச் செய்தனர். இல்லறத்திலிருந்து கொண்டே வீடுபேறு அடைய முடியும் என்ற கொள்கையை நிலைநாட்ட இவ்வகை ஓவியங்களை வரைந்தனர் என்பார், திரு. ச. தண்டபாணி தேசிகர்.[51]

தேசிகரின் இக்கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கதாக அமைந்துள்ளது.

## 3 9. முடிபுகள் :-

3. 9. 1. மனித உடம்பின் உருவமாகவே கோயில்கள் அமைக்கப் பட்டுள்ளன.

3. 9. 2 1. அப்பர் கூறும் கோயில் வகைகளுள் பிள்ளையார் பட்டித் தேசிவிநாயகப் பிள்ளையார் கோயில் தூங் கானைமாடக்கோயில் அமைப்பு வகையைச்சார்ந்தது பிறஎட்டுக் கோயில்களும் ஸ்ரீ கோயில் வகையைச் சார்ந்தவையாகும்.

3. 9 2. 2 விமான அமைப்பு முறையில் நோக்கினால் அனைத்து நகரக்கோயில்களும் திராவிடக்கோயில் வகையைச் சார்ந்தனவேயாகும்.

3. 9. 2. 3. கோயில் கட்டப் பயன்படும் பொருட்களை அடிப் படையாக வைத்துக் கூறினால் அனைத்தும் சங்கீர் ணக் கோயில் அமைப்பாகவே காணப்படுகின்றன.

3. 9. 3. 1. நகரத்தார் கோயிற்பணி வருமாறு : சிவனின் அரு உருவத் தோற்றமான இலிங்கம் கருவறையில் இருக்கும், அம்மன், வயிரவர், சோமாசுக்கந்தர், விநாயகர், முருகன், கயலக்குமி, சண்டேசர், ஆகியோருக்கான ஏழு சிற்றாலயங்கள் அதைச்சுற்றி அமைந்திருக்கும். தட்சிணாமூர்த்தி, நவகோள்கள், அறுபத்து மூவர், சூரியர்,- சந்திரர் ஆகியோருக் கெனத் தனித்தனி மண்டபங்கள் அமைந்திருக்கும்.

3. 9. 3. 2. இளையாத்தங்குடி, பிள்ளையார்பட்டி, இரணியூர் ஆகிய மூன்று ஊர்க் கோயில்களிலும் காசி விசுவ நாதர் சிற்றாலயம், திருமாலுக்கான சிற்றாலயமும் கூடுதலாகக் காணப்படுகின்றன.

3. 9. 4 1. ஒன்பது நகரக்கோயில்களிலும் விநாயகர்,சிவலிங்கம், அம்மன், வயிரவர், முருகன், நடமாடும் விநாயகர், தட்சிணாமூர்த்தி, அடிமுடி காணா நாதர், பிரமன், துர்க்கை, இலக்குமி, நவகோள்கள், சனி ஈசுவரன், சூரியன், சந்திரன், சண்டேசர் ஆகியோரது கற்சிற் பங்கள் காணப்படுகின்றன. வயிரவன்பட்டிக் கோயி லில் மட்டும் சரசுவதியின்கற்சிற்பம் காணப்படுகிறது.

3.9.4.2. இராமர், சீதை, இலக்குமன், அனுமன், பூதேவி, கருடாழ்வார், ஆகியோரது கற்சிற்பங்கள் இளையாத் தங்குடி, வேலங்குடி. இரணியூர்க் கோயில்களில் பிற் காலச் சேர்க்கையாகக் காணப்படுகின்றன

3.9.4.3. மூலவர் சிற்பத்தின் அளவினை 25 (பஞ்ச விம்சப்) பொருத்தங்களைப் பார்த்து முடிவெடுத்துள்ளனர். அம்மூலவரின் சிற்பத்திற்கு ஏற்றாற்போலவே பிற தெய்வச் சிற்பங்களையும் வடிவமைப்பர்.

3.9.4.4. இலுப்பைக்குடியில் உள்ள தான்தோன்றி நாதரின் இலிங்கம் சுயம்புலிங்கம் என்னும் வகையைச் சார்ந் தது. பிற எட்டுக் கோயில் இலிங்கங்களும் மானுட இலிங்கங்களாகும்.

3.9.4.5. அம்மன் சிற்பங்களுள்சூரைக்குடிக் கோயிலில்உள்ள ஆவுடை நாயகியின் சிற்பம் மட்டுமே நான்கு திருக் கைகளுடன் அமைந்துள்ளது.

3.9.4.6. கல்வெட்டு உணர்த்தும் காலத்தாலும் (கி. பி,6 ஆம் நூற்றாண்டு).இரு திருக்கரங்களுடன் அமைந்தசிற்ப இலக்கணத்தாலும், பிள்ளையார்பட்டித் தேசிவிநாய கரின் சிற்பமே, இந்தியாவில் நமக்குக் கிடைத்துள்ள விநாயகர் சிற்பங்களுள் மிகத் தொன்மையான ஒன்று என்பது ஆய்வாளரின் கருத்து.

3.9.4.7. நான்கு வகையான தட்சிணாமூர்த்தி வடிவங்களுள் ஞான தட்சிணா மூர்த்தி சிற்பமே ஒன்பது நகரக் கோயில்களிலும் காணப்படுகிறது.

3.9.4.8 நகரத்தார், உலகத் துன்பங்களிலிருந்து விடுபட இறைவனைநாடியவர்கள்.எனவே அத்தத்துவத்தை உணர்த்தும் சின் முத்திரை கொண்ட தட்சிணா மூர்த்திக்குத் தனி மண்டபம் கட்டியுள்ளனர்.

3.9.4.9. அசுரர்களை அழிக்க விநாயகர், வயிரவர், முருகன் ஆகியோர் தோன்றினர் என நம்புவதால் இம்மூன்று தெய்வங்களையும் நகரத்தார் அதிகமானசிறப்புடன் வழிபடுகின்றனர். சூரைக்குடியில் உள்ள வயிரவர் சிற்பத்தில் சூலத்திற்குப் பதிலாகக் 'கதை' ஆயுதம் காணப்படுகிறது.

3.9.4.10. கோயிலில் பார்க்குமிட மெங்கணும் இறைவனின் திரு உருவங்கள் நீக்கமற நிறைந்திருப்பதாகக் கருவறைச் சுவர், அதன் கூடுகள், தூண்கள், ஊருணிப் படிக்கட்டுகள் ஆகிய எல்லா இடங்களிலும் சிற்பங்களை வடித்துள்ளனர்.

3.9.4.11. பிற கோயில்களில் காண்பதற்கு அரிதான எட்டுத் திக்குக்குரிய கடவுள்களான இந்திரன், அக்கினி. எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன். ஈசானன் ஆகியோருடைய சிற்பங்கள் இரணியூர் இராசகோபுரத்தளத்தின் சுற்றுச் சுவரில் காணப்படுகின்றன.

3.9.4.12 இலுப்பைக்குடித் தான்தோன்றீசுவரர் அருத்த மண்டபத்தில் உள்ள விநாயகரின்சிற்பம் 3 செ.மீ. சதுரத்திற்குள் மிக நுட்பமாகச்செதுக்கப் பட்டுள்ளது.

3.9.4.13. நகரத்தார் பாணிச் சிற்பக் கலையில் வயிரவன் பட்டிக் கோயிலில் உள்ள சொக்கஞ்செட்டியாரின் சதாசேவைச் சிற்பம் குறிப்பிடத்தக்கது. நகரத்தாரின் பொதுமைப் பண்புகள் அச்சிற்பத்தில் இயற்கையாக அமைந்துள்ளன.

3.9 5.1. ஒன்பது நகரக் கோயில்களிலும் பிரதோட விநாயகர், முருகன், வள்ளி, தெய்வயானை, நடராசர், சிவகாமி, மாணிக்கவாசகர், அப்பர், சுந்தரர், திருஞானசம்பந்தர், சோமசுக்கந்தர், சந்திரசேகரர், கௌரி. துர்க்கை, அத்திரதேவர், சண்டேசர் ஆகியோரின் செப்புத் திருமேணிகளைக் காணமுடிகிறது.

3.9.5.2 இரணியூரில் மட்டும் சிறப்பாகப் பிட்சாடனர், பசுபதிலிங்கம்,பத்மலிங்கம், முத்துக்கந்தர்,வீரபாகு, நடமாடும் விநாயகர், தட்சிணாமூர்த்தி,அடிமுடிகாணா நாதர், பிரம்மா ஆகியோரின் செப்புத் திருமேனிகள் கூடுதலாக உள்ளன.

3.9.5.3. நகரக் கோயில்களில் உள்ள மிகப் பழமையான செப்புத் திருமேனிகளாக–நேமம் கோயிலில் உள்ள சந்திரசேகரர், கௌரி திருமேனிகளும், பிள்ளையார்

பட்டியில் உள்ள சந்திரசேகரர், கௌரி, தனி அம்மன்கள், நடராசர் திருமேனிகளும் சூரைக்குடியில் உள்ள சோமாசுக்கந்தர் திருமேனியும் காணப்படுகின்றன.

3. 9, 6. 1 ஒன்பது நகரக் கோயிலின் கோபுரங்கள் விமானங்கள், திருமதில், திருநிலைகள் ஆகியவற்றில் ஆயிரக்கணக்கான சுதைச்சிற்பங்கள் உள்ளன. வயிரவன்பட்டிக் கோயிலில் அதிகமான சுதைச்சிற்பங்கள் காணப்படுகின்றன. இதை அடுத்துப் பிள்ளையார்பட்டி, இலுப்பைக்குடி, இரணியூர்ச் சுதைச் சிற்பங்களைக் குறிப்பிடலாம்.

3. 9. 6. 2 கோபுரத்தின் இரண்டாவது மாடத்தில் பாலியல் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. அதற்கு மேலே அமைந்துள்ள மாடங்களில் தெய்வச் சிற்பங்கள், தேவ கணங்கள் மட்டுமே காணப்படுகின்றன. சிற்றின் பத்தில் தொடங்கி இறைவனுடன் இரண்டறக் கலக்கும் பேரின்பத்தில் முடிவதே நம் வாழ்க்கை என்ற கருத்தைக் கோபுரச்சுதைச் சிற்பங்கள் நுட்பமாகக் கூறுகின்றன. இது பண்பாடுமிக்க இலட்சிய வாழ்க்கைக்கு வழிகாட்டியாக அமைந்துள்ளது.

3. 9. 7. 1. தலவிருட்சங்களை வழிபடும் பண்டைய மரபு ஒன்பது நகரக் கோயில்களிலும் காணப்படுகிறது.

3. 9. 7. 2. மரச் சிற்பங்கள், நிலைக் கதவிலும், தேரிலும் அதிகமாக உள்ளன. வாகனங்கள், பல்லக்கு, ஊஞ்சல் கேடகம், சகடை ஆகிய மரச்சிற்பங்களும் ஒன்பது நகரக் கோயில்களில் காணப்படுகின்றன இலுப்பைக்குடித் தேரில் உள்ள சிற்பங்கள் மிகச் சிறப்பானவை.

3. 9. 7. 3. ஒன்பது நகரக் கோயில்களிலும் இடபம் (காளை), மயில், பெருச்சாளி, அன்னம், காமதேனு, குதிரை, சிம்மம், யாளி ஆகிய வாகனங்கள் உள்ளன பூதம், கமலம், யானை ஆகிய மூன்று வாகனங்களும் பிள்ளையார்பட்டியில் கூடுதலாகக் காணப்படுகின்றன

3. 9. 8. 1. கோயிலில் உள்ள சிவலிங்கத்தின் உயரம், படிமானம்எனப்படும் இப்படிம உயரத்தைப்போல மூன்று பங்கு அளவில் கருவறையில் பரப்பளவு அமைந்துள்ளது இலுப்பைக்குடித் தான்தோன்றீசுவரர் இலிங்கம் 44 செ. மீ. உயரமே இருப்பதால், விதிவிலக்காகப் பெரிய கருவறை அமைக்கப்பட்டுள்ளது பிள்ளையார்பட்டிக் கற்பக விநாயகரின் கருவறை குடைவரைக்கோயில் என்பதால் இவ்விலக்கணத்திற்கு ஏற்ப அமையவில்லை

3 9. 8. 2. இரணியூர்க் கோயிலில் கருவறை முழுவதும் சலவைக் கல்லால் அமைக்கப்பட்டது.

3. 9. 8. 3. ஒன்பது நகரக் கோயில்களிலும் மூலவரின் கருவறைகள் முகபத்திர வேலைப்பாட்டுடன் அழகாக அமைந்துள்ளன. அம்மன் கருவறையும் வயிரவர் கருவறையும் இரட்ட பஞ்சாங்க வேலைப்பாட்டுடன் அமைந்துள்ளன. பள்ளியறை, சண்டேசர் சிற்றாலயம் ஆகியன உத்திரமட்ட வேலைப்பாட்டுடன் அமைந்துள்ளன.

3. 9 8. 4. கருவறையின் வெளிப்புறத்தில் ஐந்து தேவகோட்டங்கள் காணப்படுகின்றன. தேவகோட்டத்தின் அமைப்பு ஒரு சிறு கோயிலைப் போலப்பதினைந்து சிறு உறுப்புகளுடன் அழகாக அமைக்கப்பட்டுள்ளது

3. 9. 8. 5. தட்சிணாமூர்த்தியின் தேவகோட்டம் ஒன்பது நகரக் கோயிலிலும் அதிகமான சிறப்புகளுடன் தனி மண்டபமாகக் காணப்படுகிறது. இலுப்பைக்குடி, பிள்ளையார்பட்டித் தட்சிணாமூர்த்திமண்டபங்கள் மிகச் சிறப்பானவை.

3. 9. 8. 6. மூலவர், அம்மன், வயிரவர் ஆகியோருக்கான விமானங்கள் மூன்று நிலை விமானங்களாகக் காணப்படுகின்றன. சோமாசுக்கந்தர், விநாயகர், முருகன், இலக்குமி, பள்ளியறை ஆகியனவற்றுக்குரிய விமானங்கள் இருநிலை விமானங்களாக உள்ளன.

3.9.8.7. கருவறையினைப் போல ஒன்றரை பங்கு அகலத்தில் அருத்த மண்டபமும், மூன்று பங்கு அகலத்தில் மகா மண்டபமும் அமைந்துள்ளன.

3. 9. 9. வயிரவன் பட்டியில் உள்ள சண்டேசர் சிற்றாலயம் ஒற்றைக் கல்லைக் குடைந்து செய்யப்பட்ட ஒற்றைக் கற்றளி என்பது குறிப்பிடத்தக்கது.

3. 9. 10. இளையாத்தங்குடி தவிரப் பிற எட்டுக்கோயில் இராச கோபுரங்கள் அனைத்தும் ஐந்து நிலைக் கோபுரங்களாகும். இளையாத்தங்குடி இராச கோபுரம் மூன்று நிலைக் கோபுரம் ஆகும் உத்திரமட்ட வேலைப்பாடுகள் இக்கோபுரங்களில் அமைந்து அழகை மிகுவிக்கின்றன. இவை அற்புதக் கோபுர வகையைச் சார்ந்தவைபாகக் காணப்படுகின்றன.

3. 9. 11 1. ஒன்பது நகரக் கோயில்களிலும் இடம் பெற்றுள்ள ஓவியங்கள் தலபுராணம், பிற புராணங்கள், காப்பியம், இறை உருவம், பாலுறவு. ஆகிய ஐந்தின் அடிப்படையிலேயே வரையப்பட்டுள்ளன. இளையாத்தங்குடி, வயிரவன்பட்டி, இலுப்பைக்குடி, ஆகிய மூன்று ஊர்க்கோயில்களில் மட்டுமே அதிகமான ஓவியங்கள் உள்ளன. அவற்றுள் வயிரவன் பட்டி, இலுப்பைக்குடி ஓவியங்கள் நாயக்கர், மராட்டியர் கலைப்பாணியின் வளர்ச்சியாகக் காணப்படுகின்றன.

3. 9. 11. 2. வயிரவன்பட்டி ஓவியங்களிலும், இலுப்பைக்குடித் தேர்ச் சிற்பங்களிலும் பாலியல் காட்சிகள் காணப்படுகின்றன. சமண சமயக் கருத்திற்குஎதிராக, இல்லறத்திலிருந்துகொண்டே வீடுபேறு அடையமுடியும் என்ற கொள்கையை நிலைநாட்ட இப்பாலியல் காட்சிகளை அமைத்துள்ளனர்.

3. 9. 12. ஒன்பது நகரக் கோயில்களின் தனித் தன்மையாகக் கட்டடக் கலையில் குறிப்பிடத்தக்கவை பள்ளப்பத்தி முறை, முழுமையான கற்கரை அமைப்பு, கருவறையில் கல்லால் அமைந்த நிலவறை, பாதுகாப்புப் பெட்டக வசதி, கற்சாளரங்கள், கற்குழாய், கற்சங்கிலி அமைத்தல் ஆகியனவாகும்.

## குறிப்புகள்:

### நகரக் கோயில்களின் அமைப்பு முறை.

1. இலஞ்சி ஆ. சொக்கலிங்கம், ஆலயங்களின் உட்பொருள் விளக்கம், பகுதி 1. ப. 22.
2. சர்வஞானோத்தரம், பாடல் 59, இலஞ்சி ஆ. சொக்கலிங்கம், மு.நூ., ப. 33இல் மேற்கோளாக வந்துள்ளது.
3. இரா. நாகசாமி, 'கோயில்கள்'; கையேடு, பக். 155-156.
4. மேலது, ப. 156.

4அ அப்பர், அடைவு திருத்தாண்டகம் 2-சே. எம். சோமசுந்தரம், சோழர் கோயிற் பணிகள், ப.5இல் மேற்கோளாக வந்துள்ளது

4ஆ தி பா. கணேசமூர்த்தி. ஆலய விக்கிரக நிர்மான ஆயாதி சிற்ப ரகசியம்.

5. சா.கணேசன், ''நக்ரத்தார் வரலாறு'', கோட்டையூர் திருக்குட நீராட்டுமலர், ப. 60.
6. நேர்காணல் - இரா. நாகசாமி – 21. 5. 1981.
7. 1. தொ. மு பாசுக்கரத் தொண்டைமான், ''பிள்ளையார்பட்டிப் பிள்ளையார்''; வேங்கடம் முதல் குமரி வரை – பக். 29-31.

   2. என்.கிருட்ணசாமி, ''பிள்ளையார்பட்டி பல்லவர் காலக் குடை வரைக் கோயில்'' -தினமணி சுடர் அனுபந்தம்-7.9. 1980 ப 2.
8. 1. சா. கணேசன், ''பிள்ளையார்பட்டி தலவரலாறு'' –ப. 7.
   2. (1) இரா. நாகசாமி, தமிழகக்கோயிற் கலைகள்– ப.87.
      (2) இரா. நாகசாமி, ஓவியப்பாவை-ப.29.
   3. KR. Srinivasan, Temples of South India, p.53.
9. 1936 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண் 156,
10. சா. கணேசன், மு. நூ , ப. 42.
11. நேர்காணல்- இரா. நாகசாமி, 21. 5. 1981.
12. வை கணபதி சிற்பி, சிற்பச் செந்நூல், ப.11.
13. கே எசு. சுப்பிரமணிய சாத்திரி (மொ. பெ. ஆ)., சரசுவதீய சித்திர கர்ம சாத்திரம், ப. 161
14. தி. இராசமாணிக்கம், இந்து சமயக் கடவுள்களின் திருவுருவங்கள் ப. 43.

15. D.N.Shukla, Vastu Sastra, Vol ii. p.296.

15அ. சுப. அண்ணாமலை, ப.ஆ.சுப. அண்ணாமலை,''வயிரவன் கோயில் வரலாறு''.நகர வயிரவன் கோயில் திருக்குட நன்னீராட்டு விழாச் சிறப்பு மலர்- பக்கம் என் இல்லை.

16. வை. கணபதி சிற்பி. மு.நூ.'ப.82.

17. நேர்காணல், திரு. அருணகிரிச் செட்டியார் -27. 1. 1986.

18. வை. கணபதி சிற்பி, ''திருக்கோயில்''.மதுரை கும்பாபிடேக மலர், ப. 136.

19. D N.Shukla, Op cit.,p.264.

20. கே. வாசுதேவ சாத்திரி, (மொ. பெ. ஆ) சகளாதிகாரம் பக். 108-110.

21. மா. சந்திரமூர்த்தி, ''இலுப்பைக்குடிக் கோயிலின் கலைச் சிறப்பு'' இலுப்பக்குடி திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா மலர், 1985 பக்க எண் இல்லை.

22. பரி. 8-126.
திருமுருகு. 225.
பெரும். பாண்,75

23. ந.மு.வேங்கடசாமி நாட்டார், (உரையாசிரியர்)., திருவிளையாடற் புராணம், கூடற்காண்டம் ப. 134.

24. இரா. இளங்குமரன், மதுரைக் கோயில் வரலாறு, பக்.13-15.

25. கம்பராமாயணம், மருத்துமலைப் படலம், பாடல்கள் 111-112

26. இரா. இளங்குமரன், மு.நூ., ப.69.

27 கே. எசு சுப்பிரமணிய சாத்திரி (மொ.பெ.ஆ)., மு நூ., பக். 267-271.

28. கம்பராமாயணம், இரணியன் வதைப் படலம், பாடல் 153.

29. D. N. Shukla, Op.cit., pp. 337-341.

30. Ibid., p, 256.

31. கே.வாசுதேவ சாத்திரி (மொ. பெ.ஆ)., மு.நூ., பக்.96-98.

32. இரா.நாகசாமி, மு.நூ., ப.67.

33. மேலது.

34. மேலது.ப.96.

35. கே.எசு. சுப்பிரமணிய சாத்திரி,(மொ.பெ.ஆ).,மு நூ. பக். 193-194.

36. கே.வாசுதேவ சாத்திரி (மொ.பெ.ஆ).,மு.நூ., பக் 72-79.

37. கே.எசு.சுப்பிரமணிய சாத்திரி (மொ.பெ.ஆ).,மு.நூ., பக் 170-192.

38. D.N. Shukla, Op cit.,p 257.

38அ. நீ வை. வேங்கட சுப்பிரமணிய சாத்திரி, (மொ.பெ ஆ)., மானசாரம் பக்.170 -175.

39. கே. வாசுதேவ சாத்திரி (மொ.பெ.ஆ).,மு நூ.,பக்.60-72.

40. கே.எசு. சுப்பிரமணிய,சாத்திரி (மொ.பெ.ஆ).,மு. நூ. பக். 138-169.

41. வை. கணபதி சிற்பி. மு.நூ., ப.125.

42. கே.வாசுதேவ சாத்திரி(மொ.பெ.ஆ).,மு.நூ., பக்.108-110.

43. கே.எசு. சுப்பிரமணிய சாத்திரி, (மொ. பெ ஆ).,மு.நூ., பக். 114-115.

44. கே. வாசுதேவ சாத்திரி (மொ.பெ ஆ).,மு.நூ., பக். 114-115.

44அ நீ வை. வேங்கட சுப்பிரமணிய சாத்திரி (மொ.பெ.ஆ)., மு.நூ. பக். 257-262.

45. தி.பா. கணேசமூர்த்தி, மு.நூ., ப.35.

45அ மாணிக்கவாசகர். திருவாசகம், திருக்கோத்தும்பி, பாடல் 120

46. மே. சு. இராமசாமி, ''கோயில் வளர்த்தகலைகள்''-ஓவியம் பி. டி. இராசன், ப.ஆ , மதுரை ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் மகா கும்பாபிடேக மலர், ப.100.

47. அகம். 167.

48. பட். பாலை. 47-50.

49. மா. சுந்தரமூர்த்தி. ''தான்தோன்றி ஈசுவரர் கோயில் திருவிளையாடற் புராண ஓவியங்கள்'', இலுப்பக்குடி திருக்குட நன்னீராட்டு விழா மலர்- பக்கம் எண் இல்லை.

50. அவர்கள் தங்கள் பெயர்களை வெளியிட வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டதால், இங்கு அவர்கள் பெயர்களை வெளியிட இயலவில்லை.

51. நேர்காணல்.-ச. தண்டபாணி தேசிகர்,- 12.9.1987.

# 4. வழிபாட்டு முறை

வழிபாடு இரண்டு வகைப்படும் ஒன்று அகவழிபாடு; மற்றொன்று புறவழிபாடு புறவழிபாட்டில் தேர்ந்த பிறகே அகவழி பாட்டிற்குச் செல்லும் தகுதி வந்தமையும்.

நாயன்மார்கள், ஆழ்வார்கள், துறவிகள் முதலியோர் இறை வனைத் தம் மனக்கோயிலில் வைத்தே வழிபாடு செய்தனர். அவ் வாறு அகவழிபாடு செய்வதற்குரிய தகுதி பெறுவதற்குப் புறவழி பாடு உதவுகின்றது.

''மூர்த்தி, தலம், தீர்த்தம், முறையால் தொடங்கினர்க்கோர்
வார்த்தை சொல்லச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே''

என்று கூறியுள்ளார் தாயுமானவர் அதன்படி மூர்த்தி, தலம், தீர்த்தம், இவற்றை வழிபடுவோருக்கு நற்குரு தரிசனமும், ஞான மும் வாய்க்கும் என்பது உறுதி.

இப்புறவழிபாட்டிற்காகவே கோயில்கள் கட்டப்பெற்றுள்ளன அன்பெனும் பத்தியைக் கொடுத்து. அருள் எனும் சத்தியைப் பெறு வதே வழிபாட்டின் நோக்கமாக அமைந்துள்ளது.

இறைவன் தந்த உடம்பைக் கொண்டு அவனை வழிபடுவது நமது கடமை என்பதைத் திருநாவுக்கரசர் மிக அழகாகப் பாடியுள் ளார். அப்பாடல்,வழிபாடு எவ்வாறு அமைய வேண்டும் என்பதை நன்கு கூறுகின்றது. அப்பாடல்

''வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச்சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே![1]''

மேற்கண்ட பாடலில் உள்ள வழிபாட்டு நெறிகளைக் கைக்கொள் ளக் கோயில் வகை செய்து தருகின்றது.

கோயில் வழிபாடு மூன்று வகையாகப் பகுத்துரைக்கப்பட் டுள்ளது. அவையாவன:

1. தினசரி வழிபாடு (நித்தியம்).
2 திருவிழா வழிபாடு (நைமித்திகம்).
3 வீடு பேற்றுக்கான வேள்வி வழிபாடு (காமியம்).

## 4. 1. 1. தினசரி வழிபாடு:-

நாள் வழிபாட்டினை ஐந்து வேளை வழிபாடகப் பகுத்துள்ள னர் அவையாவன:

1. விடிகாலை வழிபாடு (திருவனந்தல்)
முற்பகல் 6-6.30 மணி.
2. காலை வழிபாடு (கால சந்தி)
முற்பகல் 8.30-9.30 மணி
3. நண்பகல் வழிபாடு (உச்சிக் காலம்)
முற்பகல் 11 –12 மணி.
4. மாலை வழிபாடு (சாயரட்சை)
பிற்பகல் 5 - 6.30 மணி.
5. இரவு நேர வழிபாடு (அர்த்த சாமம்)
இரவு 8- 9 மணி.

## 4. 1. 2. வழிபாட்டு முறை:-

மேற்கண்ட ஐந்து வேளைப் பூசைகளும் கீழ்வரும் வழிபாட்டு முறையில் நிகழ்த்தப்படுகின்றன:

காமிக ஆகமத்தில் உள்ள வழிபாட்டு முறைகளே ஒன்பது நகரக் கோயில்களிலும் நடைமுறையில் உள்ளன. காமிக ஆகமம் தான் வழிபாட்டினை, நாள் வழிபாடு (நித்தியம்).விழா வழிபாடு (நைமித்திகம்) வீடு பேற்றுக்கான வேள்வி வழிபாடு (காமியம்)என மூன்று வகைப்படுத்திக் கூறுகிறது.[1] அ

மனிதன் தான் உடுப்பதும், உண்பதும், கேட்பதும், காண் பதும், களிப்பதும் ஆண்டவனின் அருளால் என்று கருதினான்.

எனவே அவையனைத்தையுமே கடவுளுக்குப் படைத்துப் பின்னரே தான் கொண்டான்.[2] இந்தப் படைப்பு நிகழ்ச்சிகளே வழிபாட்டு முறைகளாக அமைந்தன என டாக்டர் இரா நாகசாமியும், மா.சந்திரமூர்த்தியும் கருதுகின்றனர்.

அரசனுக்குச் செய்யப்பட்ட மரியாதை முறைகளே ஆண்டவனுக்கும் செய்யப்பட்டன. அவையே வழிபாட்டு நிகழ்சிகளாக அமைந்தன என்பாரும் உளர் பதினாறுவித உபசாரங்களில் (சோடசஉபசார அங்கங்களில்)இடம் பெறும் குடை,கொடி,விசிறி, சுருட்டி, அபதாகிரி, சாமரம், ஆருக்கிய பாத்திரம் ஆகியனவற்றை நோக்கும் போது இக் கூற்றின் உண்மை புலனாகிறது.

இறைவனையே தங்களது அரசனாகக் கொண்டு புள்ளிவரி செலுத்தும் நகரத்தார்களின் ஒன்பது நகரக் கோயில்களிலும் இந்த அரச உபசாரக் கருவிகள் வழி பாட்டில்பயன்படுத்தப்படுகின்றன.

காலை, பள்ளியறைத் திறப்புப் பூசை முதல், இரவு பள்ளியறைக்குத் திருக்காப்பிடும் வரை (கதவு மூடும் வரை) நடைபெறும் வழிபாட்டுமுறைகள் இறைவனின் படைத்தல் காத்தல், அழித்தல்,மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழில் முறைகளை விளக்குகின்றன.

வழிபாட்டில் பயன்படுத்தபடும் அபிடேகப்பொருட்கள்படைத்தல் தொழிலையும், உணவுப் பொருட்கள் காத்தல் தொழிலையும், பலி போடுதல் அழித்தல் தொழிலையும், தீபம் மறைத்தல் தொழிலையும், வேள்வி (ஹோமம்) அருளல் தொழிலையும், உணர்த்துகின்றன. எனவே வழிபாட்டில் இடம்பெறும் ஒவ்வொரு சடங்கும் இறைவனது. தத்துவக் குணங்களை உணர்த்து வனவாகவே கருதலாம்.

ஒவ்வொரு வேளை வழிபாடும் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்படும். சாங்கம், உபாங்கம், பிரத்தியங்கம் என வழிபாடு மூன்று வகைப்படும்.

திருமுழுக்கு (அபிடேகம்), திருவடி கழுவுதல் (பாத்தியம்), பருகக் கொடுத்தல் (ஆசமனீயம்), தலையில் நீர் தெளித்தல் (அர்க்கியம்). ஆடை அணிவித்தல் (வஸ்திரம்). அணிகள் அணிவித்தல் (ஆபரணம்), மணப் பொருள் அணிவித்தல் (சந்தனம்), மலரிடம் (புஷ்பம்) என சாங்கம் எட்டு வகைப்படும்.

நறும்புகையிடல் (தூபம்), ஒளி காட்டுதல் (தீபம்), திருநீறு அணிவித்தல் (விபூதி), திருச் சாந்து அணிவித்தல் (குங்குமம்), குடை பிடித்தல், கண்ணாடி காட்டுதல் சாமரம் வீசுதல், விசிறி வீசுதல், வியஞ்சனம்படைத்தல், ஆடுதல்பாடுதல் என உபாங்கம் பத்து வகைப்படும்.

பலிபோடுதல், வேள்வி செய்தல், (ஹோமம்), சிறப்பு வழி பாடு, (நித்தியோத்ஸவம்), படைத்தல், நிறைவு செய்தல், வாழ்த் துப் பாடுதல் எனப் பிரத்தியங்கம் ஆறு வகைப்படும்.

இந்த இருபத்து நான்கு வகையானவழிபாட்டு முறைகளையும் செய்வது முழுமையான வழிபாடு (சாங்கோபாங்க பிரத்தியங்க பூசை) எனப்படும்.

ஒன்பது நகரக் கோயில்களிலும் நாட்டிய நிகழ்ச்சி ஒன்றைத் தவிர 23 வகையான வழிபாட்டுப் பகுதிகளும் தினசரி வழிபாட்டில் மேற்கொள்ளப் படுகின்றன.

அபிடேகப் பொருட்களாகக் காமிகாகமம் மூன்று வகைகளைக் கூறுகிறது. அவையாவன:

1. இருபத்தைந்து பொருட்களால் அபிடேகம் செய்தல்.
2. பதினாறு பொருட்களால் அபிடேகம் செய்தல்,
3. பன்னிரண்டு பொருட்களால் அபிடேகம் செய்தல்.

தினசரி வழிபாட்டில் நல்லெண்ணெய், பஞ்சகவ்யம், பஞ்சா மிருதம், நெய், பால், தேன், கரும்புச்சாறு, பழரசம், இளநீர், சந்தனம், கும்ப நீர் என்று பன்னிரெண்டு நீர்ப் பொருட்களேபயன் படுத்தபடுகின்றன. கரும்பு கிடைக்காத நாட்களில் பதினொருநீர்ப் பொருட்களே அபிடேகத்திற்குப் பயன்படுத்துகின்றன. திருவிழா நாட்களில் மட்டும் இருபத்தைந்து வகையான நீர்ப்பொருட்களால் அபிடேகம் நடத்தப்படுகிறது.

அபிடேகம் எவ்வளவு நேரம் நடந்தாலும் நகரக் கோயில் களில் மெய்யன்பர்கள் அனைவரும் காத்திருந்து அபிடேகத்தைக் கண்டு களிக்கின்றனர். அபிடேகக் காட்சி காண்பதற்கு இனியது எனினும் அதனால் என்ன பயன் என்பதைத் தற்பொழுது ஆராய்ந்து கண்டுள்ளனர். அவ்வாராய்ச்சிக் கட்டுரையின் ஒரு பகுதியைக் கீழே காண்போம்.[3]

## 4.1.3. விஞ்ஞான விளக்கம் :-

குற்றாலம் பராசக்தி ஆராய்ச்சிக்குழு அறிக்கை :- கோயில்களில் நாள்தோறும் செய்யப்படும் அபிடேகம், அர்ச்சனை, ஆராதனை ஆகியவை விஞ்ஞானத்தையும் மெய்ஞ்ஞானத்தையும் இணைக்கின்றன.

ஆலயத்தில் மூலவிக்கிரகத்திற்கு அபிடேகம் செய்யும்போது என்னென்ன மாறுபாடுகள் நிகழ்கின்றன என்பதை நாங்கள் அறிய விழைந்தோம். எனவே ஒரு கற்சிலைக்குத் தண்ணீர், எண்ணை, பால், தேன், தயிர், குங்குமம், விபூதி ஆகியவை கொண்டு அபிடேகம் செய்தோம். அப்பொழுது அந்தச் சிலையில், மேலே சொன்ன ஒவ்வொரு பொருளுக்கும் மின்கடத்துந்திறன் மாறுபடுவதை நாங்கள் கண்டோம். அவற்றைக் கீழ்க்காணும் அட்டவணையில் காட்டியுள்ளோம்.

### அபிடேகத்தின் போது சிலையின் மின் கடத்தும் திறன் மாறும் முறை

| அபிடேகப் பொருள் | மின்னோட்டம் | சிலையின் மின்கடத்தும் திறன் |
|---|---|---|
| அபிடேகத்திற்குமுன் | | |
| உலர்ந்த நிலையில் சிலை | 0.001 | 0.1 |
| தண்ணீர் | .028 | 2.8 |
| எண்ணெய் | .022 | 2.2 |
| பால் | 0 2 | 20 |
| தயிர் | 0.7 | 70 |
| சந்தனம் | 0.15 | 15 |
| தேன் | 0.10 | 10 |
| குங்குமம் | 0.036 | 3.6 |
| விபூதி | 0.018 | 1.8 |
| அலங்காரம் (பட்டுத்துணி) | 0.025 | 2.5 |
| தசாங்கம் | 0.007 | 0.7 |
| கற்பூரம் | 0.007 | 0.7 |
| பூ | 0.018 | 1.8 |

தயிர், பால், தண்ணீர், சந்தனம் ஆகிய அபிடேகங்களின் போது சிலையின் மின் கடத்துந்திறன் அதிகமாயுள்ளது.

எண்ணெய், தேன் விபூதி, குங்குமம், பூ ஆகியவற்றால் அபிசே கம் செய்யும்போது சிலையின் மின் கடத்துந்திறன் குறைந்தாலும் நிலையாக உள்ளது குறிப்பிடத்தக்கது. அது போலவே தீப ஆரா தனை செய்யும் போதும் சிலையின் மின் கடத்துந்திறன் நிலை யாக இருப்பது கவனிக்கத்தக்கது.

மேலும் அபிடேகப் பொருட்களான குங்குமம், பால், தயிர், தேன், நீர் ஆகியவற்றின் பி.எச். மதிப்பும் அளவிடப்பட்டுள்ளன. ஒரு திரவத்தின் மதிப்பு அதிகரிப்பது, அதன் எதிர் மின்னூட்டம் அதிகரிப்பதையே குறிக்கும். குங்குமம், சந்தனம், மஞ்சள், தண்ணீர் ஆகியவை அதிக மதிப்புள்ளவை. இவற்றைக் கொண்டு அபிடேகம் செய்வதால், கர்ப்பக்கிரகத்திலுள்ள காற்று மண்டலத் திலும் எதிர் மின்னூட்டங்கள் அதிகரிக்கும்.

## அபிடேகப் பொருட்களின் பி. எச். மதிப்பு :-

| பொருள் | பி. எச். மதிப்பு |
|---|---|
| தண்ணீர் | 5.0 |
| பால் | 6.0 |
| தயிர் (கலக்கிய நிலையில்) | 4.0 |
| சந்தனம் | 5.5 |
| தேன் | 2.5 |
| எண்ணெய் | 3.0 |
| குங்குமக் கரைசல் | 7.5 |
| மஞ்சள் கரைசல் | 7.0 |
| பாலும் தேனும் கலந்த கலவை | 4.0 |

(மேலே உள்ள பி.எச். மதிப்புகள் கடையில் வாங்கிய பொருட்க ளின் பி.எச் மதிப்புகளே ஆகும்).

அபிடேகம், அர்ச்சனையைத் தொடர்ந்து தீப ஆராதனை செய்யும் போது காற்று மண்டலத்தில் என்ன மாறுபாடு ஏற்படுகி றது என்றும் சோதனை செய்தோம்.

காற்று மண்டலத்தில் ஒரு மின் தேக்கியை அமைத்து, அதற் குக் குறிப்பிட்ட மின்னூட்டத்தைக் கொடுத்து, அதை அறிந்து குறித்துக்கொண்டோம். தூபம் தீபம் காட்டும் போது காற்று மண்ட லத்தில் ஏற்படும் மாறுபட்டால், மின் தேக்கியின் மின்னூட்டம் மாறுபடுவது சோதனை மூலம் தெரியவருகிறது.

இதிலிருந்து கர்ப்பக்கிரகத்திலுள்ள காற்று மண்டலம் ஓரளவு அயனியாக்கப்படுவது தெளிவாகிறது. பி.எச்மதிப்பு அதிகம்உள்ள பொருட்கள் கொண்டு, அபிடேகம் செய்யும் பொழுது காற்று மண்டலம் அதிக எதிர் மின்னூட்டம் பெறுவது தெரியவருகிறது.

மேலும், ஈரப்பதம் உள்ள காற்று மண்டலத்தில் பிராண வாயு அழுத்தம் அதிகரிக்கிறது என்றும், அந்தக் காற்று மண்டலம் பிராண வாயு மூலக்கூறுகளை அதிக அளவில் பெறுவதால் அக் காற்று உடலுக்கு நன்மை பயக்கும் என்பதும் தெரிகிறது.

மேலும், ஒலியின் திசைவேகம் ஈரப்பதமிக்க காற்றில் அதிகமாக இருக்கும் என்பது விஞ்ஞான உண்மை.

எதிர் மின்னூட்டமும், ஈரப்பதமும் உள்ள காற்று மண்டலம் கர்ப்பக் கிரகத்துள் அமைந்துள்ளது அந்தக்காற்றுமண்டலத்துள் ஓம் என்ற ஒலியுடன் (பிரணவமந்திரம்)அர்ச்சனைசெய்யும்போது அவ்வொலி விக்கிரகத்தில் பட்டு எதிரொலிக்கப் படுகிறது. இதனால் அக்காற்று மண்டலம் பெரும் அலைவும் ஒத்தெதிர்வும்பெறுகிறது. இக்காற்று மண்டலத்தின் அயனியாக்கப்பட்ட மூலக் கூறுகள், எதிரேயுள்ள பத்தர்களை அடையும் போது, அவர்களுக்கு உள்ளவளத்திற்கு அடிப்படையான உடல் நலத்தை அளிக்கும் என்பது விந்தையல்ல. இது விஞ்ஞானம் தந்திடும் விளக்கமாகும்.

ஆலயங்களுக்குச் செல்பவர்கள் மேலே சொன்ன பலனைத் தொடர்ச்சியாகப் பெறுவதற்காகத்தான், ஆலயங்களில் ஆறுகால அபிடேகங்களும் அர்ச்சனைகளும் ஆராதனைகளும் நடத்தி வருகிறோம். அப்பொழுதுதான் அந்த விக்கிரகத்தில் தொடர்ந்து அதிர்வுகள் நிலைத்து இருக்கும். இவ்வதிர்வுகள் விக்கிரகத்துக்கு அடியிலுள்ள தாமிரத்தகட்டில் ஆற்றலாகச் சேமிக்கப்படும் என்பதை நிருபிக்க ஆராய்ச்சிகளை இக்கல்லூரி தொடரும்.

இச் சோதனைகளையும் சிந்தனைகளையும் தொகுத்துக் காணும்போது ஆலயத்துள் உள்ள கர்ப்பகிரகம் ஒரு ஒத்தெதிர்வுக் கலமாகவும், மூல விக்கிரகம் ஒலி அலைகளின் எதிரொலிப்பானாகவும் மூலவிக்கிரகத்தின் அடியிலுள்ள இயந்திரத் தகடு ஆற்றல் சேமிப்புக் கலமாகவும், அயனியாக்கப்பட்ட காற்று மண்டலம் ஆற்றல் கடத்துவானாகவும், அங்கே வழிபடுவோர் ஆற்றலை ஏற்போராகவும் விளங்குகின்றன என்பதை அறிகின்றோம்.

16 வகையான மரியாதைப் பொருட்களால் செய்யப்படும் சோடச உபசாரம் சிவனைப் பிறதெய்வங்கள் வழிபாடு செய்வதாக அமைந்துள்ளது. சோடச உபசாரங்கள் பற்றிய விளக்கத்தில் காமிகாகமம் கூறும் விரிவுரையினைச் சுருக்கமாகப் பட்டியலிட்டுக் காண்போம்.

1. தூபம் - அக்கினி தேவன்.
2. தீபம் - சிவன்.
3. நாகதீபம் - கேது.
4. விருச தீபம் – தரும தேவதை
5. மிருக தீபம் - திருமால்.
6. பூரண கும்பம் - இராகு
7. பஞ்ச தீபம் - பஞ்ச பிரும்ம மந்திரம்
8. நட்சத்திர தீபம் - 27 நட்சத்திரங்கள்,
9. மேரு தீபம் – 12 சூரியன்கள்
10. விபூதி - மகேசுவரன்
11. கண்ணாடி - சூரியன்
12. குடை - சந்திரன்
13. சாமரம் - திருமகள்
14. வியஞ்சனம் - பிரம்மா
15. விசிறி - வாயு
16. சுருட்டி - இந்திரன்

இறைவனுக்கு உவமையாக வேறு தெய்வங்களையோ, தேவதைகளையோ கூறமுடியாது. தேவர்களும் வணங்கும் தெய்வம் அவன். அனைவருக்கும் மேலானவன் இறைவன் என்னும் தத்துவத்தை இச் சோடச உபசாரம் தெரிவிக்கின்றது.

## 4. 4. வழிபடும் மெய்யன்பர்கள்:-

ஒன்பது நகரக் கோயில்களில் வழிபாடு செய்ய நகரத்தார்கள் மட்டுமின்றிப் பல்வேறு சமூகத்தினரும் வருகின்றனர்.

பிள்ளையார்பட்டி, வயிரவன்பட்டி, இளையாத்தங்குடிக் கோயில்களுக்கு மட்டுமே அதிகமான எண்ணிக்கையில் மக்கள் வழிபாடு செய்ய வருகின்றனர். போக்குவரத்துச் சாலையும் அதிகமான பேருந்துகளும் இதற்குக் காரணமாகும். பிள்ளையார்பட்டி கற்பக விநாயகர் ஒட்டுப்படம்(Sticker) இடம் பெறாத ஊர் இல்லை

என்னும் அளவிற்கு அதிகமாகப் பிள்ளையார்பட்டியின் புகழ் பரவியுள்ளது. கோயில் சொத்துக்கள் அதிகமாக உள்ளதால் வருவோருக்கெல்லாம் இலவச விருந்தளிப்பதும் ஒரு காரணமாகும்

பிற கோயில்களுக்கு வருவோரின் எண்ணிக்கை மிகக் குறைவாக உள்ளது. கோயிலுக்கு வழிபடவரும் மெய்யன்பர்களைப் பற்றிய புள்ளிவிவரம் கோயில் நிருவாகம் பற்றிய பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. கோயில்களுக்கு வரும் மெய்யன்பர்களின் எண்ணிக்கையைப் பெருக்குவதற்கான வழிமுறைகளும் அப்பகுதியில் கூறப்பட்டுள்ளன.

மெய்யன்பர்கள் வழிபடும் முறை மனத்திற்கு நிறைவைத் தருகின்றது. வழிபடவேண்டிய முறைப்படி வழிபடுகின்றார்கள்.

மெய்யன்பர்கள் தேங்காய், வாழைப்பழம், வெற்றிலை, பாக்கு பூக்கள் ஆகியனவற்றை அருச்சனைக்காக எடுத்துவருகின்றனர்

கோயிலுக்கு எதிரே உள்ள திருக்குளத்தில் இறங்கிப் புறத் தூய்மை செய்து கொண்டு திருக்கோபுரத்தை நோக்கித் தொழுகின்றார்கள். அப்போது தமது தலைக்கும் மேலான மதிப்பு மிக்கவன் இறைவன் என்பதை அவர்கள் உணந்தவர்கள் என்பதை அவர்கள் தலைக்கு மேல் கைகுவித்து வணங்குவதன் மூலம் தெரிந்து கொள்ள முடிகிறது.

கொடிமரம், பலிபீடம், நந்தி தேவரைக் கும்பிட்டுக் கொடி மரத்துக்கு முன்னால் ஆடவர் எட்டு உடலுறுப்புகளும் நிலத்தில் படியும் வண்ணம் (அட்டாங்க நமஸ்காரம்) மூன்று முறை கும்பிடுவதையும், பெண்டிர் ஐந்து உடலுறுப்புகள் நிலத்தில் படியும் வண்ணம் (பஞ்சாங்க நமஸ்காரம்) மூன்று முறை கும்பிடுவதையும் காணமுடிகிறது.

பின்னர் கனநாதராகிய திருநந்தி தேவரையும் துவார பாலகர்களையும் அருகிலுள்ள விநாயகரையும் வணங்கிச் சிவலிங்கப்பெருமான் திருச்சன்னிதியில் அருச்சனை செய்கின்றனர். தேவாரம், திருவாசகம் முதலிய அருட்பாடல்களைப் பாடுகின்றனர். திருநீறு வாங்கிப் பூசிக்கொண்டு அம்மன் நருத்தன விநாயகர், தென்முகக் கடவுள். விநாயகர், சோமாசுக்கந்தர், அடிமுடிகாணா நாதர், அறுமுகன், கயலெட்சுமி, வயிரவர் முதலியோரைவணங்குகின்றனர்.

சிவலிங்கக் கருவறையை மும்முறை வலம் வந்து சண்டேசுவரரிடம் விடைபெற்றுக் கொள்கின்றனர். இதனைச் 'சொல்லிக் கொண்டு புறப்படுதல்' என்று கூறுகின்றனர்.

புறப்பட்டு வெளியே வரும்போது கொடிமரத்தின் அருகில் அமர்ந்து ஆழ்நிலை தியானத்தில் ஈடுபடுகின்றனர்.

ஒவ்வொரு சிற்றாலயங்களில் நின்று வழிபடாமல் ஒரு சில சிற்றாலயங்களில் மட்டும் வழிபாடு செய்துவிட்டுச் சிலர் விரைவாக வெளியேறிவிடுகின்றனர்.

ஆனால் பலரிடம் காணப்பட்ட பொதுமை வழிபாடே மேலே குறிக்கப்பட்டுள்ளது.

## 4. 2. சிறப்பு வழிபாடு:-

திருவிழாக்களைச் 'சிறப்பு'[4] என்ற பெயராலும் 'சாறு'[5] என்ற பெயராலும் தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. ஒன்பதுநகரக் கோயில்களில் இந்நாளைத் திருவிழா நாள் எனக் குறிப்பிடுகின்றனர்.

சிறப்பு வழிபாட்டினைக் கீழ்வருமாறு நான்கு வகையாகப் பகுத்துக் காணலாம். அவையாவன:-

1. வார வழிபாடு.
2. 15 நாட்களுக்கு ஒரு முறை மேற்கொள்ளும் வழிபாடு.
3. ஆண்டு வழிபாடு.
4. குடமுழுக்கு வழிபாடு.

## 4. 2. 1. வார வழிபாடு:-

இளையாத்தக்குடியில் வாராவாரம் வெள்ளிக்கிழமை சுக்கிர வார அம்மன் வழிபாடு நடைபெறுகிறது. அம்மன் செப்புத் திருமேனிக்கு அபிடேக ஆராதனைகள் செய்து, திருவீதி உலாவாக எழுந்தருளச் செய்வார்கள். ஆடிமாத வெள்ளிக்கிழமை விழாக்கள் மிகச்சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.

பிற எட்டுக் கோயில்களிலும் வார வழிபாடு நடத்தப்பெறவில்லை.

## 4. 2. 2. பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை மேற்கொள்ளும் பிரதோட வழிபாடு:-

இளையாத்தங்குடி, பிள்ளையார்பட்டி, ஆகிய இரண்டு ஊர்க் கோயில்களில் மட்டும் இப்பொழுது இப்பிரதோட விழா (பிரதோஷ விழா) பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை நடைபெற்று வருகிறது. முன்பு ஒன்பது நகரக் கோயில்களிலும் இவ் விழா நடத்த பெற்றது.

பிரதோடம் என்பது அமாவாசை அல்லது பூரணைக்குப்பின் வரும் பதின்மூன்றாம் திதியாகும். ‘‘பிரதோடம்என்பது ஒருநாளின் பகுதி.அது சாயரட்சை ஆகும். திங்கட் கிழமைகளில் வருமாயின் மிகுந்த சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. சிவபெருமான் ஆலகால நஞ்சினை உண்ட நாள் ஏகாதசி. தேவர்கள் அமுதம்பெற்ற நாள் தூவாதசி. தேவர்கள் மகிழுமாறு சிவன் நடனமாடிய நாள் திரியோதசி எனவே இந்நாளைச் சிறப்பாகக் கொண்டாடுவதற்காக இப்பிரதோட விழா கொண்டாடப்படுகிறது. பிரதோட நாட்களில் திருவீதி உலவாகக் கொண்டு வருவதற்காகவே பிரதோட நாயகரின் செப்புத் திருமேனி உள்ளது. அதற்கு அபிடேக ஆராதனைகள்செய்து பல்லக்கில் வீதி உலாக் கொண்டு வருவர்.

## 4. 2. 3. ஆண்டு வழிபாடு :-

ஆண்டு வழிபாடாக ஒவ்வொரு ஆண்டும் கொண்டாப் பெறும் விழாக்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. அவையாவன :-

1. சமயக் குரவர் நால்வர் பிறந்த நாள் விழா.
2. சம்பா சட்டி விழா
3. சித்திரைப் பௌர்ணமி விழா.
4. சிவன் ராத்திரி விழா
5. திருக்கார்த்திகை விழா
6. திருவாதிரை விழா
7. நடராசருக்கான அபிடேகம்
8. நவராத்திரி விழா
9. பிரம்ம உத்சவம்
10. பிள்ளையார் நோன்பு
11. மாசி மகத் திருவிழா
12. விநாயகர் சதுர்த்தி

### 4.2.3.1. சமயக் குரவர் நால்வர் பிறந்த நாள் விழா:-

பிற கோயில்களில் காணப்படாத பெரும் சிறப்பு இளையாத்தங்குடிக் கோயிலில் காணப்படுகின்றது. சமயக்குரவர்கள் நால்வரின் பிறந்த நாளையும் கொண்டாடுவதும், காரைக்கால் அம்மையாருக்குச் செப்புத் திருமேனி வைத்து வழிபாடு செய்வதும் இக்கோயிலில் மட்டும் சிறப்பாகக் காணப்படுகிறது.

சமயக் குரவர்களான ஞானசம்பந்தர் (வைகாசி-மூலம்) அப்பர் (சித்திரை-சதயம்), சுந்தரர் (ஆடி-சுவாதி), மாணிக்கவாசகர் (ஆனி-மகம்) ஆகியோரின் பிறந்த நாளன்று அவர்களது செப்புத் திருமேனிக்கு அபிடேக ஆராதனைகள் செய்து கோயில் திருச்சுற்றில் உலாவாக கொண்டு வருவர்.

பிற கோயில்களில் அறுபத்து மூன்று நாயன்மார்களுக்கும் தனியாக நால்வருக்கும் கற்சிலை மட்டுமே இருக்கும்.

ஒன்பது நகரக் கோயில்களில் மட்டுமே சமயக் குரவர்கள் நால்வருக்கும் செப்புத் திருமேனிகள் உள.

சிறப்பு வழிபாடு செய்து விழாவெடுக்கும் சிற்பங்களுக்கு மட்டுமே செப்புத் திருமேனி அமைப்பது வழக்கம். இந்த அடிப்படையில் நோக்கினால் ஒன்பது நகரக் கோயில்களிலும் முன்பு சமயக் குரவர்களுக்குப் பிறந்த நாள் விழாகொண்டாடியிருக்கலாம் எனக் கருத இடமுள்ளது.

நகரத்தார்களுக்குச் சைவ சமயத்தில் உள்ள ஆழ்ந்த பற்று தலை இந்த அடியார்கள் வழிபாடு நன்கு புலப்படுத்துகிறது.

### 4. 2. 3. 2. சம்பா சட்டி விழா:-

வயிரவன்பட்டியில் மட்டும் இச்சம்பா சட்டி விழா (சம்கார சஷ்டி விழா) திருக்கார்த்திகையிலிருந்து 21ஆம் நாள் கொண்டா-டப்படுகின்றது.

இவ்விழாவிற்கு ஏன் இப்பெயர் சூட்டப்பெற்றது என நேர் காணலின் போது வினவப் பெற்றது.[6]

முன்னால் அருச்சகர் திரு. என். வாகீசஐயர், இந்நாள் அருச்சகர் வைரவக் குருக்கள், நகரவிடுதி மேலாளர்கள் திரு. மாணிக்கம்

செட்டியார், திரு. ஏக்கப்ப செட்டியார் ஆகியோர் கூறிய விடைகள் ஒன்றாக அமைந்திருந்தன.

''சம்பாசுரன் என்ற அசுரனை அழித்துத் தேவர்களைக் காத்தார் வயிரவர் எனத் தலபுராணம் உள்ளது. அதனைக்கொண்டாடவே இங்கு சம்பாசட்டி விழா தொடங்கப் பட்டது''எனக் கூறினர்.

வயிரவன்பட்டி கோயிற் புராணத்தில் சம்பாசுரன் என்ற அசுரன் பற்றிக் குறிப்பிடவில்லை. அதில் இடம்பெறும் அசுரனின் பெயர் கும்பன். கும்பாசுரன் என்பதே அவன் பெயர்.

சூரபன்மனின் சேனை வீரர்கள் வக்கிரத மிட்டிரன், மகாத மிட்டிரன், கும்பாண்டன் என்று மூவராவர் என இளையாத்தங்குடி மான்மியம் தெரிவிக்கின்றது.[7]

கும்பாண்டனையும் வக்கிரதமிட்டிரனையும் அங்குசத்தால் கொன்றதாக இளையாத்தங்குடி மான்மியம் கூறுகிறது [8]

வயிரவர் மகாதமிட்டிரனை அழித்ததாக அம்மான்மியம் கூறுகிறது.[9] அப்போரின் நினைவாகவே விநாயகருக்கு விநாயக நகரமும் (பிள்ளையார்பட்டியும்) வயிரவருக்கு வயிரவ நகரமும் (வயிரவன்பட்டியும்) அமைக்கப்பட்டதாக அம்மான்மியம் கூறுகிறது.[10]

கும்பாண்டனைத்தான் கும்பன் என வயிரவன் கோயிற் புரா-ணம் குறிப்பிடுகிறது. அவனை விநாயகரே அழிக்கின்றார்.

வயிரவர் வக்கிர தமிட்டிரனையும் மகாதமிட்டிரனையும் கொன்றழிக்கின்றார்.

குப்பாசுரனைப் போரில் அழித்ததை ஆறு நாட்கள் திருவிழாவாகக் கொண்டாடுவதால், அதனைக் கும்பா சட்டி விழா என்று முன்பு அழைத்துள்ளனர் எனச் சிலர் கருதுகின்றனர். சம்காரம் என்பது அழிப்பதைக் குறிப்பிடுகிறது. எனவே சம்கார சட்டி விழா என்ற பெயரே பிற்காலத்தில் சம்கா சட்டி என்றும் பிறகு சம்பா சட்டி விழா என்றும் மருவி வழங்கியிருக்கலாம்.

## 4. 2. 3. 3. சித்திரைப் பௌர்ணமி விழா:-

சித்திரைப் பௌர்ணமி விழா இலுப்பைக்குடியில் மட்டும் கொண்டாடப்படுகிறது. முழுநிலவு மிகவும் அழகானது; குளிர்ச்சி

மிக்கது. அந்நாளில் தான்தோன்றி ஈசனுக்கு அபிடேக ஆராதனைகள் செய்து வழிபட்டுவருகின்றனர்.

திருவிழாக்கள் கொண்டாடப் பெறும் நாட்கள் பெரும்பாலும் முழுநிலவு நாளாகவே அமைந்துள்ளன.

முழுநிலவு நாளின்போது இரவில் நல்ல வெளிச்சம்கிடைக்கும் என்பதே முதற் காரணமாகும். இக்காலம் போல அக்காலத்தில் மின்னொளி வசதிகிடையாது. அதனால் விழாக்களுக்கு முழுநிலவு நாளையே தேர்ந்தெடுத்துள்ளனர்.

அம்முழுநிலவு நாட்களுள் சித்திரைப் பௌர்ணமி நாள் இளவேனிற் காலம் தொடங்கியதும் வருகிறது, இந்நாளில் மழை பெய்யாது, திருவிழா, கலைநிகழ்ச்சிகள் நடத்த மழை தடையாக அமையாது. எனவே சித்திரைப் பௌர்ணமி நாளில் விழா சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது.

நமது பால புண்ணியங்களைக் கணக்கு எழுதுபவர் பெயர் சித்திரகுப்தன். இவர் எமனின்கணக்கர். இவரை வழிபட்டு விரதமிருப்பதே சித்திரா பௌர்ணமியின் நோக்கமாகும். இவ்விரதம் இருப்பவர்களுக்கு மரண பயமில்லை என்று கூறப்படுகிறது.

மறுபிறப்பின்றி மரணமில்லாப் பெருவாழ்வு வாழ இச்சித்திரா பௌர்ணமி விழா கொண்டாடப்படுகின்றது.

### 4. 2. 3. 4. சிவன் ராத்திரி:-

இளையாத்தங்குடி, மாற்றூர், வேலங்குடி ஆகிய மூன்று ஊர்க் கோயில்களில் மட்டும் சிவன் ராத்திரி விழா கொண்டாடப்பட்டது. இப்பொழுது இளையாத்தங்குடியில் மட்டுமே கொண்டாடப்பட்டு வருகிறது.

மாசிமாதம் தேய்பிறையில் சதுர்த்தசியன்று சிவன்ராத்திரி கொண்டாடப் பெறும். அன்று இரவு முழுவதும் ஆறு காலப் பூசையாகச் சிவலிங்கத்திற்கு அபிடேக ஆராதனைகள் நடைபெறும்.

### 4. 2. 3. 5 திருக்கார்த்திகை:-

கார்த்திகை மாதத்தில் வருகின்றகார்த்திகை, திருக்கார்த்திகை எனப்படும். இந்நாளில் வழக்கமான வழிபாட்டுடன் இரவில் சொக்

கப்பனை கொளுத்தும் நிகழ்ச்சி நடைபெறுகிறது. இதனைச்சொக் கப்பான் என்றும் 'சொக்கப்பனை' என்றும் கூறுகின்றனர்.

சொக்கன் பனை என்பது திருவிளையாடல் புராண அடிமுடி தேடியபடல அடிப்படையில் கொண்டாடப்படுவது என்பார் டாக்டர் ந.கல்யாணசுந்தரம் அவர்கள்.[11] சிவபெருமான் சோதி வடிவில் நின்றதை நினைவூட்டவே இவ்விழா கொண்டாடப்படுகிறது என்று அவர் கூறியுள்ளார்.

"வேழவெண்கொம் பொசித்தமாலும் விளங்கிய நான் முகனும்
சூழவெங்கு நேடவாங்கோர் சோதியு ளாகி நின்றாய்
கேழல்வெண்கொம் பணிந்த பெம்மான் கேடிலாப் பொன்
னடியின்
நீழல்வாழ்வா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே[11அ]"

என்ற திருஞான சம்பந்தரின் பாடல் மேற்கண்ட கருத்திற்குச் சான்றாக அமைந்துள்ளது.

சிவன், ஒளிக்கடவுள் என்பதை திருக்கார்த்திகை விழா உணர்த்துகிறது. பழங்கால மக்கள் ஞாயிற்றுக் கடவுளைக்குறிக்க வழங்கிய பெயர்களுள் எல்' சிவன், என்னும் பெயர்கள் மிகப் பழமையுடையன. எல் என்பதற்கு இலங்குவது பொருள். 'எல்லே இலக்கம்' என்பது தொல்காப்பிய நூற்பா. இலிங்கம் என்பதற்கும் இலங்குவது என்பதே பொருள். இலங்குவதாகிய ஞாயிற்றின் அடையாளமாக அமைந்தமையின் இது இலிங்கம் எனப்பட்டது.

எல் என்பதும் பெயரைவிடச் சிவன் என்றும் பெயரே பழமை யுடையது. சிவன் என்பதற்குச் சிவந்தவன் என்றும்பெயருண்டு.[12] அச்சிவந்தவனின் நெற்றிக் கண்ணிலிருந்து பிறந்த சிவந்த மேனி உடையவனுக்குத் தான் செவ்வேள் என்ற பெயரும் உண்டு.

ஞாயிறு, திங்கள், தீ ஆகியவற்றை வழிபட்ட பண்டை வழக் கத்தாலேயே அவற்றின் குறியீடாக வட்டம், சதுரம், முக்கோண வடிவில் வேள்வியில் தீக்குண்டங்கள் அமைக்கப் பெறுகின்றன. இவ்வாறு சிவந்த நெருப்பை வழிபடும் வழக்கம் மிகப் பழங்கால வழிபாட்டு முறையாகும்.

எனவே பண்டைய நெருப்பு வழிபாட்டை நினைவூட்டுவதற் காகவே சொக்கன்பனை கொளுத்தப் பெறுகிறது எனலாம்.

இத்திருக்கார்த்திகை விழா மாற்றூர், வேலங்குடி, இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய ஊர்களில் கொண்டாடப்படுகின்றது.

## 4. 2. 3. 6. திருவாதிரை ஆருத்திரா தரிசன விழா:-

திருவாதிரை நாள் மீன் நடராசருக்கு உரியதாகும். இந்நாளில் நடராசருக்குச் சிறப்புப் திருமுழுக்கு நடைபெறுகிறது. நடராசப் பெருமானும் சிவகாமி அம்மனும் திருவீதி உலாவருவார்கள். அன்று சிவகாமி அம்மனுக்கும் நடராசப் பெருமானுக்கும் ஊடல் ஏற்படுவ தாக ஒரு நிகழ்ச்சி இடம்பெறும்.

இந்த ஊடலை நீக்க மாணிக்கவாசகரைத் தூதாக அனுப்பி நடராசப் பெருமான் கைக்கொள்ளும் வழி மிகவும் சுவையானது, ஊடல் நீக்கத்திற்காக ஒரு பிடிபாடு எழுதிக் கொடுக்கப்படும். இவ் வாறு எழுதிக் கொடுப்பது புதுமையானது எனினும் அதனுடைய அடிப்படை நோக்கம் வியந்து பாராட்டுவதற்குரியது.

அத்திருக்கோயிலுக்குரிய நிலங்கள் எங்கெங்கு இருக்கின்றன என்பது ஆண்டுதோறும் அறுவடைக் காலமான மார்கழியில் திரு வாதிரை நாளன்று ஊர்மக்கள் அனைவரும் அறியப் படிக்கப்படு வது தவறுகள் நிகழாவண்ணம் தடுத்துவிட ஓரளவு வழிவகுக் கின்றது.

இவ்வாறு ஊடல் நீக்கியமைக்கு உவந்தளித்த உரிமை பின்னி ணைப்பில் இடம் பெற்றுள்ளது.

இத் திருவாதிரை விழா இளையாத்தங்குடி, இலுப்பைக்குடி. வேலங்குடி, இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய ஊர்களில் முன்பு நடைபெற்றது. இப்பொழுது இளையாத்தங்குடியிலும் பிள்ளை யார்பட்டியிலும் மட்டும் கொண்டாடப்பட்டு வருகின்றது.

## 4. 2. 3. 7. நடராசருக்கான அபிடேகம்:-

இளையாத்தங்குடிக் கோயிலில் ஆண்டுக்கு ஒரு முறை நடை பெறும் விழா (வருடாபிடேக விழா) நடராசருக்காக அபிடேக விழாவாகச் சித்திரை மாதம் நடைபெறுகின்றது. அனைவரும் கலந்து கொள்ளச் சித்திரை மாதம் ஏற்றது என்பதால் இம்மாதத் தில் இவ்விழா நடைபெறுகிறது.

இவ்வருடாபிடேக விழாவின் நோக்கம் இறை வழிபாட்டுடன் இளையாத்தங்குடி ஏழு பிரிவுப் புள்ளிகளும் வந்திருந்து, பொதுக் குழு கூடியது போலக்கூடி, கோயில் காரியக்காரர்களின் நிருவாக முறைகளைப் பற்றித் திறனாய்வு செய்து, நிறைகுறைகளைக்கூறிக் கோயில் நடைமுறையை மேலும் வளர்ப்பதேயாகும்.

முன்பு இவ்வருடாபிடேக விழாவிற்கு அனைவரும் வருகை புரிவர் காரியத்தனம் மாற்றிக் கொடுப்பதும் இந்நாளிலேயே நிகழும். இப்பொழுது புள்ளிகள் அதிகமாக வருவதில்லை. பொதுக்குழு போன்ற கூட்டங்களும் கூட்டப் பெறுவதில்லை.

## 4. 2. 3. 8. நவராத்திரிவிழா:-

சத்தியின் சிறப்பைக் கூறும் ஒன்பது நாள் விழா நவராத்திரி விழா என்னும் பெயரில் கொண்டாடப்பட்டது. இவ்விழாபுரட்டாசி மாதத்தில் வளர்பிறைப் பிரதமை முதல் ஒன்பது நாட்கள் நடை பெறும். இளையாத்தங்குடி இலுப்பைக்குடி ஆகியஇரு ஊர்களிலும் முன்பு கொண்டாடப்பட்டது. காப்புக் கட்டும்திருநாள் ஒன்றையும் சேர்த்துப் பத்து நாள் விழாவாக முன்பு சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. தற்பொழுது சில காரணங்களால் இவ்விழா நடைபெற வில்லை. அதன் காரணங்கள் இக்கட்டுரையின் இறுதிப் பகுதியில் ஆராயப் பெறுகின்றன.

## 4. 2. 3. 9. பிரம்ம உற்சவம்:-

இலுப்பைக்குடியில் மட்டும் இவ்விழா முன்பு வெகு சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. இப்பொழுது ஓரளவு மெய்யன்பர்களுடன் சிறிய அளவில் நடத்தப்படுகிறது. இவ்விழா பத்து நாட்கள் கொண்டாடப் பெறும்.

இலுப்பைக்குடிப் புராணம் பிரமன் இவ்வூருக்கு வந்து வழிபட்டதனைக் கூறுகிறது.[13] அதனை நினைவுகூரும் வகையில் இவ் விழா பத்து நாட்கள் நடைபெறுகிறது.

ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வாகனத்தில் தான்தோன்றி ஈசனும் வடிவுடையம்மையும் உலாவரும் காட்சி சிறப்பாக அமைந் திருக்கும். இவ்விழா சித்திரை மாதம் மிருகசிரீட நட்சத்திரத்தன்று தொடங்கப்பெறும்.

## 4. 2. 3. 10. பிள்ளையார் நோன்பு விழா:-

வயிரவன்பட்டியில் சம்பா சட்டி விழா நடைபெறும். அது திருக்கார்த்திகை கழித்து 21ஆம் நாள் சட்டி நாளின் போது கொண்டாடப் பெறும். அடுத்த நாளில் சட்டியும் சதயநாள் மீனும் ஒன்று சேரும் நாள். அந்நாளில் பிள்ளையார் நோன்பு கொண்டாடப்பெறும்

அந்நாளில் மாட்டு வண்டிகளில் பலகல் தொலைவு பயணம் வந்தவர்கள் சம்பா சட்டி விழாவைக் கண்டு களித்ததும் உடனே புறப்பட்டுத்தங்கள் வீடுகளுக்குச் செல்ல இயலவில்லை.

எனவே வயிரவன்பட்டிக் கோயிலிலேயே பிள்ளையார் நோன்பிற்கும் ஏற்பாடு செய்தால் நல்லது எனக்கருதினர். அவ்வாறே ஓராண்டு கொண்டாடினர்.அவ்வாண்டு அங்கு பிள்ளையார்நோன்பினைக் கொண்டாடிய பலருக்கு நல்ல பலநிகழ்ச்சிகளும்,பொரு-ளாதார வளர்ச்சியும் ஏற்படவே தொடர்ந்து வயிரவன் பட்டிக்கு வந்து இத்திருநாளைக் கொண்டாடுகின்றனர்.

பிள்ளையார் நோன்பு விழா, பிள்ளையாரை நினைந்து 21 நாட்கள் விரதமிருந்து அவ் விரதத்தினை நிறைவு செய்யும்நாளாகும். ஒரு நாள்விரதம் முடித்ததன் நினைவாக வேட்டியிலிருந்து ஓர் இழை நூலைஎடுத்து இறைவன் முன் வைப்பார்கள். 21ஆம் நாள் விரதம் நிறைவு பெற்றதை 21 இழைகள் எடுத்துக் கூறும் அவ்விழாவில் இறைவன் திருவிளக்கு முன் குடும்பத்தில் உள்ள பெரியவர் வெல்லப்பாகு ஊற்றிப் பிசைந்த அரிசி மாவினைப் பிள்ளையார் வடிவில்வட்ட முக்கோணமாக உருவாக்குவார். அதற்கு இழை என்று பெயர். அதனுள் 21 இழைகளை வைத்து அத்திரியில் நெய் தடவி அதில் தீயைப் பிடித்துத் தருவார்.

பெரியவரை ஒவ்வொருவராக வணங்கி இழையினை வாங்கி அத்தீயை அணைக்காமலேயே வாய்க்குள் போட்டுக் கொள்ள வேண்டும்.

சிவச்சோதி வடிவமான பிள்ளையாரை ஒளிவடிவில் வழிபட்டு அவரை மனக் கோயிலில் இடம் பெறச் செய்யவே இழையினைத் தீயுடன் விழுங்குகிறார்களோ என எண்ணத் தோன்றுகிறது.

இவ்வழிபாடு நகரத்தார் குடும்பங்களில் தவறாதுஇடம் பெறும் வயிரவன் பட்டியில் சம்பாசட்டி விழாவிற்கு வந்தவர்களுக்காக

முன்பு தொடங்கப் பட்ட விழா இப்பொழுது ஆண்டு தோறும் தொடர்ந்து நடைபெறுகிறது.

## 4. 2. 3. 11. மாசி மகத் திருவிழா:-

மாற்றூர்க்கோயில் வருடாபிடேகத் திருவிழா மாசி மகத் திரு விழாவாக நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்வரை மிகச் சிறப் பாகப் பத்து நாட்கள் நடைபெற்றது.

தொடக்கத்தில் இவ்வருடா பிடேகத் திருவிழா வைகாசி விசா கத் திருவிழாவாகவே நடைபெற்று வந்துள்ளது. திருப்புனவாசல் காளையார் கோயில், இலுப்பைக்குடி ஆகிய ஊர்களில் வைகாசி மாதத்திலேயே திருவிழாக்கள் நடைபெற்றதால் நகரத்தார் தங்கள் நலனுக்காக இவ்விழாவினை மாசி மாதத்திற்குத்தள்ளிவைத்தனர்

முதல் திருக்குட முழக்கு நடத்துவதற்கு முன்கோயிலிலிருந்த சிற்பங்களைச் சிறு கோயில் ஒன்றில் (பாலாலயத்தில்) வைத்து வழிபட்டனர். பாலாலயத்தில் உள்ள இறைவனுக்குப் பெரிய விழாக்கள் கொண்டாடுவது மரபன்று எனவே அந்த ஏழு ஆண்டு கள் விழா நடைபெறவில்லை. பிறகு பெரிய கோயில் கட்டிய பிற கும் தொடர்ச்சி இன்மையாலும், மெய்யன்பர்கள் பெரும் அளவில் வாராமையாலும் இவ்விழா நடைபெறவில்லை. என மாற்றூரில் 64 ஆண்டுகள் அருச்சகராக அமைந்திருந்த கனகசபாபதிக் குருக் கள் தகவல் தெரிவித்தார்.[14]

## 4.2.3.12. விநாயகர் சதுர்த்தி :-

பிள்ளையார்பட்டியில் ஆவணி மாதம் வளர்பிறையில் சதுர்த் தியன்று முடியுமாறு. 10 நாட்கள் கொண்டாடப் பெறும் பெரிய திருவிழா விநாயகர் சதுர்த்தியே ஆகும். முன்னதாகக் காப்புக் கட்டி, கொடியேற்றம் செய்து திருவிழா தொடங்கும். இரண்டாம் நாளிலிருந்து ஒவ்வொரு நாளும் காலை விழா நடைபெறும். தேசி விநாயகப் பிள்ளையார் வெள்ளிக் கேடகத்தில் உலா வருவார். ஒவ்வொரு நாளும் இரவு பல்வேறு வாகனங்களில் அமர்ந்து திருவீதி உலா வருவார்.

அவ்விழாவின் சிறப்பிற்குப் பெருந்துணைபுரியும் வாகனங்களின் பட்டியல்:-

| திருவிழா நாள் | வாகனம் |
| --- | --- |
| முதல் நாள் | வெள்ளிப் பெருச்சாளி வாகனம் |
| இரண்டாம் நாள் | சிம்ம வாகனம் |
| மூன்றாம் நாள் | பூத வாகனம் |
| நான்காம் நாள் | கமல வாகனம் |
| ஐந்தாம் நாள் | வெள்ளிக் காளை வாகனம் |
| ஆறாம் நாள் | கசமுகாசுரம் வரை வெள்ளியானை வாகனம் பின்னர் தங்கப் பெருச்சாளி வாகனம் |
| ஏழாம் நாள் | வெள்ளி மயில் வாகனம் |
| எட்டாம் நாள் | குதிரை வாகனம் |
| ஒன்பதாம் நாள் | தேர் உலா |
| பத்தாம் நாள் | ஐம்பெரும் கடவுளரும் தத்தமக்குரிய காளை, பெருச்சாளி, மயில் வாகனங்களில் எழுந்தருளுவர் |

சதுர்த்தி விரதம் மேற்கொள்பவர்களும் சதுர்த்தி விரதம் நிறைவு செய்பவர்களும் ஆனைமுகப் பெருமான் சன்னிதியில் நாள் முழுவதும் உண்ணா நோன்பு இருந்து கும்ப செபம் நடத்தி, அக்கும்ப நீரில் குளித்து விரதத்தை நிறைவு செய்து கொள்வார்கள். பெண்கள் மட்டுமே இச்சதுர்த்தி விரதத்தில் பங்குகொள்கின்றனர் திருமணமாகதவர்கள் திருமணம் நடைபெறவும், திருமண மானவர்கள் குடும்பம் நலம் பெறவும் இச்சதுர்த்தி விரதத்தை மேற்கொள்கின்றனர்.

விநாயகர் சதுர்த்தி உண்ணா நோன்பில் கலந்து கொள்பவர்கள் ஒவ்வொரு வரும் தம் பெயரை முன்பே பதிவு செய்து கொள்ள வேண்டும். அவ்வாறு பதிவு செய்த அனைவருக்கும் ஆளுக்கு ஒரு குடம் வீதம் வேள்வியில் (ஹோமத்தில்) வைத்து வழிபாடு நிகழ்த்தப்பெறும். ஒவ்வொரு குடத்தினுள்ளும் விநாயகரின் அருள் இருப்பதை உணர்த்த வெள்ளியாலான ஒரு விநாயகரின் உருவம் அக்குடத்தினுள் இடம் பெற்றிருக்கும், மந்திரங்களால் உருவேற்றப் பட்ட அக்குடத்து நீரை வழிபாடு முடிந்ததும் குடத்துடன் தருவார்கள். தாய் தந்தை அல்லது கணவர் அக்குடத்தினை வாங்கி உண்ணா நோன்பிருப்பவர்களின் தலைமீது ஊற்றுவார்கள். கையேந்திய வண்ணம் குளிக்கும் மங்கையின் கையில்,குடத்தினுள் உள்ள விநாயகர் சென்று தங்குவார். விநாயகரின் திருவருள் கிடைத்ததாக எண்ணி மன நிறைவு அடைவர்.

இந்தச் சிறப்பு வழிபாடு பிள்ளையார் பட்டியில் மட்டுமே நிகழ்கிறது. இவ்வேள்வியைத் தொடர்ந்து விநாயகரின் செப்புத் திருமேனிக்கு அழகு செய்து திருவீதி உலாவாகக்கொண்டுவரப்பெறும்

## 4. 2. 3. 13. பிற வழிபாடுகள்:-

மேற்கண்ட சிறப்பு வழிபாடுகள் ஒன்பது நகரக் கோயில்களில் நடை பெறுவன. இவை தவிரப் பிற வழிபாடுகளைக் கீழே காண்போம்.

1. அம்மன் கோயில் வழிபாடு,
2. குரு வணக்கமும் அக வழிபாடும்
3. நாக வழிபாடு

## 4. 2. 3. 13. 1. அம்மன் கோயில் வழிபாடு:-

ஒன்பது நகரக் கோயில் நிருவாகிகளும் தமது கோயிலுக்கு அருகில் உள்ள கொற்றவையின் கோயிலையும் தத்தெடுத்துக் கொண்டு அதன் வளர்ச்சியிலும் வழிபாட்டிலும் கவனம் செலுத்தி வருவது சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது.

ஒன்பது நகரக் கோயில்களை மட்டுமே நகரத்தார் பிடிபாடு செய்து கொண்டனர் இவற்றின் நிருவாகம்மட்டுமேநகரத்தாரைச் சார்ந்தது. அம்மன் கோயிலின் உரிமையும் நிருவாகமும் அக்கிராம மக்களான நாட்டார்களுக்கு உரியது. நாட்டார்களின் கோயிலை நகரத்தார்கள் ஏன் பேணிப்பாதுகாக்க வேண்டும் என்ற வினாவிற்கான விடையைக் காணவேண்டும்.

நகரத்தார்கள் ஒன்பது நகரக் கோயில்களில் உள்ள ஊர்களுக்குப் புதிதாகக் குடிவந்தவர்கள். செல்வ வளம் படைத்த நகரத்தார்களுக்கு நாட்டார்களின் அன்பும் ஒற்றுமையும் பாதுகாப்பும் தேவைப்பட்டன. எனவே நகரத்தார்கள் நலிந்து கொண்டிருந்த நாட்டார்களின் கோயிலைப் புதுப்பித்துக் கட்டினார்கள். கோயிலின் விழாக்களை நடத்தி வைத்தார்கள். இதனால் மானிட நேய அடிப்படையில் ஒருவருக்கொருவர் உதவும் பண்பு வளர்ந்தது இன்றும் அதனாலேயே அம்மன் கோயிலைத் தங்களது கோயிலாக எண்ணிப் பாதுகாத்து வருகின்றனர். அம்மன் கோயிலில் ஆண்டாண்டு தோறும் நடைபெறும் 10 நாள் திருவிழாவையும் ஒன்பது நகரக் கோயில் நிருவாகத்தினரே நடத்தி வைக்

கின்றனர். அம்மன் கோயில் செப்புத் திருமேனி ஆண்டுமுழுவதும் ஒன்பது நகரக் கோயில்களிலேயே பாதுகாக்கப்பட்டு, தினசரி வழிபாடும் நடைபெற்று வருகிறது. திருவிழா நடைபெறும் நாட்களில் மட்டும் அச்செப்புத் திருமேனி அம்மன் கோயிலுக்குக் கொண்டு செல்லப்படுகிறது.

கோயிலை யார் கட்டியிருப்பினும் அங்குள்ள இறை அனைவருக்கும் பொதுவானது. அக்கோயிலைக் கட்டியவர்கள் அதனைப் பாதுகாத்து வழிபாடு இயற்ற இயலாதபோது உடனே உதவுவது தான் உண்மையான வழிபாடு என்பதை இதன்மூலம் நகரத்தார்கள் உணர்த்துகின்றனர். ஒருவருக்கொருவர் உதவும் போதுதான் மனிதருக்குள் அடங்கியிருக்கும் தெய்வீக உணர்வு வெளிப்படுகிறது. எல்லாரும் இறைவனின் பிள்ளைகளே என்ற உணர்வு ஏற்படுகின்றது. அதனால் ஒருவருக்கொருவர் உதவியாக அமைந்து நிறைவான வாழ்வினைக் காணமுடிகிறது.

சிதைந்த கோயில்களைக் கண்ட போதெல்லாம் கோயில் நாகரிகம் மிக்க நகரத்தார்களின் உள்ளம் சிதைந்திருக்கிறது. உடனே அதனைத் திருத்தி அமைத்துத் தொடர்ந்து வழிபாடும் விழாக்களும் நடைபெற வழிவகுத்து உண்மையான இறைத் தொண்டு செய்து வருவதனை இந்த ஒன்பது நகரக் கோயில்களைச் சார்ந்த அம்மன் கோயில்களின் பராமரிப்பும், பாதுகாப்பும் பிற நூற்றுக் கணக்கான கோயில்களின் பாதுகாப்பும் நன்கு வெளிப்படுத்துகின்றன. நகரத்தார்கள் செய்த கோயில் திருப்பணிகளின் பட்டியல் பின்னிணைப்பில் உள்ளது.

## 4.2.3.13.2. குரு வணக்கமும் அக வழிபாடும் :-

நகரத்தார்கள் சிவ பூசையினை அகவழிபாடாகச் செய்யும் பெருமை மிக்கவர்கள். சமயக் குருவினைப் போற்றி வணங்கி அவரிடம் உபதேசம் பெற்றுத் தினசரி சிவபூசையினைச் செய்து வருகின்றனர்.

இச்சிவ பூசையினை எவ்வாறு மேற்கொள்வது என்பதை ஆண்கள் பாதரக்குடி மடத்திலுள்ள குருவிடமிருந்தும் பெண்கள் கிளாமடத்திலுள்ள குருவிடமிருந்தும் உபதேசம் மூலம் கற்றுக் கொள்கின்றனர். அவ்விரு குருமார்களுக்கும் அவர்கள் தெரிவிக்கும் மரியாதையும் வணக்கமும் இன்றுவரை தொடர்ந்து கொண்டே இருக்கின்றது. (நி. ப. எண். 78)

குருவிடம் அவர்கள் கொண்டுள்ள பற்றுதலும் நம்பிக்கையும் அளவிடற்கரியது. காவிரிப்பூம்பட்டினத்தில் நகரத்தார்கள் எண்ணாயிரம் குடும்பத்துடன் தற்கொலை செய்து கொண்டபோது தங்கள் ஆண் பிள்ளைகளை ஆத்துமநாத சாத்திரியர் என்னும் குருவிடமே ஒப்படைத்துள்ளனர்.

இன்றைய நகரத்தார்கள் சைவ மரபில் தழைத்து வளர உதவிய குருமார்களுள் இன்றியமையாத சிறப்பினைப் பெறுபவர் ஆத்தும நாத சாத்திரியார் ஆவார்.

அவ்வாறு குருவினால் பேணி வளர்க்கப்பெற்ற சமுதாயம் இது என்பதாலும் உருவமில்லாத இறைவனை அகவழிபாட்டால் வழிபட உபதேசிப்பதாலும் குருவினைத் தெய்வமாகப் போற்றி வணங்கிவருகின்றனர்.

வேலங்குடியில் நடராசர் செப்புத் திருமேனியின் அருகில் உள்ள ஒரு தண்டமும் வழிபாட்டிற்குஉரியதாக அமைந்துள்ளது. குரு, உபதேசிக்கும் போது கையில் தண்டமும் கமண்டலமும் வைத்திருப்பார். வழிபாட்டில் உள்ள இத்தண்டம் வேலன்குடி நகரத்தார்களின் பண்டைய வரலாற்றையும். நகரத்தார்களின் குருநம்பிக்கையையும் வெளிப்படுத்துகிறது.[15] (நி. ப. எண். 79).

வேலங்குடிக் கோயிலுக்கென்று ஒரு தனி குருவினை அக் கோயில் நகரத்தார்கள் நூறு ஆண்டுகளுக்கு முன்பு பெற்றிருந் தனர். அவர், வேலங்குடி நகரத்தார்களின் பிள்ளைகளுக்கு உப தேசம் செய்து வைத்தார்.

ஒரு சமயம் அக்குரு காசிக்கு மாட்டு வண்டியில் பயணம் செய் தார். ஓர் ஆண்டு நிறைவு பெற்றும் அவர் திரும்பி வரவில்லை. எனவே அவருக்கு அடுத்த நிலையில் இருந்தவருக்குப் பட்டம் கட்டி அவரைக் குருவாக நியமித்து அவரிடம் உபதேசம் பெற்று வந்தனர். சில ஆண்டுகள் கழித்துக் காசி சென்ற பழைய குரு நாதர் வேலங்குடிக்கு வந்தார். புதிய குருவினைக் கண்டதும் அவருக்குக் கோபம் அதிகமானது. நகரத்தார்கள் தாங்கள் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டினார்கள்.

''நான் உயிரோடு இருக்கும் போதே, நான் இறந்துவிட்டதாக எண்ணி வேறு ஒருவரைக் குருவாக ஏற்பாடு செய்துவிட்டீர்கள்! அதனால் உங்களது சந்ததி பெருகாமல் இன்றைக்கு இருக்கும் எண்ணிக்கையே என்றைக்கும் நிலையாக இருக்கட்டும்'' என்று சாபம் கொடுத்து விட்டார்.

குருவின் சாபம் உண்மையிலேயே பலிக்கும் என்பதைக் கண் கூடாகக் கண்டார்கள் வேலங்குடி நகரத்தார்கள். குருசபித்தபோது பதினொரு புள்ளிகளே இருந்தனர். வேலங்குடி நகரத்தாருள் யாருக்காவது திருமணம் செய்து ஒரு புள்ளியைக் கூட்டினால் உடனே ஒருவர் இறந்து போய்விடுவார். இவ்வாறு தொடர்ந்து இறப்புகள் நேரிட்டதால் குருவின் சாபத்தைப் போக்க என்னவழி என்று காஞ்சிபுரம் சங்கராச்சாரிய சுவாமிகளிடம் கேட்டனர். ''குரு வின் சாபம் நீங்கக் குருவைத்தான் வழிபட வேண்டும். எனவே குருவான தட்சிணாமூர்த்திக்கு ஒரு தனிக்கோயில் எழுப்பிச்சிறப்பு வழிபாடு செய்தால் இச்சாபம் நீங்கும்'' என்றார்.

அவ்வாறே தட்சிணாமூர்த்திக்குத் தனியாக ஒரு கோயில் எழுப்பிச் சிறப்பு வழிபாடு செய்தபிறகுதான் புள்ளிகள் கூடத் தொடங்கின. இன்று 44 புள்ளிகள் இருக்கின்றரார்கள்[15]அ

குருவினை மதித்துப்போற்றும் பழக்கம் இதனுல் கூடியுள்ளது. நகரத்தார்களுள் பெரும்பகுதி ஆடவரும் பெண்டிரும் குருவிடம் உபதேசம் பெற்றுத் தினமும் சிவபூசையினை அக வழிபாடாகச் செய்து வருகின்றனர். இதில் ஆழ்நிலைத் தியானம் இன்றியமை யாதது. கோயில் ஊருணிப் படித்துறையில் அமர்ந்து முன்பு சிவ-பூஜையினையும் ஆழ்நிலைத் தியானத்தினையும் மேற்கொண்-டிருக்க வேண்டும் என்று எண்ணுவதற்கான சான்றுகள் இளையாத்தங்குடியில் கிடைத்துள்ளன. இளையாத்தங்குடியில் உள்ள ஏழு ஊருணிகளிலும் அதிகமான படிக்கட்டுகளை நான்கு புறமும் கட்டியுள்ளதன் உட்பொருள் கிங்கிணிக்கூருடையாரின் ஊருணியை நோக்கும் போதுதான் தெரிய வருகிறது.

அவ்வூருணியின் படிக்கட்டுகளில் வரிசையாக உட்கார்ந்து சிவ பூசை செய்வதற்காகவும் ஆழ்நிலைத் தியானம் செய்வதற்-காகவும் சில அழகிய வேலைப்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

நகரத்தார்கள் எங்கு அமர்ந்தாலும் அழகிய ஓவிய வேலைப் பாடுகள் மிக்க பனை ஓலைத் தடுக்கினைப் போட்டு அதன் மேலேயே அமர்வது வழக்கம். திருமணத்தின்போது மணமக்களை இரத்தினக் கம்பளத்தடுக்கில் அமரச் செய்வர். முனிவர்கள் தவமி-யற்றும்போது புலித்தோலின் மீது அமர்ந்திருப்பர். அவ்வாறு அமர் வதற்கு ஏற்ற வண்ணம் கலைச்சிறப்பு மிக்க சிற்பங்களால் கற்ப லகைகளைச் செய்து அதனையே படிக்கட்டுகளாக அமைத் துள்ளனர்.

கிங்கிணிக்கூருடையார் ஊருணியின் இச்சிற்பங்கள் பல மணி நேரம் நின்று பார்க்கும் வண்ணம் மிகச் சிறப்பாக வடிவமைகப்பட்டுள்ளன. அதன்மீது அமர்ந்து தியானம் செய்பவர்களுக்கு உறுத்தாமல் இருக்க மிக மென்மையான இச்சிற்பங்கள் செதுக்கப் பட்டுள்ள திறம் வியந்து பாராட்டுவதற்குரியது.

## 4.2.3.13 3. நகர வழிபாடு :-

நகரத்தார்கள் நாக வழிபாடும் செய்து வருவது ஆய்விற்குரியது. "இலிங்க வழிபாடு எங்கு காணப்பட்டதோ அங்கெல்லாம் பாம்பு வழிபாடும் காணப்பட்டது. பாம்பு வழிபாடு எப்படித் தோன்றிற்றென்பது ஆராய்ச்சிக்கு எட்டவில்லை. இதுபோலவே, இலிங்க வழிபாட்டுக்கும் பாம்பு வழிபாட்டுக்குமுள்ள தொடர்பும் அறியமுடியாமலிருக்கின்றது" என்பார் ந.சி. கந்தையாபிள்ளை.[16]

நகரத்தார்கள் மிகப் பழங்காலத்தில் நாக நாட்டில் வாழ்ந்தவர்கள் என்ற வரலாற்றுக் குறிப்பின் அடிப்படையில், நாகநாட்டு நாகரிகத்தின்படி நாகத்தை வழிபடுகின்றனர் என்பாரும் உளர்.

நாக வழிபாடு நடைபெறும் இடங்களில் ஒரு நாகத்தின் சிற்பம் மட்டும்தனியாக அமையவில்லை.ஐந்து தலைநாகத்தினுள் இலிங்கம் காணப்படுகிறது அல்லது இரு நாகங்கள் பின்னிப் பிணைந்திருப்பது போன்ற சிற்பம் காணப்படுகிறது. இதை இரு வேறு வழிபாட்டு முறைகளைச் சார்ந்தவை.

ஐந்து தலை நாகத்தின் உள்ளே இலிங்கம் காணப்படுவது இலிங்க வழிபாடாகும். இரு நாகங்கள் பின்னிப் பிணைந்திருப்பது வளமை வழிபாடாகும்.

உலகில் ஐந்து தலையைக் கொண்ட ஒரு பாம்பு இருப்பதாக எந்த விலங்கியல் ஆசிரியரும் கூறவில்லை. அவ்வாறானால் ஐந்து தலை என்பது குறியீடாகப் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது. ஐந்து தலைப் பாம்பைப் போன்றவை ஐம்புலன்கள். அவற்றைத் தம்போக்கில் அலைய விடாமல் மன ஒருமையை வளர்த்தால் சித்தத்துக்குள்ளே சிவலிங்கம் தோன்றும் என்பதைக் குறியீடாக உணர்த்தவே இவ்வகைச் சிற்பங்கள் வழிபாட்டில் உள்ளன.

இரண்டு பாம்புகள் பின்னிப் பிணைந்திருப்பது ஆண் பெண் புணர்ச்சியின் குறியீடாகும். கணவனும் மனைவியும் இன்புற்றுக்

கலந்திருக்க இவ்வகைச் சிற்பத்தினை வழிபடுவது வளமை வழி பாட்டினுள் அடங்கும் என்பர்.[17] இலக்குமிவழிபாட்டைத்தொடங்கி மூத்த (தேவியின் ஜேஷ்டா தேவியின்) வழிபாட்டைநிறுத்தியதும் வளமை வழிபாட்டின் சான்றுகளாகும்.

நகரத்தார் மலேசியா, சிங்கப்பூர்,செய்கோன்,பர்மா,இலங்கை பங்களாதேசு, தாய்லாந்து, தெற்கு வியட்நாம், இந்தோனேசியா, மொரீசியசு, முதலிய நாடுகளுக்கு பல நூற்றாண்டுகளாகச் சென்று வரும் இயல்புடையவர்கள்.

''முந்நீர் வழக்கம் மகடூஉவோ டில்லை'' என்றதொல்காப்பிய நெறிப்படி பெண்களைக் கடல் கடந்து அழைத்துச்செல்வதில்லை வியாபாரம் காரணமாக வெளிநாடு செல்பவர்கள் பத்து ஆண்டு அல்லது பதினைந்து ஆண்டுக்கு ஒருமுறைதான் தாயகம்வருவார்கள். ஒரு முறை சென்று வருவதை ஒருகணக்கு என்பார்கள்.

திருமணமாகிப் பதினைந்து ஆண்டுகள் கணவன் மனைவி பிரிந்திருப்பது என்பது மிகப்பெரிய துன்பமாகும். பிரிவு ஆற்றாது வருந்தியோர் கூடிய விரைவில் கூடி இன்புற வேண்டும் என்பதற்காக-வேண்டுதலுக்காக எடுக்கப்பட்ட குறியீட்டுச் சிற்பமே இரு பாம்புகளின் புணர்ச்சிச் சிற்பம். (நி ப. எண்.80)

பிரிந்து வாடும் கணவன் மனைவியர் இச் சிற்பத்தை வழிபட்டால் சேர்ந்து இன்புறுகிறார்கள் என்பது கண்கண்ட உண்மை. இச்சிற்பம் பிள்ளையார் பட்டிக் கோயிலில் விநாயகர், இலக்குமி சிற்றாலயங்களின் இடையே பசுபதி நாதர் சிற்பத்தின் அருகே உள்ளது

இதே வகையான சிற்பம் இளையாத்தங்குடி, வயிரவன்பட்டி நேமம் இலுப்பைக்குடி, இரணியூர் ஆகிய ஊர்க் கோயில்களில் தூண் சிற்பங்களாக இடம் பெற்றுள்ளன.

இளையாத்தங்குடிக் கிங்கிணிக்கூரார் ஊருணிப்படித்துறையில் இச்சிற்பம் மேலும் வளர்ச்சியடைந்துள்ளது. ஆறுபாம்புகள்மூன்று இணையாகப் புணர்ந்து கூடியுள்ளது போன்ற சிற்பம் வளமை வழிபாட்டின் வளர்ந்த நிலையைக் காட்டுகிறது. மகன், தந்தை. பாட்டன் ஆகிய மூவரும் இல்லற இன்பம் துய்த்துக் குடும்பம் முழுவதும் மகிழ்ச்சியாக வாழவேண்டும் என்றகருத்தை இக்குறியீட்டுச் சிற்பம் உணர்த்துகிறது.

## 4. 2. 4. குடமுழுக்கு விழா :-

கோயில்கள் பழுதுபடும்போது எல்லாக் கற்சிற்பங்களுக்கும் மருந்து சாத்தி நிலைபெறச் செய்வதும், செப்புத் திருமேனி-களுக்குப் புளிக்காப்பிட்டு ஒளிபெறச் செய்வதும், பழுதுபட்ட கட்டடப் பகுதிகளில் மராமத்து வேலை பார்த்துச் சீர்பெறச் செய்வதும், சுதைச் சிற்பங்களுக்கும் கோபுரம் முதலிய பிற பகுதி-களுக்கும் வண்ணம்பூசி அழகு பெறச் செய்வதும் குடமுழுக்கு விழாவின் சிறப்புகளாகும்.

குடமுழுக்கு விழா பன்னிரண்டு ஆண்டுக்கு ஒருமுறை கொண் டாடப் பெற்றால், கோயில் என்றும் புதுமையாக அமைந்திருக்கும்.

சில கோயில்களில் இவ்வகைச் சீர்திருத்தம் இல்லாமையினால் சிறிதாகத் தோன்றிய வெடிப்பும், சிறிதாகத் தோன்றிய ஆலஞ்செடியும், அரசஞ்செடியும் கோயிலையே நிலை குலைத்து விடுகின்றன. சரியான **பராமரிப்பு** கோயிலை என்றும் அழகுடன் வைத்திருக்கும். அதற்குப் பெரிதும் குடமுழுக்கு விழா உதவி புரிகின்றது.

ஒன்பது நகரக் கோயில்களில் குடமுழுக்கு விழா நடைபெற்ற விவரப் பட்டியல் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| வ.எண். | கோயில் | குடமுழுக்கு நடைபெற்ற நாள் | மொத்தம் நடைபெற்ற குடமுழுக்குகள் |
|---|---|---|---|
| 1. | இளையாத்தங்குடி | 28.5.1939<br>3.7.1958<br>2.5.1985 | மூன்று |
| 2. | மாற்றூர் | 2.2.1949<br>1.7.1974 | இரண்டு |
| 3. | வயிரவன்பட்டி | 27.4.1894<br>1.2.1907<br>1928<br>12.2.1959<br>31.1.1982 | ஐந்து |
| 4. | நேமம் | 23.5.1907<br>5 2.1961 | இரண்டு |

| | | | |
|---|---|---|---|
| 5. | இலுப்பைக்குடி | 1842 | ஐந்து |
| | | 1882 | |
| | | 1901 | |
| | | 12.7.1959 | |
| | | 8.2.1985 | |
| 6. | சூரைக்குடி | 26.6.1898 | நான்கு |
| | | 9.7.1943 | |
| | | 29.6.1952 | |
| | | 9.9.1973 | |
| 7. | வேலங்குடி | 18.6.1937 | ஒன்று |
| 8. | இரணியூர் | 31.1.1944 | ஒன்று |
| 9. | பிள்ளையார்பட்டி | 22.1.1899 | நான்கு |
| | | 10.2.1928 | |
| | | 12.6.1933 | |
| | | 10.2 1951 | |

ஆய்வாளருக்குக் கிடைத்துள்ள புள்ளி விவரங்களின்படி ஒன்பது நகரக் கோயில்களுள் இலுப்பைக்குடியில்தான் முதன் முதலாகக் குடமுழுக்கு விழா (1842இல்) நடைபெற்றுள்ளது. வயிரவன்பட்டியிலும் இலுப்பைக்குடியிலும் ஐந்து முறை குட-முழுக்கு விழா நடைபெற்றுள்ளது. அதிகமான குடமுழுக்கு விழா நடைபெற்றதால், இக்கோயில்களில் அதிகமான கட்டடக் கலை, சிற்பக் கலை, ஓவியக் கலைச் சிறப்புகள் காணப்படுகின்றன என்பது உண்மையாகும்.

சூரைக்குடியிலும் பிள்ளையார்பட்டியிலும் நான்கு முறை குடமுழுக்கு விழா நடைபெற்றுள்ளது.

வேலங்குடியிலும், இரணியூரிலும் ஒரு முறைதான் குட-முழுக்கு விழா நடைபெற்றுள்ளது. தற்பொழுது இரணியூரில் குடமுழுக்கு விழாவிற்கான சீரமைப்புப் பணிகள் நடைபெற்று வருகின்றன. வேலங்குடியில் கூடிய விரைவில் குடமுழுக்கு விழா-விற்கான சீரமைப்பு வேலைகள் தொடங்க உள்ளன.

## 4. 2. 5. திருவிழாக்கள் குறைந்தமைக்கான காரணங்கள்:

ஒன்பது நகரக்கோயில்களில் திருவிழாக்கள் இப்பொழுது குறைந்து விட்டன. அதற்கான காரணங்கள் ஆராயப்பட-வேண்டியவை.

## 4. 2. 5.1. திருவிளாவிற்கு பெருந்திரள் வாராமை:-

முன்பு, ஒரு கோயிலில் ஆயிரம் புள்ளிகள் இருந்தால் இரு நூறு புள்ளிகளாவது தாயகத்தில் - சொந்த ஊரில் இருப்பார்கள். பாக்கியுள்ள எண்ணூறு புள்ளிகள் வெளிநாட்டில் இருப்பார்கள். பத்து அல்லது பதினைந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை தாயகம் வரும்போது இங்கு வேறு எவ்வேலையிலும் அவர்கள் ஈடுபடுவ தில்லை. தாயகத்தில் இருக்கும் ஓராண்டு அல்லது ஈராண்டில் தான் வீடு கட்டுவது, திருமணம் செய்து வைப்பது, உறவினர் வீடுகளுக்குச் சென்று வருவது, திருக்கோயில்களுக்கும் விழாக்களுக்கும் சென்று வருவது என ஒரு பழக்கம் வைத்திருந்தனர்.

உறவினர் வீட்டுக்குச் சென்றாலும்கோயிலுக்குச் சென்றாலும் குறைந்தது பத்து நாட்களாவது தங்கும் பழக்கம் இருந்திருக்கிறது அத்துடன் வீட்டில் உள்ள மாடு, கன்றுகளையும் செல்லுமிடங்க ளுக்கெல்லாம் மாட்டு வண்டியுடன் கூட்டிச் செல்லும் வழக்கமும் இருந்திருக்கிறது. அதனாலேயே அன்றையத்திருமணங்கள் எட்டு நாட்கள் வரை நடைபெற்றுள்ளன.

முன்பு நகரக் கோயிலில் திருவிழா என்றால் குறைந்தது இரு நூறு புள்ளிகளாவது குடும்பத்துடன் செல்வார்கள். பிறகோயிலைச் சார்ந்த தங்கள் உறவினர்களையும் அழைத்துச் செல்வார்கள். இப் பத்து நாட்களில் வழிபாடும், பொழுது போக்குக் கலை ஈடு பாடும் நடைபெறும்.

இப் பொழுது நகரத்தாரில் ஒரு சிலரே வெளிநாடுகளில் பணி புரிகின்றனர். அவர்கள் பண்டை மரபை மீறி மனைவி மக்களுடன் வெளிநாடுகளுக்குச் சென்றுள்ளனர். வெளிநாடு சென்றோர் தாய கத்திற்கு அதிகம் வருவதில்லை. வரினும் அதிக நாட்கள் தங்குவ தில்லை. இன்று உலகம் முழுவதும் எல்லாப் பணிகளிலும்விரைவு காணப்படுகிறது. சில நாட்களே விடுமுறை கிடைக்கின்றது. என வே தங்கள் பிள்ளைகளின் திருமணத்தைக் கூட வெளி நாட்டுக் கோயில்களிலேயே நடத்தி முடித்துக் கொள்கின்றனர்

உள்நாட்டில் இருப்போர் பத்து நாட்கள் விடுமுறைஎடுத்துத் திருவிழாக்களில் கலந்து கொள்ள இயலவில்லை. சொந்த வீடு மட்டுமே செட்டி நாட்டில் இருக்கிறது. ஆனால் ஒவ்வொருவரும் பற்பல தொலை தூர ஊர்களில் பணியாற்றுகிறார்கள். எனவே கோயில் திருவிழாக்கள் பத்து நாட்கள் நடைபெற்றால் யாரும் வர இயலவில்லை.

### 4.2.5.2. சிலைத் திருட்டு பெருகியமை :

வறுமை, விலைவாசி ஏற்றம் வேலையில்லாத் திண்டாட்டம், தங்க விலை உயர்வு ஆகியன பலரையும் திருடர்களாக ஆக்கி வருகின்றன. கோயில் சிலைகளுக்கு வெளிநாட்டில் அதிக மதிப்பு என்பதால் அவற்றைத்திருடி அதிக விலைக்கு விற்றுவிடப் பல ஊர்களில் முயற்சி நடந்துள்ளது.

அண்மையில் சூரைக்குடியில் பல செப்புத் திருமேனிகள் திருடப்பெற்றன. நல் ஊழ் வயத்தால் திரும்பக் கிடைத்துள்ளன.

திருவிழா நாட்களில் செப்புத் திருமேனிகளைத் திருவீதி உலாவாக இரவில் கொண்டு வரப் போதிய பாதுகாப்பு இக்காலத்தில் கிடைக்கவில்லை. இதனால் கோயில் திருச்சுற்றிலேயே உலாவினை நிறைவுசெய்து கொள்ளும் வழக்கம் காணப்படுகிறது.

### 4.2.5.3. உடல் உழைப்பாளர்கள் கிடைக்காமை :-

ஒன்பது நகரக் கோயில்களும் ஒன்பது கிராமங்களிலேயே அமைந்துள்ளன அக்கிராம மக்களில் பெரும்பாலோர் முன்பு திருவீதி உலாவில் பல்லக்கு சப்பரம் முதலியவற்றைத் தூக்கி வருவார்கள். தேர், சகடை முதலியவற்றை இழுப்பார்கள். தற்பொழுது சாதி வேறுபாடுகள், ஏற்றத் தாழ்வுகள் தேவையின்றி அதிகம் பேசப் படுவதாலும், அவ்வுடல் உழைப்பாளர்கள் வெளியூர்களில் வேலை பார்ப்பதாலும் போதிய ஆட்கள் கிடைக்கவில்லை. இதனாலும் திருவீதி உலா நடத்தஇயலவில்லை.

### 4.2.5.4. திருவிழாக்கள் தொடர்ந்து நடைபெற :-

திருவிழாக்கள் ஆடம்பரச் செலவுகள் அல்ல. அவற்றின் உள் நோக்கம் இறைத்தத்துவத்தைக் குறியீடாக விளக்கிப் பல்வேறு உலகச்சிக்கல்களில் நைந்து போகும் மனத்திற்கு இளைப்பாற்றுதல் தந்து, மீண்டும் புத்துணர்வுடனும் அதிக சக்தியுடனும் செயற்பட வைக்கும் நோக்கம் கொண்டவை.

பங்காளிகள் உறவினர்கள், ஊரவர்கள், மற்றவர்களுடன் கலந்துரையாட இது வாய்ப்பளிக்கிறது. ஆண்டுக்கு ஒரு முறை கூடினால் கூட அது ஒரு பொதுக் குழுவைக் கூட்டியதற்கு இணையாகும்.

குடும்பங்களில் ஏற்படும் விரிசல்கள், சண்டைகள் ஆண்டுக்கு ஒருமுறை இல்லுறை தெய்வத்திற்குப் (தென்புலத்தாருக்குப்) படைப்பு விழா நடத்தும் போது தீர்ந்து விடுவது போன்று, இவ் விழாக்களால் வேற்றுமைநீங்கிஒற்றுமைவளரவாய்ப்பாக அமையும்

எட்டு நாள் திருமணச் சடங்குகளை ஒரு நாளில் நடத்துவது போன்று, பத்து நாள் திருவிழாக்களை ஓரிரு நாட்களில் நடத்த-லாம். திருவிழாக்கள் நடைபெறாமலே போவதைக்காட்டிலும் ஓரிரு நாட்களிலாவது நடப்பது நலம் பயக்கும்.

செப்புத் திருமேனிகளையும், தங்க வைர நகைகளையும் வங்கிப் பாதுகாப்புப் பெட்டகங்களில் பேணிப் பாதுகாத்துக் காவல்துறை உதவியுடன் திருவிழாக்களை நடத்தவேண்டும். தேர் இழுக்கப் போதிய ஆட்கள் கிடைக்காவிட்டால் திருவாரூரில் நடப்பது போன்று இயந்திர உதவியினால் தேர் ஊர்வலத்தை நடத்தலாம்.

திருவிழாக்களின் நோக்கம் பற்றிய சொற்பொழிவுகள், பட்டி-மன்றங்கள் வழக்காடு மன்றங்களை நடத்தலாம், தலபுராணச் செய்திகளை அடிப்படையாகக் கொண்ட நாட்டிய நாடகத்-திற்கும் உரைநடை நாடகத்திற்கும் ஏற்பாடு செய்யலாம்.

அதிகமான மக்களைக் கோயிலை நோக்கி அழைப்பதற்காக மக்கள் விரும்பும் இசைக் கலைஞர்கள், நடிகர்களைக் கொண்டு கலை நிகழ்ச்சிகள் அமைக்கலாம்.

திருவிழாக் காலத்தில் போதிய மின் வசதி, குடிநீர் வசதி, போக்குவரத்து வசதி, காவல் வசதி கிடைக்க ஒரு அமைச்சரை விழாவிற்குத் தலைமை தாங்க அழைக்கலாம்.

## 4.3. முடிபுகள்:-

4. 3. 1. ஒன்பது நகரக் கோயில்களிலும் நாள்தோறும் ஐந்து வேளை பூசை நடைபெறுகிறது,

4. 3. 2. காமிக ஆகமத்தில் உள்ள வழிபாட்டு முறைகளே இங்கு நடைமுறையில் உள்ளன.

4, 3. 3. அபிடேக ஆராதனையின் போது இறை அருட்சத்தி மெய்யன்பர்களுக்குப் பரவுகிறது என்பதனை அறிவியல் பூர்வமாக நிரூபித்துள்ளனர். இதனால் அபிடேக

நேரத்தில் அதிகமான மெய்யன்பர்கள் வழிபாடு செய்கின்றனர்.

4.3.4. இளையாத்தங்குடி, மாற்றூர், வயிரவன்பட்டி, இலுப்பைக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய ஊர்க்கோயில்களில் மட்டுமே தற்பொழுது திருவிழாக்கள் நடைபெற்று வருகின்றன.

4.3.5. வயிரவன் பட்டியில் கொண்டாடப்படுகின்றசம்பாசட்டி விழாவின் இயற்பெயர் சம்கார சட்டி என்பதேயாகும். சம்பாசுரனை இவ்வூரில் அழித்ததற்காக இவ்விழா கொண்டாடப்படுவதாகக்கூறுகின்றனர். அவ்வசுரனின் பெயர் சம்பாசுரன் அன்று, கும்பாசுரன் ஆவான்.

4.3.6. மரணப் பயத்தைப் போக்கவும் மறுபிறப்பின்றி மரண மிலாப் பெருவாழ்வு வாழவும் சித்திரா பௌர்ணமி விழா இலுப்பைக்குடியில் கொண்டாடப்படுகிறது.

4.3.7. திருக்கார்த்திகையின் போது சொக்கன் பனை கொளுத்தப்படுகிறது. இது பண்டைய நெருப்பு வழிபாட்டையும் சிவனது அடிமுடி தேடிய படலத்தையும் நினைவூட்டுவதாகவே அமைந்துள்ளது. இளையாத்தங்குடி, மாற்றூர், வயிரவன்பட்டி, இலுப்பைக்குடி, பிள்ளையார் பட்டி ஆகிய ஊர்க் கோயில்களில் மட்டும் இவ்விழா நடைபெறுகிறது.

4.3.8. பிள்ளையார் நோன்பு விழாவில் ‘இழை’ எடுத்துக் கொள்ளும் வழக்கம் உள்ளது. சிவச்சோதி வடிவமான பிள்ளையாரை ஒளிவடிவில் வழிபட்டு, அவரை மனக் கோயிலில் இடம் பெறச்செய்யவே இழையினைத் தீயுடன்விழுங்கும் வழக்கம் காணப்படுகிறது. வயிரவன் பட்டியில் இவ்விழா நடைபெறுகிறது.

4.3.9. விநாயகர் சதுர்த்தி, பெண்கள் மட்டும் மேற்கொள்ளும் விரதநிறைவு விழாவாக அமைந்துள்ளது. திருமணம் ஆகாதவர்கள் திருமணம் நடைபெறவும், திருமணம் ஆனவர்கள் குடும்ப நலன் கருதியும் இவ்விரதத்தை மேற்கொள்கின்றனர். பிள்ளையார்பட்டியில் இவ்விழா நடைபெறுகிறது.

4.3.10 நகரக் கோயில்களைச் சார்ந்துள்ள நாட்டார்களின் அம்மன் கோயில்களையும் பேணிப்பாதுகாத்து அக்கோயில் விழாக்களையும் நகரக்கோயில் நிருவாகிகள் நடத்துவது மனிதாபிமானத்தையும் உண்மையான இறைத் தொண்டையும் நிருபிக்கின்றன.

4.3.11. குருவழிபாடு நகரத்தார்களின் வழிபாடுகளுள் தனித்தன்மை வாய்ந்ததாகும். அக வழிபாட்டிற்காக இரண்டு குருமார்களை அவர்கள் இன்றும் பேணிப் பாதுகாத்து வருகின்றனர்.

4.3.12. நாகவழிபாடு நகரத்தார்களின் வளமை வழிபாட்டைக் காட்டுகிறது.

4.3.13. கோயிலில் உள்ள சிற்பங்களில் கீழ்ப்பகுதியில் சாத்தியுள்ள மருந்து சிதைந்தாலும், கோயில் கட்டடக் கலையில் சிதைவு ஏற்பட்டாலும் நகரத்தார்கள் திருக்குட நீராட்டு விழாவிற்கு ஏற்பாடு செய்கின்றனர்.

4.3.14. திருவிழாக்களின் நோக்கம் இறைத்தத்துவத்தைக் குறியீடாக விளக்கிப் பல்வேறு உலகச் சிக்கல்களில் நைந்து போகும் மனத்திற்கு இளைப்பாறுதல் தந்து, மீண்டும் புத்துணர்வுடனும் அதிக சத்தியுடனும் செயற்பட வைப்பதேயாகும்.

4.3.15. பலநாள் திருவிழாக்கள் ஒரு சில நாட்களாவது நடைபெறச் சில பரிந்துரைகள் கூறப்பட்டுள்ளன. அவ்வாறு ஏற்பாடு செய்வது நலம் பயக்கும்.

## குறிப்புகள்

### வழிபாட்டு முறை.

1. திருநாவுக்கரசர், தேவாரம், தனித்திருக்குறுந் தொகை, பாடல் 7.

1.அ சத்யோஜாத சிவாசாரியார், (ப.ஆ). காமிகாகமம்-ப.4.

2. டாக்டர் இரா. நாகசாமி மா. சந்திரமூர்த்தி—தமிழகக்கோயிற் கலைகள்-ப. 33.

3. நசன் - ஆலயங்களும், ஆகமங்களும்—பக். 146-147 இல் மேற்கோளாக வந்துள்ளது.

4. திருக்குறள் - ‘‘ வான்சிறப்பு’’ - பா.8.

5. பொரு. படை - அடி.2.

6. நேர்காணல் – வாகீச ஐயர், வைரவ குருக்கள், மாணிக்கம் செட்டியார், ஏகப்ப செட்டியார் - 14.2. 1981.

7. விசுவநாத ஐயர் – இளையாற்றங்குடி மான்மியம் - ப. 24.

8. மேலது - ப.34.

9. மேலது - ப.35.

10 மேலது

11. ந. கல்யாணசுந்தரம் – ‘‘திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாறு’’ – ப.194.

11அ திருஞானசம்பந்தர், தேவாரம், திருநெடுங்களம்-பாடல் 9.

12. ந. சி. கந்தையா பிள்ளை-‘‘சைவ சமய வரலாறு’’-பக். 5-6.

13. சுப்பிரமணிய ஐயர். இலுப்பைக்குடிப் புராணம்-பக். 32-43.

14. நேர்காணல்-கனகசபாபதி குருக்கள்-10-8-1980.

15. நேர்காணல்– சுப்பிரமணிய குருக்கள்-13-8–1980

15அ.மேலது.

16. ந. சி. கந்தையா பிள்ளை - மு நூ., ப.11.

17. நேர்காணல் - வி. வேதாசலம், காப்பாட்சியர் – மதுரைத் தொல்பொருள் ஆய்வுத் துறை - 18-1-1988.

# 5. நிருவாக முறை

ஒன்பது நகரக் கோயில்களிலும் தினசரி வழிபாடு நடந்து-வருவதற்குப் பெரிதும் காரணமாக இருப்பது அவற்றின் நிருவாக முறைதான்.

பண்டைக் காலம் போல இப்போது பெரும் எண்ணிக்கையில் மக்கள் தினசரி வழிபாட்டிற்குக் கோயில்களுக்குச் செல்வதில்லை. கோயில் வழிபாட்டிற்குரிய பொருட்களின் விலை முன்பைவிடப் பல மடங்கு கூடியுள்ளது. மேலும் கோயில் பணியாளர்களுக்கு அதிகமான ஊதியம் அளிக்க வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. இரயத்துவாரி (விவசாயி) முறைச் சட்டத்தால் 12 ஆண்டுகளுக்கு மேல் உழுதவர்களுக்கே நிலம் சொந்தமெனச் சட்டம் வந்ததால் கோயில் நிலங்கள் பல, இன்று உழுதவர்களுக்கே சொந்தமாகி விட்டன. இவ்வாறு வரவு குறைந்தும் செலவு கூடியும் வருகின்ற காரணத்தால் தற்பொழுது பல கோயில்களை ஒரு நாளைக்கு ஒரு தடவைகூடத் திறந்து வழிபாடு செய்வதில்லை.

இந்நிலையில் ஒன்பது நகரக் கோயில்களில் நாள்தோறும் ஐந்து வேளை பூசை நடைபெறுகிறதென்றால், அதற்குநகரத்தார்களின் பக்தி உணர்வும், நிருவாக முறையும் தான் காரணமாகும்.

ஆலைகளின் வேலை சரியாக நடைபெறாவிட்டால் உற்பத்தி பாதிப்பது போல ஆலயங்களில் பூசை முறைகள் சரியாக நடைபெறாவிட்டால் நாட்டில் பஞ்சம், பட்டினி, தாண்டவமாடும் என்பார் நசன்.[1]

,'முன்னவனார் கோவில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள்ள வாரி வளங்குன்றும்
கன்னம் களவு மிகுந்திடும் காசினி
என்னரு நந்தி எடுத்துரைத்தானே''

என்பர் திருமூலர் கோயில் வழிபாட்டினால் நாடு முழுமைக்கும் நன்மை விளைவதும், தனி மனிதன் வீடுபேறு பெறும் அளவிற்கு உயர்வதும் மெய்யன்பர்களுக்கு நன்கு புலனாகும். எனவேதினசரி வழிபாடு நிகழ ஒன்பது நகரக் கோயில் நிருவாகத்தினர் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துள்ளனர்.

கோயில் நிருவாகம் மூன்று வகையாகக் காணப்படுகின்றது. அவையாவன:-

1. பூசை செய்வோர்.
2. உடல் உழைப்பாளர்கள்.
3. நிருவாகக் குழுவினர்

## 5. 1. பூசை செய்வோர்:-

### 5. 1. 1. குருக்கள்:-

ஒன்பது நகரக் கோயில்களிலும் சைவக் குருமார்களே (சிவாச்சாரியார்களே) பூசை செய்கின்றனர். இளையாத்தங்குடியில் இரு குருமார்களும், பிள்ளையார் பட்டியில் பதினாறு குருமார்களும் உள்ளனர். பிள்ளையார்பட்டியில் விழாக்காலங்களில் மேலும்அதிகமான குருமார்கள் வெளியூரிலிருந்து வரவழைக்கப்படுகின்றனர். பிற ஏழு கோயில்களிலும் ஒரு குருமார் மட்டுமே பூசை செய்து வருகின்றார். அவரைக் குருக்கள் என அழைக்கின்றனர்.

### 5. 1. 2 அத்தியானப் பட்டர்:-

இளையாத்தங்குடியிலும்பிள்ளையார்பட்டியிலும் 'அத்தியான பட்டர்' என்ற இரண்டாம் நிலைக் குருக்கள்உள்ளார்

பண்டாரகத்தவர் என்னும் சொல் சிதைந்து பண்டாரத்தார் ஆகி ணகரம்டகரமாகி பட்டாரத்தார், பட்டாரர், பட்டர் ஆயிற்று என்பர் [2]

அத்தியான பட்டர் அருச்சனைக்குரிய திருமந்திரங்களைச் சொல்ல, குருக்கள் மலர் தூவி வழிபாட்டினை நடத்துகிறார்.

ஒன்பது நகரக் கோயில்களிலும் பூசை செய்வோர் குறைந்தது மூன்று தலைமுறைகளாகப் பூசை செய்து வருகின்றனர். இரணி

பூரில் பூசை செய்துவரும் சுந்தரேசக் குருக்கள் ஐந்தாவது தலை முறையாகப் பூசை செய்து வருகின்றார் என்பதுகுறிப்பிடத்தக்கது.

இளையாத்தங்குடியில் பூசை செய்து வரும் கல்யாணசுந்தரக் குருக்கள் மூன்றாவது தலைமுறையாகப் பூசை செய்து வருகின் றார். அவருக்குமாத ஊதியமாக ரூபாய் நூற்று ஐம்பத்தொன்றும் பஞ்சப்படியும் வழங்கப்படுகிறது.

"இந்த ஊதியம் போதுமானதா?" என ஆய்வாளர் நேர் காணலின் போது கேட்டதற்குக் கல்யாணசுந்தர குருக்கள் கூறிய விடை, கோயில் நிருவாகத்தைக் கோபுர விளக்காக ஒளிரவைத் தது. அவர் கூறிய விடை:-

"கோயில் பூசை செய்வது வருமானத்தை எதிர்பார்த்து அல்ல. பழம் பெரும் தெய்வங்களுக்குப் பூசை செய்வது எனது பேறு என்றே கருதுகிறேன். மனம் ஒன்றிப் பூசை செய்வதில் உள்ள இன்பம், கோடி உரூபாய்க் கொட்டிக் கொடுத்தாலும் கிடைக்காத ஒன்றாகும். இந்த ஊதியம் எனக்கும் என் மனை விக்கும் போதுமானது. எங்களது உணவிற்காகக் கோயில் நிலத்தி லிருந்து நெல் தருகிறார்கள். தினசரி ஆண்டவனுக்குப் படைக் கும் உணவுப் பொருட்களையும் தந்து உதவுகிறார்கள். எங்களுக் காக வீட்டு வசதி செய்து தந்துள்ளார்கள். அக்கிரகாரம் கட்டித் தங்க வசதி செய்து கொடுத்தது நகரத்தார்களின் சிறந்த நிருவா கத்திற்குச் சான்றாகும். வீட்டிற்கு மாதம் இருபது ரூபாய் மட்டுமே வாடகையாகப் பெற்றுக் கொள்கின்றனர். மாதம் முழுவதும் மின் விளக்குகளை எவ்வளவு பயன்படுத்தினாலும் மின் கட்டணமாக முன்பு ஒரு ரூபாயும், தற்போது நான்கு ரூபாய் மட்டும் செலுத் தினால் போதும் தெய்விகப்பணி செய்து நாங்கள் புண்ணியம் தேடிக் கொள்வதற்கு அவர்கள் கொடுக்கும் ஊதியம், கரும்பு தின்னக் கூலி கொடுப்பது போன்றது மேலும் தொடர்ந்து நாங்கள் தலைமுறை தலைமுறையாக இவ்வூரில் பூசை செய்யவேண்டும் என்பதற்காக நிருவாகத்தினர் அளிக்கும் சலுகைகள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை" என்றார் கல்யாணசுந்தர குருக்கள்.[3]

ஆகமங்களை முழுமையாகக் கற்றுப் பூசை செய்வோர் எண்ணிக்கை குறைந்து வரும் இந்நாளில் சில ஊர்களில் மூன்று கோயில்களுக்கு ஒரு அருச்சகர் வீதம் அமர்த்துகின்றனர். அவருக்கு அம்மூன்று கோயிலின் அருகிலும் தங்க வீடு கிடைக் காமையால் சற்றுத் தொலைவில் உள்ள நகரத்தில் குடியேறுகிறார்.

அங்கிருந்து மூன்று கோயில்களுக்கும் குறிப்பிட்ட நேரத்தில் வந்து செல்லப் போக்குவரத்து வசதி இடம் கொடாமையால் இயன்றபோது வந்து ஒரு சிலமணி நேரம் மட்டுமே கோயிலைத் திறந்து வழிபாடு செய்கின்றார்.

நாட்டு நடப்புகள் மேற்கண்டவாறு இருப்பினும் ஒன்பது நகரக் கோயில்களிலும் கோயிலைக் கட்டும்போதே கோயில் பணியாளர்களுக்கான அக்கிரகாரத்தையும், வழிபாடு செய்வோர் பல நாள் தங்கியிருந்து வழிபாடு செய்ய உணவு வசதி, அடுமனை வசதியுடன் கூடிய நகர விடுதிகளையும் கட்டியுள்ள நிருவாகத் திறன் வியந்து பாராட்டுவதற்குரியது. இதிலும் ஆண்கள் தங்குவதற்கு ஒரு விடுதியையும், பெண்கள் தங்குவதற்குத் தனியாக ஒரு விடுதியையும் வயிரவன்பட்டி, பிள்ளையார்பட்டிக் கோயிலார்கள் கட்டியுள்ளனர் என்பது மேலும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது.

## 5. 1. 3. ஓதுவார்:-

ஒன்பது நகரக் கோயிலிலும் முன்பு வழிபாட்டில் வடமொழி அருச்சனையே இடம் பெற்றிருந்தது. தற்பொழுது வேண்டிக் கேட்டுக் கொண்டால் தமிழிலும் அருச்சனை செய்யப்படுகிறது. எனினும் எப்போதும் தமிழில் பாடித் தொழுவதற்காக 'ஓதுவார்' என்ற பதவியில் ஒரு இசைஞானியார் இடம் பெற்றுள்ளார். இவரை விண்ணப்பம் செய்வார் என்றும் கூறுவர்.[4] முன்பு ஒன்பது கோயில்களிலும் ஓதுவார்கள் இருந்தனர். தற்பொழுது வயிரவன்-பட்டி, பிள்ளையார்பட்டியில் மட்டுமே ஓதுவார்கள் உள்ளனர். இவர்கள் ஐந்து வேளைப் பூசையின் போது பாடும் தேவார திருவாசகப் பாடல்கள் மிக இனிமையாக அமைந்துள்ளன. அவற்றுள்ளும் இரவு பள்ளியறையில் பாடும் பாடல்கள் மிகவும் சுவையானவை-யாக அமைந்துள்ளன. இறைவன் இறைவி ஊஞ்சலில் இணையும் காட்சியும், பள்ளியறை நிவேதனப் பொருளான பாலும் இப் பாடல்களும் மிக இனிமையானவை என்பதாலேயே அருத்த சாமப் பூசைக்கு அதிகமான அன்பர்கள் கூடுகின்றனர்.

## 5. 1. 4. திருமஞ்சனம் எடுக்கிறவர்:

கோயில்களில் இறைவன் திருஉருவங்களுக்கும் நந்தி முதலிய வாகனங்களுக்கும் திருமஞ்சனம் (நீராட்டு) நடத்துவதற்கு

வேண்டிய தண்ணீரைக் கொண்டு வந்து தருபவருக்குத் திருமஞ்சனம் எடுக்கிறவர் எனப் பெயர். இவர் குருக்கள் பூசனை செய்யத் தேவையான உதவிகளையும் செய்வார்.

ஒன்பது நகரக் கோயில்களிலும் திருமஞ்சனம் எடுப்போர் பணிபுரிகின்றனர். இவர்கள் தங்குவதற்கும் வீட்டுவசதி, மின் வசதி அளிக்கப்பட்டுள்ளது.

## 5. 2. உடல் உழைப்பாளர்கள்:

முழுமையாகச் சமயச் சடங்குகளில் ஈடுபடும் முதலாவது வகையினருடன், சமய ஈடுபாட்டுடன் உடல் உழைப்பினை நல்கும் தொழிலாளர்கள் கோயில்களுக்கு அதிக எண்ணிக்கையில் தேவைப்படுவர்.

ஒவ்வொரு கோயிலிலும் பணிபுரிந்து வந்த தொழிலாளர்களின் பட்டியலை அடுத்துக் காண்போம்.

1. சுவயம்பாகு (சமையல் செய்வோர்)
2. விநியோகம் செய்வார் (பூசைப் பொருட்களை உரியவர்களிடம் கொடுப்பவர்)
3. சிங்கன் முறை (விறகு முதலியன கொணர்பவர்)
4. சிற்பாதம் தாங்குகிறவர் (கோயிலுக்குள் பல்லக்குத் தூக்குபவர்)
5. முன் தண்டு பின் தண்டுபிடிப்போர்(கோயிலுக்கு வெளியே)
6. கொடி குடை ஆள்
7. தேர் இழுப்போர்.
8. திருவீதியில் பந்தம் பிடிப்போர்
9. திருவிளக்குக்காரன்
10. வாணக்காரன்
11. சிற்பி
12. கொத்தனார்
13. தச்சர்
14. கொல்லர்
15. தங்கவேலை, வெள்ளி வேலை ஆசாரி
16. செப்பு வேலை செய்வோர்

17. மணி வேலை செய்வோர்
18. குயவர்
19. வண்ணான்
20. கொட்டகை போடுவோர்
21. தோட்ட வேலைக்காரர்
22. மாலை கட்டுவோர்
23. கோயில் காவல்காரர்கள்
24. கோயில் நிலங்களில் விவசாயம் செய்வோர்
25. நாதசுரக் குழுவினர்

மேற்கண்ட பட்டியலில் இடம்பெற்ற 25 வகைத் தொழிலாளர்களும் கோயில் கட்டும்போதும், திருக்குட நன்னீராட்டு விழாவின் போதும் பணிபுரிந்தனர்.

ஒவ்வொரு கோயிலும் குறைந்தது எட்டு ஆண்டுகள் முதல் நாற்பது ஆண்டுகளுக்குள் கட்டப்பெற்றுள்ளன. அக்காலங்களில் சுற்றுப்புறக் கிராம மக்கள் பலருக்கு வேலை வாய்ப்பு கிடைத்துள்ளது.

தற்போதைய நடைமுறை நாட்களுக்கு அத்தனை தொழிலாளர்களும் தேவைப்படவில்லை அத்துடன் விலைவாசி ஏற்றத்தையும் கூடுதல் சம்பளத்தையும் சமாளிக்கக் குறைந்த தொழிலாளர்களை வைத்துக்கொண்டு நிறைவாக வேலைகளை முடிப்பதே நிருவாகிகளுக்கு அழகாக அமைந்துள்ளது. எனவே தற்பொழுது

1. சுவயம்பாகு
2. விநியோகம் செய்வார் (இவர் சிங்கன் முறையான் விறகு முதலிய சமையலுக்குத் தேவையானவற்றையும் கொண்டு வருகிறார்)
3. சிற்பாதம் தாங்குகிறவர் (இவர் திருவிளக்குக்காரன் வேலையையும் பார்த்து வருகிறார்)
4. கோயில் காவல்காரர் இவர் தோட்ட வேலையையும், மணி அடித்தல் முதலிய கோயில் வேலைகளையும் பார்த்து வருகிறார்)
5. மாலை கட்டுவோர்

6. கோயில் நிலங்களில் விவசாயம் செய்வோர்
7. நாதசுரக் குழுவினர்.

ஆகிய ஏழு வகையான தொழிலாளர்களே பணிபுரிகின்றனர்.

பிற வேலைகளைப் பார்க்க வேண்டும்போது தேவையான ஆட்களை வரவழைத்துக் கொள்கின்றனர்.

கோயிலுக்கு வெளியே இறைவன், இறைவி எழுந்தருளும் போது அக் கிராம மக்களே அப்பல்லக்கின் முன் தண்டினையும் பின் தண்டினையும் பிடித்துத் தூக்கும் பணியில் அமர்த்தப்படுகின்றனர். இதனால் அவர்களுக்கு முன் தண்டு பிடிப்போர் பின் தண்டு பிடிப்போர் என்ற காரணப் பெயர் உருவாயிற்று. இவர்களுக்கு நாட்கூலியும் உணவும் வழங்கப்படுகின்றன.

இறைவன் திருவீதி உலா, ஒரு அரசனின் படை அணிவகுத்து வருவது போல அமைந்திருக்கும். எனவே சிவச்சின்னங்கள் நிறைந்த கொடியினை இருவர் முன்னதாகத் தூக்கி வருவார்கள். இறைவன் மீது வெயிலும் மழையும் படாது பாதுகாக்க ஒருவர் மிகப் பெரிய அழகிய வேலைப்பாடு அமைந்த குடையினை ஏந்தி-வருவார். இவர்களும் திருவிழா நாட்களுக்கு மட்டும் பணியில் அமர்த்தப்படுகின்றனர். இவர்களுக்கு நாட்கூலியும் உணவும் வழங்கப்படுகின்றன.

தேர் இழுப்போர், திருவீதியில் தீப்பந்தம் (தீவட்டி) பிடிப்போர், வண்ண வண்ண வெடிகளை வெடிக்கும் வாணக்காரன், கொட்டகை போடுவோர் ஆகியோர் மேற்சொன்னாற்போலவே திருவிழா நாட்களில் மட்டும் பணியில் அமர்த்தப்பட்டு, நாட்கூலியும் உணவும் பெறுகின்றார்கள்.

சிற்பி, கொத்தனார், தச்சர், கொல்லர், தங்க வேலை வெள்ளி வேலை ஆசாரி, செப்பு வேலை செய்வோர், மணி வேலை செய்வோர், குயவர், ஆகியோர் திருக்குட நன்னீராட்டு விழாவின் போதும், சிறப்பு விழாக்களின் போதும் வரவழைக்கப்படுகின்றனர். அவர்களுக்குக் குறிப்பிட்ட வேலையைக் குறிப்பிட்ட காலத்திற்குள் முடித்துத் தரும்வண்ணம் ஒப்பந்தத்தின் பேரில் அவர்கள் பணியமர்த்தப்படுகின்றார்கள்.

## 5. 3. நிருவாகக் குழுவினர்:-

ஒன்பது நகரக் கோயில்களும் தனித்தனி நிருவாகக் குழுக் களைக் கொண்டுள்ளது. அந்நிருவாகக் குழுக்களின் திட்டப் படியே கோயிற் பணிகள் செயல்படுத்தப்படுகின்றன.

நிருவாகக் குழுவினைத் தேர்ந்தெடுப்பதிலும் மக்களாட்சி முறையே காணப்படுகின்றது. நிருவாகத்தினரைக் காரியக்காரர் என்றும், நிருவாகப் பணியைப் பாரியத்தனம் ஏற்றல் என்றும் குறிப்பிடுகின்றனர்.

ஒரு கோயிலின் மொத்தப் புள்ளிகள் எத்தனை என்பதை முதலில் கணக்கிடுகிறார்கள். திருமணமான ஆடவர் ஒரு புள்ளி யாக எண்ணப்படுவார். பெண்களை ஒரு புள்ளியாகக் கணக்கிடுவ தில்லை.

கணவர் இறந்தால் அப்பெண்ணை அரைப் புள்ளியாகக் கணக்கிடுவர். இதிலிருந்து ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழ்வது தான் முழுமையான வாழ்க்கை என்னும் தத்துவத்தின் அடிப்படை யிலேயே இப்புள்ளிக் கணக்கை ஏற்பாடு செய்திருப்பார்கள் போலும் என்று எண்ணத் தோன்றுகிறது.

இவ்வாறு கணக்கிடப் பெற்ற ஒன்பது நகரக் கோயில் புள்ளி களின் விவரப் பட்டியல்: (ஆய்வாளர் நேரில் சென்று ஒன்பது நகரக் கோயில்களிலும் திரட்டியவை).

| | கோவில் | மொத்தப் புள்ளிகள் |
|---|---|---|
| 1. | இளையாத்தங்குடி | 4,900 |
| 2. | மாற்றூர் | 5,426 |
| 3. | வயிரவன்கோயில் | 4,274 |
| 4. | நேமம் | 1,661 |
| 5. | இலுப்பைக்குடி | 1,503 |
| 6. | சூரைக்குடி | 1,050 |
| 7. | வேலங்குடி | 41 |
| 8. | இரணியூர் | 2,016 |
| 9. | பிள்ளையார்பட்டி | 2.673 |
| | மொத்தப் புள்ளிகள் | 23,544 |

## 5. 3. 1. இளையாத்தங்குடி:-

இளையாத்தங்குடிக் கோயிலார் செட்டிநாட்டின் அறுபது ஊர்களில் (ஒவ்வொரு கோயிலார் வசிக்கும் ஊர்ப்பட்டியல் பின்னிணைப்பில் உள்ளது) வசிக்கின்றனர். இந்த அறுபது ஊர்ப் புள்ளிகளுக்கும் நிருவாகத்தில் எவ்வாறு பங்கு கொடுப்பது எனப் பொதுக்குழுவில் சிந்தித்தனர்.

செட்டிநாட்டில் அமைந்துள்ள எழுபத்தைந்து ஊர்களைத் தெற்கு வட்டகை, மேல் வட்டகை, கீழப்புத்தூர் வட்டகை, மேலப் புத்தூர் வட்டகை, பதினாறு ஊர் வட்டகை, நீண்டகரைப் பிரிவு என ஆறு பிரிவுகளாகப் பகுத்துள்ளனர். (வட்டகைப் பட்டியல் பின்னிணைப்பில் உள்ளது). எனவே ஒவ்வொரு வட்டகைக்கும் சார்பாளர் இருக்குமாறு நிருவாகக் குழுவில் ஒவ்வொரு வட்டகைக்கும் உரிய இடம் கொடுத்துள்ளனர். இது நகரத்தாரின் பொது நலப் போக்கு நிருவாகத்தை எடுத்துக் காட்டுகிறது.

இளையாத்தங்குடியில் அண்மையில் 1985 ஆம் ஆண்டு நடைபெற்ற குடமுழுக்கு விழாவிற்கான விழாக்குழுப் பட்டியலைப் பார்த்தாலும் நகரத்தாரின் பொதுநலப் போக்கு நிருவாகம் நன்கு விளங்கும். அதில் 30 ஊர்ப் புள்ளிகள் இடம் பெற்றுள்ளார்கள். நிருவாகப் பொறுப்பினைப் பல்வேறு வகையாகப் பிரித்துப் பணி-யாற்றும் பாங்கு இதன் மூலம் தெரியவருகின்றது. 69 பேர் 5 வகையான பதவிகளில் நிருவாகம் செய்துள்ளனர்.

ஒரு தலைவர், ஏழு துணைத் தலைவர்கள், இரு செயலாளர்கள், ஒரு பொருளாளர், ஐம்பத்தெட்டு உறுப்பினர்கள் அவ்விழாக் குழுவில் இடம் பெற்றுள்ளனர்.

குழு உறுப்பினர்கள் ஐம்பத்தெட்டுப் பேர்களுக்கும் பல வேலைகள் பகுத்துக் கொடுத்துள்ளனர். நிருவாகத்தில் பலருக்கும் பங்கு கொடுத்தால்தான் இலட்சியம், குறிப்பிட்ட நாளில் நிறைவேறும். தவறு ஏதும் வாராது. பலருடைய ஈடுபாட்டினாலும்தான் கோயில் காரியங்கள் நிறைவு பெற வேண்டும் என நிருவாகத்தினர் விரும்புகின்றனர். எனவே பொது வேலையை ஊர் வாரியாகப் பகுத்துப் பார்க்குமாறு ஏற்பாடு செய்துள்ளனர்

ஒரு தலைவர், ஏழு துணைத் தலைவர்கள், இரு செயலாளர்கள், ஒரு பொருளாளர், ஐம்பத்தெட்டு உறுப்பினர்கள் அவ்விழாக் குழுவில் இடம் பெற்றுள்ளனர்.

குழு உறுப்பினர்கள் ஐம்பத்தெட்டுப் பேர்களுக்கும் பல வேலைகள் பகுத்துக் கொடுத்துள்ளனர். நிருவாகத்தில் பலருக்கும் பங்கு கொடுத்தால் தான் இலட்சியம், குறிப்பிட்ட நாளில் நிறைவேறும். தவறு ஏதும் வாராது. பலருடைய ஈடுபாட்டினாலும் தான் கோயில் காரியங்கள் நிறைவு பெற வேண்டும். என நிருவாகத்தினர் விரும்புகின்றனர். எனவே பொது வேலையை ஊர் வாரியாகப் பகுத்துப் பார்க்குமாறு ஏற்பாடு செய்துள்ளனர்.

| | |
|---|---|
| 1. யாகசாலை மருந்து சாத்துதல் குடமுழுக்கு விழா, நகரவிருந்து (ஆண்கள் விசாரணை):- | தேவகோட்டை, காரைக்குடி, ஆறாவயல், புதுவயல், ஓ.சிறுவயல் நகரத்தார்கள். |
| 2. நகர விருந்து (பெண்கள் விசாரணை):- | கல்லல் சொக்கநாதபுரம், பாகனேரி, நடராசபுரம், பனங்குடி, பட்டமங்கலம், வெற்றியூர், அ. சிறுவயல் மதகுபட்டி, கீழப்பூங்குடி, சக்கந்தி, நாட்டரசன்–கோட்டை, ஒக்கூர், காளையார்மங்கலம், நா. அளகாபுரி, கண்டரமாணிக்கம் மற்றும் கருங்குளம். |
| 3. மகாபிடேகம், சுவாமி புறப்பாடு, தண்ணீர் வசதி:- | ஆவினிப்பட்டி, விராமதி, இராங்கியம், கீழச்சிவல்பட்டி, மிதிலைப்பட்டி, குருவிக் கொண்டான்பட்டி, குளிபிறை, நச்சாந்துபட்டி மற்றும் சிறுகூடல்பட்டி. |
| 4. பெரிய உக்ராணம்:- | அரியக்குடி, கோ. அழகாபுரி, கண்டனூர், கடியாபட்டி, இராயவரம், அரிமளம், தேனிபட்டி, கல்லுப்பட்டி மற்றும் நாச்சியாபுரம். |

| | | |
|---|---|---|
| 5. | பிராமண போசனம்: | ஆத்தங்குடி, ஆ. முத்துப்பட்டிணம், பலவான்குடி மற்றும் கோனாபட்டு |
| 6. | தண்ணீர்ப்பந்தல் & நாட்டார் விருந்து: | கண்டவராயன்பட்டி, ஆ. தெக்கூர், நெற்குப்பை, பொன்னமராவதி, வலையபட்டி, பொன்புதுப்பட்டி, பூலாங்குறிச்சி, வேந்தன்யட்டி, மேலச்சிவபுரி, வேகுப்பட்டி, மகிபாலன்பட்டி, கொப்பனாபட்டி, உலகம்பட்டி, பனையபட்டி மற்றும் விராச்சிலை |
| 7. | வரவேற்பு, உபசரித்தல்: | கோட்டையூர், பள்ளத்தூர், கானாடுகாத்தான் மற்றும் நேமத்தான்பட்டி. |

இளையாத்தங்குடிக் கோயில் நிருவாகமும் மேற்சொன்ன ஊர்ப்பிரிவின்படியே முன்பு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. நிருவாகப் பொறுப்பில் தங்களுக்கும் பங்கு வேண்டும் எனச் சிலர் வழக்கு மன்றிற்கு 1923ஆம் ஆண்டு சென்றனர். அதனால் 1—12—1926ஆம் நாள் முதல் சென்னை உயர்நீதி மன்றத் தீர்ப்பின் அடிப்படையில் ஐந்து பேர் கொண்ட நிருவாகக் குழு செயலாற்றி வருகிறது. அதில் பரம்பரை அறங்காவலர் நான்கு பேர். இவர்களில் இருவர் மாறி மாறித் தருமகருத்தாவாக இருந்து வருகின்றனர். ஆண்டு தோறும் நியமன அறங்காவலர் மூன்று பேர் நியமிக்கப்படுகின்றனர். இந்த ஐந்து பேருமே ஆலயத்தின் நிருவாகங்களைச் செவ்வனே கவனித்து வருகின்றனர். எல்லாத் தருமகருத்தர்க்களும் இளையாத்தங்குடிக் கோயிலைச் சார்ந்தவர்களாகவே இருக்க வேண்டும் என்பது நீதிமன்ற ஆணையாகும்.[5]

### 5. 3. 2. மாற்றூர்:

மாற்றூர் கோயிலில் ஒரு தலைவர், ஒரு செயலர், ஒரு பொருளாளர், முப்பது உறுப்பினர்கள் கொண்ட நிருவாகக் குழு

செயலாற்றி வருகிறது. கோயிலில் நாள்தோறும் வழிபாடு நடை-பெறப் போதிய பொருளாதார வசதி இல்லாமையால் வசதி படைத்தவர்களிடமிருந்து ஒருவருக்கு 365 ரூபாய் வீதம் நன்-கொடை வசூலித்துள்ளனர். இவ்வாறு நன்கொடையாகக் கிடைத்த தொகையைப் பெரிய நிறுவனங்கள், வங்கிகளில் வைப்பு நிதியாக வைத்து அதிலிருந்து வரும் வட்டித்தொகையில் கோயில் வழிபாட்டினை ஒரு குறையும் இன்றி நடத்தி வருகின்றனர். இவ்வாறு நன்கொடை கொடுத்தோருள் ஏழு பேரைத் தேர்ந்-தெடுத்து இந்த அறக்கட்டளைக்கு (டிரஸ்டுக்கு) நிருவாகக் குழுவாக அமைத்துள்ளனர்.

## 5. 3. 3. வயிரவன் கோயில்:

வயிரவன்பட்டிக் கோயில் நிருவாகக் குழுவின் ஒரு தலைவர், இரு துணைத் தலைவர்கள், ஒரு செயலர், ஒரு துணைச் செயலர், 73 உறுப்பினர்கள் உள்ளனர். வாக்கெடுப்பு முறையில் தலைவர், துணைத்தலைவர், செயலர், துணைச்செயலர், ஆகியோர் தேர்ந்-தெடுக்கப்படுகின்றனர். நிருவாகக் குழுவினரைத் தேர்ந்தெடுப்ப-தனையும், நிருவாகக் குழு கூடுவதனையும் "கோயில் வாசல் கூட்டம்" என்று குறிப்பிடுகின்றனர்.

வயிரவன் கோயில் நகரத்தார்கள் நிரந்தரமாக வசித்துவரும் ஒவ்வோர் ஊரிலிருந்தும் மொத்தம் 73 செயற்குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுத்து அனுப்பப்படுகிறார்கள். அவர்களிலிருந்து 15 பேர் கொண்ட உட்குழு தேர்ந்தெடுக்கப்பட்டு, அக்குழுவினர் நிருவாகத்தைக் கவனித்து வருகிறார்கள்.

குடமுழுக்கு விழா 31-1-1982 அன்று நடந்தபோது ஊர் வாரியாகப் பொறுப்புகள் பகிர்ந்தளிக்கப்பெற்றன.

## 5.3.4. நேமம்:

நேமம் கோயில் நிருவாகக் குழு நான்கு உறுப்பினர்களைக் கொண்டது. ஒரு தலைவர், இரு செயலாளர்கள், ஒரு பொரு-ளாளர் என்ற முறையில் நால்வர் குழு அமைந்துள்ளது.

திருவிளக்குக் காணிக்கை நிதி போதாமையால் ஒரு நாளைக்கு ஒருவரின் கட்டளை என்ற கணக்கில் 365 நாட்களுக்கும் முறை-யாக வழிபாடு நடைபெற 365 புள்ளிகளிடமிருந்து, ஒருவருக்கு

750 ரூபாய் வீதம் வசூலிக்கப்பட்டு வருகிறது. அப்பணத்தை வைப்பு நிதியாக வைத்து அதிலிருந்து வரும் வட்டித் தொகையில் ஐந்து வேளைப் பூசையையும் நடத்தத் திட்டமிட்டுள்ளனர்.

கூடிய விரைவில் குடமுழுக்கு விழா நடைபெறுவதற்காகப் புதிதாக ஒரு நிருவாகக் குழுவினைத் தேர்ந்தெடுத்துள்ளனர்.

## 5. 3. 5 இலுப்பைக்குடி :

இலுப்பைக்குடிக் கோயிலின் நிருவாகக்குழுத் தலைவராக கி. பி. 1800 முதல் 1927 வரை தேவகோட்டை அரு. இலட்சுமணன் செட்டியார் குடும்பத்தினரே இருந்துள்ளனர். 1927 முதல் 1954 வரை ஒன்றுக்கு மேற்பட்ட பலர் இடம் பெற வேண்டும் என்பதால் அவர்கள் குடும்பத்தைச் சேர்ந்த நான்கு பேரே நிருவாகக் குழுவினராக இருந்துள்ளனர்.

1954க்குப் பின்னர், சென்னை உயர்நீதிமன்றத் தீர்ப்பின்படி அரு. லெ. குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் பரம்பரை நிருவாகக்குழு உறுப்பினராக இருப்பார்.[6] அரசு நியமிக்கும் இருவர் (இலுப்பைக் குடிக் கோயில் நகரத்தார்களில் இருவர்) நிருவாகக் குழு உறுப் பினராக நியமிக்கப்படுவர். ஆக மூன்று உறுப்பினர்கள் நிருவாகக் குழுவில் இடம்பெற்றுள்ளனர்.

8—2—1985 அன்று நடைபெற்ற குடமுழுக்கு விழாக்குழுவில் ஒரு தலைவரும் ஐந்து உபதலைவர்களும், நான்கு செயலாளர் களும், ஒரு பொருளாளரும், அறுபத்திரண்டு உறுப்பினர்களும் இடம் பெற்றுள்ளனர் இதில் இலுப்பைக்குடி நகரத்தார் உள்ள எல்லா ஊர்களுக்கும் பொறுப்பு வழங்கப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கது.

## 5. 3. 6. சூரைக்குடி :

சூரைக்குடிக் கோயில் நிருவாகக் குழு தனி வகையானது. சூரைக்குடிக் கோயில் புள்ளிகள் அதிகமாக வாழும் பத்து ஊர் களைப் பட்டியலிட்டுள்ளனர். ஒரு பிரிவுக்கு இரண்டு ஊர் வீதம் ஐந்து குழுக்களாகப் பிரித்துள்ளனர். ஓராண்டுக்கு ஒரு குழு வீதம் நிருவாகம் செய்கின்றனர். இந்த ஐந்து குழுவினரும் வருடா வருடம் மாறிமாறி, காரியத்தனத்தை ஏற்றுக் கொள்கின்றனர்.

1. கீழச்சிவல்பட்டி, காரைக்குடி
2. கண்டனூர், வேகுப்பட்டி
3. நாட்டரசன்கோட்டை, கண்டரமாணிக்கம்
4. பள்ளத்தூர், செவ்வூர்
5. புதுவயல், அரண்மனை சிறுவயல்

ஆகிய ஐந்து குழுவினரும் ஓர் ஊருக்கு ஒருவரைத் தேர்ந்தெடுத்து அனுப்புகின்றனர். ஓராண்டுக்கு இருவர் வீதம் நிருவாகம் செய்கின்றனர்.

## 5.3.7. வேலங்குடி:

வேலங்குடிக் கோயில் நிருவாகக் குழு தொடர்ந்து ஒருவரையே தலைவராகக் கொண்டுள்ளது. வேலங்குடிப் புள்ளிகள் 41 பேருள் திரு சுப. பிச்சப்ப செட்டியார் பெரும் வசதி படைத்தவர் என்பதால் அவரே தொடர்ந்து தலைவராக இருந்து வந்தார். அவரது மறைவிற்குப் பின் அவர் மனைவி திருமதி வள்ளியம்மை ஆச்சியே நிருவாகக் குழுத் தலைவராக உள்ளார். தற்போது கானாடுகாத்தான் திரு. அண்ணாமலை செட்டியாரும் நிருவாகத்தில் பங்கேற்றுள்ளார்.

## 5.3.8. இரணியூர்:

இரணியூர்க் கோயில் நிருவாகக் குழுவில் ஒருவரே பல ஆண்டுகள் தலைவராக இருந்துவரும் பழக்கம் காணப்படுகின்றது. 1940 முதல் 15 ஆண்டுகளுக்கு பள்ளத்தூர் ஓ. ஏ பி. ஆர். எம். அருணாசலம் செட்டியார் மட்டுமே நிருவாகத்தை நடத்தியுள்ளார். 1955 முதல் கொத்தமங்கலம் திரு ச.வெ.சி.சி. சின்னக்கருப்பன் செட்டியார் என்ற கோவிந்தன் செட்டியார் மட்டுமே நிருவாகத்தைக் கண்காணித்து வருகின்றார்.

## 5. 3. 9. பிள்ளையார்பட்டி:

பிள்ளையார்பட்டிக் கோயில் நிருவாகக் குழு பதினாறு குடும்பங்களிலிருந்து வரிசை முறையாக ஆண்டுக்கு இரண்டு குடும்பத்தார்கள் வீதம் அமைக்கப்படுகிறது. இக்குடும்பத்தார் தங்கள் குடும்பத்திற்குள் ஒருவரைத் தேர்ந்தெடுத்து அனுப்ப, நகரத்தார் ஒப்புதலுடன் அந்த இருவரும் குறிப்பிட்ட அந்த

ஆண்டு முழுவதற்கும் நடப்புக் காரியக்காரர்களாக இருந்து நிருவாகம் செய்து வருகின்றனர் கீழே வரும் அட்டவணைப்படி எட்டாண்டுகளுக்கு ஒருமுறை இதே வரிசைப்படி நடப்புக் காரியக்காரர்கள் பொறுப்பேற்று நிருவாகம் செய்கின்றனர்.

| வரிசை எண். | ஊரும் குடும்பமும் | அணி எண் |
|---|---|---|
| 1. | காரைக்குடி மெ. மெ. குடும்பத்தார்<br>ஷெ யூர் அத. முரு. குடும்பத்தார் | 1 |
| 2. | வலையபட்டி மு.நா.அ. குடும்பத்தார்<br>ஷெயூர் ந.ராம.அ. குடும்பத்தார் | |
| 3. | கண்டனூர் மு.நா குடும்பத்தார் | 2 |
| 4. | ஆ. முத்துப்பட்டணம் சித. மு. குடும்பத்தார் | |
| 5. | காரைக்குடி வீர. குடும்பத்தார் | 3 |
| 6. | கண்டவராயன்பட்டி பழ.கரு, குடும்பத்தார் | |
| 7. | காரைக்குடி அடை. ஆத. குடும்பத்தார்<br>ஷெயூர் கு. மெ. குடும்பத்தார் | 4 |
| 8. | பூலாங்குறிச்சி ராம. ப. வ. குடும்பத்தார் | |
| 9. | நற்சாந்துபட்டி கும. பெரி. குடும்பத்தார் | |
| 10. | காரைக்குடி ஆவி.ப. குடும்பத்தார்<br>ஷெயூர். மெ ராம. குடும்பத்தார் | 5 |
| 11. | கோனாபட்டு கு.அ ப.அரு. குடும்பத்தார் | 6 |
| 12. | அரிமளம் பெ. ராம. குடும்பத்தார் | |
| 13. | அமராவதிபுதூர் ராம. வயி. குடும்பத்தார் | 7 |
| 14. | தேவகோட்டை நாக. குடும்பத்தார் | |
| 15. | காரைக்குடி முரு குடும்பத்தார் | 8 |
| 16. | குருவிக்கொண்டான்பட்டி கரு.பழ. குடும்பத்தார் | |

தற்பொழுது எட்டாவது அணியினர் நடப்புக் காரியக்காரர் களாக நிருவகித்து வருகின்றனர்.

## 5. 4. நகரக் கோயில்களில் சட்ட மன்ற முறை :

நகரத்தார் நலவாழ்வு பற்றிய சட்டங்களை நகரக்கோயில்கள் அவ்வப்போது இயற்றும் உரிமை கொண்டது. முன்பு அதிகமான

சட்டங்கள் 'கட்டு' என்ற பெயரில் வெளியிடப்பட்டு வந்தன. இப்பொழுது அதிகமான சட்டங்கள் இயற்றப்பெறவில்லை.

முன்பு இயற்றப்பட்ட சட்டங்கள் பட்டியலிட்டுத் தரப்பட்டுள் ளன.[7]

1. மாதா, பிதா, குரு, தெய்வம், குலதேவதை இவர்களை வணங்கிப் பூசிக்கிறது.

2. கோயில்களுக்கும் குரு நிலையங்களுக்கும் உள்ளகிராமம் முதலியவற்றை, நகரத்தார் விசாரணையில் வைத்துக்கொண்டு, அவற்றால் வரும் ஊதியத்தை அந்தந்த தருமங்களுக்கே உபயோகப் படுத்துகிறது.

3. சாதி முறை நியாயங்களில் தவறி நடக்கிறதில்லை. நற் கருமங்களைச் செய்கிறது.

4. ஆடவரும் பெண்டிரும் தங்கள் தங்களுக்கு ஏற்பட்டிருக் கும் குரு ஸ்தானங்களிலேயே தீட்சாகிரியை முதலியவை வழக்கப் படி செய்து கொள்கிறது. வேறொருவரிடத்தும் தீட்சாகிரியை முதலியவை செய்து கொள்ளக்கூடாது.

5. சிவ மதத்திலேயே இருக்கிறது. அந்நிய மதங்களில் சேரக்கூடாது.

6. ஏக கோத்திரத்தில் திருமணஞ்செய்து கொள்ளுகிற தில்லை. (கோத்திரம் என்பது கோவில்களும் உட்பிரிவுகளும்) சுய கோத்திரத்தில் புத்திர சுவீகாரம் செய்து கொள்ளுகிறது. (மாற்றூர்க் கோயில், இளையாத்தங்குடிக் கோயில் இரண்டனுட் பிரிவுகளில் சம்பந்தஞ் செய்து கொள்ளும் வழக்கம், புள்ளிகள் பெருகிவிட்ட காரணத்தால் பிற்காலத்தில் நிகழ்வதாயிற்று).

7. இரத்தினம், சுவர்ணம், பலசரக்கு முதலிய வியாபாரங் கள் செய்கிறது. சீவ வதையான வியாபாரங்கள் செய்கிறதில்லை. வாய்மை தவறா மேலோர்களிடத்தில் பணம் கொடுக்கல் வாங்கல் செய்கிறது. தரும வட்டி வாங்குகிறது. குதிரை வியாபாரமும், வெற்றிலை முதலிய அழுகற்சரக்கு வியாபாரமும் செய்யக் கூடாது.

8. குடிவாரத்திற்கு உழுது பயிரிடுகிறதில்லை. ஊரில் அம்பல உம்பள நிலைமை பெற்று வேலைகள் பார்க்கக் கூடாது

9. திருட்டு வியாபாரஞ் செய்யக் கூடாது. பிறன் மனை வியைச் சேரக் கூடாது. தாசிகளிடத்தில் கொடுக்கல் வாங்கல் செய்யக் கூடாது.

10. நகர முறைமை தவறினவர்களையும், இராச தண்டனைக் குட் பட்டவர்களையும் சோரஞ் செய்தவர்களையும் நட்புக் கொள் ளக் கூடாது.

11. கடலுக்கு மேற்கு, பிரான்மலைக்குக் கிழக்கு, வைகைக்கு வடக்கு, வெள்ளாற்றிற்குத் தெற்கு இந்நான்கு எல்லைக்குட்பட்ட வேளாளர் பூமியாகிய இந்நாட்டிலேயே குடியிருக்கிறது.

12. பெண்டிர், சுவாமி தரிசனம், தீர்த்த யாத்திரைகளுக்கு ஆடவர்களுடன் போய்வர வேண்டும்.

13. எந்த விஷயங்களிலும் முன் வழக்கப்படி நடந்து கொள் கிறது.

14. கோவில் வாசலிலாவது, மடத்து வாசலிலாவது நகரக் கூட்டம் கூடிச் சாதி நியாயம் பேசுகிறது.

15. மேற்கண்ட ஒன்பது கோவில் நகரத்தார்களும், அவர வர்களுக் குரிய கோவில்களிலிருந்து சுவாமிக்குச் சாத்தின மாலை யும், விபூதிப் பிரசாதமும் வந்துதான் திருமணம் நடத்தல் வேண்டும்.

16. திருமணம் நடக்கிற விவரத்தைப் பற்றிக் கோவில் வாசல்களில் தாம்பூலம் வைத்து முன்னமே தெரிவித்தல் வேண்டும்.

17. இரணியூர்க் கோவிலாரும், பிள்ளையார்பட்டிக் கோவி லாரும் சகோதரர்களின் வமிசத்தாராதலால் தம்முள் கலியாணஞ் செய்து கொள்ளக் கூடாது. மற்றைக் கோவில்களில் செய்து கொள்ளலாம்.

### 5. 5. நகரக் கோயில்களில் ஆட்சி மன்ற முறை :

ஒன்பது நகரக் கோயில்களும் தங்களது புள்ளிகளில் ஒத் துழைப்புடன் ஆட்சி மன்ற முறையினைச் செம்மையாகச் செய்து வருகின்றன.

மக்களால் மக்களுக்கு மக்களாலேயே நடத்தப்படும் ஆட்சி மன்றம் போல இக்கோயில் புள்ளிகளால்புள்ளிகளுக்கு புள்ளிகளாலேயே நடத்தப்படும் நிருவாகக் குழு இங்கு உள்ளது.

சமயப் பணிகளும், சமுதாயப் பணிகளும் தொடர்ந்து நடைபெற இந்நிருவாகக் குழு பணியாற்றிவருகிறது. அதனைத் தனியே இரு கட்டுரைகளில் காணலாம். இன்னும் மேலாக ஆட்சிமன்ற முறையைக் கைக்கொள்ள அக்கட்டுரைகளில் ஆய்வாளர் தனது பரிந்துரைகளைக் கூறியுள்ளார்.

## 5.6. நகரக் கோயில்களின் நீதிமன்ற முறை:

நகரத்தார்கள் தங்களுக்குள் கருத்து வேற்றுமை ஏற்படின் நீதி மன்றங்களுக்குச் செல்வதில்லை. ஒன்பது நகரக் கோயில்களே நீதி மன்றங்களாகவும் விளங்கின. இதனால் நகரத்தாரின் உட்பூசல்கள் உடனே தீர்க்கப்படுவதுடன் குடும்பச் சண்டை போன்றவை வெளி உலகத்திற்குத் தெரியாமல் பண்பாடு காக்கப் படுகின்றது.

தற்போது வழக்குகள் ஏற்படும்போது கீழ் நீதிமன்றம், உயர் நீதிமன்றம், உச்சநீதிமன்றம் என மேலும் வாதாட வாய்ப்பளிப்பது போன்று ஐந்து நீதி மன்றங்களை அமைத்துள்ளனர். அவையாவை:

1. நகரக் கூட்டம்
2. வகுப்புக் கூட்டம்
3. மடத்து வாசல் கூட்டம்
4. வட்டகைக் கூட்டம்
5. நகரத்தார் கூட்டம்

ஒரு ஊரில் ஒரு வழக்கு வருகிறது என்றால் அதனை அவ்வூர் நகரச் சிவன் கோயிலிலேயே விசாரித்து நீதி வழங்குவதற்குப் பெயர் நகரக் கூட்டம் எனப்படும்.

ஒரு கோயில் பிரிவைச் சேர்ந்த பங்காளிகள் தங்களுக்குள் ஏற்பாடு செய்து கொள்ளும் நீதி மன்றத்திற்கு வகுப்புக் கூட்டம் எனப் பெயர். இது நகரக் கோயிலில் நடைபெறும். இந்த நீதி மன்றத்திற்கு 'மறியல் கட்டு' என்று பெயர்.

இம் மறியல் கட்டு முறை இளையாத்தங்குடி, மாற்றூர், வயிரவன்பட்டி. இலுப்பைக்குடி, சூரைக்குடி ஆகிய ஊர்களில்

அதிகமாக நடைபெற்றுள்ளது. வயிரவன்பட்டியில் இன்றும் அம்மறியல் கட்டுப் பகுதி நகர விடுதியில் ஒரு பகுதியாக உள்ளது.

யாரேனும் இருவருக்குள் தகராறு எனில் பாதிக்கப்பட்ட ஒருவர் மற்றவர் மீதான குற்றச்சாட்டை நகரக் கோயிலில் உள்ள பதிவேட்டில் பதிய வேண்டும். பதினைந்து நாட்களுக்குள் விசாரணைக்கு வருமாறு வயிராவி மூலம் மற்றவருக்கு ஓலை அனுப்பப் பெறும். அவர் பதினைந்து நாட்களுக்குள் வந்தால் உடனே நீதிமன்றம் கூடி விசாரித்துத் தீர்ப்பளிக்கும்.

அவ்வாறு குற்றம் சாட்டப் பெற்றவர் பதினைந்து நாட்களில் வரவில்லை என்றால், அவர் 'மறிக்கப் பட்டுள்ளார்' என அறிவிக்கப்படும்.

மறிக்கப்பட்டவருடன் யாரும் பேசமாட்டார்கள். அவர் யாருடைய வீட்டுச் சிறப்பு நிகழ்ச்சிகளுக்கும் அழைக்கப்படமாட்டார்.

மறிக்கப்பட்டுள்ளது தெரிவதற்காக அவரைப் பதினைந்து நாள் கழித்து அழைக்கச் செல்லும் வயிராவி அவர் வீட்டில் அவருடைய விலாசம் வெட்டபட்ட பாத்திரம் ஒன்றைச் சான்றாகக் கொண்டு வந்து நகர விடுதியில் வைத்து விடுவார்.

குற்றம் சாட்டப்பட்டவர் தனியாகச் சமைத்துச் சாப்பிடவும் தங்கவும் தனிக் குடியிருப்பு வசதி செய்யப்பட்டுள்ளது. அவருக்கு நகர விடுதியில் உணவு கிடைக்காது.

வழக்கு விசாரிக்கப்பட்டு மன்னிக்கக் கூடிய தவறெனில் மன்னித்தும், தண்டனைக்குரிய குற்றமெனில் சிறு தண்டத் தொகை வசூலித்தும், மன்னிக்க முடியாத குற்றமாயின் கோயில் புள்ளியிலிருந்து தள்ளிவைத்தும் தீர்ப்பு வழங்கப் பெறும்.

இந்நகரக் கோயில் மறியல் கட்டிலும் வழக்குத் தீரவில்லையெனில் கோவிலூர் மடத்தில் விசாரிக்கப்படும். அதற்கும்மேலாகக் குறிப்பிட்ட வட்டகைக் கூட்டமும் 96 ஊர் நகரத்தார் கூட்டமும் கூட்டப்பெறும்.

வட்டவகைக் கூட்டமும், நகரத்தார் கூட்டமும் நடந்ததற்கான சான்றுகள் ஏதும் கிடைக்கவில்லை.

நகரக்கோயில்களில் நடைபெற்ற மறியல் கட்டு நீதி மன்ற முறைக்கு மட்டும் சான்றுகள் உள்ளன. அதிகமான வழக்குகள்

வயிரவன் கோயில் பதிவேட்டில் காணப்படுகின்றன. பண்பாடு கருதி அவற்றைப் பின்னிணைப்பில் கூட வெளியிட அவர்கள் ஒப்புதல் தரவில்லை. உண்மை அறிய விரும்புவோர் நேரில்சென்று கண்டு வரலாம்.

மறியல் கட்டிற்குக் கட்டுபடாது முதன் முதலாக அரசாங்க நீதி மன்றத்திற்குச் சென்றவர்கள் இளையாத்தங்குடிக் கோயிலாரே என்று தெரியவருகிறது. அதன்பிறகு பிற கோயிலாரும் மறியல் கட்டுக்குச் சென்று முறையிடுவதை நிறுத்திவிட்டனர். அவரவர்கள் அரசு நீதி மன்றத்திற்குச் சென்றதால் மறியல் கட்டு இப்பொழுது செயல்படவில்லை.

மறுபடியும் மறியல் கட்டு முறை செயல்படத் தொடங்கினால் நகரத்தார் குடும்பங்களுள் அவ்வப்போது ஏற்படும் விரிசல்கள் அவ்வப்போதே சீர் செய்யப்படும். அதிகமான நாட்களும், பொருளாதாரமும், செலவாவதும் குறையும். குடும்பமானம். நான்குசுவர்களுக்குள் காதும் காதும் வைத்தாற்போலப் பேசுவதன் மூலம் காப்பாற்றப்படும்.

## 5. 7. நிருவாகத் திறமையின் தனிச்சிறப்புகள்:-

### 5. 7. 1 புள்ளி வரி வசூலித்தல்:-

பிற கோயில்களுடன் ஒன்பது நகரக்கோயில்களை ஒப்பிட்டுப் பார்க்கும் போதுதான் இக்கோயில்களின் நிருவாகச் சிறப்பு தனித்துத் தெரிகின்றது.

பிற கோயில்களில் நிருவாகத்தைக் கவனிக்க அரசு அதிகாரி நியமிக்கப்பட்டுள்ளார். இங்கு நகரத்தார்களே நிருவாகத்தினைக் கவனித்துக் கொள்கின்றனர்.

பிற கோயில்களில் வழிபடுவோர் அக்கோயிலின் புள்ளிகளாகித் (உறுப்பினர்கள்) தொடர்ந்து வரி செலுத்துவதில்லை இங்கு வரி செலுத்துவது கடமையாகிறது.

வரி பாக்கியிருந்தால் வரி செலுத்தாதவர்கள் வீட்டிற்கு அக்கோயில் பங்காளிகள் போவதும் கிடையாது; தங்கள் வீட்டுச் சிறப்பு நிகழ்ச்சிகளுக்கு அழைப்பதும் கிடையாது. அந்த அளவிற்குக் கட்டுக்கோப்பாக நிருவாகம் செலுத்துகின்றனர்.

பிற கோயில்கள் பலவற்றில் விலைவாசி ஏற்றத்தாலும், ஊதிய உயர்வாலும் இருவேளைப் பூசை கூடச் செய்ய இயல வில்லை. ஒரு சில கோயில்களில் விளக்கேற்றுவார் இன்றி வௌவால்களின் உறைவிடமாகி வருகின்றன. இன்னும் சில கோயில்களைப் பலநாட்கள் திறப்பதுகூடக் கிடையாது. ஆனால் ஒன்பது நகரக் கோயில்களிலும் தினசரி ஐந்து வேளைப் பூசை நடைபெறுகிறது.

## 5. 7. 2. சொத்துவரி வசூலித்தல்:-

திருக்குட நன்னீராட்டு விழாவிற்காகப் பிற கோயில்களில் பொது மக்களிடம் நன்கொடை திரட்டுவார்கள் இதற்காகச் சிலர் கலை நிகழ்ச்சிகள் நடத்தி அதன் மூலம் பொருள் சேர்ப்பர். ஆனால் ஒன்பது நகரக் கோயில்களிலும் பொது மக்களிடம் நன் கொடை கேட்பதில்லை. அக்கோயில் புள்ளிகள் அனைவரும் சேர்ந்து பணத்தை அளித்துவிடுகின்றனர்.

குடமுழுக்கு விழா போன்றபெரியசெலவினங்களுக்குச்சொத்து வரிமூலம் பொருள் வரவை அதிகரிக்கும் நிருவாகத்தினர் ஒன்பது நகரக் கோயில் நிருவாகத்தினர் மட்டுமே.

சொத்துவரி என்பதை ஆஸ்தி வரி என்றும் குறிப்பிடுவர். நிரு வாகக் குழுவினர் கூடிப் பெரும் செலவினங்களுக்குச் சொத்து வரி மூலம் தான் பொருள் சேர்க்க முடியும் என்று முடிவெடுத்ததும் அனைத்துப் புள்ளிகளுக்கும் தகவல் தெரிவிப்பார்கள்.

ஒவ்வொருவரும் தமது சொத்தில் பத்து விழுக்காட்டினை உண்டியலில் கொண்டு வந்து குறிப்பிட்ட காலத்திற்குள் செலுத்த வேண்டும் எனத் தகவல் தெரிவித்ததும், அவரவர்கள் தங்களது சொத்தில் பத்து விழுக்காட்டினை அந்த உண்டியலில் கொண்டு வந்து சேர்த்துவிடுவார்கள். யார் யார் உண்டியலில் பணம் சேர்த் தார்கள் என்ற குறிப்புத்தான் இருக்குமேதவிர, இன்னார்இவ்வளவு தொகையினைச் செலுத்தினார் என்ற குறிப்பு இருக்காது. இறை வனுக்கு முன் அனைவரும் சமம்; ஏழை பணக்காரன் என்றஏற்றத் தாழ்வு யாரையும் பாதிக்கக் கூடாது என்பதற்காகவே உண்டி யலில் ஒவ்வொருவரும் செலுத்திய தொகையை வெளியிடுவதில்லை

இவ்வாறு அனைவரும் செலுத்திய பிறகு நிருவாகக் குழுவி னரின் முன்னிலையில் உண்டியல்திறக்கப்பட்டு எண்ணப்படும்.

அத்தொகையும் போதாத நிலை ஏற்படின். விரும்பியோர் மேலும் பணம் செலுத்தலாம் என்று அறிவிக்கப்படும். அதற்குத்தேவை யான பணத்தை உடனடியாக வசூலித்துவிடுவது நிருவாகிகளின் தனித் திறமையாக அமைந்துள்ளது.

## 5. 7. 3. தொடர்ந்து வழிபாடுநடைபெறச்செய்துள்ள ஏற்பாடு:-

சில கோயில்களில் சில குறிப்பிட்ட விழாக்களுக்கு மட்டும்நிதி வசூல் செய்து அவ்விழாவிலேயே முழுத் தொகையையும் செல விட்டு விடுகின்றனர். தொடர்ந்து தினசரி வழிபாடுகளை நடத்தக் கூடப் பணமின்றி அல்லலுறுகின்றனர். ஆனால் ஒன்பது நகரக் கோயில்களிலும் உள்ள நிருவாகிகள் எந்த விழாவிற்காக நிதி திரட்டினாலும் அதிகமான நிதியினைத் திரட்டி, வைப்பு நிதியாக (Fixed Deposit) அதனை ஒரு வங்கியிலோ, தொழில் நிறுவனங் களிலோ வைத்து அதிலிருந்து வருகின்ற வட்டித் தொகையை மட்டுமே செலவிடுகின்றனர். இதனால் தொடர்ந்து வழிபாடும் விழாவும் நடைபெற முடிகிறது.

எந்த ஒரு செலவினத்திலும் திட்ட மிட்ட செலவைக் காட்டி லும் குறைவாகச் செலவிட்டு, மிச்சம் காட்டும் சிக்கனத் தன்மை நிருவாகிகளின் சிறப்புகளுள் ஒன்றாக அமைந்துள்ளது.

சமயப் பணியுடன் சமுதாயப் பணிகளையும் இந்நிருவாகக் குழுவினர் ஆற்றி வருவது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. ஒன்பது நகரக் கோயில்களின் சமயப் பணியும் சமுதாயப்பணியும் பிறிது ஒரு பகுதியில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

## 5. 7. 4. மக்களாட்சி முறை:-

சமயப் பணியானாலும் சரி, சமுதாயப் பணியானாலும் சரி, எந்த ஒரு முடிவையும் நிருவாகக் குழுத் தலைவரோ, செயலரோ தன்னிச்சையாகத் தீர்மானிப்பதில்லை. மற்றவர்கள் மீது எந்தக் கருத்தையும் திணிப்பதில்லை. மக்களாட்சி முறையில் செயற்குழு வுடன் ஆலோசனை செய்த பிறகே தீர்மானங்கள் நிறைவேற்றப் படுகின்றன.

எந்தஒரு புதிய திட்டத்திற்கும் நிருவாகக் குழுவினரே செயல் படுவதில்லை. அதற்கான குழுவினைத் தேர்ந்தெடுத்து அனைத்து

ஊர்ப்புள்ளிகளுக்கும் பொறுப்பு அளித்துச் செயல் படச் செய்கின்றனர்.

## 5. 7.5 ஊக்குவிப்பு:-

சிறப்பு வழிபாட்டிற்கும், விழாக்களுக்கும் உதவும் பெருமக்களுக்குப் பரிவட்டம் கட்டிப்பெருமைப்படுத்துகின்றனர். இதனால் புதிய வள்ளல்கள் தோன்ற ஊக்குவிக்கப்படுகிறது.

கல்வெட்டுச் செய்திகள் கூறுவது போலப் பெரும் நிதி அளிப்போருக்கு வருமான வரியிலிருந்து விலக்குப் பெற அனுமதி வாங்கித் தந்து உதவுகின்றனர். கோயில் அருச்சகருக்கும், பிற உடல் உழைப்பாளர்களுக்கும் தங்க வீட்டுவசதி செய்து கொடுத்து. மின் வசதி செய்து கொடுத்து, உணவிற்காக நெல்லும் கொடுத்துத் தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து பணியாற்ற வசதி செய்து கொடுக்கின்றனர். கோயில் நிருவாகிகளுக்கும் பணியாளர்களுக்கும் பொங்கல்பானை கொடுப்பது, கோயிலைத் தாய் வீடாக எண்ண வைக்கின்றது.

திருவிளக்குக் காணிக்கை என்ற பழம் பெயரில் எல்லாப் புள்ளிகளிடமும் சென்று புள்ளி வரி வசூலிப்பதும், வரி கொடுத்ததும் உடனே அரிசிப் பொரியினை வழங்குவதும் குறிப்பிடத் தக்கன

புள்ளிவரியாக ஒரு புள்ளியிடம் முன்பு வாங்கிய தொகை முக்காலணாவாகும். அதற்காகக் கொடுக்கும் பொரி காலணா ஆகியது. புள்ளி வரிவசூலிக்கச் சென்று வரும் வயிராவிக்காகும் போக்குவரத்துச் செலவு, உணவுச்செலவு ஆகியவற்றை நோக்கச் செலவுநடை கூடுதலாகத் தெரிந்தது. எனவே அரை ரூபாய் ஒரு ரூபாய் என வசூலித்துப் பிறகு இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை வசூலித்தார்கள். தற்பொழுது ஒரு புள்ளிக்கு ஐந்து ரூபாய் வீதம் ஒரே ஒருமுறை மட்டுமே பிள்ளையார்பட்டியில் வசூலிக்கின்றனர்.

## 5. 7. 6. இளம்பிள்ளை வரி :-

மாற்றூரில் இளம்புள்ளி வரி என்னும் பெயரில் திருமணத்திற்குப் பாக்கு வைத்துப் பதியும் போது ரூபாய் பதினேழரையினை வசூலிக்கின்றனர். வயிரவன் பட்டியில் இவ்வாறே பதினாறு ரூ

பாயைவசூலிக்கின்றனர். பிற கோயில்களில் புள்ளி வரியாக ஒரு ரூபாய் வசூலிக்கப்படுகிறது. ஆனால் தற்பொழுது சிக்கன நடவடிக்கையாக அரிசிப் பொரியினை வழங்குவதில்லை.

## 5 7.7. அனைவருக்கும் உரிமை வழங்கும் அமைப்பு:-

கோயில் நிருவாகக் குழுவின் எந்த ஒரு நடவடிக்கைபற்றியும் எந்த ஒரு புள்ளியும் விளக்கம் கேட்கலாம். எந்த ஒரு புள்ளியும் கோயில் நிருவாகக் குழுவில் இடம் பெறுவதற்கான உரிமை (பாத்தியதை) உண்டு. இந்த உரிமை வேறு எங்கும் வழங்கப் பெறவில்லை. யார் வேண்டுமானாலும் நிருவாகக் குழுவில் பங்குபெற வாய்ப்பளிக்கும் நிருவாகக் குழு இது ஒன்றேயாகும்.

## 5.7.8. சிறப்பு ஆலோசகர்கள்:-

நிருவாகக் குழு உறுப்பினர்கள் சிலர் ஆலோசகர்களாகவும் பணியாற்றுகின்றனர் அவர்களது ஆலோசனைகள் மிகச் சிறப்பாக அமைந்துள்ளன. சான்றாக, பிள்ளையார்பட்டி, இலுப்பைக்குடிக் கோயில் சிற்ப அமைப்புகளைக் குறிப்பிடலாம்.

கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் அவர்கள்நேர் காணலின் போது கூறிய கருத்து கீழே தரப்படுகின்றது.[8]

''பிள்ளையார்பட்டிக் கோயில் திருப்பணி நடைபெறும் போது எழுவன் கோட்டை வை. கணபதி சிற்பியின் தந்தை ம. வைத்தியநாத சிற்பி, சிற்ப வேலை பார்த்தார்கள். அவர்களுடன் கலந்தாலோசனை செய்ய எங்கள் தந்தையார் நியமிக்கப்பட்டிருந்தார்கள் அத்திருப்பணி வேலை நடைபெறும் போது பிறந்ததால்தான் எனக்கு கணேசன என்றும், அவருக்குக் கணபதி என்றும் பெயரிட்டனர்'' என்றார்கள்.

அவ்வாறு ஆலோசனை செய்தபோதுதான் திருவீசர் இலிங்கம் குடை வரைக் கோயிலில் இருப்பதால் பலரும் சென்று நேரில் வழிபாடு செய்ய இயலாது என்று மருதீசர் இலிங்கத்துடன் ஒரு இணைப்புக் கோயிலைக் கட்டினர். மருதீசருக்கு வாடாமலர் மங்கை அம்மன் என்றும் காம கோட்டத்தைக் கட்டியதே போதுமானது எனினும் திருவீசருக்குத் துணையாகச் சிவகாமி அம்மன் காமகோட்டத்தையும் கட்டியுள்ள இந்த தெய்வீகப் பண்பாடு வியந்து போற்றுதற்குரியது. இந்தப் புதிய ஏற்பாடு சிற்பியின்

ஆலோசகர்களாக அமைந்த நிருவாகக் குழு உறுப்பினரின் எண்ணமே என்று தெரியவருகின்றது.

இலுப்பைக்குடியில் உள்ள தூண் சிற்பங்கள் வரிசை அமைப்புப் போலப் பொருத்தமான ஒரு வரிசை அமைப்பினை வேறு எங்கும் காண இயலாது. சிற்பியுடன் பல காலம் சிந்தித்த நிருவாகக் குழு உறுப்பினர்கள் ஒவ்வொரு சன்னிதியிலும். அதற்குத் தகுந்தாற்போன்ற சிற்பங்கள் இடம் பெற ஆலோசனை கூறியுள்ளனர்.

ஒரு தூணில் நாற்புறமும் சிற்பங்கள் செதுக்கப்படுவது இயல்புதான் எனினும் ஒரு தூணின் ஒரு புறம் தான்தோன்றிசுவரரின் சன்னிதிப் பக்கம் உள்ளது இரண்டாவது பக்கம் செளந்தர நாயகி சன்னிதிப் பக்கம் உள்ளது. மூன்றாவது பக்கம் பள்ளியறைச் சன்னிதிப் பக்கம் உள்ளது. நான்காவது பக்கம் திருவாயிலை நோக்கி உள்ளது. சிற்பத்தைச் செதுக்கும் முன் ஒவ்வொருதூணும் எங்கு இடம், பெறும், அதன் நாற்புறமும் எவ்வெச் சன்னிதிகள் வருகின்றன என்பதைக் கலந்து ஆலோசித்துச் சிற்பம் வடிக்க வேண்டும். அவ்வாறு நன்கு கலந்துஆலோசித்ததால் திட்டமிட்ட அமைப்பும், அழகான சன்னிதியும் அமைந்துள்ளன.

தான்தேன்றி ஈசுவரர் சன்னிதியில் வியாக்கிரபாதர், பதஞ்சலி, ஆவுடையார் கோயில் குருந்தமரம், மாணிக்கவாசகர் உபதேசம், சுந்தரமூர்த்தி நாயனார், மீனாட்சி திருக்கல்யாணம், கருடசேவை, தட்சிணாமூர்த்தி, நாரதர் ஆகியோரின் சிற்பங்கள் வரிசையாகக் காணப்படுகின்றன.

அம்மன் சன்னிதியில் பிராமி, வைணவி, மகேஸ்வரி, உமை இந்திராணி, குதிரைமீது அமர்ந்த சக்தி, சிம்மவாகினி, துவாரசக்தி ஆலங்காட்டுக்காளி ஆகிய சக்தியின் பல்வேறு சிற்பங்கள் வரிசையாகக் காணப்படுகின்றன.

பள்ளி அறைச் சன்னிதியில் இரதி, மன்மதன் போர், நடன மாதர், இசைபாடும் மாதர், வீணை முதலிய இசைக் கருவிகளை ஏந்திய மாதர், குழந்தைக்கு பாலூட்டும் அன்னை எனப்பள்ளியறை சார்ந்த கலை மேம்பாடு மிக்க சிற்பங்கள் வரிசையாக இடம் பெற்றுள்ளன.

வயிரவர் சன்னிதியில் வீரம் மிக்க (உக்கிரமான) எமனை உதைத்தவர் திரிபுரம் எரித்தவர், இரணியசம்காரர், அக்கினிவீரபத்

திரர், அகோர வீரபத்திரர், மதுரை வீரர் ஆகியோரது சிற்பங்கள் வரிசையாக இடம் பெற்றுள்ளன.

இத்துடன் ஒவ்வொரு சிற்றாலயத்தின் வெளிச் சுவர்களிலும், கருவறை, வெளிச் சுவர்களிலும் கபோதகம், கூடுகளிலும் காணப் பெறும் ஒவ்வொரு கடவுளரின் பல்வேறு தோற்றச் சிற்பங்கள் சிற்பியின் கை வண்ணத்தையும் நிருவாகக் குழு ஆலோசகரின் மன வண்ணத்தையும் புகழ்ந்து பாடுகின்றன.

## 5. 7. 9. நகர விடுதி :-

நிருவாகக் குழுவினரின் திட்டங்களைச் செயல்படுத்த ஒவ்வொரு கோயிலிலும் அதற்கான அலுவலகம் நகர விடுதியில் அமைந்துள்ளது. அந்த அலுவலகத்தில் குறைந்தது ஒரு மேலாளர், இரு உதவியாளர்கள், பணிபுரிகின்றனர். வயிரவன்பட்டி, பிள்ளையார்பட்டி, நகரவிடுதி அலுவலகங்களில் முறையே நால்வரும் எழுவரும் பணியாற்றுகின்றனர்.

வழிபாடு செய்ய வருவோருக்கான உணவை வழங்க இவ்விரு நகரவிடுதியிலும் உணவு வசதி செய்துள்ளனர். தங்குவதற்கும், குளிப்பதற்கும் தேவையான வசதிகளைச் செய்து கொடுத்துள்ளனர். திருமண விழா, அறுபதாம் ஆண்டு நிறைவு மணி விழா போன்ற சிறப்பு நிகழ்ச்சிகளை நடத்த இவ்விடுதியில் இட வசதி செய்து தருகின்றனர். அந்தச் சிறப்பு நிகழ்ச்சிகளின் போது வருகின்ற விருந்தினர் அனைவருக்கும் விருந்தளிக்கவும் குறைந்த கட்டணத்தில் ஏற்பாடு செய்துள்ளனர்.

இரணியூர்க் கோயிலின் நகரவிடுதி தற்பொழுது திருத்தமுறக் கட்டப்பட்டு வருகிறது. இதற்காகப் பல்வேறு கொத்தனார் மெய்க்காட்டாள் சித்தாள்கள் பணியிலமர்த்தப்பட்டுள்ளனர்.

திருமணத்திற்கு இரண்டு நாள் முன்னதாக, நகரவிடுதி சென்று முன்பதிவு செய்ய வேண்டும். இறைவனை - உடையவனை - முதன் முதலாகப் பாக்குவைத்து அழைப்பதற்காக இப் பதிவு மேற்கொள்ளப்படுகிறது.

## 5. 7. 10. கோயில் மாலை வழங்குதல்:-

திருமண அழைப்பிதழிலும் குறிப்பிட்ட நகரக் கோயில் இறைவன் இறைவியின் திருவருளால் நிகழும் திருமணம் என்றே பண்டு தொட்டு அச்சிடப் பெற்று வருகிறது.

'அருள் மிகு பெரியநாயகி உடனாய ஐந்நூற்றீசுவரர் திருவருளால்'' என்றே மாற்றூர்க் கோயிலார் திருமண அழைப்பிதழில் அச்சிட்டு வருவதைச் சான்றாகக் குறிப்பிடலாம்.

பதிவு செய்தோருக்கு இறைவன் இறைவியின் அருளாசியாக இரண்டு பூமாலைகள் திருமண நாளன்று காலையில் கொடுத்தனுப்பப் பெறுகிறது.

இறைவனும். இறைவியும் இரவு அருத்தசாமப் பூசையின் போது அணிந்திருந்த மாலைகளை விடிகாலையில் எடுத்து மணமக்களுக்கு அணிவிக்கக் கொடுத்தனுப்புகிறார்கள். இதற்காக மாலைக் கட்டணமாக ரூபாய் 1–50 வசூலிக்கப்படுகிறது. மாலை கொண்டு செல்வோருக்கான போக்குவரத்துக் கட்டணத்தை மணவீட்டில் கொடுத்தால் போதுமானது.

கோயில் மாலை வந்தால்தான் திருமணம் நடைபெறும். இது உறுதியாகப் பின்பற்றப்படும் நடைமுறையாகும்.

ஆயிரம் ரூபாய்க்கு அழகுமிக்க மாலைகள் வாங்கியிருப்பினும் முதன் முதலாகக் கோயில் மாலையையே மணமக்களுக்கு அணிவிக்கிறார்கள். மணமகன் முதன் முதலாக மணமகளுக்கு அணி-விப்பதும் இக்கோயில் மாலையைத்தான்! திருப்பூட்டியதும் மணமக்கள் இருவரும் ஒருவராகி ஒரு புள்ளியாகின்றார்கள்.

வெளிநாடுகளில் நடைபெறும் நகரத்தார் திருமணங்கள் எவ்வாறு நடைபெறுகின்றன என்பதை அறிந்தால் நிருவாகக் குழுவின் சிறப்பு மேலும் புலனாகும்.

மலேசிய நாட்டில்உள்ள கோலாலம்பூரில் திருமணம் நிகழும் என்றால், அங்குள்ள தண்ணீர்மலைத் தண்டாயுதபாணி கோயிலில் பாக்கு வைத்துப் பதிய வேண்டும். அவர்கள் நகரக்கோயில்களின் கிளை அலுவலகம் போலமைந்து அத்தொகையை உரிய கோயிலுக்கு அனுப்புவார்கள். இக்கோயிலின் சார்பாக அங்கு மாலை கொடுக்குமாறு இங்கிருந்து கோலாலம்பூர்த் தண்டாயுதபாணி கோயிலுக்கு ஒப்புதல் கடிதம் அனுப்பப்பெறும் அம்மாலையினை அணிவித்தபிறகே திருமணச்சடங்குகள் நடைபெறுகின்றன.

இவ்வாறு வெளிநாடுகளில் திருமணம் நடைபெற்றாலும் அந்நாடுகளில் உள்ள கோயிலின் மூலமாக உரிய கோயிலில் பதிவு

செய்துஇதன் சார்பாக அங்கு மாலை வாங்கிக் கொள்ளும் ஏற்பாடு மிகவும் பாரட்டிற்கு உரியதாக அமைந்துள்ளது.

## 5. 8 நிர்வாகக்குறைபாடுகள் :-

### 5. 8. 1. கல்வெட்டுகளை அப்புறப்படுத்தியமை:-

ஒன்பது நகரக் கோயில்களிலும்.கல்வெட்டுப்பெற்ற ஊர்களுள் இன்று கல்வெட்டுகள் எஞ்சியிருப்பது பிள்ளையார் பட்டியில் மட்டும் தான்.அவையும் மலைப்பாறையில் இடம் பெற்றதாலேயே தப்பியுள்ளன.

ஒன்பது நகரக்கோயில்களில் மட்டுமின்றி, தஞ்சை மாவட்டத்தில் நகரத்தார்கள் குடமுழுக்கு நடத்திய ஆயிரக்கணக்கான கோயில்களிலும் கல்வெட்டுகளை அப்புறப்படுத்தியுள்ளனர். கல்வெட்டின் பயன் தெரியாமையினால் அவற்றை இன்று வரை அப்புறப்படுத்தியுள்ளனர் அருமையினைத் தெரியாமல் அப்புறப் படுத்தியிருப்பினும், அது ஒரு குறைபாடே ஆகும். இனி அவ்வாறு அப்புறப்படுத்தாமல் கல்வெட்டுகளைப் பேணிப்பாதுகாப்பதே தலை சிறந்த பணியாகும் என்பது ஆய்வாளரால் நிருவாகக் குழுவினரிடம் கள ஆய்வின் போது உணர்த்தப்பட்டுள்ளது.

### 5.8.2.பழைய சிதைந்த சிற்பங்களை அப்புறப் படுத்தியமை:-

திருக்குட நன்னீராட்டு விழாவின் போது மருந்து சாத்தியச் சிற்பங்களை நிலையாக நிறுத்தி வைப்பது வழக்கம். இவ்வாறு மருந்து சாத்துவதன் முன்பாகச் சிற்பத்தைப் பீடத்திலிருந்து வெளியே எடுக்கும்போது சிறிதே கால், கைப் பகுதிகள் சிதைந்தாலும் உடனே மாற்றுச் சிற்பத்திற்கு ஏற்பாடு செய்து விட்டுப் பழைய சிற்பத்தை நீர் நிலைகளுக்குள் தூக்கி எறிந்து விடுகின்றனர். இதுவும் நிருவாகத்தில் உள்ள ஒரு குறைபாடாகும்.

கல்வெட்டுப் போலச் சிற்பமும் பல செய்திகளை உயர்த்தும் தன்மை வாய்ந்தது. வயிரவன்பட்டியில் உள்ள வடிவுடையம்மை, வயிரவர், தென்முகக் கடவுள் ஆகியோரின் சிற்பங்களைப் பார்த்ததும் அவை 16ஆம் நூற்றாண்டுச் சிற்பங்கள் எனத்

தெரிகின்றன. பிற சிற்பங்கள் 19 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இவ்வாறு காலம் காட்டும் சிற்பங்களை அப்புறப் படுத்துதல் கூடாது.

## 5. 8. 3 திருவிளக்குக் காணிக்கையை ஒழுங்காக வசூலிக்காமை:

இறைவனையே தலைவனாகக் கொண்டு கோயிலைச் சார்ந்து வாழும் நகரத்தார்கள் பண்டு தொட்டுத் திருவிளக்குக் காணிக்கை செலுத்துவதன் நோக்கம் யாது என்பது சிந்திப்பதற்குரியது.

நகரத்தார்களில் பெரும் பொருளாதார வசதி படைத்தவர்களிடமிருந்து மட்டிலும் பொருள் பெற்றுக் கோயில் வழிபாட்டினைக் கோலாகலமாக நடத்திவிடலாம். அவ்வாறிருந்தும் ஏன் திருவிளக்குக் காணிக்கையினைத் தொடங்கினார்கள் என்பது ஆராய்வதற்குரியது.

கோயில் நடைமுறைச் செலவுகளுக்கென்றால் அதிகமான நன்கொடையினை ஒருமுறை மட்டும் வசூலித்தால் போதுமானது. ஆனால் ஆண்டாண்டு தோறும் ஒரு சிறு காணிக்கையினை ஒவ்வொரு புள்ளியும் செலுத்தும் முறையினைத் தொடங்கியதன் உட்பொருள் மிகவும் தனித்தன்மை வாய்ந்தது. தத்துவ விளக்கமானது.

திருவிளக்குக் காணிக்கை என்னும் பெயரே அதன் உட்பொருளை விளக்கிச் சொல்லும்.

நமது வாழ்க்கைக்கு விளக்கேற்றியவன் இறைவன். எண்ணெய் உள்ள மட்டும்தான் விளக்கு ஒளிரும்.எண்ணெயினை ஊற்ற ஊற்றத் திரியின் ஆயுள் கூடிக் கொண்டேபோகும். அதற்காகவே கோயில் கருவறைகளில் அதிகமான எண்ணெய்கொண்ட தூண்டாமணி விளக்குகளை அமைத்துள்ளனர்.மக்கள் ஒவ்வொருவரும் ஒரு தூண்டா மணிவிளக்குப் போன்றவர்களே. அவர்கள் வாழ்கை என்னும் திருவிளக்கு நீண்ட நாள்-பல ஆண்டுகள் ஒளிர இறைவன் தந்த உயிர் மூச்சு இன்றியமையாதது. நீண்ட ஆயுள் தான் இறைவன் வழங்கும் எண்ணெய் ஆகும். அதிகமான வாழ் நாளை வழங்கும் இறைவனுக்கு நன்றிக் காணிக்கையாக அவனது கோயிலில் திருவிளக்குகள் ஒளிர வேண்டும் என்பதே இக் காணிக்

கையின் உட்பொருளாகும். இதனால் திருவிளக்குக் காணிக்கை என்பது மிக இன்றியமையாததாகிறது

விலை மதிப்பில்லாத உயிர்தாங்கும் ஒவ்வொரு மணித்துளியும் நாம் இறைவனுக்கு நன்றி சொல்ல வேண்டும். அதனாலேயே மாணிக்கவாசகர் "இமைப் பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க!"[9] என்று பாடியுள்ளார். எனவே ஒவ்வொரு மணித் துளியும் நாம் நன்றிக்காணிக்கை செலுத்த வேண்டும். அவ்வாறு செலுத்தாவிடினும் ஆண்டுக்கு ஒரு முறையாவது திருவிளக்குக் காணிக்கை செலுத்துவது நமது கடமையாகிறது.

ஒரு நாளைக்கு இயந்திரங்களை இயக்கும் இயக்கிக்கு (Generater) ஒரு நாளைக்கு நூற்று இருபத்தைந்து ரூபாய் வாடகை கொடுக்கிறோம். எனவே நமது உடலை இயக்கும் உயிருக்கும் அதனைத் தொடர்ந்து நல்கும் இறைவனுக்கும் நன்றிக் காணிக்கையாக எவ்வளவு கொடுத்தாலும் தகும்.

ஏழை எளியோர் அனைவரும் செலுத்தும் அளவில் இருக்க வேண்டும் என்பதாலேயே ஒரு சிறு தொகையாகவும் ஆண்டுக்கு ஒரு முறை வசூல் செய்வது என்றும் முன்பு திட்டமிட்டுள்ளனர். அதனாலேயே பெரும் செல்வர்களிடம் மட்டும் நன்கொடை திரட்ட வில்லை. கோயில் ஈடுபாடு வளர்வதற்குப் புள்ளிவரி வசூலிப்பது மிகவும் இன்றியமையாதது.

வழிபாடு செய்ய வருவோரின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அருகிவருகிறது. வழிபாடு செய்ய மெய்யன்பர்கள் வந்தாலும் வரா விட்டாலும் ஐந்துவேளை பூசை நடைபெறுவது ஒரு வகையில் சிறப்புத்தான் எனினும் வழிபாடு செய்வோரின் எண்ணிக்கை கூடினால்தான் கோயிலின் பெருமை வெளி உலகிற்குத் தெரிய வரும்.

## 5.8.4. வழிபாடு செய்வோர் குறைந்தமை:-

ஆய்வாளர், விழாக்கள் ஏதுமில்லாத சாதாரன நாட்களில் சென்று எடுத்த புள்ளி விவரக் கணக்கின்படி தினசரி வழிபாடுசெய் வோர் சற்றேறக் குறைய எத்தனை பேர் என்பது கீழ்வரும் பட்டி யல் மூலம் தெரிய வருகிறது.

| வரிசை எண் | கோயில் | வழிபடுவோர் எண்ணிக்கை |
|---|---|---|
| 1, | இளையாத்தங்குடி | 52 |
| 2. | மாற்றூர் | 18 |
| 3. | வயிரவன்பட்டி | 64 |
| 4. | நேமம் | 3 |
| 5. | இலுப்பைக்குடி | 16 |
| 6. | சூரைக்குடி | 5 |
| 7. | வேலங்குடி | 4 |
| 8. | இரணியூர் | 3 |
| 9. | பிள்ளையார்பட்டி | 172 |

கோயிலின் சிறப்போடு, வருவோர் எண்ணிக்கையை நோக்க மிகவும் மனம் புண்படுகிறது. வெறும் கல்தூண்களையும் ஒரு சில கடைத்தெருக்களையும் கட்டடங்களையும் பார்த்துவருவதற்காகப் பெரும் பொருட்செலவில் சுற்றுலா செல்பவர்கள் தெய்விகமும் கலையழகும் மிக்க இக் கோயில்களுக்குச் செல்வதில்லை.

பணச் செலவிற்காகப் பாராது தெய்விக ஈடுபாட்டை வளர்ப்பதற்காக ஆண்டுதோறும் முன்பு போல வசூலுக்கு வயிராவியை அனுப்ப ஏற்பாடு செய்வது நல்லது. சிக்கனம் கருதி இறையருள் திருவமுதாகிய அரிசிப் பொரி கொடுப்பதனை நிறுத்தாமல் மீண்டும் கொடுக்க நிருவாகத்தினர் ஏற்பாடு செய்வது நலம் பயக்கும்.

திருவிளக்குக் காணிக்கையாக ஆண்டுக்கு ஒரு ரூபாய்வசூலிப்பதைக் காட்டிலும் மாதத்திற்கு ஒருரூபாய் வீதம் ஆண்டுக்குப் பனிரெண்டு ரூபாயை வசூலிக்கலாம்.

மாதந்தோறும் ஊதியம் வாங்கியதும் முதல்செலவாக வீட்டில் உள்ள இல்லுறை தெய்வங்களுக்குத் தென்புலத்தார் வழிபாடுசெய்வதற்காக ஒரு ரூபாயை உண்டியலில் செலுத்தும் வழக்கம் நகரத்தாரிடையே பழக்கமாகக் காணப்படுகிறது. அதற்குப் பக்கத்திலேயே ஒரு நகரக் கோயில் திருவிளக்குக் காணிக்கை உண்டியலையும் வைத்துவிட்டால் பணம் எளிமையாகச் சேர்ந்துவிடும்.

## 5. 8. 5. நகரக் கோயில் பெருமைகளை விளம்பரப் படுத்தாமை -

ஆகம அமைப்பும், சிற்ப அழகும், முழுமையான வழிபாடும் அமைந்துள்ள நகரக்கோயில்களைப்பற்றியகட்டுரைகள், படங்கள் முதலியவைகளை "நகரத்தார் மலர்" "நகரத்தார் குரல்"போன்ற இதழ்களில் தொடர்ந்து வெளியிட்டு அதிகமான மக்கள் கோயிலுக்கு வந்து வழிபாடு செய்ய நிருவாகக் குழுவினர் ஏற்பாடு செய்யலாம்.

பிள்ளையார் பட்டித் தலபுராணம் மட்டுமே புத்தக வடிவில் விற்பனைக்குக் கிடைக்கிறது. ஒவ்வொரு நகரக் கோயிலைப் பற்றியும் விளக்கமான புத்தகங்கள்வெளிவரஏற்பாடுசெய்துவிற்பனை செய்தால் கோயிலுக்கும் ஒருகூடுதல் வரவு கிடைக்கும்;கோயிலின் பெருமையும் உலகோர் அறிந்து வழிபாடு செய்ய வருவார்கள்.

ஒரு சிலர் பிறந்த நாளன்று ஏதாவது ஒரு நகரக் கோவிலுக்குச் சென்று வருவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். தேவகோட்டை திரு. வெ. கதிரேசன் செட்டியார் இயலும்போதெல்லாம் நகரக் கோயில்களுக்கும் தேவாரத் திருத்தலங்களுக்கும் சென்று வருகின்றார்கள். நகரக் கோயில்களுக்கு இதுவரை நாற்பது முறை சென்று வந்துள்ளார்கள். 164 தேவாரத் தலங்களுக்குச் சென்று வந்துள்ளார்கள். இன்னும் பல முறை நகரக் கோயில்களுக்குச் சென்றுவரும் விடுதலறியா விருப்பினராக உள்ளார்கள். நகரக் கோயில்களில் வழிபாடு செய்வதால் தெய்விக சக்தி (Devine Power) கூடுகிறது, என்று நேர்காணலின் போது தெரிவித்தார்கள், "ஒரே கோவிலுக்கு எதற்காகப் பல முறை சென்று வருகின்றீர்கள்?" என்ற வினாவிற்கு அவர் கூறிய விடை மிக அருமையாக அமைந்திருந்தது. அவர் கூறிய பதில்,

"ஒரு பேட்டரிக்குப் பலமுறை சக்தி ஏற்றுவது (Charging) போல ஒவ்வொருமுறை கோயிலுக்குச் செல்லும்போதும் ஒரு புதிய சக்தி என்னுள் கூடுவதை உணர்கிறேன்" என்றார் அவர்கள்.[10]

இத்தகு அருமையான கோயில்களுக்கு வழிபாடு செய்யப் பலரும் வருவதில்லை. என்பது வருத்தத்திற்குரிய செய்தியாகும். இன்னும் ஆழமாகச் சொன்னால் இன்றைய இளைய தலைமுறையினருள் 90 விழுக்காட்டினருக்குத் தங்கள் கோயில் எது என்றவிவரம்

கூடத் தெரியவில்லை. திருமணத்திற்கு முன் பாக்கு வைப்பதற்கு எப்போதும் ஒரே ஆள்தான் சென்று வருவதால் இளைய தலைமுறையினருள் 95 விழுக்காட்டினர் நகரக் கோவில்களுக்குச் செல்வதே கிடையாது.

அற்புதக் கீர்த்தி மிக்க அழகுமிகு கோயில்களை வெளி உலகம் நன்கு அறிந்து பத்திப் பயன்கொள்ள நிருவாகக் குழுவினர் தங்கள் தங்கள் கோயிலைப் பற்றிய புத்தகத்தினை வெளியிடவும் போக்குவரத்து வசதி ஏற்படவும், நின்று போன பழைய விழாக்களை மீண்டும் கொண்டாடவும் ஏற்பாடு செய்வது சாலச் சிறந்தது என்று பரிந்துரைக்கப்படுகிறது.

மக்கள் பணியே மகேசன் பணியென்று பல்வேறு சமூகப் பணியாற்றி வரும் நகரக் கோயில் நிருவாகத்தினர் வைப்பு நிதியாகப் பல வங்கிகளிலும் தனியாரிடத்திலும் கொடுத்து வைத்துள்ள நிதியைத் திரும்பப்பெற்று அதனை அடிமுதலாக வைத்துப் பல தொழிற்சாலைகளைத் தொடங்குவது சிறந்த சமூகத் தொண்டாக அமையும். வேலை வாய்ப்பின்றி வீணே காலத்தைக் கழிக்கும் மனித சத்திக்கு வேலை வாய்ப்பளிப்பது மனிதாபிமான அடிப்படையிலும் தெய்வப் பணி அடிப்படையிலும் சிறந்த தொண்டாக அமையும் என ஆய்வாளர் பரிந்துரைக்கிறார்.

## 5. 9. முடிபுகள் :-

5.9.1. ஒன்பது நகரக் கோயில்களின் அன்றாடப் பணிகள் ஒழுங்காக நடைபெறக் காரணமானவர்கள் மூவகையினர். அவர்கள்

1. பூசை செய்வோர்
2. உடல் உழைப்பாளர்கள்
3. நிருவாகக் குழுவினர்

5.9.2. நிருவாகம், பொதுநலப்போக்கு நிருவாகமாக அமைந்துள்ளது. எனவே எல்லோருக்கும், அனைத்து வட்டகை, ஊர், குடும்பங்களுக்கும் நிருவாகக் குழுவில் பங்களிக்கப்படுகிறது.

5.9.3. ஒரு தலைவர், ஒரு செயலாளர், ஒரு பொருளாளர், சற்றேறக்குறைய முப்பது உறுப்பினர்கள் கொண்ட நிருவாகக் குழு முறை பொதுவாகக் காணப்படுகிறது.

5.9.4. இலுப்பைக்குடி வேலங்குடிக் கோயில்களில் மட்டுமே தொடர்ந்து ஒரு குடும்பத்தினர் பரம்பரை நிருவாகக் குழுவில் தலைமை பெற்றுள்ளனர்.

5.9.4.1. இலுப்பைக்குடிக் கோயில் நிலங்களை அருவெ குடும்பத்திற்கே அரசன் அளித்தான். அதனை அவர்கள் கோயிலுக்குக் கொடுத்துள்ளனர். எனவே அவர்களுக்கு என்றும் சிறப்பு கொடுக்கப்படுகிறது.

5.9.4.2. வேலங்குடிக் கோயில் 41 புள்ளிகளுள் திரு. பிச்சப்பச் செட்டியார் பொருள் வளத்துடன் நிர்வாகம் செய்வதிலும் சிறந்து விளங்கினார். எனவே அக்கோயில் புள்ளிகள் தொடர்ந்து அவரைத்தேர்ந்தெடுத்தார்கள்.

5.9.5. கோயில் நிருவாகத்திற்கான பொருளை ஒவ்வொரு குடும்பத்தினரும் (புள்ளியும்) புள்ளிவரி மூலம் செலுத்துகின்றனர்.

5.9.6. திருக்குட நன்னீராட்டு விழா போன்ற அதிகமான பொருளாதாரத் தேவைகளுக்குச் சொத்துவரி மூலம் நகரத்தார்கள் தங்கள் சொத்தின் பத்து விழுக்காட்டினை மனமுவந்து அளிக்கின்றனர்.

5.9.7. கோயில் நடைமுறைச் செலவுகட்காகத் திரட்டும் பணத்தை முதலாக்கி, முதலைச் செலவிடாமல், வைப்பு நிதியாக அதனை வைத்து, அதிலிருந்து கிடைக்கும் வட்டித் தொகையிலேயே செலவு செய்வதால், தொடர்ந்து கோயில் நடைமுறைப் பணிகள் தடையின்றி நடைபெற்று வருகின்றன.

5.9.8. நிருவாகக்குழு சமயப் பணியுடன் சமுதாயப் பணிகளையும் செய்து வருகின்றது.

5.9.9. கோயிலுக்கு நன்கொடைதருவோருக்கு, அத்தொகைக்கான வருமான வரியிலிருந்து விலக்கு வாங்கித்தந்து நிருவாகக் குழுவினர் ஊக்குவிக்கின்றனர்.

5.9.10. கோயில் அருச்சகர்கள், பிற உடல் உழைப்பாளர்களுக்கு வீட்டுவசதி, மின்வசதி, உணவுவசதி முதலி

யனவற்றைச் செய்து கொடுப்பதால் தொடர்ந்து பல தலைமுறைகளாக மேற்கண்டோர் பணிபுரிந்து வருகின்றனர்.

5. 9. 11. நிருவாகக் குழு உறுப்பினர்கள் ஆலோசகர்களாகவும் பணியாற்றிச் சிற்பிகள், கொத்தனார் ஆகியோருக்கு ஆகமம், புராணங்களின் அடிப்படையில் ஆலோசனைகள் கூறி, கோயில் கட்டுமானப் பணிகளிலும் சிறந்து விளங்குகின்றனர்.

5. 9. 12. நிருவாகக் குழுவின் திட்டங்களைச் செயல்படுத்த ஒவ்வொரு கோயிலிலும் நகர விடுதி என்ற செயலகம் அமைந்துள்ளது. வழிபட வரும் மெய்யன்பர்கள் பல நாட்கள் தங்கி வழிபட உதவும் விடுதியாகவும் அவை அமைந்துள்ளன.

5. 9. 13. திருமணத்திற்கான பதிவு அலுவலகமாக இந்நகர விடுதி பயன்படுகிறது. அவ்வாறு பதிந்தோருக்கு இறைவனின் அருளாசியாகக் கோயில் மாலையை நகர விடுதி மேலாளரே அனுப்பிவைக்கின்றார்.

5. 9. 14. நகரக் கோயில்கள் சட்ட மன்றமாகவும், ஆட்சி மன்றமாகவும், நீதி மன்றமாகவும் விளங்கிப் பெரும் பணி புரிகின்றன. நீதிமன்றப் பணி, மறியல் கட்டு முறை தற்பொழுது நடைபெறவில்லை. அவை மறுபடியும் செயல்பட வேண்டும்.

5 9. 15. திருவிளக்குக் காணிக்கையாகப் புள்ளி வரி வசூலிப்-பதை இளையாத்தங்குடிக் கோயில் தவிரப் பிற கோயில்கள் ஆண்டுக்கு ஒருமுறை வசூலிக்காமல், தங்கள் தோதுபோல் வசூலிப்பது ஒரு குறையாகும். கோயில் ஈடுபாடு வளர்வதற்காக ஆண்டுதோறும் புள்ளிவரி வசூலிப்பது மிகவும் இன்றியமையாததாகும்.

5. 9. 16. நகரத்தாரின் நிருவாகத்தில் பெரும் குறையாகக் குறிப்பிடத்தக்கது திருக்கோயில் திருப்பணியின்போது கல்வெட்டுகளையும், பழுதுபட்ட கற்சிற்பங்களையும், அப்புறப்படுத்தி விடுவதே ஆகும். இதனால் பல வரலாற்றுச் செய்திகள், பண்பாட்டுச் செய்திகள்

கிடைக்காமல்போய்விடுகின்றது. இவற்றின் இன்றியமை யாமை தெரியாமல் அப்புறப்படுத்தியிருப்பினும் இனிச் செய்யும் திருப்பணிகளின்போது அவ்வாறு இருப்பன வற்றைப்பாதுகாக்க ஏற்பாடுகள்செய்யப்படவேண்டும்.

5. 9. 17. பிள்ளையார்பட்டி, வயிரவன்பட்டி, இளையாத்தங்குடி தவிரப் பிற கோயில்களுக்கு வழிபட வருவோரின் எண்ணிக்கை மிகக் குறைவாக உள்ளது. திருகூட்ட மரபினைப் பெருக்க ஆய்வாளர் சில பரிந்துரைகளை எழுதியுள்ளார். அவற்றை நிருவாகக் குழுவினர் செயல் படுத்தினால் நலம் பயக்கும்.

5. 9 18. கோயில் பொது நிதிகளை வங்கிகளிலும் தனியாரிடத் திலும் வைப்பு நிதியாக வைத்திருப்பதைக் காட்டிலும் பொருளாதாரத்தின் அடிப்படையில்பல தொழிற்சாலை களைக் காலத்திற்கேற்ற வண்ணம் தொடங்கி நடத்த ஆய்வாளர் பரிந்துரைக்கிறார். சமயப் பணியுடன் சமுதாய நலப் பணிகளையும் திருக்கோயில்கள் மேற் கொள்ள இது வழிவகுக்கும்.

---

## குறிப்புகள்

### நிருவாக முறை

1 நசன், ஆலயங்களும் ஆகமங்களும், ப.9.
2. ச. முத்துக்குமாரசாமி, திருச்செந்தூர் வள்ளி மணாளன் கோயில் வரலாறு, ப.67.
3. நேர்காணல் - கல்யாணசுந்தர குருக்கள் - 30-1-1987
4. K.V. Raman, Sri Varatharaja Swami Temple, Kanchi, p. 114.
5. இளையாற்றங்குடி தேவஸ்தானம் அட்மினிஸ்ட்ரேஷன் ரிப்போர்ட், 1939 பக். 2-3.
6. அர. சிங்காரவடிவேலன், சித. நடராசன், இலுப்பக்குடி திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா மலர், ப 2.
7. அ. சேசாத்திரி சர்மா, நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு, பக். 53-55.
8. நேர்காணல் - சா. கணேசன் - 18-1-1982.
9. மாணிக்கவாசகர் – திருவாசகம் - சிவபுராணம் - வரி. 2.
10. நேர்காணல் - லெ. கதிரேசன் செட்டியார் - 16–10-1986.

# 6. கல்வெட்டுகள் கூறும் செய்திகள்.

ஒன்பது நகரக்கோயில்களைப் பற்றிய அறிய 58 கல்வெட்டுகள் கிடைத்துள்ளன.

அவற்றுள் இரணியூர்க்கல்வெட்டுகள் பதின்மூன்றும், இளையாத்தங்குடிக் கல்வெட்டுகள் இருபத்தொன்பதும், பிள்ளையார்பட்டிக் கல்வெட்டுகள் பதினான்கும் அடங்கும். ஆய்வாளர் இரணியூரில் ஒரு கல்வெட்டைக் கண்டுபிடித்துள்ளார். இக்கல் வெட்டுக்கள் அனைத்தும் முழுமையாக வெளியிடப்படவில்லை. அவற்றின் சுருக்கமான செய்திகளே இந்தியக் கல்வெட்டு அறிக்கையில் வெளிவந்துள்ளன. அவற்றின் முழுமையான வாசகங்கள் மைசூர் தொல்லியல்துறை சென்று ஆய்வாளரால் படிக்கப்பெற்று முதன்முதலில் இவ்வாய்விற்குப் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

துணைச்சான்றாகப் பூங்குன்ற நாட்டு வேலங்குடிக் கல்வெட்டுகள் ஒன்பதும் கிடைத்துள்ளன.

மேற்கண்ட அறுபத்தாறு கல்வெட்டுகளில் பிள்ளையார்பட்டியில் உள்ள பதினான்கு கல்வெட்டுகளையும் இரணியூரில் புதிதாகக் கண்டுபிடித்துள்ள ஒரு கல்வெட்டையும் மட்டுமே நாம் காண முடிகின்றது.

இளையாத்தங்குடியில் 1926ஆம் ஆண்டு காணப்பெற்ற 29 கல்வெட்டுகளில் 24 கல்வெட்டுகள் பழுதுபட்ட மிகப் பழைய பெருமாள் கோயிலின் சிதைந்த கருவறைச் சுவர்களிலிருந்து படி எடுக்கப்பெற்றவை. அவை இன்று மேலும் சிறுசிறு துண்டுகளாகச் சிதைந்து காணப்படுகின்றன. ஆதிகேசவப் பெருமாள்

கோயிலில் காணப்பட்ட ஐந்து கல்வெட்டுகளும், கோயிலைப் புதுப்பிக்கும் போது அப்புறப்படுத்தப்பட்டுள்ளன. கல்வெட்டு-களின் இன்றியமையாமை தெரியாமையால் அவற்றை இழந்து-விட்டனர்

இரணியூர்க் கல்வெட்டுகள் பதின்மூன்றில் பதினொரு கல்-வெட்டுகள் ஆட்கொண்டநாதர் கோயிலில் வெட்டப்பட்டி-ருந்தன. இவை 1926ஆம் ஆண்டு படியெடுக்கப் பெற்றிருக்-கின்றன. அதற்குப் பின் கோயிலைப் புதுப்பிக்கும் போது அக்-கல்வெட்டுகள் அனைத்தும் அப்புறப்படுத்தப்பட்டு விட்டன. 1926ஆம் ஆண்டில் பதிவு செய்யப்பெற்ற 12ஆம் இலக்கக் கல்வெட்டு இரணியூர்க் கிராமத்தின் மேற்கில் காணப்பட்டதாகத் தொல்பொருள் ஆய்வுத்துறையின் ஆண்டறிக்கை கூறுகிறது. ஆய்வாளர் முயன்று தேடியும் அக்கல்வெட்டு காணப்பெறவில்லை

1926ஆம் ஆண்டறிக்கையில் இடம்பெற்ற 13ஆம் எண்ணுள்ள கல்வெட்டு, இரணியூரின் மேற்கில் ஒரு மைல் தொலைவில் உள்ள வயலில் காணப்பட்டதாக ஆண்டறிக்கை கூறுகிறது. அக்கல்வெட்டையும் காணவில்லை.

ஒன்பது நகரக் கோயில்களுக்குத் துணைச் சான்றாக அமை-யும் பூங்குன்ற நாட்டு வேலங்குடிக் கல்வெட்டுகள் ஒன்பதும் உருத்திர கோடீசுவரர் கோயிலில் சற்றே சிதைந்த நிலையில் காணப்படுகின்றன.

பிள்ளையார்பட்டிக் கல்வெட்டுகள் தவிர்த்துப் பிற கல்வெட்டு களும் முழுமையான நிலையில் கிடைக்காவிடினும் இந்த அறுபத் தைந்து கல்வெட்டுகளும் மைசூரில் உள்ள தொல்பொருள் ஆய்-வுத்துறை அலுவலகத்தில் படியெடுத்து வைக்கப் பெற்றுள்ளன.

## 6. 1. கல்வெட்டுகளின் காலம்:-

இக்கல்வெட்டுகள், வெட்டப்பெற்ற காலத்தை உறுதி செய்ய மூன்று வழிமுறைகள் உதவியாக உள்ளன. அவையாவன:

1. ஒரு குறிப்பிட்ட மன்னரின் ஆட்சிக் காலத்தின் எத்த னையாவது ஆட்சியாண்டில் இக்கல்வெட்டு வெட்டப்பெற்றது என்ற குறிப்பு ஒவ்வொரு கல்வெட்டின் தொடக்கத்திலும் பெரும் பாலும் காணப்படுகிறது, அக்குறிப்பிட்ட மன்னன் ஆட்சிக்குவந்த

காலத்தை வரலாற்று நூல்களில் துணையால் கண்டு கொண்டு, அத்துடன் அவனதுஆட்சிக் காலத்தின் எத்தனையாவது ஆட்சி யாண்டு வெட்டப் பெற்றதோ, அந்த ஆண்டையும்கூட்டிக்கொண் டால், ஒரு கல்வெட்டு தோன்றிய காலம் தெரியவரும்

சான்று : கோமாரபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் எம் மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீ குலசேகர தேவர்க்கு 24 ஆவது ஆட்சியாண்டில் வெட்டப்பெற்றதாக இளையாத்தங்குடிக் கல் வெட்டு (ஆண்டறிக்கை எண் 15/1926) கூறுகின்றது. எம்மண்ட லமும் கொண்டருளிய ஸ்ரீ குலசேகரதேவர் ஆட்சிக்கு வந்த ஆண்டு கி. பி. 1268. அவருடைய 24 ஆவது ஆண்டு ஆட்சிக் காலம் இக்கல்வெட்டு வெட்டப் பெற்ற தென்றால், 1268+24= கி. பி. 1292 என்றாகிறது.

2. சில கல்வெட்டுகளில் தமிழ் ஆண்டு (சக ஆண்டு) குறிக்கப் பெற்றிருக்கும், சக ஆண்டிற்கும் கிறித்தவஆண்டிற்கும் இடையே 78 ஆண்டுகள் உள்ளன எனத் தொல்பொருள் ஆய்வுத் துறை யினர் கணக்கிட்டுள்ளனர். சக ஆண்டுடன் 78 ஆண்டுகளைக் கூட்டினால் கிறித்தவ ஆண்டு கிடைக்கும்

சான்று:- இளையாத்தங்குடிக் கல்வெட்டு (எண். 14/1926) ஒன்று, சக ஆண்டு 1448 ஆம் ஆண்டு வெட்டப்பட்டுள்ளது. அதனுடன் 78ஐக்கூட்ட அக்கல்வெட்டுகி.பி. 1526 ஆம் ஆண்டு வெட்டப்பட்டுள்ளது என அறிகிறோம்.

3. ஒரு சில கல்வெட்டுகளில் காலம் பற்றிய குறிப்பே இடம் பெறு வதில்லை. அந்நிலையில் அக்கல்வெட்டில் உள்ள எழுத்துக்கள் எக்காலத்தைச் சேர்ந்தவை என்பதை வைத்துக் காலத்தைக் கணக்கிட்டு விடலாம்

சான்று : பிள்ளையார்பட்டிக் கல்வெட்டுகள் பதினான்கினுள் நான் கினில் மட்டும் காலம் பற்றிய குறிப்பு வெட்டப்பெறவில்லை.

அவற்றுள் மிக இன்றியமையாத கல்வெட்டு, தொல்பொருள் ஆய்வுத்துறையின் 1936ஆம் ஆண்டு அறிக்கையில் 156 ஆவது கல்வெட்டாகப் பதிவு பெற்ற இரண்டுவரிக்கல்வெட்டாகும். அங் குள்ள குடைவரைக்கோயிலைத் தோற்றுவித்த சிற்பி பெருந்தச்ச னின் பெயரே இக்கல்வெட்டாகும்.

"எக்காட்டுரு
க்கோன் பெருந்தசன்"

என்ற அவ் விரு வரிகள் தான் பிள்ளையார்பட்டித் தேசி விநாயகப் பெருமானின் குடைவரைச் சிற்பம் தோன்றிய காலத்தையேசுட்டிக் காட்டுகிறது.

பிள்ளையார்பட்டியில் உள்ள தேசி விநாயகப் பெருமானின் உருவம் தனித்தன்மை மிக்கது. எல்லா இடங்களிலும் விநாயகர், மேலிருகைகள், கீழிருகைகள், தும்பிக்கை ஆகியஐந்துகைகளுடன் தான் காணப்படுகின்றார். ஆனால் பிள்ளையார்பட்டிப் பெருமான் இரண்டு கைகளுடனும் ஒருதும்பிக்கையுடனும்காணப்படுகின்றார்.

இவ்வாறு இரண்டு கைகளுடன் அமைந்த விநாயகர் சிற்பம் மிக அரிதானது; பழமையானது. இதே சிற்ப அமைதியில் அமைந்த ஒரு விநாயகர் சிற்பம், குன்றக்குடி ஆறுமுகன் கோயில் அடி வாரத்தில் உள்ள தேனாற்று நாதர் குடைவரைக் கோயிலில் காணப்படுகின்றது. (நி. ப. எண். 81).

இயக்கன், இயக்கி என மனித வடிவில் தெய்வங்களைப் பண்டைக் காலத்தில் வழிபட்டு வந்தனர். இவை இரண்டு கரங்களுடன் படைக்கப்பெற்றுள்ளன. இதனை பின்பற்றியே பிற் காலத்தில் இரண்டு கரங்களுடன் வைதிக சமய தெய்வ உருவங்கள் படைக்கப்பெற்றன எனத்தொல்பொருள் ஆய்வுத்துறையினர் கூறுகின்றனர்.[1]

மனிதனைக் காட்டிலும் தெய்வத்திற்கு வலிமை (சக்தி) அதிகம் என்பதைத் தெரிவிப்பதற்காக மனித உடம்பில்,விலங்குகளுள் பெரிதான யானையின் தலையைச் சேர்த்து விநாயகரின் வடிவத்தைப் படைத்துள்ளனர்.

அதன்பின்னர் இறைவனின் அளப்பரிய திறமையை உணர்த்தவே நான்கு கைகள் முதல், ஆயிரம் கைகள் வரை படைத்துள்ளனர்.

இவ்வாறு பார்க்கையில் இந்தியாவில் தொன்மையாக அமைந்த இருகை விநாயகர் வடிவம் பிள்ளையார் பட்டியில் உள்ளது.

இந்தியாவிற்கு அருகில் அமைந்துள்ள ஆப்கானிசுத்தானத்தில் உள்ள காபூல் நகருக்குப் பத்து மைல் தொலைவில் உள்ள சகர் தார் (சங்கரதாரா) என்னும் ஊரில் இருகை விநாயகர் சிற்பம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அச்சிற்பத்தில் காணப்படும் அணிகலன்களின் அமைப்பினை வைத்து அச்சிற்பம் குப்தர் காலத்தின் பிற்பகுதியில் (கி.பி. 500 இல்) செதுக்கப்பட்டிருக்கக்கூடும் எனத் திரு. தி. நா. இராமச்சந்திரன் கூறியுள்ளார்.[2] (நி. ப எண். 82).

பிள்ளையார் பட்டி விநாயகர் சிற்பத்தின் காலத்தை அந்த இரண்டு வரிக் கல்வெட்டுத்தான் உறுதி செய்கிறது. இக்கல்வெட்டில் இடம் பெற்றுள்ள எழுத்துகள் இக்காலத் தமிழ் எழுத்துகள் அல்ல; தமிழின் ஆதிகால எழுத்து வடிவமான 'தமிழி' என்னும் எழுத்து முறையில் அக்கல்வெட்டு அமைந்துள்ளது. தமிழி எழுத்துகளின் காலம் கி.பி நான்காம் நூற்றாண்டு எனவே இக்கல்வெட்டில் உள்ள தமிழி எழுத்துகளின் அடிப்படையில் நோக்கும் போது பிள்ளையார் பட்டிப் பெருமானின் தோற்றம் கி. பி. மூன்று அல்லது நாலாம் நூற்றாண்டுஎன்பார்கம்பன்அடிப்பொடி திரு. சா. கணேசன்.[3]

தமிழி எழுத்தின் முதிர்ந்த நிலையில்இவ்வெழுத்துகள்காணப்படுவதால் இக்குடைவரைக் கோயிலின் காலம் ஆறாம் நூற்றாண்டாக இருக்கும் என்று தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி கூறுகின்றார்.[4]

குடைவரைக் கோயிலில் உள்ள தூண்களின் அமைப்பு முறையினால் இது ஆறாம் நூற்றாண்டின் இறுதியைச் சேர்ந்ததாக இருக்கலாம் எனத் தொல்பொருள் ஆய்வுத்துறைக் காப்பாட்சியர் திரு. வெ. வேதாசலம் கூறுகிறார்.[5]

உலகத்தின் முதன் முதல் பிள்ளையார் சிற்பம் ஆப்கானிசுத்தானத்தில் ஐந்தாம் நூற்றாண்டில் தோன்றியுள்ளது. அதனையடுத்து அதற்குப்பின் தோன்றிய தொன்மையான பிள்ளையார் சிற்பங்களில் பிள்ளையார் பட்டி பிள்ளையார்சிற்பமும் ஒன்றாகும்.

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் சிறுத்தொண்டர் வாதாபிப் போரில்வென்று, அங்கிருந்து விநாயகர் சிற்பத்தைக் கொண்டு வந்து, முதன் முதலாகத் தமிழகத்திற்கு அறிமுகம் செய்தார் என்ற பழைய கூற்றினை மறுக்கப் பிள்ளையார்பட்டிக் கல்வெட்டு எழுத்துக்களும் விநாயகன் சிற்ப அமைதியும் துணைபுரிகின்றன.

## 6. 2. கல்வெட்டுகளால் அறியப்படும் நாட்டின் உட்பிரிவுகள்:-

கி. பி. ஆறாம் நூற்றாண்டு முதல் கி. பி. பதினாறாம் நூற்றாண்டுவரையான கல்வெட்டுகள் பிள்ளையார்பட்டி, இளையாத்தங்குடி இரணியூரில் அமைந்துள்ளன. அவை அக்கால கட்டடத்தில் தமிழ்நாடு எவ்வாறு பகுக்கப்பட்டிருந்தது என்றும் அவ்வப் பகுதிகளின் அரசர்கள் யாவர் என்றும் தெரிவிக்கின்றன.

கல்வெட்டு இடம்பெறாத மாற்றூர், வயிரவன்பட்டி நேமம், இலுப்பைக்குடி சூறைக்குடி வேலன்குடி ஆகிய ஊர்களில் பண்டையவரலாற்றை எவ்வாறு அறிவது?பழமையைப் பொன்னே போல் போற்றும் வழக்கமுடைய நகரத்தார் திருமண நாளின் போது எழுதும் இசைவுப் பிடிமானம் என்னும் திருமணப் பதிவேடு இங்கு உதவும். அக்கல்வெட்டுக்கு உரிய மதிப்பு இதற்கு உண்டு எனவே கல்வெட்டு இடம்பெறாத கோயில்களுக்கு, அக்கோயில் நகரத்தார் எழுதும் இசைவுப் பிடிமானத் தொடர்கள் துணைச் சான்றாகக் கையாளப்பட்டுள்ளன.

முற்காலத் தமிழகத்தின் உட்பிரிவுகள் வளநாடு, நாடு. ஊர், என மூன்று பிரிவுகளாகப்பிரிக்கப்பட்டிருந்தன. வளநாடு என்பது இன்று மாவட்டம் என்பது போலவும். நாடு என்பது அதன் உட்பிரிவான வட்டம் என்பது போலவும் அதன் உட்பிரிவாகப் பல ஊர்களும் அமைந்திருந்தன.

### 6. 2. 1. கேரளசிங்க வளநாடு :-

ஒன்பது நகரக் கோயில்களும் கேரள சிங்கவள நாட்டில் அமைந்திருந்தன. ஏழு கல்வெட்டுகளில் கேரளசிங்க வளநாடு பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன,[6] சேர மன்னர்கள் கண்டு பயப்படும் சிங்கம் போன்ற பாண்டிய மன்னன் என்பது அப் பெயருக்கான பொருள். கேரளன் என்னும் பெயர் அந்நாளில் பெருவழக்கில் இருந்துள்ளது.

கேரளன் காடன், கேரளன் பொன்னாச்சான், காடன் கேரளன் ஆகிய பெயர்கள் இதற்குச் சான்றாக உள்ளன[7]

### 6. 2. 2. நாடு:-

இசைவுப் பிடிமானத்தில் இடம்பெறும் தொடர்கள் அக்கால நாட்டின் உட்பிரிவுகளைக் கீழ்வருமாறு வகைப்படுத்திக் கூறுகின்றன.

| | வளநாடு | நாடு | ஊர்ப்பெயர் | வரலாற்றுப்பெயர் |
|---|---|---|---|---|
| 1. | கேரளசிங்க வளநாடு | கல்வாச நாடு | இளையாத்தங்குடி | குலசேகரபுரம் |
| 2. | கேரளசிங்க வளநாடு | பிரம்பூர் நாடு | மாற்றூர் | வீரபாண்டியபுரம் |
| 3. | கேரளசிங்க வளநாடு | | ஏழகப் பெருந்தெரு | குலசேகரபுரம் |
| 4. | கேரளசிங்க வளநாடு | | நேமம் | குலசேகரபுரம் |
| 5. | கேரளசிங்க வளநாடு | பிரம்பூர் நாடு | இலுப்பைக்குடி | புகழிடங்கொடுத்த பட்டணம். (சூடாமணி புரம்) |
| 6. | கேரளசிங்க வளநாடு | | சூரைக்குடி | தேசிகநாராயணபுரம் |
| 7. | கேரளசிங்க வளநாடு | பாலையூர் நாடு | வேலங்குடி | தேசிகநாராயணபுரம் |
| 8. | கேரளசிங்க வளநாடு | கல்வாச நாடு | இரணியூர் | இராசநாராயணபுரம் |
| 9. | கேரளசிங்க வளநாடு | கல்வாச நாடு | பிள்ளையார்பட்டி | இராசநாராயணபுரம் |

இளையாத்தங்குடியும் இரணியூரும் கல்வாயில் நாட்டினில் அமைந்திருந்தன என்பதற்கு 26 கல்வெட்டுகள் சான்றாக அமைகின்றன.[8]

கேரளசிங்க வளநாட்டில் கீழ்க்குண்டாற்றுநாடு, அதளையூர் நாடு, கானநாடு ஆகிய மூன்று நாடுகளும் அமைந்திருந்ததாகப் பிள்ளையார்பட்டிக் கல்வெட்டுகள் கூறுகின்றன.[9]

நேமம் கோயில் அமைந்த தேனாற்றுப் போக்கு எனும் பிரிவு பற்றி ஒரு கல்வெட்டு கூறுகின்றது.[10] அதில் நேமம் அதளையூர் நாட்டிற் சேர்ந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

வயிரவன்பட்டி, சூரைக்குடி ஆகிய இரண்டு ஊர்களும் அமைந்த நாடுகள் எவை என்ற குறிப்பு இசைவுப் பிடிமானத்தில் காணப்படவில்லை. இதனைக் கண்டறிய ஒவ்வொரு ஊருக்கும் அமைந்த வரலாற்றுப் பெயர்களைப் பட்டியலிட்டுக் காண வேண்டும்.

கல்வாச நாட்டைச் சேர்ந்த இளையாத்தங்குடிக்கு மற்றொரு பெயர் 'குலசேகரபுரம்' என்பது, சிறீ கோமராபன்மரான திரிபு வனச்சக்கரவர்த்திகள் எம்மண்டலமும் கொண்டருளிய சிறீ குலசேகர தேவன் என்னும் பாண்டிய மன்னன் இப் பகுதியை ஆட்சி புரிந்ததால், இவ்வூருக்குக் குலசேகரபுரம் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது இவனுடைய ஆட்சிப் பரப்பினுள் இரணியூரும், பிள்ளையார்பட்டியும் அமைந்திருந்தன. இதற்கான சான்றுகளைப் பதினான்கு கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.[11]

இவ்வாறு வரலாற்றுப் பெயர்களாகக் காணப்படுவன நான்கு ஊர்ப்பெயர்களே ஆகும். அவையாவன:

| குலசேகர புரம் | சூடாமணிபுரம் | வீரபாண்டியபுரம் | தேசிக நாராயண புரம் |
|---|---|---|---|
| இளையாத்தங்குடி<br>பிள்ளையார்பட்டி<br>இரணியூர்<br>நேமம் | இலுப்பைக்குடி | மாற்றூர்<br>வயிரவன்பட்டி | வேலங்குடி<br>சூரைக்குடி |

வயிரவன்பட்டியும். மாற்றூரும் வீரபாண்டியபுரத்தில் அமைந் திருந்ததால் மாற்றூர் அமைந்திருந்த பிரம்பூர்நாட்டின் கீழேயே வயிரவன் பட்டியும் வருகின்றது.

சூரைக்குடி தேசிக நாராயணபுரத்தில் அமைந்திருப்பதால், வேலங்குடி அமைந்திருந்த பாலையூர் நாட்டின் கீழேயே சூரைக் குடி வருகின்றது.

கல்வாசநாடு என்பது திருமயம் வட்டத்தின் ஒரு பகுதியும் திருப்பத்தூர் வட்டத்தின் ஒரு பகுதியையும் கொண்டது. இளையாத்தங்குடியிலிருந்து நான்கு கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள கீரணிப்பட்டி முத்துமாரியம்மன் கோயில் தேர்த்திருநாளன்று இன்றும் கல்வாச நாட்டார் அனைவரும் ஒன்று கூடி அம்மன் கோயில் தேர்வடம் பிடிப்பர் என்பார் டாக்டர் தே. சொக்கலிங்கம் அவர்கள், [12]

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த பாடுவார் முத்தப்பச் செட்டியார்.

''மயிலாடு சோலை நவநீதி சேரடியுள் கைல்வாச நாட்டினில் பிறந்த வாருதிகள் புவியிலுயர் கீரணிநன் கைரில்வளர் மாரிமக மாயியுமையே''[12அ] என்று பாடுகிறார்.

கல்லுவயல் என்னும் சிற்றூர் இளையாத்தங்குடியின்தெற்குத் திசையில் அமைந்துள்ளது. கல்லுவயலேமுற்காலத்தில்கல்வாயில் நாடு என்றும் கல்வாசல் நாடு என்றும்அழைக்கப்பெற்றிருக்கலாம் என்பார் டாக்டர் தே. சொக்கலிங்கம் அவர்கள்.[13]

கல்வெட்டுகளில் குறிக்கப் பெறும் கீழ்க் குண்டாற்று நாடு என்பது மருதங்குடி,சிறாவயல் முதலான ஊர்களைத்தன்னகத்தே கொண்ட நாடு என்பார் கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள்.[14]

அவர், அதளையூர் நாடு என்பது கீழ்க்குண்டாற்று நாட்டிலிருந்து பிரிந்த ஒரு பகுதியாக வேண்டும்என்பார்.[15] காரைக்குடியை அடுத்த கழநிவாயில் முதலிய ஊர்கள் இதில் அடங்கும்.

கானநாடு என்பது புதுக்கோட்டைப் பகுதி வெள்ளாற்றுக்குத் தெற்கில் கானாடு காத்தான் முதலான பல ஊர்களைக் கொண்ட நாடு.[16]

## 6. 2. 3. பெருந்தெரு:-

பண்டைக் காலத்தில் பல வீதிகளுடன்கூடியஊர்ப்பகுதியைப் பெருந்தெரு என்றே குறிப்பிடுவர். அவ்வாறு கல்வெட்டுகளில் காணப்படுவன ஐந்து பெருந் தெருக்களாகும். அவையாவன:-

1 காளைய காலப்பெருந்தெரு
2. அரைச நாராயணப் பெருந்தெரு
3 ஐந்நூற்றுவப் பெருந்தெரு
4. செயங் கொண்ட சோழப் பெருந்தெரு
5. ஏழகப் பெருந்தெரு

## 6. 2. 3. 1. காளைய காலப்பெருந்தெரு:-

காளையகாலப் பெருந்தெரு என்ற தொடர்14கல்வெட்டுகளில் காணப்படுகிறது [17] காளையகாலப் பெருந்தெரு இளையாத்தங்குடியின் ஒரு பகுதியாக இருந்திருக்க வேண்டும்.

காலனை வென்ற (கால சம்கார மூர்த்தியான), காளை வாகனமுடைய சிவபெருமானின் திருப்பெயரை அப்பெருந் தெருவிற்குச் சூட்டியதனால் காளையகாலப் பெருந்தெரு என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம் என ஆய்வாளர் கருதுகிறார்.

## 6.2.3.2. அரைசநாராயணப் பெருந்தெரு:

அரைசநாராயணப் பெருந்தெரு என்னும் தொடர் நான்கு கல்வெட்டுகளில் காணப்படுகின்றது. [18] நான்கு கல்வெட்டுகளிலும் அரைசநாராயணப் பெருந்தெரு காளையகாலப் பெருந் தெருவின் அருகிலேயே இருந்ததாகக் குறிக்கப்பெற்றுள்ளது. 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண் 31இல் காளையகாலப் பெருந் தெருவின் தெற்குத் திசையில் அரைசநாராயணப் பெருந்தெரு அமைந்திருந்ததாகக் காணப்படும் தொடர் மிக இன்றியமையாதது. இளையாத்தங்குடியின் ஒரு பகுதி காளைய காலப் பெருந் தெருவாகவும் மறுபகுதி அரைசநாராயணப் பெருந்தெருவாகவும் இருந்திருக்க வேண்டும் எனக் கருத மற்ற மூன்று கல்வெட்டுகளும் இடமளிக்கின்றன. அம்மூன்று கல்வெட்டுகளிலும் .

கல்வாயில் நாட்டுக் காளையகாலப் பெருந்தெருவிலும் அரைசநாராயணப் பெருந்தெருவிலும் திருமேற்கோயில் கல்வாயில் நாட்டு விண்ணகர் எம்பெருமானுக்கு..........

என்னும் தொடர் காணப்படுகிறது. காளையகாலப் பெருந்தெருவிற்கும் அரைசநாராயணப் பெருந்தெருவிற்கும் மேற்கில் பெருமாள் கோயில் இருந்ததாகக் கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

அவ்வாறு ஒரு பெருமாள் கோயில் உள்ளதா எனக் கண்டறிய ஆய்வாளர் முயன்றபோது, அக்கல்வெட்டுகளில் உள்ளபடியே மேற்குத் திசையில் ஒரு பாழடைந்த பெருமாள் கோயில் காணப்-பட்டது. அதனை இப்போது ''ஓட்டைப் பெருமாள் கோயில்'' என மக்கள் குறிப்பிடுகின்றனர். 1926ஆம் ஆண்டு தொல்-பொருள் ஆய்வுத் துறையினரால் படியெடுக்கப் பெற்ற கல்-வெட்டுகள் உள்ள பெருமாள் கோயில் இதுதான்.

நாராயணப் பெருமாளையே அரசனாக - தலைவனாக எண்ணியே அரச நாராயணப் பெருவீதி எனப் பெயரிட்டிருக்க-லாம் எனக் கருத இடமுள்ளது.

காளையகாலப் பெருந்தெருவில் இருப்பினும் இரணியூரில் ஊருணி கட்டிக்கொடுத்துள்ளார்[19] அருமாறகிழார் மாணிக்கக் கூத்தன் என்பவர். இவர் அரும்பாக்கூருடையாராக இருக்கலாம்.

இவ்வாறு காளையா காலப்பெருந்தெருவினர் அரசநாராயணப் பெருந்தெருவிற்கும் சென்று வழிபாடு இயற்றி வந்துள்ளனர். பின்னர் 13 ஆம் நூற்றாண்டில் அரசநாராயணபுரத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்ட திருவேட்பூருடையார் எனும் பிரிவினர், காளையகாலப் பெருந்தெருவிலிருந்து பிரிந்து இரணியூருக்கும் பிள்ளையார்பட்டிக்கும் சென்றுள்ளனர் என்பதை 1926 ஆம் ஆண்டுக் கல்வெட்டு எண் 3 குறிப்பிடுகிறது.

திருவேட்பூருடையார் என்னும் பிரிவினர் இளையாத்தங்குடியிலிருந்து பிரிந்து சென்று இரணியூர்க்கோயில்பிள்ளையார்பட்டிக் கோயில் ஆகிய இரண்டு கோயிலாராக மாறினர் என்ற செவிவழிச் செய்தியை மெய்ப்பிக்கப் பலரிடம் நேர்காணலின் போது முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

திருவேட்பூருடையார் எனும் பிரிவு இளையாத்தங்குடிக்கோயிலில் எட்டாவது பிரிவாக இருந்ததா என்ற வினாவிற்கு நேர்காணலின் போது சரியான விடை கிடைக்கவில்லை.

இளையாத்தங்குடியில் ஒவ்வொரு பிரிவினரும் தங்கள்தங்கள் பிரிவுக்கு ஒவ்வொரு ஊருணியையும் விநாயகர் கோயிலையும் ஏற்படுத்தியுள்ளனர். எனவே வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியார் அவர்கள் தமது நூலில் குறிப்பிட்டுள்ளது[20]போன்றுதிருவேட்பூருடையார் தங்கள் வகுப்பின் பெயரால் ஓர் ஊருணியையும் விநா

யகர் கோயிலையும் எங்கு அமைத்துள்ளனர் எனக் கள ஆய்வின் போது ஆராயப்பட்டது. இளையாத்தங்குடியில் அவ்வாறு எந்த ஊருணியும் காணப்படவில்லை.

தனியாக ஓர் ஊருணியும், ஒரு விநாயகர்கோயிலும்இருந்தால் தான் திருவேட்பூருடையார் என்னும் பிரிவு ஒரு தனிப் பிரிவாக எண்ணப்படும்; இல்லையெனில் இளையாத்தங்குடிக் கோயிலில் தற்பொழுது உள்ள ஏழு பிரிவுகளுள் ஏதேனும்ஒருபிரிவில்இருந்து பிரிந்து சென்றதாகவே கருதப்படும். முன்பு இளையாத்தங்குடிக் கோயிலின் உட்பிரிவுகள் ஏழா? எட்டா? என்றவினாவிற்குவிடை யளிக்கிறது ஒரு கல்வெட்டுச் செய்தி.

1926 ஆம் ஆண்டு அறிக்கைக் கல்வெட்டு எண் 3 இதற்கான விடையைச் சொல்கிறது.

"இளையாத்தங்குடியான குலசேகரபுரத்து திருவேட்பூர் உடையார்களுக்கு இந்நாட்டு இரணிஊராக அமைந்த ஊரவரோம் எங்களூர் வடக்கு வாசலில் நல்ல தண்ணி ஊரணி திருவேட்பூரு டையாலும், இதன் தெற்கு வடபாலுகந்த பத்திரகாளிஅம்மை கோயிலும் மூலவேதகமும் முன்னாள் திருவேட்பூருடையார் கள் தன்மமா கையால் ......"எனவரும் தொடர்கள் மிகவும் இன்றியமையாத தொடர்களாகும்,

கி,பி. 1501 இல் அமைந்த இக்கல்வெட்டில் "மூனாள் திரு வேட்பூருடையார்கள்" என்று எழுதியிருப்பதிலிருந்தும் தனியாக ஓர் ஊருணி, ஒரு பிள்ளையார் கோயில் அமைத்துக் கொண்டிருப் பதிலிருந்தும் இவர்கள் இளையாத்தங்குடிக் கோயிலில் எட்டாவது தனிப்பிரிவாக இருந்தவர்கள் என்பது தெளிவாகிறது.

திருவேட்பூருடையார்கள் என்னும் இப்பிரிவினர் திருமால் வழிபாட்டில் ஈடுபாடு கொண்டதாலேயே தாங்கள் வாழ்ந்த பகுதிக்கு அரசநாராயண புரம் என்று பெயரமைத்துக்கொண்டனர் என்றும், அதிலும் இரணியூர்க் கோயில் பிரிவைச்சேர்ந்த மூத்த சகோதரரின் குடும்ப உறுப்பினர்கள் பெருமாளிடம் அதிக ஈடுபாடு கொண்டிருந்தனர் என்றும் கருத இடமுள்ளது. இரணியூரில் சிவன்கோயிலுக்கு மேற்கில் அமைந்த நீலமேகப்பெருமாள் கோயில் இக்கூற்றுக்குச் சான்றாக அமைந்துள்ளது.

இளையாத்தங்குடியும் இரணியூரும் மூன்று கிலோ மீட்டர் தொலைவில் நெருக்கமாக அமைந்திருந்ததால் அவ்வூருக்கு முதலில் தமது தருமமாக ஊருணி பிள்ளையார் கோயில், பத்திர காளி அம்மன் கோயிலைக் கட்டிக் கொடுத்தவர்கள், பிறகு அதே ஊருக்குப் பிரிந்து சென்றுள்ளனர்.

பிள்ளையார்பட்டிக் கோயிலில் பெருமாளுக்கான கருவறை காணப்பெறவில்லை. குடவரைக் கோயிலில் திருவீசர் இலிங்கம் இருக்கின்றது. பிள்ளையார் அரிகரன் இலிங்கோத்பவர் ஆகியோர்க்குத் தனிச் சிற்பங்கள் இங்கு உள்ளன. இப்பொழுது அங்குள்ள பிள்ளையாருக்கு அதிகச் சிறப்பு கொடுக்கப்படினும் முன்பு சிவனுக்கே முதலிடம் கொடுக்கப்பட்டு வந்தது.

''மருதங்குடியான இராச நாராயணபுரத்து உடையார்
திருவீங்கை ஈசுவரமுடைய நாயனார் கோயில்'' [21]

''திருவீங்கைக்குடி மகாதேவர்''[22]

''திருவீங்கைக்குடி நாயனார் கோயில்''[23]

ஆகிய கல்வெட்டுத் தொடர்கள் கீழ்வரும் உண்மைகளைத் தெரிவிக்கின்றன.

1. பிள்ளையார்பட்டி என்னும் தற்போதைய ஊர்ப்பெயர் பிற்கால வழக்காகும். இவ்வூரின் பழம் பெயர் திருவீங்கைக்குடி.

2. திருவீசர் வழிபாட்டுக்கே முதலிடம் கொடுத்திருந்த-தனால் அக்கோயிலைத் 'திருவீங்கைக்கு நாயனார் கோயில்' எனக் குறிப்பிட்டுள்ளனர்.

கல்லைப் பகுத்துப் பகுத்துச் செய்யப்பெற்ற குடைவரைத் தெய்வம் என்பதால் கல் பகு விநாயகர் - கற்பக விநாயகர் எனக் காரணப் பெயராக இப்பெயர் அமைந்திருக்கலாம் எனக் கருது-கிறார் டாக்டர் அர. சிங்காரவடிவேலன் அவர்கள்.[24] 'கல்' என்றால் மலை; மலையைப் பகுத்ததால் எழுந்த சிலை; கற்பக விநாயகர் சிலை என்பது அவர் கருத்து,

கற்பக மரம் போலக் கேட்ட வரங்கள் எல்லா வற்றையும் இவ்விநாயகர் வழங்குவதால் கற்பக விநாயகர் என்ற பெயர் ஏற்பட்டதாக இக்கோயிலைச் சார்ந்த புள்ளிகள் கூறுகின்றனர்.

கற்பக விநாயகர் என்ற இக்காலப் பெயரும் பிற்கால வழக்கே யாகும். கல்வெட்டுகளில் தேசிவிநாயகப் பிள்ளையார் என்றே குறிக்கப்பட்டுள்ளது. தேசிஎனும் சொல் வணிகர்களைக்குறிக்கும் வணிகர்களான நகரத்தார்கள் வழி பட்டதால் தேசிவிநாயகப் பிள்ளையார் என்ற பெயர் உண்டாகி இருக்கலாம்.

இளையாத்தங்குடியில் அரைச நாராயணப் பெருந் தெருவில் முன்பு குடியிருந்ததனால், பிள்ளையார் பட்டிக் கோயிலில் பெருமாள் வழிபாடுஇல்லையெனினும் ,பழைய மரபினைப் பேணிப் பாதுகாப்பதற்காக இராசநாராயணபுரம் என மருதங்குடிக்குப் பெயர் மாற்றம் செய்து அப்பெயரையும் சேர்த்தேஇசைவுப்பிடிமானத்தில் எழுதி வருகின்றனர். இது அவர்களது பண்டைய வாழ்வினைப் பற்றிய வரலாற்றுக் குறிப்பினைத் தருகின்றது.

### 6.2.3.3. ஐஞ்ஞூற்றுவப் பெருந்தெரு:

"இணன்காரிகுடி ஐஞ்ஞூற்றுவப் பெருந்தெரு" என்னும் தொடர் பிள்ளையார்பட்டிக் கல்வெட்டுகள் இரண்டினில் இடம் பெற்றுள்ளது. [25]

இணன்காரிகுடி என்பது இப்பொழுதுள்ளகாரைக்குடி அன்று. வெள்ளாற்றுக்குத் தென்பாலமைந்த ஒரு பகுதி. அந்நாளில் கானநாடு அல்லது கானாடு என்ற பெயரால் வழங்கி வந்திருக்கிறது. அந்தக் காரிகுடியில் வசித்துக் கொண்டிருந்த காலத்திலேதான் மருதங்குடியை விலைக்கு வாங்கி இராசநாராயணபுரம் என்ற பெயருடன் ஒரு நகரம் அமைத்துப் பின்னர் இங்குவந்து குடியேறி இருக்கிறார்கள் என்பார் கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் அவர்கள் [26].

"ஐஞ்ஞூற்றுவர்" என்னும் சொல் வணிகக் குழுவினைக் குறிக்கும் பண்டைய காலச் சொல்லாகும். முற்காலத்தில் நகரத்தார்கள் கடல் வணிகம் செய்ததனை இச்சொல் கலங்கரை விளக்கமாய் நின்று தெளிவுபடுத்துகிறது

பல்லவர் காலத்தில் "திசையாயிரத்து ஐஞ்ஞூற்றுவர்" என்றும் "ஐஞ்ஞூற்றுவர்" என்றும் குறிக்கப் பெற்ற வணிகர்கள் புதுக்கோட்டை மாவட்டத்தில் நகரத்தார் மலையில் (நார்த்தா மலையில்) வாழ்ந்தனர். அவர்கள் வாழ்ந்த பகுதிக்கு இன்று செட்டிபட்டி என்ற பெயர் உள்ளது. செட்டிபட்டியில் ஐஞ்ஞூற்றுவர் பெரும்பள்ளி ஒன்று இருந்ததென்பார் திரு சோம. லெ [27]

ஐஞ்ஞூற்றுவ தேவன், ஐஞ்ஞூற்றுவப் பேரரையன் ஆகிய இருவரும் கையெழுத்திட்ட ஓர் ஆதாரத்தின்படி, விரையாச்சிலை கல்வெட்டில் இருக்கிறது.

சோழர், பாண்டியர் காலங்களில் புதுகோட்டைப் பகுதியில் நகரம் என்று ஆட்சிக்குழு இருந்தது வணிகர்களே இதில் உறுப்பினராய் இருந்தனர். அவர்கள் வாணிபப் பொருள்களுக்கு வரி (மகமை) வசூலித்துக் கோயிலுக்குக் கொடுத்தனர் என்ற செய்திகளை 1903 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண் 154 கூறுகிறது. இவ்வாறு நகரத்தார்களும் மகமை வசூலித்ததனை வேலங்குடிக் கல்வெட்டு கூறுகிறது.[28]

ஐஞ்ஞூற்றுவர்பல்வேறு நகரினர்ஆவர்.பில்லமங்கலம், அழகாபுரி, பொன்னமராவதி முதலிய இடங்களில் அவர்கள் இருந்தனர். நெல், அரிசி, கடலை முதலிய உணவுப்பொருட்களையும், குதிரை போன்ற வாணிபப் பொருட்களையும் வாணிபம் செய்தனர்.

ஐஞ்ஞூற்றுவர் பெயரால் பில்லமங்கலத்தில் ஊருணி ஒன்று இருந்தது. ஐஞ்ஞூற்றுவ மங்கலம் ஐஞ்ஞூற்றுவ நல்லூர் என்னும் ஊர்கள்பிரான்மலைக்கு அருகிலே இருந்தன என்பதை விரையாச்சிலைக் கல்வெட்டால் அறிகிறோம்.[29]

நானாதேசிகள், அஞ்சுவண்ணம், மணிக்கிராமம், நகரம் முதலிய குழுக்கள் பற்றிய சில செய்திகளைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

வணிகக் குழுவினர் தம் மொத்த எண்ணிக்கைக்கு ஏற்ப 'ஐஞ்ஞூற்றுவர்' 'அறுநூற்றுவர்' 'எழுநூற்றுவர்' எனத் தொகைப்பெயர் இட்டு அழைக்கப் பெற்றனர்.[30] அதனைக் கீழ்வரும் கல்வெட்டு செப்பேடுகளால் அறிய முடிகின்றது.

(1) ''ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரி வன்மர்க்குயாண்டு20
இவ்வாண்டு கானக நாட்டுமுனியந்தை திசையாயி
-ரத்து 'ஐஞ்ஞூற்றுவர்' பேரால்.........[31]

(2) ''அறுநூறுவரும்'' அஞ்சு வண்ணமும் மணிக்கிரா
-மமும் இரக்ஷிக்கக் கடவர்''.[32]

கல்வெட்டுகள் கூறும் வணிகர் குழுக்களுக்குள்ளே நானாதேசிகள் குழுவே பெரியதும் காலத்தால் முற்பட்டதும் நகரத்தார் பெருமக்களால் நிறைந்து சிறந்ததுமாகும்.

"நானாதேசித் திசையாயிரத்து ஐஞ்னூற்றுவர்க்குசிறப் பாக"[33] எனும் கல்வெட்டால் நானாதேசிக் குழுவில் ஐந்நூறு உறுப்பினர்கள் இருந்தார்கள் என்பதும் 'யாதும் ஊரே' யாவரும் கேளிர்' என்ற நோக்கில் ஆயிரம் திசைகளிலும் (பல்வேறு திசை களிலும்) உள்ள பல்வேறு நாடுகளுக்கும் சென்று வந்தார்கள்என் பதும் தெளிவாகின்றன.

ஐஞ்நூற்றுவப் பெருந்தெரு என்ற தொடரும், ஐஞ்னூற்றீசர் என்று மாற்றூர்க் கோயில் இறைவன் பெயரும், ஐஞ்னூற்று நம்பி மனை (1926ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண்:15) என்ற மனைப் பெயரும் சிந்திக்கத் தக்கன. இவை ஐஞ்னூற்றுவர் எனும் வணிகக் குழுவுடன் தொடர்புடையனவா என ஆழமாக ஆராய்ந்து பார்க்கத் தூண்டுகின்றன.

மாற்றூர்க் கோயிலின் முதற் பிரிவினர் உறையூருடையார். மாற்றூர் அக்காலத்தில் பிரம்பூர் நாட்டைச் சேர்ந்ததாயிருந்தது. உறையூர், அரும்பாக்கூர், மணலூர், மண்ணூர், கண்ணூர், கருப் பூர், குளத்தூர் ஆகிய ஊர்ப்பெயர்களின் அடிப்படையிலேயே உட்பிரிவுகள் அமைந்துள்ளன. கருப்பூர் தவிரப் பிற ஆறு பெயர்களிலும் உள்ள ஊர்கள் செட்டிநாட்டுப் பகுதியில் இல்லை.

இளையாத்தங்குடிக் கோயிலின் உட்பிரிவான ஏழு ஊர்ப் பெயர்களுள் ஒக்கூர், கழனிவாசல் தவிரப் பிற ஐந்தும் செட்டி-நாட்டுப் பகுதியில் உள்ள ஊர்ப் பெயர்கள் இல்லை. அரும்பாக் கூர், (அரும்பாற்கிளை) பெருமருதூர், கிங்கிணிக்கூர், பேரசெந் தூர், சிறுசேத்தூர் ஆகிய ஐந்து ஊர்ப் பெயர்களும் சிந்திக்கச் செய்கின்றன.

இளையாத்தங்குடிக் கோயிலின் நான்காம் பிரிவு கழனிவாசல் குடியார், வயிரவன்பட்டிக் கோயிலின் இரண்டாம் பிரிவு கழனி வாசலுடையார். வேலங்குடிக் கோயிலின் ஒரே ஒரு பிரிவு கழனி நல்லூருடையார்.

கழனிவாசல் என்னும் ஊரிலிருந்தே இம்மூன்று பிரிவினரும் வந்திருக்க வேண்டும் என்று எண்ண இடமளிக்கிறது.

இளையாத்தங்குடியின் எட்டாவது பிரிவாக இருந்து பின்னர் இரணிக் கோயிலையும் பிள்ளையார்பட்டிக் கோயிலையும் ஏற்றுக் கொண்ட திருவேட்பூருடையாரின் ஊரான திருவேட்பூர் எங் குள்ளது என்று ஆராய்ந்தபோது டாக்டர் தே. சொக்கலிங்கம்

அவர்கள் புதுக்கோட்டைக்கு அருகில் உள்ள திருவப்பூர் தான் திருவேட்பூராக மருவி வந்திருக்கக் கூடும் என்று கருத்துத் தெரிவித்தார்கள்.[34]

சூரைக்குடியின் ஒரே பிரிவான புகழ்வேண்டிய பாக்கமுடையார் என்ற பெயர் மேற்கண்ட வினாவிற்கு விடையளிக்கின்றது.

பாக்கம் என்பது கடற்கரையில் அமைந்த ஊரின் பெயராகும். செட்டி நாட்டுப் பகுதியில் கடற்கரை கிடையாது.

காவிரிப்பூம்பட்டினம் பெருநகரம், பட்டினப்பாக்கம், மருவூர்ப் பாக்கம் என்று இரு பகுதிகளாக விளங்கியது. இது போன்ற ஒரு பகுதி புகழ்வேண்டிய பாக்கம் என்று இருந்திருக்கலாம்.

நெய்தவாசல் என்ற ஊரை வரலாற்றுச் சிறப்புடையதாகக் 'காவிரிப்பூம் பட்டினம்' என்ற தமது நூலில் திரு டி. வி. சதாசிவப்பண்டாரத்தார் குறிப்பிடுகின்றார். நெய்தவாசல் என்ற ஊர்ப் பெயரும் கழனிவாசல் என்ற ஊர்ப்பெயரும் ஒப்பு நோக்கத் தக்கன.

மாற்றூர்க் கோயிலின் அரும்பாக்கூர் என்னும் பிரிவு, அரும் பாக்கம் ஊர் எனப் பிரித்துப் பொருள் கொள்ள இடம் தருகிறது. அதனுடன் அரும்பாற் கிளையாரான பட்டணசாமியார் என்னும் இளையாத்தங்குடிப் பிரிவும் ஒப்பு நோக்கத்தக்கது.

அரும்பாக்கத்துக் கிளையார் என்னும் (காவிரிப்பூம்) பட்டின சாமியார் என்றும் பொருள் கொள்ள இப்பெயர்கள் வாய்ப்பளிக்கின்றன. பட்டணசாமி என்பதைப் பட்டினத்தார் எனப் பொருள் கொண்டு வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியாரும் அறிஞர் சோமலெயும் எழுதியுள்ளனர்.

"பொருட்செல்வத்தையெல்லாம் துறந்து துறவறச்செல்வராக விளங்கிய பட்டினத்தடிகள் நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்தவரே. நகரக்கோயில்களுள் ஒன்றான இளையாத்தங்குடியில் 'பட்டினசாமி வகுப்பு' என்ற ஒரு பிரிவு உண்டு. இப்பிரிவினரின் குல முதல்வர், பட்டினத்தடிகளே ஆவார். பிரான்மலைக் கல்வெட்டு 422 இல் வணிகர் சேர்ந்து அறம் செய்யக் கையெழுத்திட்டதைத்தெரிக்கும் இக்கல்வெட்டில் பட்டினத்தடிகள் பெயரும் குறிப்பிடப் பெற்றிருக்கிறது" என்று எழுதியுள்ளார். திரு. சோம. லெ.[35]

பட்டினசாமி ஊரணியைப் பற்றிய குறிப்பு மட்டுமே மூன்று கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ளன.[36] பட்டினசாமியின் வரலாறு இக்கல்வெட்டுகளில் குறிப்பிடப் பெறவில்லை.

நகரத்தார் மரபு பழமையைப் பேணுவது. எங்கிருந்து வந்தவர்கள் என்ற வரலாற்றைச் சொல்லும் வண்ணம், தாங்கள் முன்பிருந்த ஊர்ப்பெயர்களை மட்டுமே தமது குழுவிற்கு அடையாளப் பெயராக அமைத்துக் கொள்ளும் வழக்கம் உடையவர்கள். அதனாலேயே பிள்ளையார் பட்டிக்கும் இரணியூருக்கும் இளையாத்தங்குடியிலிருந்து வந்தவர்கள், அங்கு, தாங்கள் இருந்த அரைச நாராயணப் பெருந்தெரு என்ற பெயரைப் புதிய நகர்களுக்குச் சூட்டினர். இம்மரபினை அடியொற்றிப் பார்க்கும்போது ஒவ்வொரு கோயில் உட்பிரிவும் அவர்கள் முன்பு காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்த ஊராகவே இருக்க வேண்டும் என்பது பெறப்படுகிறது. மண்ணூர், மணலூர், சிறுசேத்தூர், பெரும்மருதம் ஊர், கழனிவாசல், ஆகியன கடற்கரையையும் சோழநாட்டையும் குறிப்பனவாக அமைந்திருப்பது மேற்கண்ட கருத்துக்கு அரண் சேர்க்கிறது.

இலக்கியத்தில் பட்டினத்தார் என்ற பெயரில் பலர் இருந்ததாகக் காணப்படுகிறது. பட்டினத்தார் நகரத்தார் மரபினர் என்பது பல அறிஞர்களும் ஒப்புக்கொண்ட உண்மை எனினும் அவருடைய இயற்பெயர், அவர்தம் கோயில், பிரிவு ஆகியன பற்றிப் போதிய சான்றுகள் கிடைக்கவில்லை. எனவே பட்டின-சாமிக்கும் பட்டினத்தார் என்ற பிரிவுக்கும் எட்டுனையும் உறவில்லை என்பார் டாக்டர் தே. சொக்கலிங்கம் அவர்கள்.[37]

வேறு எப்பிரிவுக்கும் இல்லாத ஒரு சிறப்பாக அரும்பாற்கிளையாருக்கு மட்டும் கூடுதலாகப் பட்டண சாமியார் என்ற பெயர் வரக் காரணம் என்ன என்பது ஆய்விற்குரியது.

வணிகக் குழுக்களின் தலைவர்கள் பட்டினசாமி, நானாதேசி, பட்டினக்கிழார் போன்ற பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டனர். எனவே 'பட்டினசாமி' என்பார் இளையாத்தங்குடியை ஒட்டிய பிரிவிற்குத் தலைவர் என்பதனால் தான் தலைமைச் சிறப்புக் கருதி, 'பட்டினசாமி' என்ற பெயரும் கூடுதலாகச் சேர்க்கப் பட்டுள்ளது.

அதனாலேயே வணிகர்கள் சேர்ந்து அறம் செய்யக் கையெழுத்திடும்பொழுது கல்வெட்டில் முதலில் பட்டினசாமிகளும் பிறகு

வணிகர்களும் அதன் பிறகு மாதர்களும் கையெழுத்திட்டுள்ளதைக் காணமுடிகின்றது.

..... முடையார் உடைய பிள்ளை பெராம்பூருடையார்
தாதர் காளையார் காவுப் பெருந்தெரு
பட்டின சுவாமிகள் வணிகர் மாதர்கள்
சொக்க ஞானசம்பந்தர் எறிபடை நல்லூர்''[38]

என்ற கல்வெட்டு வரிகள் மேற்கண்ட கூற்றுக்குச் சான்றாக அமையும்.

காவிரிப்பூம் பட்டினத்தில் இவர்கள் வாழ்ந்த காலத்தில் தாம் வாழ்ந்த ஊர்ப் பெயர்களால் அரும்பூர் கிழார், பெருமருதூருடையார், சிறுகுளத்தூருடையார், கழனிநெல்லுடையார் என்றாற்போல அழைக்கப்பட்டனர் எனத் தெரிகிறது என்பார் டாக்டர் தமிழண்ணல் அவர்கள்.[39] அக்கூற்று மிகச்சரியானதே என்பதற்கு மேற்கண்ட சான்றுகள் துணைபுரிகின்றன.

''நானாதேசிய எடுத்தபாத மூத்த செட்டி'' எனவரும் கல்வெட்டு ஒன்றினால் நானாதேசிகள் குழுவில் செட்டியார்கள் இருந்தனர் என்பதும், மூத்த தலைமைத் தரத்தினில் விளங்கினர் என்பதும் தெரியவருகிறது.

நானாதேசிகள் குழுவின் உறுப்பினர்கள் கவரை, காத்திரிகை, செட்டி, செட்டியுத்திரர், அங்காரகர், வசர், வீரவணிகர் கண்டிகர், கவுண்டர், கவுண்டசாமி என்ற பட்டப் பெயர் உடையார் என்று மைசூர்க் கல்வெட்டு ஒன்று குறிக்கின்றது.[40]

இதிலிருந்து நானாதேசிகள் குழுவில் செட்டியார்கள் இருந்தனர் என்பது உறுதிப்படுகிறது. திசையாயிரத்து ஐஞ்நூற்றுவர் அறம் செய்த கல்வெட்டுகள் பல அயல் நாடுகளிலும் கிட்டியுள்ளன என்பார் டாக்டர் தே. சொக்கலிங்கம் அவர்கள்.[41] சுமத்திராவில் லோபுதுவா (Lobol Tolwa) என்னும் இடத்தில் கி. பி. 1088 ஐச் சார்ந்த கல்வெட்டும், பர்மாவில் பாகாங்கு என்னும் இடத்தில் கி. பி. 1800 ஐ ஒட்டிய கல் வெட்டும் கிடைத்துள்ளன. இலங்கை -யிலும் பல கல்வெட்டுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

சூரைக்குடிப் பிரிவில் தேசிக நாராயணபுரம் என்று வருவதும், இறைவனின் பெயர் தேசிக நாதர் என்று இருப்பதும்,

பிள்ளையார்பட்டிப் பெருமானின் பெயர் தேசி விநாயகப் பிள்ளை யார் என்று இருப்பதும், மாற்றூர் இறைவன்பெயர் ஐஞ்னூற்றுவர் என்று இருப்பதும், 'நானா தேசிகள் ஐஞ்னூற்றுவர் குழுவில்' நகரத்தார்கள் வகித்த பெரும்பங்கினைக் காட்டுகிறது,

இப்பழஞ் சிறப்புகளையெல்லாம் ஐஞ்னூற்றுவப் பெருந்தெரு, தேசிகநாராயணபுரம் முதலிய ஊர்ப்பெயரும், ஐஞ்னூற்றீசர், தேசிக நாதர், தேசி விநாயகப் பெருமான் என்ற இறைவன் பெயர் களும் உணர்த்துகின்றன

## 6 2.3.4. செயங்கொண்ட சோழப் பெருந்தெரு :-

செயங்கொண்ட சோழப் பெருந்தெரு என்ற குறிப்பு1936 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண். 155இல் இடம் பெற்றுள்ளது. செயங்கொண்ட சோழப் பெருந்தெரு என்பது நேமத்தைக் குறிக் கிறது. அவ்வூர் வியாபாரி நாணரி உய்யவந்தான் என்பவன் எழுந் தருளச் செய்த நாச்சியாருக்குத் திருவமுது படிக்கு நிலத்தைத் தானம் செய்தது பற்றி இக்கல்வெட்டு கூறுகின்றது.

செயங்கொண்ட சோழன் என்பது இராசராச சோழனின் பட்டப் பெயர்களுள் ஒன்றாகும். அவன் ஆதரவில் 10ஆம் நூற்றாண்டில் இக்கோயில் கட்டப் பெற்றிருக்கிறது என்பதற்கு இக்கோயிலில் உள்ள சந்திரசேகரர் செப்புத் திருமேனியும், தனி அம்மன் செப்புத் திருமேனியும், இலிங்கக் கற்சிற்பமும், நந்திக் கற்சிற்பமும், செயங்கொண்ட விநாயகரின் பெயரும் சான்றாக அமைந்துள்ளன. அவை பற்றி விரிவான செய்திகள் சிற்பக் கலைப் பகுதியில் கூறப்பட்டுள்ளன.

முதல் குலோத்துங்கன் கல்வெட்டு குன்றக்குடியில் உள்ளது. சோழர் ஆட்சி இப்பகுதியில் கி. பி. 10ஆம் நூற்றாண்டு முதல் கி. பி. 12ஆம் நூற்றாண்டுவரை நிலவியுள்ளது. தொண்டை நாடான செயங்கொண்ட சோழ மண்டலம் எனக் கல்வெட்டு உள்ளது.

இராசராசன் ஆட்சி பாண்டிய நாட்டில் திருக்கோட்டியூர் வரை பரவியிருந்ததற்குக் கல்வெட்டுச் சான்று உள்ளது. 'இராச ராசன் பாண்டிய நாடு' எனப் பாண்டிய நாட்டிற்கு அவன் பெயர் வைத்திருந்தான் என்பதையும் கல்வெட்டின் மூலமாக அறி- கிறோம் அவன் பெயரினால் இக்கோயில் தோற்றம் பெற்றுச்

சிறப்புடன் இக்கோயில் விளங்கியிருக்கிறது என்பதைச் செயங் கொண்ட சோழீசுவரர் என்ற இறைவன் திருப்பெயரும் செயங் கொண்ட சோழப் பெருந்தெரு என்ற ஊர்ப்பெயரும் சிறப்பாக உணர்த்துகின்றன.

## 6.2.3.5. ஏழகப் பெருந்தெரு :-

வயிரவன்பட்டிக் கோயிலைச் சார்ந்தவர்கள் திருமண நாளின் போது எழுதும் இசைவுப் பிடிமானத்தில் "கேரளசிங்க வளநாடா கிய ஏழகப் பெருந் திருவான வீரபாண்டியபுரத்தில்..." என எழுது கின்றனர். இதில் இடம் பெற்றுள்ள சொல் ஏழகப் பெருந்திரு. இது ஏழகப் பெருந்தெருஎன்பதன் (திரிந்த வடிவமாகும்) மருஉரு வாகும். வயிரவன்பட்டி என்னும் பெயர் பிற்கால வழக்கு என்ப தாலேயே இசைவுப் பிடிமானத்தில் அப்பெயர் இடம் பெறவில்லை. வயிரவன்பட்டியின் பழம்பெயர் ஏழகப் பெருந்தெருவே என்பது இதன் மூலம் தெரியவருகின்றது.

ஏழகம் என்பது ஏழகப் படை என்னும் பேர்படையாகும். இப் படை அக்கால முறைப்படி வணிகர்களைச் சார்ந்தது. அவர்களால் பேணிப் பாதுகாக்கப் பெற்றது.

இடைஇரு வகையோர் அல்லது நாடிற்
படைவகை பெறாஅர் என்மானார் புலவர்[41]அ

"இடை இருவகையோர்" என்போர், அந்தணர், அரசர்' வணிகர்,வேளார் என்ற நால்வகையுள், இடைப்பட்ட அரசரும். வணிகரும் ஆவர் என்றுதொல்காப்பியத்தில் கூறப்பட்டிருப்பதற்கு ஏற்ப அரசர்கள் நாட்டைக் காப்பதற்காகப் படை வைத்துக்கொள் வர். வைசியர் தங்களுடைய வணிகத்தைக் காக்கப்படை வைத்துக் கொள்வர். அப்படைக்கே ஏழகப் படை எனப் பெயர். நாட்டுக்குத் தீங்கு நேரிட்டால், அப்போது இரு படைகளும் நாட்டைக் காக்க ஒன்றுபட்டுப் போரிட வேண்டும்.

கி.பி. 1180இல் குலோத்துங்கச் சோழனுக்கும் வீரபாண்டிய னுக்கும் நடைபெற்ற போரில் ஏழகப்படை பாண்டியனுக்கு உதவி யாகச் சென்றது. கி.பி. 1202இல் குலசேகர பாண்டியன், மூன்றாம் குலோத்துங்கனுடன் திருப்புத்தூருக்கு அருகில் உள்ள சதுர்வேத மங்கலம் என்று இன்று வழங்கும்மட்டியூரில் சண்டையிட்டபோது ஏழகப் படை பாண்டியனுக்கு உதவியாகச் சென்றது. இதனால்

பாண்டியர்களுக்கும் ஏழகப் பெருந்தெருவிற்கும் இருந்த நெருக்கமான தொடர்பு தெரிய வருகின்றது.

நானாதேசி திசையாயிரத்து ஐஞ்ஞூற்றுவர் ஏழகப் படையைத் தங்கள் காவலுக்கு வைத்திருந்தனர். அடிப்படை ஏழகத்தில் தங்கியிருந்தது. ஏழகம் என்பது கழனிவாசல் என்று கம்பன் அடிப்பொடி கூறுவார். இவ்வூர் காரைக்குடிக்கு அருகே இருக்கிறது. கழனிவாசல்குடியார் என்ற பிரிவும் இளையாத்தங்குடிக் கோயிலில் ஒரு பிரிவின் பெயராக உள்ளது, கழனிவாசல்குடியார் அமைத்துள்ள பெருமாள் கோயிலுக்கு 'ஏழகப் பெருமாள் விண்ணகரம்' என்று பெயர் வழங்குகிறது. காக்கும் கடவுளான திருமால் ஏழகப் படையினைக் காக்க வேண்டும் என்பதற்காக அந்நாளில் இக்கோயிலைத் தோற்றுவித்திருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது.

## 6. 3. கல்வெட்டுகளால் அறியப்படும் அரசர்கள்:-

ஒன்பது நகரக் கோயில்களைச் சார்ந்த கல்வெட்டுகளில் பத்து அரசர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

நகரத்தார் வரலாற்றோடு தொடர்புடைய பூவந்திச் சோழன், ராச பூசணச்சோழன் என்ற பெயர்கள் வரலாற்றில் காணப்படவில்லை. இவற்றுக்கு ஒப்பான பெயர்களும் இல்லை. இவை இன்னும் ஆராய்வதற்கு உரியன.

ஒரு குறிப்பிட்ட அரசனின் எத்தனையாவது ஆண்டு ஆட்சிக் காலத்தில் கல்வெட்டு வெட்டப்பட்டது என்பதை மட்டுமே இக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இதனால் இப்பகுதியில் குறிப்பிட்ட அக்கால கட்டத்தில் ஆட்சியிலிருந்த மன்னன்யார் என்று மட்டும்தான் தெரிந்து கொள்ள முடியும்.

அரச குடும்பத்தினர்தானம் கொடுத்ததாக ஒரு கல்வெட்டு மட்டும் உள்ளது. நியமத்து அரசனான ஆளவந்தானான நாரா தொங்கராயன் (மாறகொங்கராயன்) மனைவி உய்யவந்தாள் ஆண்டாள் திருவீங்கைக்குடி நாயனாருக்கும் சிவராத்திரிப்பூசை செய்வதற்காகத் தனது புழைக்குடி வயலைத் தானமாகக்கொடுத்துள்ளதை இக்கல்வெட்டு கூறுகிறது.[42]

இக்கல்வெட்டில் குறிப்பிடப் பெறும் நியமத்து அரசன் சிற்றரசனாக இருக்க வேண்டும். ஏனெனில் இக்கல்வெட்டின் காலத்தை

குறிப்பிடச் சுந்தர பாண்டியனின் ஒன்பதாவது ஆண்டு ஆட்சிக் காலத்தில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளதாகக் குறிப்பு காணப்படுகிறது

கோமாரபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோழநாடு வழங்கி யருளிய சிறீ சுந்தர பாண்டியனின் ஆட்சிக் காலத்தில் 19 கல்வெட்டுகள் காணப் படுகின்றன.[43]

இவன் கி.பி. 1216 முதல் கி பி. 1238 முடிய மதுரை மா நகரில் முடிமன்னனாக வீற்றிருந்து பாண்டி நாட்டை ஆட்சி புரிந்தவன் என்பார் சதாசிவப் பண்டாரத்தர்.[44]

இவ்வரசன் ஆட்சிக்காலத்தில் சோழ நாட்டை அரசாட்சி செய்துவந்த மூன்றாம் குலோத்துங்க சோழன் மகன் மூன்றாம் இராசராசன் சோழனைச் சுந்தர பாண்டியன் வெற்றி கொண்டான் பழையாறைச் சோழரது முடிசூட்டுவிழா மண்டபத்தில் வீராபிடேக மும் விசயாபிடேகமும் செய்து கொண்டான். பின்னர் இப் பாண்டிய மன்னன் தன் நாட்டிற்குத் திரும்பிச் செல்லும் போது பொன்னமராவதியிலிருந்து தன்னுடைய அரன் மனையில் தங்கியி ருந்த போது நாட்டை இழந்த மூன்றாம் இராசராச சோழனை அழைப்பித்துத் தனக்கு ஆண்டுதோறும் கப்பம்செலுத்திகொண்டு சோழநாட்டை ஆட்சிபுரிந்து வருமாறு ஆணையிட்டு அந்நாட்டை வழங்கினான். அதனாலேயே சோனாடு வழங்கிய ஸ்ரீ சுந்தர பாண்டியன் எனப் புகழப்படுகின்றான். இவ்வரலாற்றுக்குறிப்புகள் 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண்கள்9, 26 ஆகியன வற்றில் குறிப்பிடப்பட்டுள்ளன.

சூரைக்குடி அரசு பள்ளிகொண்ட பெருமாள் விசையாலயத் தேவன் மகன் வயிரவ நயினார் விசையாலயத் தேவர் பற்றிய வர லாற்றுக் குறிப்பு 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண்கள் 14 30 ஆகியவற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.

''இவன், இராகுத்தமிண்டன், அய்யனையும், அரசனையும், ஒருவனையும் ஒழிய சொரிவன்னிய சூரியன் பதினெட்டு வன்னி-யரைப் புறமுதுகு கண்டவன் பாண்டியன் படி அழிக்கப் பரியேறும் மானதன், கொன்ற வீரன்'' என்றும் குறிப்பிடப்படுகிறான். பகைவனான இராகுத்தமிண்டனைக் குறிப்பிடும்போது பகைவன் என்பதற்காக அவன் வீரத்தைக் குறைத்து மதிப்பிடாமல், அவனது சிறந்த வீரத்தைத் தற்காற்குத்தக்கான் இராகுத்த-

மிண்டன் என்று குறிப்பிடப்பட்டுள்ளது போற்றும் வண்ணம் அமைந்துள்ளது.

மேற்கண்ட இரண்டு அரசர்களைப் பற்றிய வரலாற்றுச் செய்திகள் மட்டுமே பிரிவாக அமைந்துள்ளன. பிற கல்வெட்டுக்களில் அரசர்கள் பெயர் மட்டுமே இடம் பெற்றுள்ளன. அவ்வாறு இடம் பெற்ற அரசர்களின் பெயர்கள் பின்வருமாறு:-

1. எம்மண்டலமும் கொண்டருளிய குலசேகரத் தேவர்.[45]
2. கோமார பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ வீர பாண்டிய தேவர்.[46]
3. கிருட்டிண ராயர்.[47]
4. திரிபுவனச் சக்கரவர்த்திகள் கோனேரின்மை கொண்டான்.[48]
5. திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ வல்லப தேவர்.[49]
6. திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம பாண்டிய தேவன்.[50]
7. சடையவர்மன் வீரபாண்டியன்.[51]

## 6.4. கல்வெட்டுகளால் அறியப்படும் கோயில்கள் பற்றிய செய்திகள்:-

இளையாத்தங்குடியில் உள்ள கோயில் இப்பொழுது சிறீ நித்திய கல்யாணி உடனுறையும் கைலாசநாதர் திருக்கோயில் எனப் பெயர் பெற்றுள்ளது. ஆனால் "கல்வெட்டுகளில் கல்வாயிலாண்ட நாயனார் கோயில்" என்றே குறிக்கப் பெற்றுள்ளது.[52]

அக்கோயிலில் உள்ள இறைவன் பெயர் சிறீ கயிலாசமுடைய நாயனார் என்ற குறிப்பும் காணப்படுகின்றது.[53]

இறைவியின் பெயர் நித்திய கல்யாணி என்ற குறிப்பு எக்கல்வெட்டிலும் காணப்படவில்லை. 'திருக்காமகோட்ட நாச்சியார்' என்றே இறைவியின் பெயர் குறிக்கப்பட்டுள்ளது.[54]

இளையாத்தங்குடியில் உள்ள பெருமாள் கோயில் ஆதிகேசவப்பெருமாள் கோயில் என அழைக்கப்படுகிறது. இப்பொழுது இளையாத்தங்குடியில் மேற்கில் உள்ள பழைய பெருமாள் கோயிலை அக்கிராமமக்கள் அதன் இடிபாடுகள் காரணமாக

'ஓட்டைப் பெருமாள் கோயில்', என வழங்குகின்றனர். அதன் பண்டையபெயர் 'விண்ணவர் எம்பெருமான்கோயில்', என்பதாகும் அங்கிருந்த இறைவனின் பெயர் 'நாயனார் எம்பெருமான்' எனக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன [55]

மணவாள ஆழ்வார் சிற்பம் ஒன்று அக்கோயிலில் இருந்துள்ளது. மணக்கோலத்தில் சிறீதேவிபூதேவியுடனாய பெருமாளை மணவாள ஆழ்வார் எனக் குறித்தனரோ என எண்ண வேண்டியுள்ளது. அந்த மணவாள ஆழ்வாரின் பெயரில் திருநாமத்துக் காணியாக ஊரவர் கொடுத்துள்ளனர். [56]

பெருமாள் கோயில் அந்தணர் தங்குவதற்கான வீடுகள் இளையாத்தங்குடிப் புரவில் ஆம்பனூர் என்னும் இடத்தில் வயிரவ நயினார் விசையாலயத் தேவன் அமைத்துக் கொடுத்துள்ளான். அதற்குப் பள்ளிகொண்டான் அகரம் என்று பெயர். [57]

இளையாத்தங்குடிக் கோயிலாரினுள் காணப்படும் ஏழு பிரிவுகளுள் ஒக்கூருடையார், அரும்பூர்க் கிழாரான பட்டணசாமியார் ஆகிய இரு பிரிவினைப் பற்றிய கீழ்வரும் குறிப்புகளே காணப்படுகின்றன.

> ''ஒக்கூருடையான் அமராபதி காத்தான் பொன்னன்''[58]
> ''பட்டணசுவாமிகள் ஊருணி''[59]

இளையாத்தங்குடியிலிருந்து பிரிந்து பிள்ளையார்பட்டிக்கும், இரணியூருக்கும் சென்ற திருவேட்பூருடையார்கள் பற்றியும் கல்வெட்டில் குறிப்புள்ளது. இளையாத்தங்குடியான குலசேகரபுரத்துத் திருவேட்பூருடையார் என்றும் முன்னாள் திருவேட்பூருடையார் என்றும் கல்வெட்டு வரிகள் காணப்படுகின்றன. [60]

இளையாத்தங்குடியில் உள்ள பெருமாள் கோயிலை விண்ணவர் எம்பெருமாள் கோயில் என அழைத்ததுடன் கேசவப் பெருமாள் கோயில் என்றும் குறிப்பிட்டுள்ளதற்கு ஒரு கல்வெட்டு சான்று கூறுகிறது. புன்னங்குடி வயலில் திருநாமத்துக்காணியாக இருந்த கேசவப் பெருமாள் வயக்கால் பற்றிய குறிப்பு இதற்குச் சான்றாக அமைந்துள்ளது [61]

மாற்றூர்க்-கோயில் பற்றிய குறிப்பு ஓரிடத்தில் காணப்படுகிறது. மாற்றூர் உடையான் வடகோபுரமுடையான் மணவாளப்

பெருமாள் என்பவருக்கு நிலம் விற்றுக் கொடுத்ததைப் பற்றிய கல்வெட்டுக் குறிப்பில் மாற்றூர் என்னும் ஊர்ப் பெயர் மட்டும் வருகின்றது.[62]

இரணியூர்க் கோயில் 'கல்வாயில் ஆண்ட நாயனார் கோயில் எனக் குறிப்பிடப் பெறுகிறது.[63] அங்குள்ள இறைவன் பெயர் ஆட்கொண்ட ஈசுவரமுடைய நாயனார் என்று கல்வெட்டுகள் குடுப்பிடுகின்றன[64] அவ்வூரின் வடக்கே பத்திரகாளியம்மன் கோயில் இருப்பதையும் ஒரு கல்வெட்டு சுட்டிக்காட்டுகின்றது.[65] அங்கு அற்புதக் கூத்தன் ஊருணியும், நல்ல தண்ணீர் ஊருணியும் இருந்ததை இருகல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.[66] அவ்வூர்க் கோயிலில் 'ஆண்ட பிள்ளையார்' என்னும் பெயரில் பிள்ளை யாருக்கான ஒரு சிறு கோயில் கட்டப்பெற்று நிவந்தங்கள் ஒதுக்கப்பட்டிருந்தன என்றும் அக்கல்வெட்டுகள் கூறுகின்றன.

முதலியார் மலைமாந்தேவர் என்பவரைத் தலைமையாகக் கொண்டு ஒருசைவமடம் இருந்துவந்தது. அதில் தட்சிணாமூர்த்தி சிவன் என்பவர் சிவமந்திரங்கனைப் போதிக்கும் பணியில் ஈடு பட்டிருந்ததை ஒரு கல்வெட்டு தெரிவிக்கின்றது.[67]

பிள்ளையார்பட்டியின் பழைய பெயர் திருவீங்கைக்குடி என்பதே.[68] அதன் அருகில் வயல்கள் நிறைந்த ஊர் மருதங்குடி.[69] அங்குள்ள கோயிலின் பெயர் திருவீங்கை ஈசுவர-முடைய நாயனார் கோயில் என்பதாகும்.[70] அங்கு எழுந்தருளி-யுள்ள மூலவரின் பெயர் திருவீங்கை ஈசுவரமுடைய நாயனார்.[71] இதனையே இப்பொழுது திருவீசர் எனச் சுருக்கமாக வழங்கு-கின்றனர். மருதங்குடிக்கான இலிங்கம் திருமருதங்குடி நாயனார் எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது.[72] இருவருக்குமா... சிவராத்திரிப் பூசைக்கு நியமித்து அரசன் ஆளவந்தானான நாரதொங்கராயன் பெண்டுகளில் உய்ய வந்தாள் ஆண்டாள் தேவதானம் செய்துள்ளாள்.[73]

இறைவன் பெயரில் காணிக்கை கொடுப்பது "திருநாமத்துக் காணி" என்றும் வழிபடுவோர் தம் பெயரில் காணிக்கை கொடுப்பது "அந்நிய நாமத்தைக் காணி" என்றும் பெயர் பெறும். இக்கல்வெட்டுகளுள் திருநாமத்துக் காணி பற்றிய குறிப்புகள் மட்டுமே காணப்படுகின்றன.[74]

"கோயில் தானம்" என்ற தலைப்பிலும் கோயிலுக்குத் தானங்கள் வழங்கப் பெற்றுள்ளன [75]

## 6. 5. கல்வெட்டுகளால் அறியப்படும் கொடை பற்றிய செய்திகள்:

கோயில்களில் நடைபெற்ற வழிபாட்டு முறை, வேண்டுதல்கள் அக்கோயிலுக்கு வழங்கப்பட்ட கொடைகள் மூலமாகவே தெரியவருகின்றன.

பெருமாள் கோயிலுக்குச் செய்யும் தானம் "திருவிடையாட்டம்"[76] என்றும், சிவன் கோயிலுக்குச் செய்யும் தானம் 'தேவதானம்' [77] என்றும் இரண்டு வகையாகக் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளன திருவிடையாட்டமாகக் கொடுத்த நிலத்தைச் சுற்றிச் சக்கர உருவம் பொறித்த திருவாழிக்கல் நடப்பெறும்.[78] தேவதானமாகக் கொடுத்த நிலத்தைச் சுற்றி சூல உருவம் பொறித்த சூலக்கல் நடப்பெறும்.[79]

திருக்காமகோட்ட நாச்சியாருக்குச் செய்யும் தானம் 'தேனி தானம்' என்று பெயர் பெற்றுள்ளது. அதற்கான இரு கல்வெட்டுகள் காட்டுகின்றன.[80]

இவ்வாறு தானம் பெற்ற நிலத்தை உழுது பயிர் செய்து கோயிலுக்கு உரிய பங்கு நெல் முதலியவற்றைக் கொடுப்பதற்கு உறுதி கூறும் விவசாயிகளிடம் பதிவு செய்து கொண்டு நிலத்தைக் கொடுப்பது அக்கால வழக்கம். நிலத்திற்கு உரிய விலையைக் காட்டிலும் மிகக் குறைந்த விலைக்கு அதனை விவசாயியிடம் கொடுப்பர். அக்குறைந்த விலைக்குக் 'கற்பூர விலை' என்று பெயர். இவ்வாறு கற்பூர விலைக்கு நிலத்தைக்கொடுப்பதற்குக் "காணிகொடுப்பது" என்று பெயர். [81] காணிகொடுக்கப்பட்ட நிலம் அவ்விவசாயியின் பரம்பரைக்கு உரியதாகும். பல தலைமுறைகளாகத் தொடர்ந்து கோயிலுக்கு இக்கடமையைச் செய்வதற்காக இவ்வேற்பாட்டினைச் செய்தனர் போலும். இவ்வாறு தொடர்ந்து கடமை ஆற்றுவதை "வாடாக் கடமை" என்று குறிப்பிட்டுள்ளனர். [82]

கோயிலுக்குத் திரு நந்தா விளக்குக் கொடுப்பதும் [83] திருவிளக்குக் காணிக்கை கொடுப்பதும்[84] அக்கால வழக்கமாகக் காணப்படுகிறது. திருவிளக்கு ஏற்றுவதற்காக ஓராண்டுக்கு அரைக்காற் பழங்காசு செலவிட்டுள்ளனர். பழங்காசு

என்பது பொற்காசு. இதனால் புதுக்காசு, செப்பு முதலிய உலோகங்களில் அன்றே வெளிவந்துள்ளன என்று தெரிகின்றது.

அரைக்காற் பழங்காசில் ஓராண்டு முழுமைக்கும் திருவிளக்கினை ஒளிரச் செய்ய முடியுமா என்ற ஐயம் ஏற்படலாம். தஞ்சாவூர் பிரகதீசுவரர் கோயிலில் உள்ள கல்வெட்டு, ஒரு காசுக்கு 1776 வாழைப்பழங்கள் வாங்கிப் பூசை செய்யலாம் என்றும் ஐந்து காசுக்கு ஒரு நவரத்தின மோதிரம் வாங்கலாம் என்றும் கூறுவதை நோக்கினால் அக்கால விலை மதிப்பும் தெரிகிறது; ஐயப்பாடும் நீங்குகிறது.

திருவிளக்குக் காணிக்கையாக முதலில் பொன்னைக் கொடுத்தார்கள். பிறகு ஆடுகளைக் கொடுத்தார்கள். அதற்கு 'விளக்காடு'[85] என்று பெயர். அதன் பின்னரே நிலங்களைத் தானமாக அளிக்கும் வழக்கம் ஏற்பட்டது.

## 6. 6. வழிபாடு:

வழிபாட்டினைப் பற்றிய அதிகமான குறிப்புக்கள் இக் கல்வெட்டுகளில் காணப் பெறவில்லை. எனினும் காலைவழிபாடு (கால சந்தி)[86], இரவு வழிபாடு (அர்த்த சாமம்), பள்ளி அறைப் பூசை[87] ஆகிய இரு வேளை வழிபாடு செய்வதற்கு நிலங்களைத் தானமாக அளித்துள்ளனர். இதனால் குறைந்த அளவு, காலை வழிபாடு, நண்பகல் வழிபாடு (உச்சிகாலம்) மாலை வழிபாடு (சாயரட்சை) இரவு வழிபாடு ஆகிய நான்கு வேளைகளாவது அபிடேக ஆராதனைகள் நடைபெற்றிருக்கலாம் என எண்ண இடமுள்ளது.

ஒவ்வொரு வேளைப் பூசையின் போதும் அமுதுபடி, சாத்துபடி வியஞ்சனம் ஆகியன படைக்கப்பட்டுள்ளன.[88] அமுதுபடி என்பது இறைவனுக்குப் படைக்கப்படும் உணவு வகைகளாகும். சாத்துப் படி என்பது (பரிவட்ட) ஆடை, பூ, மாலை, எண்ணெய், சந்தணம், புனுகு முதலியவற்றைக் குறிக்கும். வியஞ்சனம் என்பது உணவின் துணைப் பொருளான காய்கறிகளைக் குறிக்கும்.

தினமும் இவ்வாறு வழிபாடு நிகழ வேண்டும் என்பதில் மிக உறுதியாக இருந்தனர் என்பதற்கும் கல்வெட்டுச் சான்று உள்ளது அவ்வாறு இவ்வழிபாட்டில் உறுதியாக இருப்பவர்கள் தானம் கொடுக்கும்போது "நித்தல் நிமித்தமாக"[89] கல்வெட்டிக் கொடுத்துள்ளனர்.

பிறந்த நாளுக்காகச் சிறப்பு வழிபாடு செய்யும் பழக்கம் அக்காலத்தில் இருந்திருக்கிறது. பள்ளி கொண்ட பெருமாள் விசையாலய தேவர் குமாரவயிரவ நயினார், தான் பிறந்த நாளான உத்திர நட்சத்திரத்தன்று எம்பெருமான் பெரிய நாட்டு விண்ணகலம் பெருமானுக்குக் காலை வேளையில் பூசை செய்வதற்குத்திருநாமத்துக் காணியாக நிலம் கொடுத்துள்ளான்[90]

வாரத்தில் ஒரு குறிப்பிட்ட நாளன்து சிறப்பு வழிபாடுசெய்யும் பழக்கம் இருந்ததைப் பிள்ளையார்பட்டிக் கல்வெட்டு கூறுகிறது. ஞாயிற்றுக்கிழமை தோறும் திருப்பண்ணி காரமும், பிட்டமுதும் செய்விக்க 16 படி அரிசி, கருப்பட்டி. தேங்காய் உள்ளிட்ட வியஞ்சனமும் கொடுத்துவர ஒரு வயலைத் தானமாகக் கொடுத்துள்ளார்கள்.[91]

திருவிழாக்கள் பற்றிய குறிப்புகளும் இக்கல் வெட்டுகளில் அதிகமாகக் காணப்படவில்லை. சிவராத்திரி விழா கொண்டாடுவதற்காக நியமத்து அரசன் ஆளவந்தானாக நார கொங்கராயக் பெண்டுகளில் உய்யவந்தாள் ஆண்டாள் பூழைக்குடி வயலைத் தானமாக அறிவித்துள்ளாள். திருவீசருக்கும், மருதீசருக்கும் சிறப்புவழிபாடு செய்து அச் சிவராத்திரி விழா கொண்டாடப்பட்டுள்ளது.[92]

வழிபாட்டிற்குரிய சிற்பங்களாக இரணியூரில் பிடாரியார் சிற்பமும் அத்திர தேவர் சிற்பமும் அமைந்திருந்ததை ஒரு கல்வெட்டு குறிப்பிடுகின்றது.[93] இளையாத்தங்குடியில் மணவாளப் பெருமாள், பிராட்டியார் சிற்பத்தை அளகாபுரியான செம்பிய நாராயணபுரத்து வியாபாரி நெடுவாலுடையான் திருத்தளிப் பெரியான் எழுந்தருளச்செய்ததாக ஒரு கல்வெட்டு கூறுகின்றது.[94]

## 6. 7. கோயில் நிருவாகம்:-

கோயில் வழிபாடு நித்தமும் முறையாக நடைபெறுவதைக் கண்காணிக்கவும், கோயிலுக்குக் காணிக்கை கொடுக்கும் நிலங்களுக்கு வரி இல்லாமல் செய்துதரவும், கோயில் நிலங்களிலிருந்து ஒழுங்காக வருவாய் வருவதைக் கண்காணிக்கவும் கோயில் நிருவாகிகள் செம்மையாகச் செயல்பட்டதைக் கல்வெட்டுகள் கூறுகின்றன.

பிள்ளையார் பட்டியில் உள்ள ஒரு கல்வெட்டு[95] கோயில் நிருவாகிகளைப் பட்டியலிட்டுக் காட்டுகிறது அதில் குறிப்பிடப்

பெற்றுள்ள பெயர்களையும் அவர்கள் பணிகளையும் கீழே தொகுத்துக் காணலாம்:

| | | | |
|---|---|---|---|
| 1. | தேவ கன்மிகள் | - | கோயிற் பூசகர்கள் |
| 2. | சீகாரியஞ் செய்வார்கள் | - | நிருவாக அதிகாரிகள் |
| 3. | ஸ்ரீமஹேச்வரங் கண்காணி | - | கோயில் தருமகருத்தாக்கள் |
| 4 | வயிராவி | - | தன் உயிரைக் கொடுத்தும் கோயிலுக்கு உரியவற்றைக் காப்பவன் |
| 5. | பண்டாரம் | - | பணப் பொறுப்பாளி (பொக்கிஷம், களஞ்சியம்) |
| 6. | குடிநீங்காக் காராண்மை | - | தொடர்ந்து பல தலைமுறை யாக வாரத்திற்கு உழுது பயிர் செய்யும் உரிமை பெற்றவர் |
| 7. | பிரமாதிராயன் | - | இக்காலக் கோயில் மணியம் (மேலாளர்) போன்றவர். |

இவர்களைத் தவிர வேறு சில நிருவாகிகளையும் கல்வெட்டு கள் தெரிவிக்கின்றன அவர்களைக் கீழே காண்போம்

| | | | |
|---|---|---|---|
| 1 | கோபுரக் கணக்கு[96] | - | கோயில் திருப்பணிக் கணக்கு எழுதுபவர். |
| 2. | நியாய பரிபாலர்[97] | - | வழக்கிற்குத் தீர்வு சொல்லும் நடுவர். |
| 3. | வழுதரையர் | - | படை வீரர் |
| 4. | அமைய பரிபாலர் | - | கோயில் திருக்கூட்டத்தின் அமைப்பாளர் |
| 5. | சமைய பரிபாலர் | – | சமயக் கருத்தறிஞர் |
| 6. | விசைய ராயர் | – | சிற்றரசன் |
| 7. | கனகபரிபாலர் | - | பொற்றொழில் வல்லவர் |

அக்கால கோயில் நிருவாகம் சிறப்பாக இருந்தமைக்குச் சில அடிப்படைக் காரணங்களைக் கூறலாம். அவையாவன :

1. நிருவாகிகளை ஒற்றைப்படையில் அமைத்தல்.
2. உரியவர்களின் கையொப்பத்தைக் கல்வெட்டிலும் பொறித்து வைத்தல்.
3 கோயிலுக்கு நிலமளிப்போருக்குப் பல வரிச்சலுகைகள் கிடைக்க ஏற்பாடு செய்தல்.
4. கோயில் பணியாளர்களுக்குக் கோயிலின் அருகிலேயே தங்க இடவசதி செய்து கொடுத்தல்.
5. தொடர்ந்து வழிபாடு நடைபெற உரிய ஏற்பாடுகளைச் செய்தல்.
6. சமயப்பணி, சமுதாயப்பணி மூலம் இறை நம்பிக்கையை வளர்த்தல்.
7. முட்டுப்பாடு ஏற்படின் உடனே மாற்று ஏற்பாடு செய்தல்.

## 6.7.1 ஒற்றைப்படை எண்ணிக்கையில் நிர்வாகிகள்:

நிருவாகிகளை அமைக்கும்போது 3, 5, 7, என ஒற்றைப் படை எண்ணிக்கையிலேயே அமைப்பது சிறந்த நிருவாகத்திற்கு அறிகுறி. ஏதேனும் கருத்துவேற்றுமை ஏற்படும்போது வாக்கெடுப்பு நடத்தவேண்டிவரும். இரட்டைப்படை எண்ணிக்கையிலிருந்தால் கருத்து வேறுபாட்டின்போது முடிவு எடுக்கமுடியாமல் குழப்பம் ஏற்படும் அதைத் தவிர்க்க ஒற்றைப்படை எண்ணிக்கையிலேயே நிருவாகிகளை அமைத்துள்ளனர். ஏதேனும் ஒரு பத்திரத்தைப் பதிவதற்குக்கூட அவர்கள் இந்த ஒற்றைப்படை எண்ணிக்கை முறையைக் கையாண்டுள்ளனர்.

பிள்ளையார் பட்டிக் கல்வெட்டு ஒன்று இதற்குச் சான்றாக அமைகின்றது. மருதங்குடி வயலை நகரத்தார்க்குப் 'பிடிபாடு' பண்ணிக் கொடுக்கும் போது அதில் மூன்று நாட்டவர்கள் கையெழுத்திட்டுச் சாட்சியளிக்குமாறு ஏற்பாடு செய்துள்ளனர் அதனை யூர் நாட்டினர், கல்வாயில் நாட்டவர், கிழ்க்குண்டாற்று நாட்டவர் ஆகிய மூன்று நாட்டவரும் சேர்ந்து நகரத்தார்க்குப் பிடி பாடு செய்து கொடுத்துள்ளனர்.

## 6.7.2. உரியவர்கள் கையொப்பம் பெறுதல் :-

தொழில் தெரிந்தாரை மன்றில இடம் பெறச் செய்வது, உரிய வர்களின் கையொப்பத்தையும் கல்வெட்டில்இடம்பெறச்செய்வது, நிருவாகத்தின் இரண்டாவது சிறப்பாகும் திருவிளக்குக் காணிக்

கையாக ஆடுகளைக் கோயிலுக்குத் தானமாகக் கொடுத்தது பற்றிய கல்வெட்டில், அந்த ஆடுகளைப் பெற்றுக் கொண்ட இடையன் அவனி சுந்தரன் கையெழுத்திட்டுள்ளான்.

## 6. 7. 3. வரிச் சலுகைகள் அளித்தல்:-

கோயிலில் தினசரி வழிபாடு நடை பெறப் போதிய பொருள் வளம் தேவை. அப்பொருள்களைத் தினசரி வசூலிப்பது என்பது கடினமான செயலாகும். எனவே தொடர்ந்து பொருள் வசதி கிடைக்க நிலத்தைக் கோயிலுக்குக் காணிக்கையாக வழங்குவது அக்கால மரபு. அந்த மரபு தொடர்வதற்காக அவ்வாறு வழங்கும் நிலங்களுக்கு அதிகமான வரிச் சலுகைகள் கிடைக்க வழி செய்துள்ளனர்.

இக்காலத்தில்தேசிய சேமிப்புப்பத்திரம் வாங்கினாலும்,பெரிய கோயில்களில் திருக்குட நீராட்டு விழாவிற்கு நன்கொடை அளித்தாலும் அத் தொகையை வருமான வரியிலிருந்து கழித்துக் கொள்வது போல அக்காலத்தில் இச்சலுகையினை அறிவித்துள்ளனர். கோயிலுக்கு நிலங்களை நன்கொடை கொடுக்கத் தூண்டுவதற்கு இது ஒரு வழியாக அமைந்துள்ளது.

கோயிலுக்குநிலமளிப்போர்பலவகையான வரிச்சலுகைகளைப் பெற்றுள்ளனர். அதை அறிவதன் மூலம் அக்காலத்தில் எத்தனை வகையான வரிகள் வசூலிக்கப்பட்டன என்ற செய்திகளையும் அறிய முடிகிறது. இதில் பல இக்கால மக்களுக்குப் புதுமையான செய்திகளாக அமைந்துள்ளன. முதலில் நிலத்திற்கு வசூலிக்கப்பட்ட அக்கால வரிகளைப் பட்டியலிட்டுக் காண்போம்.[98]

(1) அச்சுவரி (2) பொன்வரி (3) கடமை (4) அந்தராயம் (5) விநியோகம் (6) உகவை (7) சில், (8) பெருவரி (9) வாசற்கலம் (10) பிள்ளை வரி (11) மாதக் காசு (12) ஈவின் வரி (13) விளியாட்டம் (14) படையாள் (15) எச்சோறு (16) கூற்றரிசி (17) வெட்டி (18) முட்டாவாள் (19) இறைகுடிமை வரி.

அச்சுவரி என்பது செப்புக் காசாகச் செலுத்தும் வரியாகும். பொன்வரி என்பது பொற்காசாகச் செலுத்தும் வரியாகும். கடமை என்பது நாட்டுத் தலைமை வரி வசூலகரிடம் நெல்லாகவோ, தினையாகவோ, உணவுப்பொருளாக விளைந்ததில் நாளில் ஒரு பகுதியோ ஆறில் ஒரு பகுதியோ செலுத்துவது. ஒரேவழி வறுமை,

வெள்ளம், வறட்சி வரும் காலங்களில் இந்த உணவுப்பொருட்கள் உதவும். இவ்வாறு நாட்டுக்காகச் சேமிப்பது மக்கள் கடமை என்பதால், இவ்வரிக்குக் கடமை என்று பெயர்.

அந்தராயம் என்பது உள்ளூர் வரியாகும். இதைச் செப்புக் காசாகவோ பொற்காசாகவோ அளிக்கலம். விநியோகம் என்பது உள்ளூரில் விளைவுக்குத் தக்கபடி ஏழைகளுக்கு விநியோகிப்ப தற்காக உணவுப் பொருளாகவே அளிப்பது, உகவை என்பது இக்காலச் சொத்து வரி போன்றது. அதிகமான நிலம் உடைய-வர்கள் அவர்களது விளைச்சலுக்கும் உவப்பிற்கும் ஏற்ற வண்ணம் அளிக்கும் வரியாகும்.

சில்வரி என்பது சிறு செலவுகளுக்காக மிகக் குறைந்த பொருளை வசூலிப்பது. பெருவரி என்பது நாட்டின் பெரிய தேவை களுக்காக அதிகமான பொருளை வசூலிப்பது.

வாசற்காலம் என்பது விளைந்த உணவுப் பொருளை அளிக்-கும்போது அவ்வாசலில் கொடையாக அளிப்பது.

இளவரசரின் நலத்துக்காக அளிப்பது பிள்ளை வரி. ஒரு சில குடிமக்களும் தங்கள்பிள்ளைகளின் நலத்திற்காக இவ் வரியினை அளித்துள்ளனர்.

நாட்டு நலத்திற்காக மாதம்தோறும் செலுத்தும் காசு, மாதக் காசு எனப்படும். நாட்டின் வளர்ச்சித் திட்டங்களுக்கு வேண்டிய தொகை அளவு, வரி வசூலாகாமல் துண்டு விழும் நேரத்தில் அந்த ஈவினைச் சரிக்கட்டக் கொடுக்கும் வரி ஈவின் வரி எனப் படும். களியாட்டம், கலை நிகழ்ச்சி கேளிக்கைகளுக்காக வசூலிக் கப்படும் வரியாகும்.

போர் ஏற்படும் போது வீட்டுக்கு ஓர் ஆள்அனுப்புவதுபோலக் குறிப்பிட்ட ஒரு நிலப்பரப்பிற்கு ஒருவர் வீதம் போரிட ஆள் அனுப்ப வேண்டும். இதையே படையாள் என்பர்.

எச்சோறு, கூற்றரிசி என்பவை கிராம ஊழியர்களுக்குஇரவில் அளிக்கும் சோறு ஆகும். நெல் குற்றுபவர்களுக்கு இரவில் அளிக் கும் சோற்றையும் இது குறிக்கும்.

வெட்டி என்பவன், ஊதியம் இன்றி வேலை பார்ப்பவன். பொது வேலைகளுக்கு நிலமுடையார் இலவசமாக ஆட்களை

அனுப்ப வேண்டும். ஆற்றில் வெள்ளம் தடுப்பது, சாலை அமைப்பது போன்ற பொது வேலைகளுக்கு நிலப் பரப்பிற்குத் தக்கபடி அனுப்ப வேண்டும். நிலஉடைமையாளரிடம் அந்தப்பணியாளர்கள் ஊதியம் பெற்றுவிடுவார்

வெட்டி, குறிப்பிட்ட சிலமணி நேரமே வேலை பார்ப்பான். அவனைப்போலவே முட்டாவாள் என்பவனும் ஊதியமின்றி வேலைபார்ப்பவன்தான், எனினும் முழுநேரமும் இவன் வேலை பார்க்கவேண்டும். தடை ஏதும் இல்லாது தொடர்ந்து பொது வேலைபார்ப்பதால் முட்டாவாள் என்றுகுறிப்பிடப் பெறுகின்றனர்.

இறைகுடிமை வரி என்பது இறைவனுக்காகவும் கோயிலுக்காகவும் கோயிலிலிருந்து காணி நிலம் பெற்றோர் கோயிலுக்குச் செலுத்தும் வரியாகும்.

நில உரிமையாளர்கள் மேற்கண்ட பதினெட்டு வகையான வரிகளையும் செலுத்த வேண்டும். கோயிலுக்கு நன்கொடையாக அளித்துவிட்டால் எந்த வரியையும் செலுத்த வேண்டாம் என வரிச் சலுகையினை அளித்தனர். இதனால் அதிகமான நிலம் உடையோர் தாமாகவே முன்வந்து நிலங்களை நன்கொடை அளிப்பார்கள். அதனால் கோயிலில் தினசரி வழிபாடு சிறப்பாக நிகழும் என்று இந்த ஏற்பாட்டினைச் செய்துள்ளனர்.

கோயிலிலிருந்து நிலத்தைப் பெற்று விவசாயம் செய்வோர் இறைகுடிமை வரியினை மட்டும் கோயிலுக்குச் செலுத்தினால் போதுமானது.

நிலத்தை நன்கொடையாகக் கொடுத்தனர் வரி செலுத்த வேண்டியதில்லை எனினும் கோயில் நிருவாகத்தினர் மிகக் குறைந்த தொகையினைத் தொடர்ந்து வரி செலுத்தி வந்துள்ளனர். கோயில் நிருவாகத்தினர் மேற்கண்ட அனைத்து வரிகளையும் செலுத்தினால், கோயிற் செலவுகளுக்கு அதிகமான பொருள் வரவு கிடைக்காது என்பதால் கோயில் நிலங்களை வளம் குறைந்த நிலமென்று மாற்றி நல்லதரம் இல்லை என்பதைத் 'தரமினி' என மாற்றி வரியைக் குறைத்துக் கட்ட ஏற்பாடு செய்துள்ளனர்.

## 6.7.4. கோயில் பணியாளர்க்கு வசதிசெய்து கொடுத்தல்:-

கோயில்பணி ஒரு தெய்வீகப்பணி. கோயில் பணியாளர்கள் உரிய நேரங்களில் உரியவழிபாட்டை இயற்றினால்தான் வழிபாடு சிறக்கும். வையகம் வாழ்வாங்கு வாழும். எனவே கோயில் பணியாளர்களது அடிப்படைத் தேவைகளுக்கு வசதி செய்து கொடுத்தால் அவர்கள் எப்போதும் கோயில் உள்ள ஊரிலேயே இருப்பார்கள் என்பதால் அவர்களுக்குக் கோயிலின் அருகிலேயே வீடுகள் கட்டிக் கொடுக்கப்பெற்றன.

இளையாத்தங்குடி விண்ணவர் எம்பெருமான் கோயிலுக்கு அருகில் கோயில் பணியாளர்கள் தங்க அம்பனூர் என்னும் பகுதியைப் 'பள்ளி கொண்டான் அகரம்' என்ற பெயரில் மாற்றி வீட்டு வசதி செய்து கொடுத்துள்ளனர்.[99] இந்நோக்கத்திலேயே பல புறமனைகள் கட்டப்பட்டுள்ளன.[100] என்பதை நாம் அறிய முடிகின்றது கோயில்பணியாளர்களின் உணவு வசதிக்காகக் கோயில் நிலங்களையும் கொடுத்து ஆதரித்துள்ளனர்.[101]

இக்காலத்தில் சில ஊர்களிலுள்ள கோயில்களுக்கு வழிபாடு செய்யச் செல்லும்போது கோயில் பணியாளர்கள் உரிய நேரத்திற்கு வந்து திருக்கதவினைத் திறப்பதில்லை. காரணம் கேட்கும் போது அவ்வூரில் கோயில் பணியாளர்கள் தங்கஇடமும் உண்ண உணவகமும் கிடைக்கவில்லை என்றும், வெளியூரிலிருந்து வரப் போதிய பேருந்து வசதி இல்லையென்றும், அதனால்தான் கால தாமதம் ஆகின்றது என்றும் தெரிவிக்கின்றனர்.

கோயில் வழிபாடு உரிய நேரத்தில் தொடர்ந்து நடைபெறக் கோயில் பணியாளர்களுக்கு இவ்வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டியதன் இன்றியமையாமையை உணர்ந்து அக்கால நிருவாகிகள் மேற்கண்ட ஏற்பாடுகளைச் செய்துள்ளமை பாராட்டிற்குரியதாகிறது.

## 6. 7. 5. தவறு வாராமல் காக்கும் பணி:

கோயில் நிலங்களை உழுது பயிரிட்டுக் கோயிலுக்கு உரிய பங்கினைக் கொடுப்பதற்காகச் சில நம்பிக்கையானவர்களிடம் குடி நீங்காக் காராண்மை செய்ய நிலத்தைக் கொடுப்பது வழக்கம்.

அவ்வாறு கொடுக்கும்போது எவ்வளவு வாரம் (குறிப்பிட்ட அளவு உணவுப் பொருள்) தரவேண்டும் என்று விதிகளைவிதித்து ஊரறியக் கோயில் கருவறையிலேயே இதனைக் கல்வெட்டில் இடம் பெறச் செய்துவிடுவார்கள். இத்துடன் தவறு வாராமல் காக்க ஒரு காப்புறுதிக் கட்டணத்தையும் (Caution Deposit) வசூலித்துள்ளனர் எனத் தெரிய வருகிறது.

கோயில் வயிராவிகளுள் திருச்சிற்றம்பல வயிராவி பரம்பரை யினரிடமிருந்து கோயில் பொக்கிஷத்திற்குத் தங்கம் 40 பவுன் பெற்றுக் கொண்டு வாரம் தந்துள்ளனர்.[102]

## 6. 7. 6. சமயப் பணி:

கோயில்களில் முறையான வழிபாடு நடைபெறத் தேவையான முயற்சிகளை மேற்கொண்டுள்ளனர். சிவராத்திரி முதலிய திருவிழாக்களை நடத்தியுள்ளனர்.

சிவபூசையினைச் செய்வதற்குக் கற்பிப்பதற்காக (உபதேசம் தரும் குரு) ஆசிரியர் தட்சிணாமூர்த்தி என்பவர் இரணியூரில் வாழ்ந்துள்ளனர். இதற்காக இவ்வூரின் தெற்குப் பகுதியில் ஒரு சைவ மடம் கட்டப்பெற்றுள்ளது. அந்தச் சைவ மடத்திற்கான முதல்வர் மைலாமாந்தேவர் என்றும் முனிவர் (ரிஷி) ஆவார். அவரது சீடரான தட்சிணாமூர்த்தி என்பவர்தான் சைவச் சடங்கு களைச் செய்யும் முறைகளைக் கற்பித்துள்ளார்.

கோயில்களில் திருப்பணி செய்து புதிதாகக் கோயிற் பகுதி களைக் கட்டியுள்ளனர்.[103] திருஉருவ வழிபாட்டைப் பெரிதும் போற்றி வளர்த்துள்ளனர். ஆகம விதிகளின்படி அமுதுபடி சாத்து படி வியஞ்சனங்களோடு இறைவனுக்குப் படைத்து அவற்றை ஒப்புரவோடு அனைவருக்கும் வழங்கியுள்ளனர். இவ்வாறு சமயப் பணி நன்கு நடைபெற வழிவகுத்துள்ளனர்.

## 6. 7. 7. சமுதாயப் பணி:

கோயிலைச் சமுதாய மையமாகக் கொண்டிருந்தனர். என்ப தற்குப் பல கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன.

சிற்பக் கலையின் மூலமாகச் சிறந்த கலைக்கூடமாக விளங்கின.[104] ஊராட்சி மன்றம் போல அவ்வவ்வூரினர் எடுக்கும்

புதிய தீர்மானங்கள், பிடிபாடுகள் (பதிவுகள்) கருவறைச் சுவர்களில் வெட்டப்பட்டுள்ளன.[105] இவ்வாறு தீர்மானங்கள் நிறைவேற்றப்படுமுன் நடைபெறும் ஊர்க்கூட்டம், கலந்துரையாடல், பஞ்சாயத்து முதலியன கோயிலிலேயே நடைபெற்றிருக்க வேண்டும் என்று கருத இடமுள்ளது.

குடிநீங்காக் காராண்மையாக வமிச பரம்பரையாக வாரத்திற்கு உழுது பயிர் செய்யும் உரிமை பெற்றவர்கள் கோயிலுக்கு உரிய உணவுப் பொருள்களைக் கொடுக்க வேண்டும். இறைகுடிமை வரியினைச் செலுத்த வேண்டும். இதற்காகவே அவர்களிடம் காப்புறுதிக் கட்டணமாகத் தங்கத்தை வாங்கி வைத்துக் கொள்வதும் உண்டு. இவ்வளவு கட்டுத் திட்டங்கள் இருந்தும், ஒரு சிலர் கொடுத்த உறுதியினைப் பற்றிக் கவலை கொள்ளாமல் ஊரைவிட்டேஓடிவிட்டனர். அப்போது ஏற்படும் முட்டுப்பாட்டை நீக்க உடனடியாக நிருவாகிகள் கூடி அம்முட்டுப்பாட்டை நீக்க மாற்று ஏற்பாடுகளைச் செய்துள்ளனர்.

வேளான் காங்கேயன் என்னும் சேனாவரையன் வாரம் பெற்ற நிலங்களைப் பேணிப் பாதுகாக்காது ஊரைவிட்டு ஓடிப் போய் விட்டதால் கோயில் நடைமுறைக்கு உரிய உணவுப் பொருட்களும் வரிப் பணமும் வரவில்லை. அதனால் முட்டுப்பாடு (தடை) ஏற்பட்டது. உடனே ஊரவர்கள் தலையிட்டுத் தட்சிணாமூர்த்தி சிவன் என்னும் சைவ ஆசிரியரிடம் அப்பொறுப்பினைக் கொடுத்துள்ளனர்[106] இதேபோல வேறு ஒரு முட்டுப்பாட்டினைத் தவிர்த்தமையை மற்றோர் இரணியூர்க் கல்வெட்டு கூறுகின்றது.[107]

தவறு வாராதிருக்க முன்னேற்பாடாகக் காப்புறுதிக் கட்டணம் வசூலிக்கப்படுவதும், ஒரேவழி முட்டுப்பாடு ஏற்படின் உடனே அதனை நீக்க மாற்று ஏற்பாடு செய்வதும் தலைசிறந்த நிருவாகத் தன்மையைப் புலப்படுத்துகின்றன.

கோயில். நீதி மன்றமாகவும் செயல்பட்டு வந்துள்ளது என்பதற்கு வயிரவன்பட்டியில் உள்ள ‘மறியல் கட்டு’ என்னும் கட்டடப் பகுதியே சான்றாக அமைந்துள்ளது. அங்கு நடைபெற்ற வழக்குகள், அதற்கான தீர்ப்புகள் பற்றிய பதிவேடு வயிரவன் கோயில் நகரவிடுதியில் உள்ளது. அது பழங்காலம் முதலாகவே நடைபெற்று வருவதை வேலங்குடிக் கல்வெட்டு தெரிவிக்கின்றது.[108]

ஏதேனும் ஓரிடத்தில் போர் நிகழ்ந்தால், அதன் நடைமுறையினை மறுபரிசீலனை செய்து தீர்ப்புக் கூறும் நீதி மன்றமாகவும் கோயில்கள் விளங்கியுள்ளன. என்பது பிள்ளையார்பட்டிக் கல்வெட்டால் தெரிய வருகிறது.

மருதங்குடி வல்லக் கூற்றுவன் மகன் காடன் கேரளனான சிறாவயல் வல்லக் கூற்றுவன், வெய்யரையனுக்குச் சார்பாகச் சென்ற பொழுது அவனைக் கொன்ற சிறுகுடி காடன், கேரளன் காடன், கேரளன் பொன்னாச்சன் ஆகிய மூவருடனும் கொண்ட பகை தீரத் திருவீங்கைக்குடி மகாதேவர்க்கு இரண்டு மாச்செய் தண்டனையாக (அபராதமாக) விட்ட செய்தியை ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது.[109]

இதில் நடந்து முடிந்த போர் நிகழ்ச்சியைப் பற்றி மறுபரிசீலனை செய்து தவறாக ஒருவனை மூவர் சேர்ந்து கொன்றதைக் கண்டுபிடித்துத் தண்டனை வழங்கியிருக்கும் நீதி மன்ற முறை பாராட்டிற்குரியதாக அமைந்துள்ளது.

இதில் இடம்பெற்றுள்ள வல்லக் கூற்றுவன் என்ற தமிழ்ப் பெயர் மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. பகைவருக்குஎமன் போன்றவன் என்பதை உணர்த்தப் பகைமன்னரின் பெயருடன் அந்தகன் என்ற சொல்லையும் சேர்த்துப் பராந்தகன் சோழாந்தகன், மதுராந்தகன், சிங்களாந்தகன், கேரளாந்தகன் என்றே பட்டம் சூட்டுவர். இங்கோ தூய தமிழில் வல்லக் கூற்றுவன் என்று அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

கோயிலைச் சார்ந்து வாழ்ந்த சமுதாய அமைப்பில் பல்வேறு குல அமைப்புகள் இருந்தன. பல்வேறு தொழிலைச் செய்வோரும் பகைமை இன்றிப் பொதுமை நிலவுமாறு ஒற்றுமையாக வழிபட்டு வந்துள்ளதைப் பல்வேறு கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. அரசர்கள், சமய ஆசிரியர்கள், வியாபாரிகள், சிற்பிகள், வேளாளர்கள், அந்தணர்கள், சேனாபதிகள், படைவீரர்கள், கொல்லர் முதலியோர் கோயிலைச்சார்ந்து பொதுமைவாழ்க்கைவாழ்ந்துள்ளனர்.

ஒவ்வொரு கோயிலுக்கும் ஒவ்வொரு ஊருணியை அமைத்துள்ள சமுதாயத் தொண்டு பாராட்டிற்குரியது. நீர்ப் பாசனத்திற்கும், உணவிற்கும், புறத்தூய்மைக்கும் நீர் மிக இன்றியமையாதது. இதன் தண்ணீரும் பாசியும் சமுதாயத்திற்கே பயன்பட்டன. பாசி மிகச் சிறந்த உரம். அதை விற்று வரும் பணத்தையும்

கோயில் நிருவாகச் செலவிற்காகப் பயன்படுத்தியுள்ளனர். என்பது கல்வெட்டுகளால் நமக்குக் கிடைக்கும் அரிய செய்திகளுள் ஒன்றாகும்.[110]

கோயிலுக்காக நிலத்தைத் தானமாகத் தருபவர்களுக்குச் சிறப்புச் செய்வதற்காகவும் அவர் போலப் பலரைத் தானமளிக்க ஊக்குவிப்பதற்காகவும், தானமளித்தோருக்குப் பரிவட்டம் கட்டி, அவர்கள் சுற்றத்தினருடன் வந்து தங்கியிருந்து வழிபாடு செய்ய ஆறு வீடுகளும் தந்துள்ளனர்.[111]

கோயில் நிருவாகம் தொடர்ந்து சிறப்பாக அமைய இரண்டு வழிகளைக் கல்வெட்டுகள் கூறுகின்றன.[112]

பொதுமக்களின் நலத்திற்காக ஏற்பட்ட கோயிலைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு பொதுமக்கள் அனைவருக்கும் உண்டு எனவே கோயிலின் நடைமுறைச் செலவிற்கான வருவாயைப் பொதுமக்கள் ஒவ்வொருவரும் தாமாகத் தந்துதவ வேண்டும். அப்போதுதான் கோயிலுக்குப் பொதுஇல் என்னும் பெயர்காரணப் பெயராகும் இதற்குப் பொதுமக்கள் செய்ய வேண்டியுள்ளவை எவை என்பதைப்பற்றி ஒரு கல்வெட்டு கூறுகிறது.

அக்கல்வெட்டு கூறும் வழிமுறை மகமை எழுதலாகும். ஏதேனும் ஒரு பொருள் வருவாய் வரும்போது அதில் ஒரு சிறுபகுதியை இறைப்பணிக்காக மகமையாகக் கொடுத்துவிட வேண்டும். என்று எண்ண வேண்டும். எண்ணிய வண்ணமே செயல்படுத்த வேண்டும். சிறுதுளி பெருவெள்ளம் ஆவது போலச் சிறுசிறு சேமிப்புகள் பெரு நிதியாக உருவெடுக்கும்.

பூங்குன்ற நாட்டு வேலங்குடி வணிக நகரத்தார்கள் அவர்கள் தெருவில் இருந்த பாடிகாவல் நாயனார்க்குக் கீழ்வருமாறு மகமை செலுத்தியுள்ளனர்.[113]

| | | | |
|---|---|---|---|
| 1 | ஆண்டு ஒன்றுக்குப் பழங்காசு (தங்கக் காசு) | ..... | 2 |
| 2. | பெருமிளகு பொதிக்குக் காசு | ..... | 5 |
| 3. | பாக்குப் பொதிக்குக்காசு | ... | 2 |
| 4. | எள் பொதிக்குக்காசு. | ... | $\frac{1}{4}$ |
| 5. | நெற்பொதிக்குக் காசு. | ... | 1 |
| 6 | பருத்திப் பொதிக்குக் காசு | ... | 2 |
| 7. | உப்புப்பொதிக்குக் காசு. | ... | 11 |
| 8. | பிளவால் 1 கட்டி பிண்ணாக்கும் குடுப்போம் | ... | |

மேற்கண்ட செய்தியினால் அக்கால நகரத்தார் எவ்வெப் பொருள்களைக் 'கொண்டுவிற்றனர்' என்பதும், எவ்வாறு கோயில் நிருவாகச் செலவிற்குப் பணம் கொடுத்து உதவினர் என்பதும் தெரியவருகின்றன.

கல்வெட்டில் கண்ட இந்நடைமுறை இன்றும் நகரத்தார் குடும்பங்கள் ஒவ்வொன்றிலும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

ஒவ்வொரு பொருள் வரவிற்கும் ஒரு சிறு தொகையை மகமை யாக வீட்டில் வைத்திருக்கும் உண்டியலில் செலுத்தி வருகின் றனர். அத் தொகையினை ஒட்டு மொத்தமாக எடுத்து இறைவன் பெயருக்குப் பங்கு முதலாக வைத்துத் தொழில் நடத்துகின்றனர். புதுக்கணக்கு எழுதும்போது ஒன்பது நகரக் கோயில்களுள் அவர வர் கோயில் இறைவன் இறைவி பெயரில் ஆதாய வரவு என்று வரவு வைக்கின்றனர். சிலர் பங்கு முதல் என்று வரவு வைத்து இறைவனுக்கும் அவர்களுக்குமாக ஒரு கூட்டுத் தொழிலைத் தொடங்குகின்றனர். அத் தொழில் வரும் இலாபத்தின் ஒருபகுதி யைக் குடமுழுக்கு விழா போன்ற பெரிய பொருட்செலவான நேரங் களில் கொடுத்து உதவுகின்றனர்.

பெண்கள், தமது தாய்வீட்டின் மூலமோ, கணவர் மூலமோ பொருள்வரவு வரும்போதெல்லாம் ஒரு சிறு தொகையைக் கோயி-லுக்கு மகமையாக உண்டியலில் சேமிக்கின்றனர். அதைக்கோயில் வழிபாட்டிற்காகச் செலவிடுகின்றனர். வேலங்குடிக் கல்வெட்டில் காணப்படும் மகமை முறையின் மகிமையினால்தான் எத்தனை இலட்ச ரூபாய் கோயில் நடைமுறைக்கு வேண்டுமென்றாலும் உடனே வசூலிக்க முடிகின்றது.

கோயில் வழிபாட்டை நாள்தோறும் நடத்துவதற்கு, இக்கா லத்தில் நாள் ஒன்றுக்கு குறைந்தது இருநூறு ரூபாய்செலவாகிறது கோயிலுக்கான நிலங்கள் உழுதவர்களுக்குச் சொந்தமாகி விட்ட தால், வருவாய் குறைந்துள்ளது. இந்நிலையில் கோயில் வழி பாட்டை எவ்வாறு நிகழ்த்துவது என்ற கேள்விக்கு ஒருகல்வெட்டு விடை தருகின்றது.

கண்டன் உதையஞ் செய்தானான காங்கேயன் என்பவன் குன்றக்குடிக்கு வடக்கில் உள்ள நேமம் என்னும்ஊரினன். சுந்தர பாண்டியனின் அமைச்சர்களில் குறிப்பிடத் தக்கவன். இவன் பிள்

ளையார்பட்டி தேசிவிநாயகப் பிள்ளையாருக்குத்தினசரி(நித்தியப் படி) ஒரு வேளை பூசையினை ஏற்படுத்தி அது தன் பெயரால் விளங்க 'காங்கேயன் சந்தி' என்று பெயருமிட்டிருக்கிறான்.[114] அக்கல்வெட்டுச் செய்தி இன்றைய சிக்கலுக்குத் தீர்வாக அமைந்துள்ளது.

வயிரவன்பட்டிக் கோயிலைச் சார்ந்தவர்கள் முதன் முதலாக இதனைச் செயல் படுத்தியுள்ளனர். ஒரு ஆளுக்கு நானூறு ரூபாய் வீதம் 365 பேரிடம் 1,46,000 ரூபாயை வசூலித்துள்ளனர். அதை வங்கியில் நிரந்தர வைப்புத் தொகையாகச் செலுத்தி அதில் வரும் வட்டித்தொகையைஎடுத்து நாள்தோறும்செலவிடுகின்றனர் இதற்குப் பணம் செலுத்தியவர்கள் பெயருக்கு ஒருவேளை (உச்சிக்கால வேளை) பூசை செய்கின்றனர். இதே போலஇரவுவேளைப்பூசைக்கும் (அர்த்த சாமத்திற்கும்) 365 பேர்களைச் சேர்த்து வருகின்றனர்

காங்கேயன் கல்வெட்டு வயிரவன்பட்டிக் கோயிலார் பின்பற்றுகிற நன்மரபுக்குப் பழைய வரலாற்றுச் சான்றாக அமைகிறது இப்பொழுது வயிரன்பட்டிக்கோயிலைப் பின்பற்றி மாற்றூர், இரணியூர், நேமம் ஆகிய கோயில்களிலும் ஒரு வேளைப் பூசைக்கான தொகை வசூலிக்கப்பட்டுத் தினசரி வழிபாடு செம்மையாக நடைபெற்று வருகிறது.

நகரக்கோயில்களின் இச்சிறப்பான நிருவாகத்தை அடியொற்றி தேவகோட்டை, கண்டனூர் நகரச் சிவாலயங்களிலும் காரைக்குடி கொப்புடையம்மன் திருக்கோயிலிலும் ஒருநாள் பூசைக்கான தொகை (முறையே ரூபாய் 1000, ரூபாய் 2000) வசூலிக்கப்பட்டு, ஆண்டு முழுவதும் தடையேதுமின்றிச் சிறப்பாக வழிபாடு நடைபெற்று வருகிறது.

மதுரை மீனாட்சி அம்மன் திருக்கோயிலில் இப்பொழுது ஆண்டுக்கு ஒருமுறை நிகழும் செங்கோல் வழங்கும் விழாவிற்கான முன்னோடிகள் முற்கால மன்னர்கள் இறைவன் அல்லது இறைவியின் திருவடிகளில் செங்கோலை வைத்துப் பூசை செய்து இறைவனின் சார்பாகத் தாம் ஆளுவதாக எண்ணி இச் செங்கோலைப் பெற்றுக்கொள்வர். இதுபோன்ற நடைமுறை இளையாத்தங்குடியில் நடைபெற்றுள்ளது.

"சுவாமி பாதத்திலே நாம் நாயகத்தனம்
வாங்கின இளையாத்தங்குடி குடியவாய்
தரயிலிப் பற்று ........ ........ "[115]

எனவரும் தொடரில் நாயகத்தனம் வாங்கினது என்பதும் சுவாமி பாதத்திலே என்பதும் குறிப்பிடத் தகுந்த சொற்களாகும்.

ஒரு குறிப்பிட்ட பகுதியையோ நிருவாகத்தையோ ஆளும் பொறுப்பிற்கு 'நாயகத்தனம்' என்பர். அதனைத் தற்பொழுது ஒன்பது நகரக் கோயிலிலும் 'காரியத்தனம்' என்ற சொல்லால் குறிக்கின்றனர். நிருவாகப் பொறுப்பை ஏற்கும் நாளை இன்றும் 'காரியத்தனம் வாங்கும் நாள்' என்றே கூறுகின்றனர். அந்த நாயகத்தனத்தை வாங்கிக் கொள்ளும் போது ஏற்கனவே எழுதப் பட்டுள்ள வரவு செலவுக் கணக்கு ஏடுகளை இறைவன்பாதத்திலே வைத்து வழிபட்டு எடுத்துக் கொள்ளுவார்கள். அதனையே இக் கல்வெட்டு கூறுகிறது. இச்சடங்கு இன்றும் நடைமுறையில் உள்ளது குறிப்பிடத்தக்கது.

## 6. 8. முடிபுகள் :

6. 8. 1. 1. ஒன்பது நகரக் கோயில்களைப் பற்றி அறிய 58 கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இவை அனைத்தும் இளையாத்தங்குடி, இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய மூன்று இடங்களிலேயே கிடைத்துள்ளன. துணைச்சான்றாகப் பூங்குன்ற நாட்டு வேலங்குடிக் கல்வெட்டுகள் ஒன்பது கிடைத்துள்ளன.

6. 8. 1 2. 58 கல்வெட்டுகளுள் இதுவரை கண்டறியப்படாத கல்வெட்டொன்றை, இரணியூரில், ஆய்வாளர் கண்டுபிடித்துள்ளார்.

6. 8. 1. 3. மேற்கண்ட 67 கல்வெட்டுகளில் பிள்ளையார்பட்டி யிலுள்ள 14 கல்வெட்டுகளையும் இரணியூரில், புதிதாகக் கண்டுபிடித்துள்ள ஒரு கல்வெட்டையும் மட்டுமே இன்று நாம் காணமுடிகின்றது

6. 8. 2. 1. இவை ஆறாம் நூற்றாண்டு முதல் பதினாறாம் நூற் றாண்டு வரையான கல்வெட்டுகள்.

6. 8. 2. 2. மிகத்தொன்மையான கல்வெட்டாக, ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்த பிள்ளையார்பட்டிக் கல்வெட்டு அமைந்துள்ளது.

6. 8. 2. 3. காலத்தால் மிகப் பிற்பட்டதாக, 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இளையாத்தங்குடிக் கல்வெட்டு அமைந்துள்ளது.

6. 8. 3. இக்கல்வெட்டுகள் அக்கால கட்டத்தில் செட்டி நாட்டுப்பகுதி தமிழ்நாட்டின் எப்பகுப்பில் அமைந்திருந்தது என்பதை விளக்குகின்றன.

6. 8. 3. 1. ஒன்பது நகரக் கோயில்களும் கேரளசிங்க வளநாட்டில் அமைந்திருந்தன. இக்கேரளசிங்க வளநாட்டின் உட்பிரிவுகளாகக் கல்வாச நாடு (இளையாத்தங்குடி இரணியூர், பிள்ளையார்பட்டி) பிரம்பூர் நாடு (மாற்-றூர், வயிரவன்பட்டி), அதளையூர் நாடு (நேமம்), பாலையூர் நாடு (சூரைக்குடி, வேலங்குடி) ஆகிய நாடுகள் அமைந்திருந்தன.

6. 8. 3. 2. பல வீதிகளுடன் கூடிய ஊர்ப் பகுதியைப் பெருந் தெரு என்றே குறிப்பிடுவர். அவ்வாறு ஐந்து பெருந் தெருக்களைப் பற்றிக் கல்வெட்டுகள் கூறுகின்றன. அவையாவன:

1. காளையகாலப்பெருந்தெரு (இளையாத்தங்குடி)
2. அரைச நாராயணப் பெருந்தெரு (இளையாத்தங்குடி)
3. அஞ்ஞூற்றுவப் பெருந்தெரு (காரைக்குடி)
4. செயங்கொண்ட சோழப் பெருந்தெரு (நேமம்)
5. ஏழகப் பெருந்தெரு (வயிரவன்பட்டி)

6. 8. 4. இக்கல்வெட்டுகளால் ஒன்பது நகரக் கோயில்கள் அமைந்துள்ள ஊர்கள், கோயில்கள் ஆகியவற்றின் பழைய பெயர்கள் தெரியவருகின்றன.

6. 8. 4. 1. இளையாத்தங்குடிக் கோயிலின் பழைய பெயர் கல்-வாயிலாண்ட நாயனார் கோயில் என்பது. அவ்விறைவன் பெயர் சிறீகயிலாசமுடைய நாயனார். இறைவி பெயர் திருக்காமகோட்ட நாச்சியார். பெருமாள்

கோயிலின் பெயர் விண்ணவர் எம்பெருமான் கோயில். அங்கிருந்த இறைவனின் பெயர் நாயனார் விண்ணவர் எம்பெருமான் என்பதாகும்.

6. 8 4. 2. வயிரவன்பட்டியின் பழம் பெயர் ஏழகப்பெருந்தெரு என்பதாகும்.

6. 8. 4. 3 இரணியூர் பிள்ளையார்பட்டி ஆகிய இரு ஊர்களுக்கும்இளையாத்தங்குடியிலிருந்து பிரிந்துசென்ற திருவேட்பூருடையார் என்ற பிரிவினர் முன்னால் இளையாத்தங்குடிக் கோயிலின் எட்டாவது தனிப் பிரிவாக இருந்தனர். இப்பிரிவினர் திருமால் வழிபாட்டில் ஈடுபாடு கொண்டிருந்ததால் தாங்கள் இளையாத்தங்குடியில் வாழ்ந்த பகுதிக்கு அரச நாராயணபுரம் என்று பெயரமைத்துக் கொண்டனர்.

6. 8. 4. 4. இரணியூர்க் கோயிலும் 'கல்வாயில் ஆண்ட நாயனார் கோயில்' எனப்பட்டது. அங்குள்ள இறைவன் பெயர் ஆட்கொண்ட ஈசுவரமுடைய நாயனார்.

6. 8. 4. 5. பிள்ளையார்பட்டியின் பழம்பெயர் எக்காட்டூர், திருவீங்கைக்குடிஎன்பனவாம்.இக்கோயிலின்பழம்பெயர் திருவீங்கைக்குடி நாயனார் கோவில் என்பதாகும்.

6. 8. 5. 1. செயங்கொண்ட சோழன் என்பது இராசராச சோழனின் பட்டப்பெயர்களுள் ஒன்றாகும். அவன் ஆதரவில் நேமம் கோயில் 10ஆம் நூற்றாண்டில் விரிவு செய்யப்பெற்றிருக்கிறது என்பதற்குச் செயங்கொண்ட சோழப் பெருந்தெரு என்ற பெயரும், இக்கோயிலில் உள்ள சந்திரசேகரர் செப்புத் திருமேனியும், அம்மன் செப்புத் திருமேனியும், இலிங்கச் சிற்பமும், நந்திக்கற்சிற்பமும், செயங்கொண்ட விநாயகரின்பெயரும் சான்றாக அமைந்துள்ளன.

6. 8. 5. 2. பிள்ளையார் பட்டிக் கல்வெட்டில் இடம் பெற்றுள்ள தமிழி எழுத்துகளே தேசிவிநாயகப் பிள்ளையார் சிற்பம் உருவான காலத்தைக் கணிக்கச் சான்றாகின்றன.

6.8 6.1. கோயில்களில் நடைபெற்ற வழிபாட்டு முறை, வேண்டுதல்கள் ஆகியவை கோயில்களுக்கு வழங்கப் பட்டகொடைகள் மூலமாகவே தெரிய வருகின்றன. திருநாமத்துக்காணி, திருவிடையாட்டம், தேவ தானம், தேவிதானம், திருவிளக்குக் காணிக்கை என்னும்பெயர்களில் கொடைகள் வழங்கப்பெற்றன.

6.8.6 2. காலை வழிபாடு, இரவு வழிபாடு ஆகிய இரு வேளைப் பூசை பற்றிய குறிப்புகள் மட்டுமே கல் வெட்டுகளில் கிடைத்துள்ளன.

6.8.6.3. பிறந்த நாளுக்கான சிறப்பு வழிபாடு, வாரத்தில் ஒரு குறிப்பிட்ட நாளன்று சிறப்பு வழிபாடு, சிவராத்திரி விழா, திருவிழாக்களுக்கான தனிச் சிற்பங்கள் பற்- றிய குறிப்புகள் கல்வெட்டுகளில் கிடைக்கின்றன.

6.8.7. கோயில் வழிபாடு நித்தமும் முறையாக நடைபெறு வதைக் கண்காணிக்கவும், கோயிலுக்குக் காணிக்கை கொடுக்கும் நிலங்களுக்கு வரி இல்லாமல் செய்து தரவும், கோயில் நிலங்களிலிருந்து ஒழுங்காக வரு வாய் வருவதைக் கண்காணிக்கவும் கோயில் நிருவா கம்செம்மையாகச் செயல் வட்டத்தைக் கல்வெட்டு கள் கூறுகின்றன.

---

## குறிப்புகள்

## கல்வெட்டுகள் கூறும் செய்திகள்

1. நேர்காணல் - திரு. இராசகோபால், மதுரைத் தொல் பொருள்ஆய்வுத்துறைத் தலைவர் - 27-12-1987
2. தி. நா. இராமச்சந்திரன், ''ஆப்கானிஸ்தானத்திலே விநாயகர்'', கல்வெட்டு 14-8-2974, பக்.2-5
3. சா. கணேசன், பிள்ளையார்பட்டி தலவரலாறு, ப. 42
4. நேர்காணல் - இரா நாகசாமி, 18-5-1981
5. நேர்காணல் - வெ. வேதாசலம், 28-12-1987
6. 1936 - ஆ. அ. க. எ. (ஆண்டு அறிக்கைக் கல்வெட்டு எண்கள்) 147, 148, 149, 151, 153, 154, 155,

7. 1936 – ஆ. அ. க. எ. - 148
1926 - ஆ. அ. க. எ. 2, 4, 5, 6, 7, 9, 10, 14, 15, 16, 17, 18, 19, 21, 22, 23, 25, 26, 27, 30, 31, 34, 35, 38, 40, 41.

9. 1936 - ஆ. அ. க. எ. - 147, 149, 153, 154.

10. 1936 - ஆ. அ. க. எ. 154

11. 1926 - ஆ. அ. க. எ. - 2, 15, 20, 21, 22, 23, 28, 31 35, 36, 37.
1936 - ஆ. அ. க. எ. – 146, 147, 151

12. டாக்டர் தே. சொக்கலிங்கம், நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு ப. 14

12.அ பாடுவார், முத்தப்பர், இளையாத்தங்குடி கீரணிப்பட்டி ஸ்ரீ முத்துமாரியம்மன் பேரில் பாமாலை பாடல். 5

13. டாக்டர் தே. சொக்கலிங்கம், மு.ப

14. சா. கணேசன், மு.நூ., ப.49

15. மேலது, ப.48

16. மேலது, ப.49

17. 1926-ஆ.அ.க.எ. - 12, 15, 16, 18, 19, 21, 23, 25, 26, 27, 28, 30, 31, 39

18. 1926 - ஆ.அ.க.எ. - 21, 27, 28, 31

19. 1926 – ஆ.அ.க.எ - 121

20. அ. இராமனாதன் செட்டியார், நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாறு, ப.18

21. 1936 - ஆ.அ.க.எ. – 146. 151

22. 1936 - ஆ. அ. க. எ. – 149, 155

23. 1936 - ஆ. அ. க. எ. - 153

24. நேர்காணல் - டாக்டர் அர. சிங்காரவடிவேலன் - 27. 2. 1985

25. 1936 - ஆ. அ. க. எ. - 147, 150

26. சா. கணேசன், மு . நூ., ப. 18

27. சோமலெ., செட்டிநாடும் செந்தமிழும், ப. 47

28. 1959 - ஆ. அ. க. எ. – 507

29. புதுக்கோட்டை மாவட்டக் கல்வெட்டு எண். 393

30. பி. எல். இராமசாமி, "வணிகத் துறையில் நமது வாழ்வும் தாழ்வும்", சோமலெ., (ப. ஆ)., நகரத்தார் மாநில மாநாட்டு மலர், ப. 117
31. Overgedrukt-Vol. L-XXIV - P. 617
பி. எல். இராமசாமி ஷெஇல் மேற்கோளாக வந்துள்ளது
32. Kottayam Copper Plates - TAS Vol II P. 99
பி. எல் இராமசாமி ஷெ இல் மேற்கோளாக வந்துள்ளது.
33. Overgedrukt Vol L- XXIV-P.6
பி. எல். இராமசாமி ஷெ இல் மேற்கோளாக வந்துள்ளது.
34. நேர்கானல் டாக்டர் தே. சொக்கலிங்கம் 18-1-1988.
35. சோம லெ. மு. நூ , ப 72
36. 1926 ஆ. அ. க. எ. 14, 29, 41
37. டாக்டர் தே. சொக்கலிங்கம், மு. நூ., ப. 20
38. தென்னிந்தியக் கல்வெட்டுகள் எட்டாம் தொகுதிக் கல்வெட்டு எண். 422.
39 சோம.லெ., ப.ஆ., மு.நூ., ப.26.
40. சோமலெ., மு நூ., ப 8.
41. டாக்டர் தே. சொக்கலிங்கம், மு. நூ., ப.8.
41.அ தொல் , பொருள்., மரபியல் நூற்பா எண், 77
42. 1936 - ஆ.அ.க.எ. - 154
43. 1926 - ஆ. அ. க. எ. - 4. 5, 9, 10, 11. 16, 17, 18, 19, 25, 26, 27, 38, 39, 40, 41,
1936 - ஆ. அ. க. எ - 152, 153 154
44. டி.வி. சதாசிவப் பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, ப. 111
45 1926 - ஆ. அ. க. எ - 2, 15, 20, 21, 22, 23, 28, 31, 35, 36, 37
1936-ஆ. அ க. எ. 146, 147., 151.
46. 1926 - ஆ.அ.க.எ. - 159
47. 1926 - ஆ.அ.க.எ. - 29
48. 1936 - ஆ.அ க.எ. - 159
49. 1936 - ஆ.அ.க.எ. - 148. 149.
50. 1936 - ஆ.அ.க.எ. - 155
51. இரணியூரில் புதிதாகக் கண்டுபிடித்துள்ள கல்வெட்டு

52. 1926 - ஆ.அ.க.எ. - 2
53. 1926 - ஆ.அ.க.எ. - 16, 39
54. 1926 - ஆ.அ.க எ. – 39.
55. 1926-ஆ.அ.க.எ. - 15, 16, 18, 19, 21, 22, 23, 25, 26, 28, 34, 35, 38.
56. 1926 - ஆ. அ. க. எ. - 23
57. 1926 - ஆ. அ. க. எ. - 14
58. 1926 - ஆ. அ. க. எ - 40
59. 1926 - ஆ. அ. க எ. - 14, 29, 41
60. 1926 - ஆ. அ. க. எ. - 3
61. 1926 - ஆ. அ. க. எ. 37
62. 1926 - ஆ.அ.க.எ. - 16
63 1926 – ஆ. அ. க. எ. 2
64. 1926 - ஆ. அ. க. எ. - 5, 6, 9, 10
65 1926 - ஆ. அ. க. எ. - 3
66. 1926 - ஆ.அ.க.எ. - 1, 3
67. 1926 - ஆ.அ க.எ. – 2
68. 1926 - ஆ.அ க.எ 2
1936 - ஆ.அ.க.எ. - 149, 151, 153. 154, 155
69. 1936 - ஆ.அ.க.எ. - 146, 147, 148, 149, 150, 151
70. 1936 – ஆ.அ.க.எ - 146, 148
71. மேலது - 146, 148, 151
72. 1936 - ஆ.அ.க.எ. - 154
73. 1936 - ஆ.அ.க.எ. - 154
74. 1926 – ஆ.அ.க.எ. - 34, 35, 36, 37, 39
75. 1936 - ஆ.அ.க.எ. – 10
76. 1926 - ஆ.அ.க எ. - 15, 21, 26, 27
77. 1926 - ஆ.அ.க.எ. - 28. 29. 30, 38
78. 1926 - ஆ.அ.க.எ. - 4, 13, 29, 30, 34, 35
79. 1936 - ஆ.அ.க.எ. - 158
80. 1926 - ஆ.அ.க.எ. - 3, 39
81. 1926 – ஆ.அ.க.எ. – 20, 22
82. 1959 - ஆ.அ.க.எ. - 510
83. 1926 – ஆ.அ.க.எ. – 25
84. 1926 – ஆ.அ.க.எ. - 22
85. 1926 - ஆ.அ.க.எ. - 22
86. 1926 - ஆ. அ. க. எ. - 29

87. 1936 - ஆ. அ. க. எ. - 155
88. 1926 - ஆ. அ. க. எ. - 30, 34, 35, 38
89. 1936 - ஆ. அ. க. எ. - 153
90. 1926 - ஆ அ. க. எ. - 29
91. 1936 - ஆ. அ. க. எ. - 146
92. 1936 - ஆ. அ. க. எ - 154
93. 1926 - ஆ. அ. க. எ. - 3
94. 1926 - ஆ. அ. க எ. - 26
95. 1936 - ஆ. அ. க. எ. - 151
96. 1926 - ஆ. அ. க எ. - 30
97. 1926. - ஆ. அ. க. எ. - 3
98. 1926 - ஆ. அ. க. எ. - 1, 7, 9, 10, 17, 18, 19, 25, 26, 33
1936 - ஆ. அ. க. எ -147, 152
99. 1926 - ஆ. அ. க. எ. - 14
100. 1926 - ஆ. அ. க. எ. - 31
101. 1926 - ஆ. அ க. எ. - 5
1936 - ஆ. அ.க. எ. - 151
102. 1936 - ஆ. அ. க. எ. - 151
103. 1926 - ஆ. அ. க எ. - 30
104. 1926 - ஆ. அ. க. எ. - 3, 23, 26, 39
1936 - ஆ. அ. க. எ. - 155
105. 1936 - ஆ. அ. க. எ. - 147
106. 1926 - ஆ அ க.எ. - 2
107. 1926 - ஆ.அ.க.எ. - 11
108. 1959 - ஆ.அ.க.எ. - 505
109. 1936 - ஆ.அ.க.எ. - 148
110. 1926 - ஆ.அ.க.எ. - 4
111. 1926 - ஆ.அ.க.எ. - 3
112. 1959 - ஆ.அ க.எ. - 507
புதுக்கோட்டை மாநிலக் கல்வெட்டு எண்கள்.
25, 253, 254
113. 1959 - ஆ.அ.க.எ. - 507
114. 1936 - ஆ.அ.க.எ. - 153
115. 1926 - ஆ.அ.க.எ. - 29

# 7. இலக்கியங்கள் கூறும் செய்திகள்.

ஒன்பது நகரக் கோயில்களைப் பற்றிக் கூறும் இலக்கியங் களை மூன்று வகையாகப் பகுத்துக் காணலாம்.

1. கல்வெட்டு இலக்கியம்
2. கவிதை இலக்கியம்
3. உரை நடை இலக்கியம் .

கல்வெட்டு இலக்கியம் கூறும் செய்திகள் தனிக் கட்டுரையாக அமைந்துள்ளதால் பிற இருவகை இலக்கியங்கள் கூறும் செய்தி களைக் கோயில் வாரியாகக் காண்போம்.

## 7. 1. இளையாத்தங்குடி பற்றிய இலக்கியச் செய்திகள் :-

இளையாத்தங்குடி பற்றி மூன்று இலக்கியங்கள் கிடைத் துள்ளன. அவையாவன:

| வ. எண். | இலக்கியம் | எழுதியவர் |
|---|---|---|
| 1. | இளசைப்புராணம் | கணேச பண்டிதர் |
| 2. | இளையாற்றங்குடி மான்மியம் | விசுவநாத ஐயர் |
| 3. | இளையாத்தங்குடி அருள்மிகு நித்திய கல்யாணி அம்பிகை சமேத கைலாச நாதர் திருக்கோயில் குடமுழுக்கு விழாமலர். | பதிப்பாசிரியர்புலவர் நாக. சண்முகம் |

மேற்கண்ட மூன்றனுள் முதல் நூல்கவிதை வடிவில்அமைந்த தலபுராணமாகும். இரண்டாவது நூல், முதல் நூற் செய்திகளை உரை நடையில் கூறுகிறது. மூன்றாவது நூல் இளையாத்தங்குடியின் பெருமை, நாடு போற்றும் நகரத்தார் திருப்பணி, இளையாத் தங்குடிக் கோயில் குடமுழுக்கு விழா வரலாறு, தவமுனிவர் போற்றிடும் தலத்தின் வரலாறு, முதலிய பயனுள்ள உரை நடைக் கட்டுரைகளையும் சில கவிதைகளையும் கொண்டுள்ளது.

## 7. 1. 1. தலபுராணச் செய்திகள்:-

இளைசைப் புராணம் என்னும் இந்நூலைத் திருவண்ணாமலை ஆதினவித்துவான் பிரம்மசிறீ கணேச பண்டிதர் 1895ஆம் ஆண்டு எழுதியுள்ளார். பாயிரமும் 14 படலங்களும் (1090 திருவிருத்தங்களும்) கொண்டுள்ள இந்நூலுக்கு மூலநூல் பிரமாண்ட புராணம் என்னும் வடமொழி நூலாகும்.

"இந்த க்ஷேத்திரத்தில் மகிமைகளை முதன் முதலில் பிரமதேவர் நாரத முனிவர்க்குக் கயிலையங்கிரியில் சிவபெருமான் திருமுன் அருளினாரென்றும், பின்பு காசியில் வஸிஷ்டர் முதலிய முனிவர்களுக்கு அகஸ்தியர் கூறினார் என்றும், அதன் பிறகு நைமிசாரணிய முனிவர்களுக்குச் சூதமகாமுனிவர் உரைத்தார் என்றும் பிரமாண்ட புராணத்தில் கூறப்பெற்றிருப்பதாகப் புராண வரலாறு கூறுகிறது."[1] என்பார் உரை நடையில் இத்தலபுராணத்தை அளித்த திரு. ரா. விசுவநாத ஐயர் அவர்கள்.

இத்தலபுராணம் அதிகமான உயர்வு நவிற்சியுடன் எழுதப் பட்டுள்ளதால் ஆய்விற்குத் தேவையான கருத்துகள் மட்டுமே கூறப்பட்டுள்ளன.

### 7. 1. 1. 1. இளையாத்தங்குடி பெயர்க் காரணம் :-

இத்தலபுராணத்தில் வருகின்ற சுபதிரர், இந்திரன், கண்ணுவ முனிவர் ஆகியோரின் துன்பங்களைத் தீர்த்து இளைப்பினை ஆற்றும் குடியாக விளங்கியதால் இளைப்பை ஆற்றும்குடி என முதலில் பெயர் பெற்றுப் பின்னாளில் இளைப்பாற்றகுடி என்றும் இளையாற்றங்குடி என்றும் மருவி வழங்குவதாக இந்நூல் கூறுகிறது. இதனையே வடமொழியில் சிரமாபநோதனபுரம் என்றும் குறிப்பிடுகின்றது.

மேலும் இவ்வூருக்குச் சிவபுரம், பூகைலாயம், காமப் பிர பூரணபுரம், சித்தபுரம், புராதனவனம், நித்திய கல்யாணிபுரம் என வேறு பல பெயர்களும் நிலவியதாகக் கூறுகிறது.

''இந்த ஸ்தலத்தின் பெயரைக் கேட்பதாலே மக்கள் அறத் தையும், இதனை நினைப்பதால் பொருளையும். தரிசிப்பதால் இன்பத்தையும், இங்கு மூன்று நாட்கள் வசிப்பதால் வீட்டையும் அடைவார்கள் என்பதுதிண்ணம்''[2] என இவ்வூரில் சிறப்பு கூறப் பட்டுள்ளது.

## 7.1.1.2. திருக்கோயில் பற்றிய குறிப்புகள்:-

இளையாத்தங்குடியில் இறைவன் ''ஸ்வயம்புவாய்" விளங்கு வதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இறைவன் பெயர் கயிலாச நாதர் என்றே குறிப்பிடப்பட்டுள் ளது. சுபத்திரனுக்குச் சித்தி (வீடுபேறு) கொடுத்ததால் அன்று முதல் இறைவனுக்குச் சித்தேசன் என்றும், கோயில் முன்பிருந்த சிவதீர்த்தம் சித்த தீர்த்த மென்றும் பெயர் பெற்றதாகக் கூறப் பட்டுள்ளது.[3]

இதனால் பண்டைக் காலத்தில் தான் தோன்றி ஈசனாய் ஓர் இலிங்கமும் அம்மன் சிற்பமும் மட்டுமே கோயிலில் இடம் பெற்றி ருந்ததை அறிய முடிகின்றது.

சுபத்திரர் வீடுபேறு அடைவதற்கான வழிகளைச் சிவ பெரு மான் கூறும் பகுதி இறைத் தத்துவத்தையும், வீடு பேற்றைப் பெறும் முறையையும் நன்கு விளக்கிக் கூறுகின்றது.

சூரபதுமனிடமிருந்து சிவபெருமான் காப்பாற்றியதும். இந்திரன் தெய்வத் தச்சன் மூலம் இரண்டு யோசனை அகலத்தில் ஓர் நகரி னையும் அதன் நடுவில் ஒரு கோயிலையும் இவ்வூரில் கட்டியதாக கூறப்பட்டுள்ளது

அக்கோயிலில் கைலாசநாதர், நித்திய கல்யாணியுடன் விநாயகர், குமரக் கடவுள், பிற பரிவார தேவதைகளையும்நாட்டிச் சிற்றாலயங்களுடன் பல்விதமான மண்டபங்கள் திருச்சுற்று,சுற்று மதில், கோபுரம் ஆகியவற்றுடன் கோயிலை அழகுற அமைத்தான் எனக் கூறுகிறது

அத் தெய்வத்தச்சன் அந்நகரில் ஆவன வீதிகள், தேரோடும் வீதிகள், அன்ன சாலைகள், வேத ஆகமங்கள் பயிலும் சாலைகள் ஆதுலர் சாலைகள், வாவிகள், மடுக்கள், குளங்கள், சோலைகள், நந்தவனங்கள், பசுமடங்கள் ஆகிய பலவற்றையும் ஏற்படுத்தி னார் எனக் கூறப்பட்டுள்ளது.

## 7. 1. 1. 3. பிள்ளையார்பட்டியின் தோற்றம் பற்றிய குறிப்பு:-

இத்தலபுராணத்தில் பிள்ளையார்பட்டிக் கோயிலில் தோற்றம் பற்றிய குறிப்பும் காணப்படுகிறது.

சூரபதுமனின் படைத்தளபதிகளாக மூவரை இத் தலபுராணம் குறிப்பிடுகிறது. கும்பாண்டன், வக்கிரதமிட்டிரன் மகாதமிட்டிரன் ஆகிய மூவருமே தேவர்களை எதிர்த்துப் போரிடுகின்றனர்.

விநாயகருக்கும் கும்பாண்டனுக்கும் நடந்த போரில் விநாயகர் கும்பாண்டனை அங்குசத்தால் வீழ்த்தியதாக இந்நூல்கூறுகிறது.[4]

வயிரவன் கோயில் புராணத்திலும் விநாயகர்கும்பாண்டனைக் கொன்ற செய்தி கூறப்படுகிறது.

வக்கிர தமிட்டிரன் போரில் எறிந்த மலையிலேயே பிள்ளை யார்பட்டிக் குடைவரைக் கோயில் தோன்றியது என்றசெய்திஅசுர சங்காரப் படலத்தின் இறுதியில் கூறப்பட்டுள்ளது.

போரில் வென்ற விநாயகர் ஒரு குளத்தினையும் அதனருகில் ஒரு நகரத்தையும் படைத்தார். என்றும் அதற்கு விநாயக நகரம் என்று கைலாச நாதரே பெயரிட்டார் என்றும் தலபுராணம் கூறு கின்றது.

இதே செய்தியை வயிரவன் கோயிற் புராணமும் தெரிவிக் கின்றது.[5]

## 7. 1. 1. 4:- வயிரவன் கோயிலின் தோற்றம் பற்றிய குறிப்பு:-

வயிரவர் வக்கிரதமிட்டிரன், மகாதமிட்டிரன் ஆகிய இருவரை யும் அழித்த மைக்காகத் தேவர்கள்மனமாரவாழ்த்திவணங்கியதும்

ஒரு குளத்தையும் ஒரு நகரையும் வயிரவரே தோற்றுவித்தார் என்றும் அதற்கு வயிரவ நகரம் என்று கைலாசநாதரே பெயரிட்டார் என்றும் தலபுராணம் கூறுகிறது.[6]

## 7. 1 1. 5 நகரத்தார் வரலாறு :-

நகரத்தார் என்று குறிப்பிடாமல் காவிரிப்பூம்பட்டின வைசியர்கள் எனக்குறிப்பிட்டு அவர் தம் வரலாறு பூம்புகார்ப் படலம், அகோர சிவாசாரியப் படலம், ஈசான சிவாசாரியப் படலம் ஆகியவற்றுள் கூறப்பட்டுள்ளது.

காவிரிப்பூம்பட்டின வணிகர்கள் சிவபக்தி, அடக்கம், பொறுமை, வாய்மைகொடை, இரக்கம் இவற்றில் நிகரற்றவர்களாய் வாழ்ந்து வரும்போது ஒரு சமயம் சிவநெறி நீங்கி நடக்கத் தொடங்கியமையால் அவர்களின் செல்வம் குறைந்து வறுமை மிகத்தொடங்கிற்று. எனவே அவர்கள் ஒரு கூட்டமாகக் கிளம்பி நாடெங்கும் சுற்றியலையத் தொடங்கினார்கள். தென்னாட்டிலுள்ள பல புண்ணிய தீர்த்தங்களில் ஆடி, பல சிவன் கோயில்களில் வழிபட்டுச் சிதம்பரம் சென்றடைந்தனர். அங்கு நடராசப் பெருமானை வழிபட்டு வரும் போது அகோர சிவாச்சாரியர் பசியால் வாடிவதங்கிய வணிகர்களுக்கு உணவளித்து அவர்களது துன்பத்திற்குக் காரணம் அவர்கள் சிவபெருமானை மறந்ததேயாகும் என்று கூறினார் பஞ்சாட்சர மந்திரத்தை உபதேசித்துச் சிவ தருமங்களைச் செய்து வந்தால் செல்வம் பெருகும் எனக்கூறிப் பூம்புகாருக்கு அனுப்பி வைத்தார் எனப் பூம்புகார்ப் படலம் கூறுகிறது.

அகோர சிவாசாரியப்படலம் புகார் வணிகர்களின் வரலாற்றை மேலும் சொல்கிறது -அகோரசிவாசாரியாரின் அருளின்படி வணிகர்கள் சிவபூசை செய்து மிகுந்த செல்வத்துடன் வாழும்போது சோழ நாட்டில் பெரும்பஞ்சம் ஒன்று உண்டானதால் அந்நாட்டரசன் வருவாயில்லாமல் காவிரிப்பூம்பட்டின வணிகர்களை மிகவும் துன்புறுத்தி அவர்களுடைய செல்வங்களைப் பறிக்கத் தொடங்கினான் .இக்கொடுமையிலிருந்து தப்ப வழியின்றி அவ்வணிகர்கள் அனைவரும் தம் குடும்பங்களுடன் சிதம்பரம் வந்து உய்யவழி காட்டுமாறு அகோர சிவாசாரியாரிடம் வேண்டினர் . அவர் பாண்டிய நாட்டிலுள்ள இளையாத்தங்குடி சென்றுய்யுமாறு கூறினார். பாண்டிய மன்னனின் குருவான ஈசான சிவாசாரியாரின் பரிந்துரையினைப் பெற்றுத் தந்தார். இவ்வாறு இரு ஆசாரியர்களும்

வணிகர்களை இளையாத்தங்குடிக்கு அழைத்துவந்து குடியமர்த்தினர் என ஈசானிய சிவாசாரியப்படலம் நகரத்தார் வரலாற்றைக் கூறுகிறது.

## 7. 1. 1. 6. பிற செய்திகள்:-

குன்றக்குடி என்னும் ஆறுமுகனின் திருக்கோயில் தோற்றம் பெற்றதை மயூரகிரிப் படலம் தெரிவிக்கின்றது.

சிவனை மட்டுமே வழிபட்டு வந்த நகரத்தார்கள் இத்தகைய அசுர சம்காரப் படலங்களைக் கேட்டதன் பயனாகவே விநாயகர் வயிரவர், முருகன் ஆகியோரை அதிகமாக வழிபடத் தொடங்கினர் என்ற உண்மை இத்தல புராணத்தால் தெரிய வருகின்றது.

## 7. 1. 2· குடமுழுக்கு விழாமலர்ச் செய்திகள்:-

குடமுழுக்கு விழா மலரில், முன்னர்க் கண்ட செய்திகளைத் தவிரப் புதிய செய்திகள் ஏதுமில்லை. எனினும் நகரத்தார் வரலாறு கோயிற் சிறப்பு, கோயில் வழிபாடு, கோயில் நிருவாகம் பற்றிய கீழ்வரும் கட்டுரைகள் குறிப்பிட்டுச் சொல்லத் தக்கனவாக அமைந்துள்ளன.

| வ.எண் | சிறப்பான கட்டுரைகள். | எழுதியவர்கள். |
|---|---|---|
| 1. | இளையாற்றக்குடியின் பெருமை. | சோமலே. |
| 2. | உரிமைத்தலம். | டாக்டர் ஆறு. அழகப்பன். |
| 3. | இளைப்பாற இடம்தந்தஈசுவரர். | எம். ஆர் இராமசாமி. |
| 4 | இளையாத்தங்குடி கோவில் குடமுழுக்கு விழா வரலாறு. | எம். எசு. எசு. எம் எம். முத்துராமன். எசு.எம். ஏ ஆர்.ஏன். ஏ ஆர் நாராயணன். |
| 5 | தவமுனிவர் போற்றிடும் தவத்தின். வரலாறு. | புலவர் நாக சண்முகம். |

ஒன்பது நகரக் கோயில்கள் பற்றிய 10 கவிதைகள் இம்மலருள் இடம் பெற்றுள்ளன.

## 7. 2. வயிரவன்பட்டி இலக்கியச் செய்திகள்:-

வயிரவன் பட்டியைப் பற்றி மூன்று இலக்கியங்கள் கிடைத்துள்ளன. அவையாவன.

| வ. எண் | இலக்கியம் | எழுதியவர் |
|---|---|---|
| 1. | வயிரவன் கோயிற் புராணம் | சேந்தன்குடி சீறி. வி நடராச கவிராயர் |
| 2 | வயிரவன் கோவில் வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ் | சேந்தன்குடி சிறீ வி. நடராச கவிராயர். |
| 3 | நகர வயிரவன் கோயில் திருக்குட நன்னீராட்டு விழாச் சிறப்பு மலர். | பதிப்பாசிரியர்:டாக்டர் சுப. அண்ணாமலை |

மேற்கண்ட மூன்றனுள் முதலிரண்டு நூல்களும் கவிதை வடிவில் அமைந்தவை. முதல் நூல் தலபுராணமாக அமைந்துள்ளது .இரண்டாவது நூல் பிள்ளைத்தமிழ்ச் சிற்றிலக்கிய இலக்கணத்திற்கேற்ப அம்மனின் பல்வேறு சிறப்புகளை எடுத்துக் கூறுகிறது .இரண்டு நூல்களும் கடுமையான நடையில் அமைந்துள்ளன மூன்றாவது நூலான திருக்குட நன்னீராட்டு விழாச் சிறப்பு மலர் ஒன்பது நகரக் கோயில்களுள் வயிரவன்பட்டி பெறும் இடம், வரலாறு, வழிபாடு நிருவாகம் ,இறைத் தத்துவம் 'பற்றிய உரை நடைக் கட்டுரைகளையும் சில கவிதைகளையும் கொண்டுவிளங்குகிறது.

### 7.2.1. வயிரவன்கோயிற் புராணச் செய்திகள் :-

இப்புராணம், இளைசைப் புராணம் முன்மொழிந்த புராணச் செய்திகளை அவ்வாறே வழிமொழிகின்றது.

தேவர்களுக்காகச் சிவபெருமான் அசுரர்களை அழிக்கவயிரவக் கோலத்தில் வந்தார். அவ்வாறு அழித்ததும் ஒரு குளத்தையும் நகரையும் உண்டாக்கினார். அங்கேயே கோயில் கொண்டு தங்கினார். அந்நகரே வயிரவநகரம் என்றும் வயிரவன்கோயில்என்றும் பெயர் பெற்றது என்ற புராண வரலாற்றை விரிவாகச் சொல்கிறது வயிரவன் கோயிற் புராணம்.

## 7.2.1.1. கோயில் பற்றிய செய்திகள்:-

வயிரவன்பட்டி எனும் ஊர்ப்பெயர், வடுகநாதபுரி என்றே பல இடங்களில் குறிப்பிடப் பெற்றுள்ளது.

கோயிலுள் விளங்கும் இலிங்கம் சுயம்புலிங்கம் என்றேமூர்த்தி விசேடப் படலம் கூறுகின்றது.[7]

இறைவியின் பெயர் வடிவுடைநாயகி என்றும்அழிஞ்சில்மரத்தடியிலேயே பண்டையக் கோயில் இருந்தது என்றும் தெரியவருகிறது.

கோயிலைப் பேணிப் பாதுகாத்து வழிபட்ட பாங்கினை நகரப் படலம் நன்கு தெரிவிக்கின்றது.

## 7. 2. 1. 2. பாவமன்னிப்பு பற்றிய செய்தி :-

தீர்த்த விசேடப் படலத்தில் சொல்லப்படும் சுரதவதி என்னும் விலைமகள் பற்றிய வரலாறு முதல் திருச்சுற்றின் வடகிழக்கு மேற் சுவரில் ஓவியமாக வரையப் பெற்றுள்ளது குறிப்பிடத் தக்கது.

சரசுவதி என்ற பெண் விலைமகளாக வாழ்ந்து பாவம் செய் தவள். என்னும் அவளது பிணத்தை நாய்கள் இழுத்து வந்து திருக்கோயில் குளத்தில் போட்டுவிட்டன தீராத நோய்களையும் பாவங்களையும் போக்கும் தீர்த்தத்தில் அவள் உடல் பட்டதால் அவளுக்கு வீடுபேறு கிடைத்ததாகத் தீர்த்த விசேடப் படலம் தெரிவிக்கின்றது.

பாவங்களை மன்னிக்கும் பேருள்ளம் கொண்டவன் இறைவன் என்னும் பேருண்மையை இப்படலம் தெரிவிக்கின்றது.

## 7. 2. 1. 3. சம்பா சட்டி விழாபற்றிய குறிப்பு :-

வயிரவன் கோயிற் புராணத்தில் சம்பா சட்டி விழாபற்றிய குறிப்பு காணப்படவில்லை. ஆனால் இவ்விழாவின் அடிப்படைக் கருத்துகள், உண்மையான பெயர் ஆகியன இதன் மூலம் தெரிய வருகின்றன.

கும்பாண்டன், வக்கிரதமிட்டிரன் மகாதமிட்டிரன் ஆகிய மூன்று அசுரர்களுடனும் போர் நடைபெறுகிறது. விநாயகர் அங்கு

சத்தால் கும்பாண்டனைக் கொன்றழிக்கிறார். மற்ற இருவரையும் வயிரவர் அழிக்கின்றார். சூரபதுமனை அழிக்க முருகன் பிறந்து வருவான் என்று இளைசைப் புராணத்தில் உள்ளது போன்ற செய்திகளே இங்கும் காணப்படுகின்றன.

கும்பனை வயிரவர் கொன்றிருப்பாரேயானால் கும்பா சட்டி விழா என்ற பெயர் ஏற்பட்டுப் பிற்காலத்தில் சம்பா சட்டி விழா என மருவியிருக்கலாம். அந்த ஐயத்திற்கு இருதலபுராணங்களி-லும் இடமேயில்லை. கும்பனை விநாயகரே அங்குசத்தால் கொன்றதாக தலபுராணங்களும் கூறுகின்றன.

சூரனை அழிப்பதைச் சூரம்காரம் (சம்ஹாரம்) என்றே குறிப் பிடுகின்றோம். தீயவர்கள் இறைவன் அழிப்பதை மட்டுமே ஆறு நாள் விழாவாகக் கொண்டாடுவதால் சம்கார சட்டி, என்றே முதலில்இவ்விழாவிற்கான பெயர் ஏற்பட்டிருக்கவேண்டும். சம்கார சட்டி, சம்கா சட்டி எனஆகிப் பின் சம்பா சட்டி என மருவி வழங் கப்படுகிறது என்றே கருதவேண்டியுள்ளது.

இவ்விழாப் பெயர் ஆய்வின் உண்மையைக் கண்டறியத் தல புராணம் பெரிதும் உதவுகிறது.

## 7.2.1.4 சூரசம்காரம் பற்றிய செய்தி :-

சூரபதுமனின் மூன்று படைத்தலைவர்கள் மட்டுமே முதலில் போருக்கு வந்தனர். அவர்களை விநாயகரும் வயிரவரும் கொன்ற ழித்தனர். அடித்துச் சூரபதுமனே போரிட வருவான். அப்போது முருகன் அவனை அழிப்பான் என்பது பற்றிய குறிப்பும் இத்தல புராணத்தில் கூறப்பட்டுள்ளது.[8]

## 7. 2. 1. 5. இளையாத்தங்குடி பற்றிய குறிப்பு :-

சூரபதுமனை அழிக்க ஆறுமுகனைச் சிவபெருமான் படைக்க வேண்டு தற்காகத் தேவர்கள் இளையாத்தங்குடி சென்று வழிபட வேண்டும் என்று இப்புராணத்தில் கூறப்பட்டுள்ளது.[9]

## 7. 2. 1. 6. வழிபாடு பற்றிய செய்திகள் :-

வயிரவன்பட்டியில் எவ்வாறு வழிபாடு நடைபெற்றது என்ப தையும் மூன்று பாடல்கள் தெரிவிக்கின்றன.

"அகமம் விதித்தவாறே யணித்திரு மஞ்சனத்தை
யோகையா வியற்றிப்பின்ன ரொற்றாடை சாத்திரம்
போகிய புரிந்துபட்டுப் பொற்பரி வட்டஞ்சூழ்ந்து
பாகமார் புழுகளாய பனிநறுஞ் சாந்தணிந்து

மதமுறு தயிறுநெய்பாவிற் பல்வகை யமைத்தசொன்றி
யிதமலி மோதகாதி யினியன பண்ணியங்கள்
கதலிமா வருக்கைவெள்ளி கழறிரு வேறுநாவ
லுதவியமிக்கினிப்ப வொன்களி கழைமுன் வைத்து

நன்மணங் கமழுந்தூப நகுசுடர்த் தீபங்காட்டி
நின்மல வுட்கொளென்ன நிவேதித்துக் கண்டையார்ப்பப்
பொன்மல ரளப்பிலாத புதியன கொண்டருச்சித்
தனிமல மகலநின்ற வமரரேத் தெடுக்கலுற்றார்"[10]

மேற்கண்ட பாடல்கள் அன்றைக்கு எவ்வாறு வழிபாடு செய்யப்பட்டது என்பதைக் கூறுவதோடு இன்றைக்கும் அவ்வாறு வழிபாடு செய்ய வழிகாட்டுவதாக அமைந்துள்ளன.

## 7.2.1.7. பிற செய்திகள்:-

வயிரவன் கோயில் பெருமை வெளி உலகத்திற்குத் தெரிந்து அனைவரும் இக்கோயிலுக்கு வந்து வழிபாடு செய்ய வேண்டும் என்பதற்காகக் கீழ்வரும் பகுதிகள் தலபுராணத்தில் கூடுதலாகச் சேர்க்கப்பட்டுள்ளன. அப்பகுதிகளாவன:

1. ததீசி முனிவர் பூசித்த படலம்.
2. சந்திரன் பூசித்த படலம்.
3. இந்திரன் பூசித்த படலம்.
4. சுக்கிரன் பூசித்த படலம்.
5. கிரிகரப் படலம்.

## 7.2.2.வயிரவன் கோயில் வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ் :-

சேந்தன்குடி வி.நடராசக் கவிராயர் 1894 ஆம் ஆண்டு எழுதிய இந்நூல் பிள்ளைத்தமிழ் என்னும் சிற்றிலக்கிய வகையுள் அடங்கும். பெண்பாற் பிள்ளைத் தமிழான இதில் காப்புப் பருவம், செங்கீரைப் பருவம், காலப் பருவம், சப்பாணிப் பருவம், முத்தப் பருவம், வருகைப் பருவம், அம்புலிப் பருவம்,அம்மானைப் பருவம்,

சிற்றிற் பருவம், ஊசற் பருவம் ஆகியன இலக்கணப்படி அமைந் துள்ளன. ஆனால் இலக்கிய இன்பம் தரும் வண்ணம் இப்பாடல்கள் பாடப் பெறவில்லை. எளிமையுமின்றிக் கடுமையாக இப்பாடல்கள் பாடப்பட்டுள்ளன. எனவே தான் இந்நூல் பெரும்புகழைப் பெற இயலவில்லை.

வயிரவன் கோயில் பற்றியும், வடிவுடையம்மையின் தனித்தன்மைகள் பற்றியும் பாடல்கள் அமையாமல் இறைவியின் பொதுத் தன்மைகளே திரும்பத் திரும்பக் கூறப்பட்டுள்ளன.

நகரக் கோயில் வரலாறு, வழிபாடு பற்றிய குறிப்புகள் இந் நூலில் காணப்பெறவில்லை.

## 7. 2. 3. திருக்குட நன்னீராட்டு விழாச் சிறப்பு மலர்ச் செய்திகள் :-

இச்சிறப்பு மலரில் பழைய வரலாற்றுச் செய்திகளும். கோயில் சிற்ப அமைப்பு, வழிபாடு பண்பாடு, பற்றிய செய்திகளும் காணப் படுகின்றன.

அவற்றுள் ஒன்பது நகரக் கோயில் பற்றிய செய்திகளைத் தெரிவிக்கும் எட்டுக் கட்டுரைகள் காணப்படுகின்றன. அவை யாவன:-

| வ.எண். | கட்டுரை | எழுதியவர் |
|---|---|---|
| 1. | நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு | ப.வ.ராம குழந்தையன் செட்டியார் |
| 2. | வயிரவன் கோயில் வரலாறு | டாக்டர் சுப. அண்ணாமலை |
| 3. | திருக்குடி நன்னீராட்டு விழா | ராம. லெ. லெட்சுமணன் செட்டியார் |
| 4. | வயிரவன்கோயிலிலுள்ள நிரந்தர அமைப்புக்கள் | ஏ. திருநாவுக்கரசு |
| 5. | வயிரவன் கோயிலும் வைப்புத் தலம் தான் | பழ. சண்முகம் |
| 6. | நகரத்தார் வரவும் வாழ்வும் | டாக்டர் தே. சொக்கலிங்கம் |

7. நகரத்தார் குலப்பெருமை — சேவு அண அண்ணாமலை செட்டியார்

8. Nagarathar's Temples and their uses. — Dr. SP. Thannappan

மேற்கண்டவற்றுள் டாக்டர் சுப. அண்ணாமலை, டாக்டர் தே. சொக்கலிங்கம் டாக்டர் சுப. திண்ணப்பன் ஆகியோரின் கட்டுரைகள் ஆய்வுப்பூர்வமாக நன்கு அமைந்துள்ளன.

மலருள் கோயில் சார்ந்த இரண்டு கவிதைகள் காணப்படுகின்றன.

## 7.3. நேமம் கோயில் பற்றிய இலக்கியச் செய்திகள்:-

நேமம் கோயில் பற்றிய இலக்கியங்களாக இரு நூல்கள் கிடைத்துள்ளன. ''நேமம் கோயில் வரலாறு'' என்னும் பெயரில் நாராயண நடராசன் செட்டியார் எழுதியுள்ள நூல் ஒன்று. ''செயங்கொண்டார் சதகம்'' என்னும் இரண்டாவது நூல் பாடுவார் முத்தப்பச் செட்டியாரால் இயற்றப்பட்டது.

## 7.3.1. நேமம் கோயில் வரலாறு:-

முதல் நூல் ஒரு கலம்பகம் போலப் பலவகையான செய்திகளைக் கொண்டுள்ளது. பாடுவார் முத்தப்பச் செட்டியார் அவர்களின் பாடல்களையும் சேர்த்து இராங்கியம் திரு.நா.ஆ.அண்ணாமலை செட்டியார் நினைவாக இந்நூல் 1961 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

ஆசிரியர் அவசரக் கோலத்தில் இந்நூலைத் தயாரித்துள்ளார் ஒரு நூலுக்கான அமைப்பு இந்நூலில் முழுமையாக அமையவில்லை. கவிதைகளும் தொடர்ச்சியின்றி ஆங்காங்கே துண்டுபட்டு நிற்கின்றன.

### 7.3.1.1. கோயில் பற்றிய செய்திகள்:-

நேமம் என்ற இவ்வூருக்கு நியமம், நந்திபுரம், மதுநதிபுரம், செயங்கொண்ட சோழபுரம், மதுவனத்தலம், குலசேகரபுரம் என்ற வேறு ஆறு பெயர்களும் வழங்கியதாக ஆசிரியர் குறிப்பிடுகிறார்.[11]

கோயில் அமைப்பு, சொத்துகள், நிர்வாகம், சுவாமி பெயர் கள், அம்மை பெயர், விநாயகர் பெயர்கள், முருகன் பெயர்கள், பரிவார தேவதைகள், உற்சவ மூர்த்திகள், சுற்றுக்கிராம தேவதை கள் முதலிய புள்ளிவிவரங்கள் குறிக்கப்பட்டுள்ளன.

நேமநாதர், தேனாறுடையார் என்பன செயங்கொண்ட சோழீசரின் வேறு பெயர்களாக வழங்கப்பட்டன.

தொடர்கதைத் தன்மை தொடரும் வண்ணம் கவிதைகளைப் பாட இயலாமல் ஆசிரியர் மயங்கியுள்ளார் என்பது தொடர்ந்து படிக்கும்போது புரிகின்றது

கம்பராமாயணம், சிற்றிலக்கியங்களில் ஆசிரியருக்கு ஈடுபாடு இருந்தது என்பதை ஒரு சில பாடல்கள் காட்டுகின்றன.[12]

பிற பாடல்களில் அதிகமான செய்தி, கடுமையான நடை, தொடர்பின்மை, முழுமையின்மை ஆகியன காணப்படுகின்றன.

## 7. 3. 2. செயங்கொண்டார் சதகம்:-

நூறு பாடல்களால் அமையும் சதக இலக்கியம் என்னும் சிற்றி லக்கிய வகையுள் இந்நூல் அடங்கும்.

பாடுவார் முத்தப்பர் இதில் உள்ள 100 பாடல்களைப் பாடி யுள்ளார்.

### 7. 3. 2. 1. நூல் அமைப்பு:-

இந்நூலின் காப்புப் பகுதியில் விநாயகர், முருகன், கலை-வாணி ஆகியோருக்கான தோத்திரப் பாடல்கள் உள்ளன.

அதைஅடுத்துள்ள நூற்பகுதியில்நூறுகதைகள்ஒவ்வொன்றும் இரு வரிகளில் கவிதை வடிவில் கூறப்பட்டுள்ளன. அக்கதைகளி னால். பெறப்படும் நீதி, அடுத்த இரண்டு வரிகளில் கூறப்பட்டுள் ளது. சான்றாக அதில் வரும் பஞ்சபாண்டவர் கதைப் பாடலைக் காணலாம்.

அருமைசெறி பாண்டவர்கள் பங்காளி செய்கொடுமை யாற்கா
டாண்டும்
உரிமையுடைத் தருமர் செய்த நன்றியினால் திரும்பவும்வந்
துலகை யாண்டார்
பருவரைவில் லாவளைத்த செயங்கொண்டாரே எவரும்
பண்பாய் செய்த
தருமமே தலைகாக்கு மதர்மம்அழித் திடுமெனவுஞ் சாற்று
வாரே [13]

இவ்வாறு செயங்கொண்டாரின் அருள் தன்மையை மூன்றாம் வரியின் மூன்று சீர்களில் மட்டும் கூறி, ஒரு கதைக்கு ஒரு நீதி விதம் நூறு பாடல்களைப் பாடியுள்ளார்.

மழுவேந்துங் கரதலத்தார் செயங்கொண்டார்
செஞ்சரணத்தால் யமனைவென்ற செயங்கெகண்டார்
மானணியுங் கரத்தாரே செயங்கொண்டார்
மேருவையில் லாய்வளைத்த செயங்கொண்டார்
வெள்ளானைக் கிறைபணியுஞ் செயங்கொண்டார்

என மூன்றாவது வரியில் மட்டுமே செயங்கொண்டாரின் திருக் குணங்களைச் சொல்லியுள்ளார்.

நன்னடைத்தைக்கு வேண்டிய நற்குணங்களைப் (Code of Conduct) பட்டியலிட்டு அதற்குப் புராணக் கதைகளை உவமை யாகப் பயன்படுத்தியுள்ள திறம் பாராட்டத்தக்கது.

பாடுவார் முத்தப்பரின் பன்னூலறிவுத் திறமும், இருவரிகளுக் குள்ளேயே ஒரு கதையைச் சுருங்கச் சொல்லிவிடும் ஆற்றலும், அதற்கு இயைபான நற்குணத்தை, வலியுறுத்தும் பண்பும் இந் நூலின் சிறப்புக்களாகும்

## 7 4. இலுப்பைக்குடிக் கோயில் பற்றிய இலக்கியச் செய்திகள்:-

இலுப்பைக்குடிக் கோயில் பற்றிய இலக்கியங்களாக இரண்டு நூல்கள் கிடைத்துள்ளன. அவையாவன:-

| வ.எண் | இலக்கியம் | எழுதியவர் |
|---|---|---|
| 1. | இலுப்பைக்குடிப் புராணம் | சதாவதானம் சுப்பிரமணிய ஐயர் |
| 2. | இலுப்பைக்குடி திருக் கோயில் திருக்குட நன்னீராட்டு விழா மலர் | பதிப்பாசிரியர்கள் டாக்டர் அர.சிங்காரவடிவேலன் & சித. நடராசன் |

## 7.4.1. தலபுராண அமைப்பு:-

இலுப்மைக்குடிப் புராணம் 18 பகுதிகளைக் கொண்டது.

இந்நூலின் தனிச்சிறப்பாக "இலுப்பைக்குப் புராணவசனம்" என்ற உரைநடைப் பகுதியும் இணைக்கப் பெற்றுள்ளது. இவ்வுரைநடையாக்கத்தினைச் செக. ராம. அ. ராம. வயிரவன் செட்டியார் அவர்கள் எழுதியுள்ளார்.

## 7.4.1.2. கோயில் பற்றிய செய்திகள்:-

இலுப்பைக்குடிக்குப் பிரமபுரம்,சிவபுரம், மதுகபுரம், சூடாமணி புரம், சதுர்வேதபுரம்,அதிவீரபாண்டிய புரம் என்ற காரணப் பெயர் கள் உள என்று ஒரு பாடல் கூறுகின்றது.[14]

இங்குள்ள திருக்குளத்திற்குப் பிரம தீர்த்தம் எனப் பிரமனின் வேண்டுகோளுக்கிணங்கப் பெயர் சூட்டப் பெற்றது.

மேலும் இலுப்பைக்குடியின் வடமேற்குத் திசையில் காளியா கிய கவுரியம்மையால் உண்டாக்கப்பட்ட கௌரி தீர்த்தம் என்ற திருக்குளமும், ஆலயத்தின் மேற்கில் திருமாலினால் உண்டாக்கப் பட்ட சிவகங்கை என்னும் திருக்குளமும் உள்ளன எனத் தீர்த்த விசேடப்படலம் கூறுகின்றது.ஆனால் தற்பொழுதுகோயிலுக்குத் தெற்கில் பிரம்ம தீர்த்தம் மட்டுமே உள்ளது.

இங்கு தான்தோன்றி ஈசனும், வடிவுடையம்மனும், வயிரவரும் தெய்வங்களாக வீற்றிருப்பதைத் தலபுராணம் தெரிவிக்கிறது.

மாற்றூர்க் கோயில் அருகில் இருப்பது பற்றிய குறிப்பும் நைமிசப் படலத்தில் இடம் பெற்றுள்ளது. இதில் மாற்றூரின் பெயர் வேதகபுரி என இடம் பெற்றுள்ளது.

## 7. 4. 1. 3. வழிபாடு பற்றிய செய்திகள்:

பிரமனும் பிற தேவர்களும் பிரம தீர்த்தத்தில் நீராடி இறைவனைப் போற்றிப் புகழ்ந்து பாடித் திரியாங்க, பஞ்சாங்க, அட்டாங்கத்தோடு கீழே விழுந்து வணங்கிப் பலமுறை திருச்சுற்றிலே சுற்றி வந்தனர். காமதேனுவின் தீம்பால், நெய், தயிர், கொம்புத் தேன், மா, பலா, வாழை, கத்தூரி, புனுகு, முதலிய வாசனை கலந்த நீர்ப் பொருட்கள், தேவ அமுதம், தாமரை மலர் நவரத்தின அணிகலன்கள், ஆடைகள், வெண்பட்டாடைகள் ஆகியனவற்றைக் கொண்டு வந்து அபிடேக ஆராதனைகள் செய்தனர். சோடச உபசாரத்துடன் வழிபாடு செய்ததாகவும் பிரமன் பூசனைப்படலம் தெரிவிக்கிறது முறையான வழிபாடு எவ்வாறு செய்யப்பட வேண்டும் என்பதற்கு இப்பகுதி சான்றளிக்கிறது.

## 7. 4. 1. 4. பிற தலபுராணங்களிலிருந்து வேறுபட்ட செய்திகள் :-

### 7. 4. 1. 4. 1. கும்பாண்டனை வயிரவர் அழித்தல் :-

இளசைப் புராணத்திலும் வயிரவன் கோயிற் புராணத்திலும் கும்பாண்டகனை விநாயகர் அங்குசத்தால் அழித்த செய்தி இடம் பெற்றுள்ளது.

ஆனால் இலுப்பைக்குடிப் புராணத்தில் கும்பாண்டகனை வயிரவரே கைச் சூலத்தினால் குத்தி வீழ்த்தியதாக வேறுபட்ட செய்தி காணப்படுகிறது.[15]

### 7.4.1.4.2. முண்டாசுரனை உமாதேவி அழித்தல் :-

பிற தலபுராணங்களில் காணப்படாத முண்டாசுரன் என்பவனை அழிப்பதற்காக உமாதேவி காளியுருக் கொண்டு பிறந்து சூலாயுதத்தால் அவனைக்கொல்கிறாள். பிறகுஇலுப்பைக்குடியில் தான்தோன்றி ஈசனை வழிபட்டு அவரையே திருமணம் செய்து கொள்கிறாள். இச் செய்திகளை முண்டாசுரப் படலமும் சௌந்தர நாயகி திருமணப் படலமும் தெரிவிக்கின்றன.

## 7.4.1.4.3. கொங்கணச் சித்தர் வழிபாடு செய்தது :-

இலுப்பைக்குடி, மாற்றூர் ஆகிய இரண்டு ஊர்களைப் பற்றி முழுமையான செய்திகளை அறியக் கொங்கணச் சித்தர் வரலாறு மிகவும் உதவி புரிகின்றது.

இரசவாதத்தில் தேர்ந்த கொங்கணச் சித்தர் கொங்கண தேசத்தில் பிறந்தவர்.இரும்பினைத் தங்கமாக்கும் இரசவாதத்தில் பேராசை கொண்டு அதற்கான சூதம், கெந்தி, நாகம், துரிசு, இலிங்கம்,அரிதாரம் முதலிய பொருட்களைத் தேடிப் பெற்றுத் தங்கமாக்கினார். அவை பதினான்கு மாற்றிற்கு மேல் வளரவில்லை. பெருமுயற்சியினுல் இலுப்பைக்குடிக்குஅருகில் உள்ளமாற்றூருக்கு வந்து முயன்றார். ஐந்நூறு மாற்றினைக் கண்டார். கொங்கணர் மாற்றுக் கண்ட ஊர் என்பதால் இதனை மாற்றூர் என வழங்கு கின்றனர்.

பேராசை மிக்கக் கொண்ட கொங்கணர் ஆயிரம் மாற்றில் தங்கத் தைக் காண இலுப்பைக்குடிக்கு வந்து வழிபட்டார். அப்போது ஆயிரம் மாற்றுப் பொன்னின் சோதி வடிவமாகச் சிவ பெருமான் தான் தோன்றி லிங்கத்தின் மீது தோன்றினார்.

கொங்கணர் அச்சோதியைக் கண்டார். பின்பு அச்சோதி கது மென மறைந்ததும் கொங்கணருக்கு ஞானம் உண்டாகியது. இரச வாத ஆசையை விடுத்து இறைவனை ஆயிரம் மாற்றுப் பொன்னி னும் அதிக ஒளிபடைத்தவன் என உணர்ந்து இறை தியானத்தில் அமர்ந்தார்.

கொங்கண முனிவரின் சிற்பம் இலுப்பைக்குடியில் இன்றும் வழிபாட்டில் உள்ளது.

## 7.4.1.4.4. நகரத்தார் வரலாறு பற்றிய செய்திகள் :

நகரத்தாருடைய வரலாற்றைத் தளபதி என்பவனுடைய வரலாறாகச் சொல்லப்பெற்றுள்ளது சிறப்பாகக்குறிப்பிடத்தக்கது.

அவன் சோழமன்னன் கொடுமையால் பாண்டிய நாட்டிற்கு வந்து இலுப்பைக்குடியில் தான்தோன்றி நாதருக்கு அபிடேக ஆராதனைகள் செய்து மெய்யன்புடன் வழிபடுகின்றான். அதில் மகிழ்ந்த இறைவன் “என்ன வரம் வேண்டும்?” என்று கேட்ட

போது ''உனது திருவடிக் கமலங்களில் நீங்காத அன்புதான் வேண்டும்'' என்று வேண்டுகிறான்.

இறைத்தொண்டு புரிய விரும்பும் தளபதிக்கு எவ்விதக் குறையும் வாராதிருக்க எடுக்க எடுக்கக் குறையாத வளத்தை நல்கும் சூடாமணியை இறைவன் அளித்தனன்.[16]

இறைத்தொண்டு செய்வாருக்கு இறைவன் துணைநிற்பான், அவர்களுக்குப் பொருள்வளம் குறையாது என்ற கருத்தைக் கூறித் தொடர்ந்து கோயிற்பணி செய்ய அனைவரையும் இப்படலம் ஊக்குவிக்கின்றது.

இளைசைப் புராணத்தில் உள்ள பூம்புகார்ப் படலம் போல இச்சூடாமணிப்படலம் நகரத்தார் வரலாற்றையே குறிக்கின்றது.

கோயில் திருப்பணி செய்து வாழக்குடும்பத்துடன் இலுப்பைக் குடியிலேயே தங்குமாறு இறைவன் பணித்தான். அவ்வாறே திருத்தொண்டு புரியக் குடும்பத்துடன் இலுப்பைக்குடியில் தங்கினார்கள்[17]

அவர்கள் செய்த திருப்பணிகளைப் பத்துப் பாடல்கள் பட்டிய லிட்டுக் காட்டுகின்றன. சோழ நாட்டிலிருந்து இங்கு வந்த தளப திக்குப் புகலிடம் கொடுத்ததால் இந்நகர் புகலிடம் கொடுத்த பட்டணம் என்றபெயரைப் பெற்றது. உண்மையில், நகரத்தாருக் குப் புகலிடம் கொடுத்ததையே இவ்வாறு ஆசிரியர் குறிப்பாகச் சுட்டியுள்ளார்.

## 7. 4. 1. 4. 5. பிற செய்திகள்:-

வேறு தல புராணங்களில் காணப்படாத சில புதிய பகுதிகள் இந்நூலில் காணப்படுகின்றன. அவையாவன:-

1. தான் தோன்றி ஈசன் வலிந்து அனைவரையும் ஆட்கொண்டு அருள்பாலிக்கும் பேருள்ளம் கொண்டவன் என்பதைத் திரிபுவனச் சக்கரவர்த்திப் படலம் தெரிவிக்கிறது.
2. இலுப்பைக்குடிக் கோயிலில் வழிபாடு செய்தால் கேட்ட வரம் கிடைக்கும் என்பதை நிறுவ இரண்டு சான்றுகள் கொடுக்கப்பட்டுள்ளன.

3. கண்ண பெருமாளுக்கும், அதிவீர பாண்டியனுக்கும் பிள்ளைப் பேறு கிடைக்க இலுப்பைக்குடி வழிபாடே உதவியது என்பதைக் கண்ணன் மகப்பெறு படலமும், அதிவீர பாண்டியப் படலமும் தெரிவிக்கின்றன.

4. இலுப்பைக்குடியில் பண்டு தொட்டே நீதி மன்ற முறை இருந்து வந்துள்ளது என்பதை மன்று ஐயனார் படலம் தெரிவிக்கின்றது. இது மிகவும் சுவை பொருந்தியதாக அமைந்துள்ளது.

## 7.4.2. இலுப்பைக்குடி திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா மலர் கூறும் செய்திகள்:-

இத்திருக்குட நன்னீராட்டு விழா மலர் அரிதின் முயன்று தொகுக்கப்பட்டுள்ளது. திருக்கோயில் அமைப்பு கற்சிற்பங்கள் செப்புத் திருமேனிகள்,மரச்சிற்பங்கள்.ஓவியங்கள் ஆகியவற்றின் கலைச் சிறப்பு, வழிபாட்டு முறை, நிருவாக முற்றை ஆகியன வற்றை அவ்வத்துறையில் திறமைமிக்கவர்களைக் கொண்டு எழுதச் செய்து அழகாக அச்சிட்டுள்ளமுறை பாராட்டத் தக்கதாக அமைந்துள்ளது.

திருக்குட நன்னீராட்டு விழா மலர்களுக்கு இம்மலர் முன் மாதிரியாக அமைந்துள்ளது.

இம்மலரில் இடம் பெற்றுள்ள கோயில் சார்ந்த ஏழு கட்டுரைகள் குறிப்பிடத்தக்கன

| வ எண். | தலைப்பு. | எழுதியவர். |
|---|---|---|
| 1. | தனம்தரும் பைரவர். | சிறீ துர்க்கை சித்தர் |
| 2. | இலுப்பைக் குடியின் சிறப்பு | சோம.லே |
| 3. | இலுப்பைக்குடிக் கோயிலின் கலைச்சிறப்பு | மா. சந்திரமூர்த்தி |
| 4. | இலுப்பைக்குடித் தான் தோன்றீசுவரர் கோயில் ஒப்புயர்வு இல்லாத செப்புத் திருமேனிகள் | ஷ |

| | | |
|---|---|---|
| 5. | இலுப்பைக்குடி தான்தோன்றீசுவரர் கோயில் திருவிளையாடற் புராண ஓவியங்கள் | மா. சந்திரமூர்த்தி |
| 6. | புகலிடம் கொடுத்த பட்டணம் எனும் இலுப்பைக்குடி | சேது. அருணாசலம் |
| 7. | இலுப்பைக்குடிக் கோவில் வரலாறு | சித. நடராசன் |

இம்மலரில் உள்ள இரண்டு கவிதைகள் இக்கோயில் சார்ந்த -னவாக அமைந்துள்ளன.

| வ.எண். | கவிதை. | கவிஞர். |
|---|---|---|
| 1. | இலுப்பைக்குடி தான்தோன்றி நாதர் பதிகம் | கி கரு.ராம. சாமி நாதன் செட்டியார் |
| 2. | ஸ்ரீ சௌந்தர்யநாயகி மாலை | ஸ்ரீ துர்க்கை சித்தர் |

கட்டுரைகளில் திரு. மா. சந்திரமூர்த்தி எழுதியுள்ள மூன்று கட்டுரைகளும் சிறப்பானவை. அவை இலுப்பைக்குடிக் கோயிலை ஒவ்வொரு இம்மியாக அளந்து எழுதப்பட்டுள்ளன.

பக்க எண் அச்சிடாமை, பொருளடக்கம் அச்சிடாமை ஆகிய இரு குறைகளைத் தவிர மற்ற எல்லாவகையிலும் சிறப்பாக இம் மலர் உருவாக்கப்பட்டுள்ளது. இனிவரும் மலர்களுக்கு இம்மலரை முன்மாதிரியாகக் கொள்ளலாம்.

## 7. 5. பிள்ளையார்பட்டிக் கோயில்பற்றியஇலக்கியச் செய்திகள்:-

பிள்ளையார்பட்டி பற்றிய இலக்கியங்களாக மூன்று நூல்கள் கிடைத்துள்ளன. அவையாவன:-

| வ. எண் | இலக்கியம் | ஆசிரியர். |
|---|---|---|
| 1. | பிள்ளையார் பட்டி தலவரலாறு | சா. கணேசன். |
| 2. | ஸ்ரீ கற்பகப் பாமாலை. | நா. அருணாசலன் (தொகுப்பாசிரியர்) |
| 3. | ஸ்ரீ கற்பக விநாயகர் வெண்பாஅந்தாதி | இராகவன் முத்து |

## 7. 5. 1. பிள்ளையார் பட்டித் தலவரலாறு:-

மேற்கண்டவற்றுள் முதலாவதாக உள்ள பிள்ளையார்பட்டித் தல வரலாறு அக்கோயிலைப் பற்றிய செய்திகளை நன்கு தொகுத்துச் சொல்கிறது. கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள் எவ்விதமான உயர்வு நவிற்சியும் இன்றி உள்ளதை உள்ளவாறு எழுதியுள்ளார். இது போன்ற நூல், ஒவ்வொரு கோயிலுக்கும் எழுதப் பெற வேண்டும்.

### 7. 5. 1. 1. நூல் அமைப்பு :-

இந்நூல் நான்கு பகுதிகளால் ஆகியது. பிற்சேர்க்கையாக ஒன்பது பகுதிகள் காணப்படுகின்றன.

### 7. 5. 1. 2. கோயில் பற்றிய செய்திகள் :-

பிள்ளையார் பட்டிக் கோயில் நான்கு திருப்பணிகளால் கட்டி முடிக்கப்பட்டது. எவ்வெக்காலங்களில் யார் யார் முன்னின்று கட்டினார்கள். என்பதை முதல் இரு கட்டுரைகளும் புள்ளி விவரத்தோடு எடுத்துரைக்கின்றன.

நிருவாகக் குழு பற்றியும் இரண்டாவது கட்டுரைகூறுகின்றது

அங்கு நடைபெறும். விநாயக சதுர்த்திவிழா, திருக்கார்த்திகை விழா, திருவாதிரை விழா கொங்கு நாச்சியம்மன் திருவிழா பற்றிய செய்திகளை மூன்றாவது கட்டுரை விளக்கமாக எடுத்துரைக்கிறது.

இவ்வூருக்கு மருதங்குடி, திருவீங்கைக்குடி, திருவீங்கைச்வரம், ஈக்காட்டூர் இராசநாராயணபுரம், மருதங்கூர், கணேசபுரம், தென் மருதூர், கணேசமா நகரம், பிள்ளை நகர் ஆகிய வேறு பெயர்களும் உண்டு என்பதைக் கல்வெட்டுகளின் மூலம் நிறுவியுள்ளார்.

இறைவன் திருமேனிகளின் படலம், கோயிலின் வரைபடமும் இந்நூலுக்கு அழகு சேர்க்கின்றன.

### 7.5. 1. 3. தோத்திரப் பாடற் சிறப்பு

இந்நூலில் உள்ள தோத்திரப் பாடல்களுள்சொக்கலிங்கஐயாவின் பாடல்கள் காலத்தால் முந்தியவை.

கற்பக விநாயகரை எவ்வாறெல்லாம் நகரத்தார் போற்றி வழி படுகின்றனர் என்ற உள்ளக் கருத்தைக் கம்பன் அடிப்பொடியின் பாடல் விளக்குகிறது.[18]

திரு. இராய. சொ. அவர்களின் "விநாயக வணக்கம்" தமிழ் அருச்சனைக்குரிய பாடலாக அமைந்துள்ளது.

## 7.5.2. பிறநூல்கள் :-

திரு. நா. அருணாசலன் தொகுத்த கவிதைநூலும், திரு. இரா கவன் முத்து எழுதிய சிறீ கற்பக விநாயகர் வெண்பா அந்தாதி யும் விநாயகப் பெருமானின் பொது இயல்புகளைத் தொகுத்துக் கூறியுள்ளன.

## 7 6. ஒன்பது நகரக் கோயில்கள் பற்றிய இலக்கியநூல்

இளையாத்தங்குடி, வயிரவன்பட்டி, நேமம், இலுப்பைக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய ஐந்து ஊர்க்கோயில்களைப் பற்றிய இலக்கியங்களே கிடைத்துள்ளன.

மாற்றூர், சூரைக்குடி வேலங்குடி இரணியூர் ஆகிய நான்கு ஊர்க்கோயில்களைப் பற்றிய இலக்கியங்கள் இனிமேல் தான் வெளிவரவேண்டும்.

ஒன்பது நகரக் கோயில்களையும் பற்றி முதன் முதலாக தொடர் கட்டுரையினை எழுதியவர்கள் டாக்டர் தமிழண்ணல் அவர்கள்.

"நகரத்தார்" இதழில் 1969 ஏப்பிரலில்ஒரு கட்டுரையைஎழுதி னார்கள். பின்னர் "நகர மலர்" இதழில் 1978 ஜுன் மாதம் முதல் 1980 சனவரி வரை இருபது இதழ்களில் இருபது கட்டுரைகளை எழுதினார்கள். அக்கட்டுரைகள் எளிமையாகவும் ஆழமாகவும் அமைந்துள்ளன.

கோயில் அமைப்பு, நிருவாகம், வழிபாடு, ஆகியனபற்றி இக் கட்டுரைகள் விரிவாகக் கூறுகின்றன.

இது, ஒன்பது நகரக் கோயில்கள்பற்றிய ஆய்வுநோக்கிமுதன் முறையாக எழுதப் பட்ட கட்டுரைகளின் தொகுப்பாகும்.

கல் வெட்டுகள் கூறும் வரலாற்றுஅடிப்படையில் செய்திகளை ஆராய்ந்து எழுதியுள்ள திறம் பாராட்டிற்குறியது.

ஆய்வேட்டினைப்போல அமைந்த இக்கட்டுரைகளை மேலும் விரிவாக எழுத வாய்ப்பு உள்ளது என்றுகூறி. இதனைப் பற்றி யாரேனும் ஒருவர் பிஎச். டி.பட்டத்திற்குஆராயவேண்டும்என்றும் முடிவுரையில் கூறியிருந்தார்கள் அதனைப் படித்ததன்விளைவாக வே ஆய்வாளர் ''ஒன்பது நகரக் கோயில்கள்'' தலைப்பைத் தேர்வு செய்தார்.

## 7. 7. முடிபுகள்:-

7. 7. 1. இளையாத்தங்குடி, வயிரவன்பட்டி, நேமம், இலுப்பைக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய ஊர்க் கோயில்களைப் பற்றி மட்டுமே இலக்கியங்கள் கிடைக்கின்றன.

7. 7. 1. 1. இளையாத்தங்குடி பற்றி மூன்று, வயிரவன்பட்டி பற்றி மூன்று, நேமம் பற்றி இரண்டு, இலுப்பைக்குடி பற்றி இரண்டு, பிள்ளையார்பட்டி பற்றி மூன்று ஆக 13 இலக்கியங்கிகள் அவை.

7. 7. 2. இவற்றுள் பெரும்பான்மையானவை தலபுராணங்களே. அவற்றில் இடம்பெறும் செய்திகள் உயர்வு நவிற்சியாகவும், புராணப்போக்கு உடையவையாக காணப்பெறுகின்றன.

7, 7. 2. 1 அச்செய்திகட்கிடையே உண்மைக்குத்துணை செய்யும் ஒளிக்கீற்றுகளாக, நகரத்தார் வரலாறு பற்றிய சில செய்திகளும், ஆகம முறையில் நகரக் கோயில்களும் வழிபாடுகள் நடைபெறுகின்றன என்ற செய்திகளும் அமைகின்றன.

7. 7. 3. 'பிள்ளையார்பட்டி தலவரலாறு' என்ற கம்பன் அடிப்பொடியின் நூலும், ஒன்பது நகரக் கோயில் களைப் பற்றி டாக்டர் தமிழண்ணல் எழுதியதொடர் கட்டுரைகளும் ஆய்வுப்போக்கில் அமைந்துள்ள, பயன்தரும், ஆழமான செய்திகளைக் கூறுகின்ற இலக்கியங்களாகும்.

## குறிப்பு:

## இலக்கியங்கள் கூறும் செய்திகள்

1. ரா. விசுவநாத ஐயர், இளையாற்றங்குடி மான்மியம், ப. X
2. மேலது, ப.8
3. மேலது – சுபத்திரன் சித்திபெறு படலம் பாடல் 68
4. மேலது - அசுரசங்காரப் படலம், பாடல்கள் 17-
5. வி. நடராசக்கவிராயர், வயிரவன் கோயிற்புராணம், அசுர சங்காரப் படலம், பாடல்கள் 102-103
6. ரா. விசுவநாத ஐயர், மு. நூ., அசுரசங்காரப் படலம், பாடல் 36
7. வி. நடராசக் கவிராயர், மு.நூ., மூர்த்தி விசேடப் படலம் பாடல் 1
8. மேலது – அசுர சங்காரப் படலம், பாடல் 277
9. மேலது – பாடல்கள் 278, 279
10. மேலது - பாடல்கள் 287, 289
11. நா. நடராசன், நேமம் கோவில் வரலாறு, ப. 11
12. மேலது - நாட்டுப் படலம் - பாடல்கள் 12, 15
13. பாடுவார் முத்தப்ப செட்டியார், செயங்கொண்டார் சதகம், பாடல் 3.
14. சுப்பிரமணிய ஐயர், இலுப்பைக்குடிப் புராணம், நைமிசப் படலம், பாடல் 19.
15. மேலது. - வயிரவப் படலம், பாடல் 65.
16. மேலது - சூடாமணிப்படலம், பாடல் 34, 35
17. மேலது - பாடல் 37, 38
18. சா. கணேசன். ''தேசி விநாயகப் பிள்ளையார் ஒருபா ஒரு பஃது'' பிள்ளையார்பட்டி தல வரலாறு - ப. 68.

# 8. ஒன்பதுநகரக் கோயில்களின் சமயப்பணி

சமயம் என்னும் சொல் சமை என்னும் வேர்ச் சொல்லிலிருந்து பிறந்தது. எனவே சமயம் என்றால் சமைப்பது - மனத்தைப் பண் படுத்துவது பக்குவப்படுத்துவது வாழ்வாங்கு வாழவைப்பது என்று பொருள் தருகிறது.

ஒன்பது நகரக் கோயில்களும் எவ்வாறு வாழ்க்கையைப் பண் படுத்துகின்றன. என்பதைக் கீழே காண்போம்.

## 8. 1. உடையவர்:-

நகரத்தார்களின் பண்டைய வரலாற்றில் யான், எனது, எங்-கள் செல்வ வளம் என்ற செருக்கான வாழ்க்கை காணப்படுகிறது. ஆணவம், கன்மம், மாயை ஆகியன அவர்களிடம் மிகுதியாக இருந்ததைக் கண்டோம். அவற்றால் அவர்கள் பெற்ற துன்பங் களே அதிகம். எல்லா வளமும் உடையவர்கள் தாங்களே என்று எண்ணிய காலம் வரை அவர்களுக்குச் சோதனை மேற்சோதனை களே வந்தன. அரசனே தலைவன் என எண்ணிப் பல அரசின் கீழ் வாழ்ந்தும் வேதனைகளே எஞ்சின.

தங்களது தலைவன் இறைவனே என்ற மெய்ஞ்ஞானம் பெற்ற பிறகே அவர்களுக்கு நிலையான வாழ்க்கை அமைந்தது. அந்த ஞானத்தின் விளைவாகவே இறைவனை உடையவர் என அழைத்தனர். இறைவனின் உடைமைப் பொருளாகத் தங்களைத் தாழ்த்திக் கொண்ட பிறகே வாழ்க்கையில் உயர ஆரம்பித்தனர்.

இவ்வாறு தொடர்ந்து வாழ்வாங்கு வாழப் பதி, பசு, பாசம் பற்றிய சிவச் சின்னங்கள் ஒன்பது நகரக் கோயில்களிலும், இலிங் கம், நந்தி. பலிபீடமாகக் காட்சி தந்து மௌன மொழியினால் சைவ சமயக்கருத்தை உணர்த்திக் கொண்டிருக்கின்றன.

## 8. 2. பல உருவ வழிபாடு:-

சைவர்களாக விளங்கிய நகரத்தார்கள் காவிரிப்பூம்பட்டிணத் தில் மரகத விநாயகரையும் உத்திரபதீசுவரரையும் வழிபட்டனர். இவ்வாறு விநாயகரையும் சிவனையும் மட்டுமே வழிபட்டு வந்த நகரத்தார்கள் ஒன்பது நகரக்கோயில் வழிபாட்டினை ஏற்றபிறகு அம்மனையும், வயிரவரையும், முருகனையும் திருமாலையும், கய லெட்சுமியையும் வழிபடத் தொடங்கினர்.

நகரக் கோயில்கள் பல உருவ வழிபாட்டை நகரத்தார்களுக்கு வழங்கி அனைவரின் மனத்திலும் தெய்விகம் பெருக வழி யமைத்தன.

சிவனுடைய பல தோற்றங்களான தட்சிணாமூர்த்தி, அடிமுடி காணாநாதர் ஆகிய உருவங்களைத் தேவகோட்டங்களில் இடம் பெறச் செய்து வழிபாட்டில் பல புதிய வழி வகைகளைக் கற்றுத் தந்தன.

## 8. 3. சமயப் பொறை:-

சைவ சமயத்தை மட்டுமே உயிர்நாடியாகக் கொண்ட நகரத் தார்களை அம்மன் வழிபாடு, முருகன் வழிபாடு, வயரவர் வழிபாடு, ஆகியவற்றில் ஈடுபடுத்தியது நகரக் கோயில்களே. இதனுடன் திருமால் வழிபாட்டையும் நகரக்கோயில்கள் ஏற்படுத்திக் கொடுத் துள்ளன. சைவத்துடன் வைணவத்தையும் கலந்து அளித்த சமயப் பொறை நகரக் கோயில்களின் தனிச் சிறப்பாகும். அதனா -லேயே வயிரவன் கோயிலில் இராமாயண ஓவியங்கள் இடம் பெற்றுள்ளன.

இளையாத்தங்குடி, மாற்றூர், நேமம், இரணியூர் ஆகிய ஊர்களில் நகரக் கோயில் சிவன்கோயிலாக இருப்பினும்அவற்றுள் திருமாலின் சிற்பம் இடம் பெறச் செய்துள்ளனர்.

இளையாத்தங்குடி, வேலங்குடி, இரணியூர் ஆகிய மூன்று ஊர்களிலும் தனியே பெருமாள் கோயில் கட்டியிருப்பது மேலும் பாராட்டப்பட வேண்டிய ஒன்றாகும்.

சமயக் காழ்ப்பினை வழிபடுவோரிடையே ஏற்படுத்தாமல் சமயப் பொறையினை நகரக் கோயில்கள் ஏற்படுத்துகின்றன.

## 8.4. வாழ்வாங்கு வாழ்ந்தவர்களை வழிபடச் செய்தல் :-

சைவ நெறி நின்று வாழ்வாங்கு வாழ்ந்த அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர், மாணிக்க வாசகருக்குச்செப்புத் திருமேனி எடுத்து அவர்களது பிறந்த நாளின்போது விழா கொண்டாட நகரக் கோயில்கள் வழிவகுத்தன.

மேற்கண்ட நால்வரும் நான்கு வகையான பத்தி வழிகளைக் (மார்க்கங்களைக்) கடைபிடித்தவர்கள். அவர்கள் வாழ்ந்துகாட்டிய நான்கு வகையுள் ஏதேனும் ஒரு வகையினைப் பின்பற்றினால் வாழ்வாங்கு வாழ முடியும் என நகரக் கோயில்கள் வாழ வழிகாட்டுகின்றன.

கீழ்க்கண்ட நான்கு வகையான வாழ்க்கை நெறிகளும் வீடுபேற்றினை அடைய உதவும்

**நான்கு வழிகள்**

| வகை | வழி | பதவி | அடையும் நிலை | உவமை. |
|---|---|---|---|---|
| 1. தாசமார்க்கம் | சரியை | சாலோகம் | பதமுத்தி | அரும்பு |
| 2. சற்புத்திரமார்க்கம் | கிரியை | சாமீபம் | ,, | மலர் |
| 3. சகமார்க்கம் | யோகம் | சாரூபம் | ,, | காய் |
| 4. சன்மார்க்கம் | ஞானம் | சாயுச்சியம் | பரமுத்தி | கனி |

தலைவனிடம் அடிமை ஒருவன் ஒழுங்காக வேலை பார்ப்பது போன்றது தாசமார்க்கம். தலைவனாகிய கடவுளிடத்தில் நம்பிக்யும் பத்தியும் கொண்டு அதிகாலையில் எழுந்து நீராடி தூய உடை தரித்து, இறைவன் விரும்பும் விபூதி, உருத்திராக்கம் ,சந்தனம், குங்குமம், திருமன் ஆகியவற்றை விதிப்படி அணிந்து கொண்டு கோயிலைத் தூய்மை செய்து, அருச்சனைக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்து நாவாரப் பாடி மனமாரச் சிந்தித்து வணங்கிட வேண்டும். அப்பர் வாழ்ந்து காட்டிய வழி இதுவேயாகும்.

சற்புத்திரமார்க்கம் என்பது கடவுளைத் தாயாகவும் தன்னைப் புதல்வனாகவும் எண்ணி அகத்தும் புறத்தும் வழிபடுவதாகும் இதனால் ஆணவம், கன்மம், மாயை, திரோதாயி, மாயேயம் என்ற ஐந்து வகைப் பாசங்களும் களையப்படுகின்றன. திருஞான சம்பந்தர் வாழ்ந்து காட்டிய வழி இதுவாகும்.

சன்மார்க்கம் என்பது மெய்யன்பர்கள் தமது வெளித் தோற்றங்களைத் துறந்து இறைவனோடு ஒன்றி இறையின்பம் நுகர்வது இறைவனின் நண்பர்போல வாழ்ந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள். வாழ்ந்து காட்டிய வழி இதுவாகும்

சம்மார்க்கம் என்பது கலைகள், புராணங்கள். வேதாகமங்கள் முதலிய சாத்திரங்கள் அனைத்தையும் ஆராய்ந்து அவற்றிலுள்ள சாரத்தைக் குருவினிடம் கேட்டுத் தெரிந்தவற்றை மேற்கொண்டு ஞானம் (அறிவு), ஞாதிரு (அறிவன்), நேயம் (அறியப்படு பொருள்) இவற்றைக் கடந்து, இம் மூன்றுமல்லாத சச்சிதானந்த வடிவமாக விளங்கும் பரம்பொருளை நிருவிகற்ப ஞானத்தால் வழிபாடு செய்வதாகும். மாணிக்கவாசகர் இவ்வகை வாழ்க்கை முறையையே வாழ்ந்து காட்டியுள்ளனர்.

இச் சமயக் குரவர்கள் நால்வரைத் தவிர வேறு பல அடியார்களைப் போலவும் நாம் வாழ முயலலாம் என்பதற்காகவே நகரக் கோயில்களில் அறுபத்து மூன்று நாயன்மார்களின் திருஉருவங்களை வரிசையாக அமைத்துள்ளனர். அத் திருக் கட்டமரபினுள் ஒருவராக இடம் பெற வேண்டும் என்னும் ஆவலைத் தூண்டும் வண்ணம் அறுபத்து மூன்று நாயன்மார்களும் நாம் வாழ வேண்டிய வழியினைக் கூறும் முன் மாதிரிப் பாத்திரங்களாக (Model Charac-ters) அமைந்துள்ளனர்.

திருநாவுக்கரசருக்கு வராத சோதனையா நமக்குவந்துவிட்டது என்று எண்ணிப் பார்த்தால் நமது துன்பங்களின் எடைமிகக் குறைவாகத் தோன்றும்.

எமனிடமிருந்தே மார்க்கண்டேயனைக் காப்பாற்றியவரா நம்மை இச்சிறு நோயிலிருந்து காப்பாற்றமாட்டார் என்று ஒருமணித் துளி எண்ணிப்பார்த்தால் நமது நோயின் கொடுமை குறையும்.

திருமாலும் பிரம்மாவும் தேடிக் காணமுடியாத திருவடியை நாம் காண முடிந்துள்ளதே என்று எண்ணிப் பார்த்தால் பெரும் பேருவகை தோன்றும்.

நடராசர் சிற்பத்தைப் பார்த்தால் தெற்குத் திசையை நோக்கிக் கால் தூக்கி ஆடும் தோற்றம்தெரிகிறது. தெற்குத் திசை எமனுடைய திசை எம பயம் உள்ளவர்கள் நடராசரை வழிபட வேண்டும் அவர் நெருப்பைக் கையிலேந்தியவர். எந்தத் துன்பத்தையும் தாங்கிக் கொள்ளும் வல்லமையைத் தருவார். மான் போலஎதற்கும் மருளும் நெஞ்சம் கொண்டவர்களுக்குத் துணிச்சலைத் தருவார். தேய்பிறைபோல் பாவத்தால் மெலிந்தவர்கள் இறைவனைச் சரணடைந்தால் எட்டி உதைய மாட்டார். அருள் உள்ளத்தோடு பாவ மன்னிப்புத் தந்து தலை மீது தூக்கி வைத்துக் கொண்டு மேலும் வளர வழிவகுப்பார். தவறான வழிகளிலேயே தொடர்ந்து சென்றால் முயலகனை மிதிப்பது போல நமக்குத் தண்டனையத் தருவார் என்பன போன்ற கருத்துக்களின் உருவகமாகத்தான் நடராசரின் திருமேனி அமைந்திருக்கிறது என்று எண்ணிப் பார்த்தால் இறைத்தன்மை, மனித இயல்வு, உலக இயற்கை ஆகிய அனைத்தும் தெரிய வரும்.

இவ்வாறு நகரக் கோயில்களில் உள்ள ஒவ்வொரு சிற்பமும் பல ஐயங்களுக்கு விளக்கம் தருகின்றன. இச் சிந்தனையுடன் கோயிலின் ஒவ்வொரு பகுதியையும் நோக்கினால் வாழ்கை வெறுப்பாக அமையாது. மறுபடியும் ஒரு ''மனிதப் பிறவியும் வேண்டுவதே இம் மாநிலத்தே'' என்று பாடத் தோன்றும்.

## 8. 5. வீடுபேறு அடைய வழி:-

நகரக் கோயில்கள் இறைவனின் குடிமக்களாக மக்கள் வாழ வேண்டும் என்று விரும்புகின்றன. இறைத்தொண்டு புரிய ஊக்குவிக்கின்றன. ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணப் பல்வேறு

சமூகப் பணிகளைச் செய்யத் தூண்டுகின்றன சிற்பங்கள், ஓவியங்கள் மூலம் வாழ்வாங்கு வாழும் தத்துவங்களை மௌன மொழியில் போதிக்கின்றன. தினசரி ஐந்து வேளை வழிபாட்டாலும் சிறப்புத் திருவிழாக்களாலும் இறையருள் பெற்றுய்ய வழிவகுக்கின்றன. சமயப் பணியும், சமுதாயப்பணியும், செய்து வாழ்வாங்கு வாழ வழி கூறுகின்றன. தீவினை புரியாது, நல்வினையாற்றி இறையின்பத்தில்திளைத்து வாழ வழி வகுத்துத் தருவதனால் மறுபிறவியின்றி வீடுபேறு அடையச் செய்கின்றது.

## 8.6. சமயப் பெரியோரைப் பேணிப் போற்றியமை:-

இளையாத்தங்குடியில் சமயப் பெரியவர்களுக்கு வரவேற்பும், விருந்தும், அளிக்கப்பட்டுள்ளன. அவர்களைப் போற்றிப்பல சமயப் பணிகளைச் செயல் படுத்தியுள்ளனர்.

1851 முதல் 1890 வரை 39 ஆண்டுகள் காஞ்சி காமகோடி பீடத்தில் அமர்ந்திருந்துஅருளாட்சி செலுத்திய 65ஆவதுபட்டம் சிறீ மகா தேவேந்திர சரசுவதி சுவாமிகள் அவர்கள் இளையாத்தங்குடியில் முத்தியடைந்தார்கள். அவர்களுடைய சமாதி நகரத்தார்காளால் கருங்கல் சிவாலயமாகக் கட்டப்பட்டிருக்கிறது. இன்றும் அங்கு வழிபாடு நடைபெற்று வருகிறது.

## 8.7. உலகச்சமய மாநாடு நடைபெற உதவியமை :-

காஞ்சிப் பெரியவர்கள் சிறீ சந்திரசேகரேந்திர சரசுவதி சங்கராசாரியார் அவர்கள் 1961 முதல் 1963 வரை தொடர்ந்து இரண்டரை ஆண்டுகள் இங்கு தங்கியபோது இளையாத்தங்குடிக் கோயிலார் பெரிதும் பேணிப் பாதுகாத்தனர்.

அவர்கள் 1962ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் நடத்திய வியாச வித்வத் சதசு என்ற பல்கலை மாநாட்டையும் சமயக் கருத்தரங்கினையும் சிறப்பாக நடத்த நகரத்தார்கள் பெரும் துணை புரிந்துள்ளார்கள். பல்வேறு சமயங்களைச் சேர்ந்த வெளிநாட்டு அறிஞர்களும், ஏராளமான பல்கலைக் கழகங்களைச் சேர்ந்த தத்துவ மேதைகளும் இச்சமய மாநாட்டில் கலந்து கொண்டது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது

## 8. 8: சைவ ஆகமக் கருத்தரங்கு நடத்தியமை:-

பிள்ளையார் பட்டிக் கோயிலில் 1974ஆம் ஆண்டுசெப்டம்பர் மாதம் 16 ஆம் நாள் சைவ ஆகமக் கருத்தரங்கு நடைபெற்றுள் ளது. அக்கருத்தரங்கில் பல தத்துவ அறிஞர்கள் கலந்து கொண்டு சைவ ஆகமங்களின் தனிச் சிறப்புகளை ஆராய்ந்து கருத்துரைத் தது மிகப் பெரிய சமயப் பணியாக அமைந்தது. அன்றைய நாளி லேயே 108 கலச அபிடேக விழாவும் நடைபெற்றது குறிப்பிடத் தக்கது.

## 8. 9. வேதப்பள்ளி நடத்துதல்:-

பிள்ளையார் பட்டியில் வேத ஆகமங்களைக் கற்றுக் கொடுக் கும் பள்ளியினைப் பிள்ளையார்பட்டிக் கோயில் நகரத்தார் இருவர் தனிப்பட்ட முறையில் ஏற்பாடு செய்துள்ளனர். இங்கு தேவாரம், திருவாசகமாகிய, தமிழ் வேதமும் இருக்கு, யசுர் சாமம், அதர்வண மாகிய வடமொழி வேதமும் கற்பிக்கப்படுகின்றன.

இங்கு பயிலும் மாணவர்கள் கல்விக் கட்டணம்ஏதும்செலுத்த வேண்டிய தில்லை. கல்வி, உணவு, தங்குமிடம் ஆகியன இலவச மாக வழங்கப் பெறுகின்றன. வேதக் கல்வி என்றும் வளர வேண் டும் என்பதற்காகப் பிள்ளையார் பட்டிக் கோயில் நகரத்தார் செய்து வரும் இச் சமயப்பணி சிறப்பித்துப் பாராட்டத்தக்கது.

## 8. 10. முடிபுகள்:-

8. 10. 1. நகரத்தார்கள் இறைவனையே தங்கள் தலைவனாக ஏற்றுக்கொண்டதை அவர்கள் இறைவனுக்குச் சூட்டி யுள்ள ''உடையவர்'' என்னும் பெயர் உணர்த்து கிறது.

8. 10. 2 சைவர்களாக விளங்கிய நகரத்தார்கள் பல உருவ வழி பாட்டில் ஈடுபடும் அளவிற்கு ஒன்பது நகரக்கோயில் கள் அவர்களைப் பக்குவப்படுத்தின.

8. 10. 3. சைவம், வைணவம் என வேறுபாடு கற்பிக்காமல் இரண்டையும் ஒன்றாக நோக்கி வழிபடும் சமயப் பொறையை வழங்கின.

8. 10. 4. வாழ்வாங்கு வாழ்ந்த சமயக் குரவர்கள், நாயன்மார் களை மாதிரிப் பாத்திரங்களாக (Model characters) முன்னிறுத்தி அவர்களை வழிபட்டு அவர்களைப் போல வாழ வழி அமைக்கின்றன.

8. 10. 5. நாள் வழிபாடு, சிறப்பு வழிபாடுகளின் மூலம் மக் களைச் சமயப் பணியிலும் சமுதாயப் பணியிலும் ஈடுபடுத்தி வீடுபேறு அடையச் செய்கின்றன.

8. 10. 6. சமயப் பெரியோர்களைப் பேணிப் போற்றி உலகச் சமயமாநாடு, சைவ ஆகமக் கருத்தரங்கு, வேதப் பள்ளி ஆகியன நடைபெறத் துணைபுரிந்து வரு கின்றன.

# 9. ஒன்பது நகரக் கோயில்களின் சமுதாயப்பணிகள்

பண்டைக் காலம் தொட்டுக் கோயில்கள் சமுதாயத்தின் ஆற்றல் மிக்க மையங்களாகவே அமைந்துள்ளன.

இன்று பல கோயில்களுக்கும் சமுதாயத்திற்கும் நெருக்கமான உறவில்லை. திருக்கோயில் வணிகக் கூடமாக உருமாற்றம் பெறுவதைத் தவிர்க்க வேண்டும் என்பார் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்.[1]

திருக்கோயிலைச் சார்ந்து, மீண்டும் திருநெறிய தொண்டு உயிர்ப்புப்பெறுதல்வேண்டும். திருக்கோயிலிலிருந்து வெளியேற்றப்பட்ட ஊராட்சி மன்றங்கள், கல்விச் சாலைகள், மருத்துவச் சாலைகள் மீண்டும் திருக்கோயில் வளாகத்துக்குள் வந்தாக வேண்டும். என்பார் அவர்.

பண்டைக்காலம் போலவே ஒன்பது நகரக் கோயில்களும் சமுதாயத்தின் ஆற்றல் மிக்க மையங்களாகவே இன்றும் அமைந்திருப்பது மிகச் சிறப்பாகக் குறிப்பிடப்பட வேண்டிய செய்தியாகும்

கோயிலைத் தழுவிய குடிகளும், குடிகளைத் தழுவிய கோயிலும் எனப் பழந்தமிழ்ச் சமுதாய அமைப்பு இன்றும் நடைமுறையில் செயற்படுத்தப்பட்டு வருகின்றது.

"நம் ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் திருக்கோயில் தத்துவம் மேலாண்மை பெற்று விளங்கவேண்டும்....திருக்கோயில் பொது நிதி ஆதாரத்தை வலிமைப்படுத்தி வளமாக வாழ வாய்ப்

பிழந்தவர்களுக்கு, வாய்ப்பை உருவாக்கி உதவி செய்து அவர்களை உயர்த்த வேண்டும்'' என்பார் அவர்.[2] இச் சமுதாயச சிந்தனைகளை இன்றும் நகரக் கோயில்கள் செயற்படுத்தி வருகின்றன.

## 9.1. கல்விப் பணி:-

இளையாத்தங்குடிக் கோயில் நிருவாகத்தினர், இளையாத்தங்குடியில் 1939ஆம் ஆண்டு ஒரு தொடக்கப்பள்ளியினைக் கட்டி -யுள்ளனர் அரசு மானிய உதவியில் அப்பள்ளி இன்றும் நடைபெற்று வருகின்றது. இளையாத்தங்குடி மற்றும்அதைச் சுற்றியுள்ள 24 கிராமக் குழந்தைகளின் கல்வி வளர்ச்சிக்கு இப்பள்ளி பெரிதும் உதவிவருகிறது 1939ஆம் ஆண்டு 148 மாணவ மாணவியர் பயிலவசதி செய்யப்பட்டிருந்தது.[3]

தற்பொழுது 250 மாணவ மாணவியர்களுகது ஐந்து ஆசிரியர்கள் கல்வி கற்பித்து வருகின்றனர். முதல் வகுப்பிலிருந்து ஐந்தாம் வகுப்புவரை படிக்க இப்பள்ளி உதவி வருகின்றது.

வயிரவன்பட்டிக் கோயிலார் தனியாக ஒரு கல்வி நிலையத்தை கட்டவில்லை எனினும், கல்வி பயில நிதி உதவி அளித்து வருகின்றார்கள். பதினொன்றாம் வகுப்புவரை பயிலப்புத்தகங்கள் பயிற்சி ஏடுகள் வாங்க நிதி உதவி செய்து வருகின்றனர். தேவையான நூல்களை வாங்கியதற்கான பற்றுப்பட்டியலை உரியஆசிரியரின் பரிந்துரையுடன் அளித்தால் அதற்குரிய பணத்தைத் தந்து விடுகின்றனர். கல்லூரிக் கல்வி பயில விரும்பும் மாணவர்களுக்குத் தேவையான கல்லூரிக்! கட்டணம், பாடப் புத்தகங்கள், பயிற்சி ஏடுகள், தங்க இடவசதி, உணவு வசதி போக்குவரத்துச் செலவு ஆகியனவற்றை வயிரவன்பட்டிக் கோயில் நகரத்தார் அறக்கட்டளை ஏற்றுக் கொள்கிறது.[4] தற்பொழுது 12 மாணவர்கள் வயிரவன் பட்டி நகரவிடுதியில் தங்கித் திருப்பத்தூர் ஆறுமுகம்பிள்ளை சீதையம்மாள் கல்லூரியிலும் காரைக்குடி அழகப்பா பல்கலைக் கழகத்திலும் பயின்று வருகின்றனர். இவ்வுதவி வயிரவன்கோயில் மாணவர்களுக்கு மட்டுமே வழங்கப்படுகிறது.

இலுப்பைக்குடிக் கோயிலார் செய்துள்ள கல்விப்பணி மிகப் பெரியது 1955 ஆம் ஆண்டு காரைக்குடி அழகப்பா கல்லூரியை நிறுவுவதற்கு இடம் தந்து உதவியதுடன், அங்கு ஆசிரியர் பயிற்

சிக் கல்லூரிக்காகச் சுமார் இரண்டு இலட்சம் ரூபாய்மதிப்புக்குரிய கட்டடத்தையும் தந்து கல்விப் பணிக்குப் பெரும் உதவி புரிந்துள் ளனர்.[5] இது சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது.

பிள்ளையார்பட்டிக் கோயிலார் வேதம் கற்பிக்கும் பள்ளி யினை நிருவகித்து வருகின்றனர். இங்கு தமிழ்வேதமும் வட மொழிவேதமும்கற்பிக் கப்பட்டு வருகின்றன. பிள்ளையார்பட்டிக் கோயிலைச் சார்ந்தநகரத்தார் சிலர் தனிப்பட்ட முறையில் தங்கள் கோயில் மாணவர்கட்கு புத்தகச் செலவு'விடுதிக்கட்டணம் ஆகிய வற்றைக் கொடுத்துதவிக் கல்விப் பணி புரிந்து வருகின்றனர்.

ஒன்பது நகரக் கோயிலையும் சேர்ந்த நகரத்தார்கள் மதுரை, சென்னை, தஞ்சை, விழுப்புரம், ஈரோடு, சேலம், பெங்களூர், திரு நெல்வேலி, திருச்சி, முதலிய ஊர்களில் நகரத்தார் சங்கம் என்ற அமைப்பினை வைத்துள்ளனர் இச் சங்கங்கள் கல்வி பயில நன் கொடை, வட்டியின்றித் திரும்பச் செலுத்தும் பணஉதவி, மிகக் குறைந்த வட்டியுடன் திரும்பச் செலுத்தும்பண உதவி ஆகியன வற்றை நகரத்தார் குடும்ப மாணவர்கட்கு வழங்குகின்றன. கல்வி யில் தலை சிறந்து விளங்கும் மாணவர்களுக்குப் பரிசு கொடுத்துப் பாராட்டி அனைவரும் முயன்று படிக்கத் தூண்டுகின்றன.

## 9. 2- மருத்துவச்சாலை :

இளையாத்தங்குடிக் கோயிலார் மட்டும் மகப்பேறு மருத்துவ மனையினை 19-8-1949இல் உருவாக்கியுள்ளனர். குழந்தைகள் நல மையமும் (சிசு சம்ரட்சண சாலை) இதனுடன் இணைக்கப் பட்டுள்ளது.

இளையாத்தங்குடி நிருவாகக் குழுவின் மேலாளராக இருந்த திரு. டி. எசு. கிருட்டிணசாமி என்பவர் தேவகோட்டைச் செஞ் சிலுவைச் சங்கத்தின் கிளையொன்றை இளையாத்தங்குடியில் நிறுவ ஏற்பாடு செய்தார்.[6] அதன் ஆதரவில் 10-4-1946 முதல் குழந்தைகள் நல மையம் இயங்க வழிவகுத்தார். அதற்கானகட்ட டத்தினை இக்கோயில் நிருவாகத்தினர் கட்டிக்கொடுத்துள்ளனர். அன்றைய நாளில் ரூபாய் 7,000 பெறுமானமுள்ள இடமும், சுமார் ரூபாய் 5,000 செலவில் கட்டடமும் இதற்காக வழங்கப் பட்டுள்ளன.

மகப்பேறு மருத்துவ மனைக்காக ரூபாய் 5,000 நன்கொடை அறிவிக்கப்பட்டுள்ளது. இதனுடன் என்றென்றும் அதற்கான

மின்கட்டணத்தையும் குடிதண்ணீர் வசதியினையும், மருந்துச் செலவின் ஒரு பகுதியையும் அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இளையாத்தங்குடியினைச் சுற்றியுள்ள 12 கிராமங்களில் உள்ள நாலாயிரம் பெண்களுக்கும் இம் மகப்பேறு மருத்துவமனை பெரிதும் உதவி வருகிறது.

ஆய்வாளரும், அவர் வாழ்க்கைத் துணைவியாரும் இம்மகப் பேறு மருத்துவ மனையிலேயே பிறந்தவர்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

மகப்பேறு வசதியுடன் குழந்தைகளுக்குப் பால் வழங்கும் திட்டமும் இங்கு செயற்பட்டு வந்துள்ளது. ஆண்டு ஒன்றுக்கு 10,277 குழந்தைகளுக்குப் பால் வழங்கியுள்ளனர்.[7] ஆண்டு ஒன்றுக்கு 3500 பேர் மருத்துவவசதி பெறுகின்றனர்.

3-12-1948 முதல் இம் மருத்துவமனையின் நிருவாகச் செல வினை இராமநாதபுரம் மாவட்ட வாரியத்திடம் ஒப்படைத் துள்ளனர்.[8] (Ramanathapuram District Board).

அதன் பின்னரும் மருத்துவ மனைக்கான படுக்கைகள், குளியல் அறை, கழிப்பிடம், சுற்றுச்சுவர் ஆகியனவற்றிற்கு இளை யாத்தங்குடி நகரத்தார் நன்கொடை வசூலித்துக்கொடுத்து உதவி யுள்ளனர் (மகப்பேறு மருத்துவ மனைக் கட்டிட வரவு செலவுக் கணக்கு விபரம் பின்னிணைப்பில் உள்ளது )

## 9.3. திருமணத்திற்கு உதவும் நிறுவனம் :-

அன்பு கெழுமிய இல்லறமும் தெய்விக மதிப்புடையது. எனவே திருமணம் நடத்தப் போதிய வசதி இல்லாதவர்களுக்கு உதவுவதும் ஒரு திருத்தொண்டே எனக் கொண்டு பிள்ளையார் பட்டிக் கோயில் நகரத்தார் நிதி உதவி செய்து வருகின்றனர். இவ்வுதவி தங்கள் கோயிலார்க்கே வழங்கப்படுகிறது.

ஒரு திருமணத்திற்கு 2, 500 ரூபாய் அன்பளிப்பாக அளிக் கின்றனர் திருமண நாளன்று இலவச உணவு வசதியினை அளிக் கின்றனர். இவ்வாறு வருடத்திற்குப் பத்துத் திருமணங்களை நடத்தி வைக்கின்றனர்.

திருச்சி நகரத்தார் சங்கத்தினர் இதனைப் பின் பற்றி வசதிக் குறைவான நகரத்தார்க்குத் திருமணங்கள் மூலம்ஒளியேற்றி வைக்

கின்றனர். இவர்களது முயற்சியால்பிள்ளையார் பட்டியில் கூட்டுத் திருமணங்கள் நடை பெறுகின்றன சிக்கனமாகச் செலவிடுவதற் காக ஆறு திருமணங்களை ஒரே மண மேடையில் நிகழ்த்து கின்றனர்.

பிள்ளையார் பட்டிக் கோயில் நிருவாகிகளைப் போலத் திருச்சி நகரத்தார் சங்க நிருவாகிகளும் சமுதாயத் தொண்டு புரிவதுமிகவும் குறிப்பிடத்தக்கது. ‘நகரக் கோயில் எவ்வழி; நகரத்தார் சங்கம் அவ்வழி’எனப் பின்பற்றிவரும் நகரத்தார் சங்கங்களின் சமூகத் தொண்டுகள் பாராட்டிற்குரியன.

## 9.4. நீதி மன்றம்-:

நகரக் கோயில்கள் நீதி மன்றமாகவும் பணியாற்றியுள்ளன. வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்குவதற்காகவே ஒவ்வொரு கோயில் நகர விடுதியிலும் 'மறியல் கட்டு, என்ற பகுதி கட்டப் பெற்றிருந்தது. வயிரவன்பட்டி நகர விடுதியில் இன்றும் மறியல் கட்டினையும், அது நடைபெற்றதற்கான பதிவேடுகளையும் காணமுடிகிறது. நிருவாகத் திறமைபற்றிய பகுதியில் இக்கருத்து விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

## 9. 5. நீர் நிலைப் பாதுகாப்பு:-

நகரக் கோயில்கள் என்றால் அருமையான ஒரு கோயிலும் அழகான ஓர் ஊருணியும் நினைவுக்கு வரும். அந்த அளவிற்கு அதிகமான ஊருணிகளை அமைத்துள்ளனர்.

நகரக் கோயில்களை அடுத்து நகரத்தார்கள் தாங்கள் வசிக்கும் ஊர்களில் எடுத்த சிறு பிள்ளையார் கோயிலுக்குக் கூடத் தனியாக ஓர் ஊருணியை அமைத்துள்ளது குறிப்பிடத்தக்கது.

இளையாத்தங்குடியில் ஏழுவகைப் பிரிவினர் ஏழு ஊருணி களை ஏற்படுத்தியிருப்பது மிகவும் சிறப்பானது. சின்னஞ்சிறிய ஊரில் ஏழு ஊருணிகளா என இன்றைக்குப்பலரும் வியப்படைகின் றார்கள். ஒரு பழைய ஊருணியைச்சீரமைக்கவே பெரும் பாடுபடும் இக்காலத்தினர், எவ்வாறு ஏழு ஊருணிகளையும் இவ்வளவு அழகாக அமைத்தார்கள் என ஆச்சரியப்படுகின்றனர். அதிலும் கிங்கினிக்கூராரின் ஊருணியைப் பார்ப்பவர்கள் உறுதி-யாக மயக்கத்தில் நீந்துவார்கள். அவ்வளவு கலைச்சிறப்போடு ஊருணியைக் கட்டியுள்ள திறம் வியந்து பாராட்டுவதற்குரியது.

ஊருணியின் பயன்கள் மிகப்பலவாகும். ஆலயத் தூய்மைக்கும் குடிப்பதற்கும், குளிப்பதற்கும், விவசாயத்திற்கும். ஊருணி நீர் பெரிதும் தேவைப்படுகிறது. அதிகம் மழை பெய்யாத பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் எப்போதேனும் பெய்யும் மழை நீரைத்தேக்கி வைத்துக் கொள்ள இவ்வூருணிகள் மிகுதியும் பயனுடையனவாகும்.

## 9. 6. விழவு மலி வாழ்க்கை :

திருவிழாக்கள் கொண்டாடுவதன் முதற் பயன் இறையருள் பெறுதல் ஆகும். எனினும் இரண்டாவது பயன் பல வகையான தொழிலாளர்களுக்கும் நல்வாழ்வு கொடுத்தலாகும். ஓரூரில் திரு விழா எனில் அவ்வூர் விவசாயிகளுக்கு நெல் விற்பனையாகிறது. அரவை ஆலைக்கு வேலை கிடைக்கிறது. உணவு விடுதிகள் பெருகுகின்றன. போக்குவரத்து அதிகமாகிறது துணிக்கடைகளில் விற்பனை கூடுகிறது; தையல்காரர்களுக்கு வேலை பெருகுகிறது; புதியவீடுகள் கட்டப்பெறுகின்றன; பழையவீடுகள் சீர்திருத்தப் படுகின்றன; இதனால் கொத்தனார், தச்சர், கொல்லர் முதலி யோருக்கு வேலை கிடைக்கிறது. திருவிழா நகைகளும், பொம்மை களும் அதிகமாக உற்பத்தி செய்யப்படுகின்றன. இவ்வாறு ஆங் காங்கே தேங்கிக்கிடக்கும் பொருளாதாரம் அனைவரின் கைகளி லும் தவழ்ந்து சுற்றுகிறது. திருவிழாவினால் அனைவருக்கும் இன்பம் பெருகுவதற்கு இவையும் காரணங்களாக அமைகின்றன.

பல்வேறு கலை நிகழ்ச்சிகள் கண்ணுக்கும் செவிக்கும் களிபேரு வகை கூட்டும். இல்லங்களில் எல்லாம் விருந்தினர்கள் மகிழ்ந் திருப்பார்கள்.

இறைவனின் திருவீதி உலா அனைவர் நெஞ்சிலும் கருணை யையும் பத்தியையும் ஊட்டும்.

திருத்தேர் விழா சமுதாயத்தினர் அனைவரும் ஒருங்கிணைந்து வலிமையுடன் இருப்பதை எடுத்துக் காட்டும்.

இவ்வாறு அனைவரையும் மகிழ்ச்சியில் திளைக்கவைக்கும் பல திருவிழாக்கள் முன்பு ஒன்பது நகரக் கோயில்களிலும் நடை பெற்றுள்ளன. தற்பொழுது இளையாத்தங்குடி, வயிரவன்பட்டி, இலுப்பைக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய ஊர்களில் மட்டுமே திரு விழாக்கள் அதிகமாக நடைபெறுகின்றன. மற்ற நகரக்கோயில்

களில் திருவிழாக்கள் இப்பொழுது நடைபெறாமைக்கான காரணங்கள் வழிபாட்டுப் பகுதியில் ஆராயப்பட்டுள்ளன. இனி விழாக்கள் நடைபெற மேற்கொள்ள வேண்டிய முயற்சிகள் பற்றிய கருத்துகளும் பரிந்துரைக்கப்பட்டுள்ளன.

## 9. 7. தமிழாய்வு:-

"மானிட நாகரிகத்திற்கு ஊற்று தாய் மொழி, தாய் மொழிச் சிந்தனையில் வளர்ந்த சமுதாயம்தான் வளரும்; மேம்பாடு அடையும் தமிழரின் தாய் மொழியாகிய தமிழ், திருக்கோவில் வளாகத்தில் வளர்ந்தது! தமிழ், திருக்கோவில் தத்துவத்திற்கு உருக்கொடுத்தது. சங்கப்புலவர்களின் தலைவனாக இறைவன் அமர்ந்து தமிழை ஆய்வு செய்தனன். அவன் மட்டுமா? உமையம்மையும் உடனிருந்து ஆய்வு செய்தாள். ஆறுமுகச் செவ்வேளும் அமர்ந்து ஆய்வு செய்தான். திருக்கோயில் வளாகத்திற்குள் தமிழ்ச் சங்கம் இருந்தது. தமிழறிஞர்கள் கூடினர். தமிழை ஆய்வு செய்து வளர்த்தனர்" என்பார் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்.[9]

ஒன்பது நகரக் கோயில்களும் தமிழ் ஆய்வில் பங்கு கொள்கின்றன.

தமிழின் மூன்று பகுதிகளான இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத் தமிழ் ஆகிய மூன்றும் வளரப் பல்வேறு நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்துள்ளனர்.

சிறந்த தமிழறிஞர்களின் ஆய்வுரைகள் தனிச் சொற்பொழிவாக ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. மேலும் பட்டிமன்றம், வழக்காடு மன்றம் ஆகிய நிகழ்ச்சிகளின் மூலமாகத் தமிழ்க் காப்பியங்களும், சமுதாயப் போக்குகளும் அலசி ஆராயப் பெறுகின்றன

இசைக் கலைஞர்கள், நாட்டியக் கலைஞர்கள், நாடகக் கலைஞர்கள் ஆகியோருக்கும் விழாக்களில் வாய்ப்பளித்துக்கொள்வதெல்லாம் தமிழ் முழக்கம் கேட்கச் செய்கின்றனர்.

திருக்குட நன்னீராட்டு விழாவின் போது ஏற்பாடு செய்யப்படும் சிறப்பு நிகழ்ச்சிகளும், விழாவின் பின் வெளியிடப்பெறும் சிறப்பு மலரும் தமிழாய்வில் பெரும்பங்கு வகிக்கின்றன. திருக்குட நன்னீராட்டு விழா நாட்களில் அதிக அளவு தமிழ் வளர்ச்சியில் நகரக் கோயில்கள் பங்காற்றுகின்றன. பிற விழாக்களில் தமிழாய்

வின் எண்ணிக்கை குறைந்தாலும், ஆழமான கருத்தரங்கங்கள் சில இடம் பெறுகின்றன.

இளையாத்தங்குடி நிருவாக அலுவலகத்தில் மிக அரிய நூல்களைக் கொண்ட ஒரு நூலகம் இயங்கி வருகிறது. பண்டைக் காலத் தமிழ்நூல்கள் ஆங்கில நூல்கள், வடமொழி நூல்கள் இந்நூலகத்தில் அதிகமாகக் காணப்படுகின்றன.

## 9. 8. முடிபுகள் :

9. 8. 1. கோயிலைத் தழுவியகுடிகளும், குடிகளைத்தழுவிய கோயில்களுமாக ஒன்பது நகரக் கோயில்களும் அவற்றைச் சார்ந்த மக்கள் சமுதாயமும் இயங்கி வருகின்றன.

9. 8 2. ஒன்பது நகரக் கோயில்கள் கல்விப்பணி மருத்துவப்பணி, திருமண உதவி, நீதிமன்ற அமைப்பு, நீர்நிலைப் பாதுகாப்பு, திருவிழாக்கள், தமிழாய்வு போன்ற மிகச்சிறந்த சமுதாயப்பணிகளை ஆற்றி வருகின்றன.

---

குறிப்புகள்

ஒன்பது நகரக் கோயில்களின் சமுதாயப் பணிகள்

1. குன்றக்குடி அடிகளார் – ஆலயங்கள் சமுதாய மையங்கள்- ப 41
2. மேலது - ப. 42
3. இளையாத்தங்குடி தேவஸ்தானம் – அட்மினிஸ்ட்ரேஷன் ரிபோர்ட் 1939 - ப 12.
4. நகரவிடுதி - மேலாளர் - ந. மாணிக்கம் - நேர்காணல் - 10-1-1988.
5. இலுப்பக்குடி திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழாமலர் ப. 2
6. இளையாத்தங்குடி பிரசவவைத்திய சாலை வார்டு கட்டிடங்களின் திறப்பு விழாவில் 19-8-1944இல் வாசிக்கப்பெற்ற அறிக்கை. ப. 3.
7. மேலது-ப. 5.
8. அரசு ஆணை எண். 3690 பொதுசுகாதாரம் 3-11-1948.
9. குன்றக்குடி அடிகளார் – மு. நூ. ப. - 36

# 10. ஆய்வு முடிபுகள்

இவ்வாய்வில் ஆய்ந்து காட்டப்பெற்ற முடிபுகளுள், மிக இன்றியமையாமுடிபுகள் இங்கே வரிசைப்படுத்தப் பெற்றுள.

10.1. நகரத்தார்கள் பெற்ற உலகியல் துன்பங்களே அவர்களை இறையியல் நெறியில் பழுத்த சிவபத்தர்களாக மாற்றியுள்ளன. நகரத்தார்கள் இறைவனையே தங்கள் தலைவனாம் ஏற்றுக் கொண்டதை அவர்கள் இறைவனுக்குச் சூட்டியுள்ள ''உடையவர்'' என்னும் பெயர் உணர்த்துகிறது.

10.2. பிறப்பு முதல் இறப்பு வரை கோயிலைச் சார்ந்து வாழ்ந்து, கோயிலையே வாழ்வின் மையமாகக்கொண்டு கோயில்வழி நாகரிகத்தைக் கடைப்பிடிப்பதால், அக்கோயில் (நகர்) எனும் பொருளிலேயே நகரத்தார் என்ற சிறப்புப் பெயர் ஏற்பட்டது.

10.3. பாண்டிய நாட்டிற்கு வந்தபிறகு, முதலில் ஏழு நகரக் கோயில்களை மையமாகக் கொண்டு வாழ்ந்துள்ளனர்.

10.4. இளையாத்தங்குடியின் ஒரு பிரிவினராகிய திருவேட்பூருடையார் என்ற வகையினர் கி.பி. 1278 இல்இளையாத்தங்குடியிலிருந்து. பிரிந்து சென்று இரணியூர் பிள்ளையார் பட்டி ஆகிய இரு கோயில் பிரிவுகளைப் புதிதாகத் தோற்றுவித்துள்ளனர். இதனால் 13 ஆம் நூற்றாண்டில் ஏழு நகரக்கோயில்கள், ஒன்பது நகரக் கோயில்களாக வளர்ந்துள்ளன.

10.5. மனித உடம்பின் உருவமாகவே கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன.

10.6. நகரத்தார் கோயிற் பாணி வருமாறு: சிவனின் அரு உருவத் தோற்றமான இலிங்கம்கருவறையில் இருக்கும் அம்மன், வயிரவர் சோமாசுக்கந்தர், விநாயகர், முருகன் கயலக்குமி, சண்டேசர், ஆகியோருக்கான ஏழு சிற்றா லயங்கள் அதைச் சுற்றி அமைந்திருக்கும். தட்சிணா மூர்த்தி, நவகோள்கள், அறுபத்துமூவர், சூரியர், சந்திரர் ஆகியோருக்கெனத் தனித்தனிமண்டபங்கள் அமைந்திருக்கும்.

10.7 மூலவர் சிற்பத்தின் அளவினை 25 (பஞ்சவிம்சப்) பொருத்தங்களைப் பார்த்து முடிவெடுத்துள்ளனர். அம்மூலவரின் சிற்பத்திற்கு ஏற்றாற்போலவே பிற தெய்வச் சிற்பங்கள், மண்டபங்கள், ஆகியவற்றின் அளவுகளை முடிவு செய்துள்ளனர்.

10.8. கல்வெட்டு உணர்த்தும் காலத்தாலும் (கி. பி. 6 ஆம் நூற்றாண்டு), இரு திருக்கரங்களுடன் அமைந்திருக்கும் சிற்ப இலக்கணத்தாலும், பிள்ளையார்பட்டித் தேசி விநாயகப் பிள்ளையாரின் சிற்பமே, இந்தியாவில் நமக்குக் கிடைத்துள்ள விநாயகர் சிற்பங்களுள் மிகத் தொன்மையான ஒன்று என்பது ஆய்வாளரின்கருத்து.

10.9. நான்கு வகையான தட்சிணாமூர்த்தி வடிவங்களுள் ஞான தட்சிணாமூர்த்திசிற்பமே ஒன்பது நகரக் கோயில்களிலும் காணப்படுகிறது.

10.10. வயிரவன்பட்டி ஓவியங்களிலும், இலுப்பைக்குடித் தேர்ச் சிற்பங்களிலும் பாலியல் காட்சிகள் காணப்படு கின்றன. சமண சமயக் கருத்திற்கு எதிராக, இல்லறத் திலிருந்து கொண்டே வீடுபேறு அடையமுடியும் என்ற கொள்கையை நிலைநாட்ட இப்பாலியல் காட்சிகளை அமைத்துள்ளனர்.

10, 11. வயிரவன்பட்டியில் உள்ள சன்டேசர் சிற்றாலயம் ஒற்றைக் கல்லைக் குடைந்து செய்யப்பட்ட ஒற்றைக் கற்றலி என்பது குறிப்பிடத்தக்கது.

10. 12 ஒன்பது நகரக் கோயில்களின் தனித்தன்மையாகக் கட்டடக் கலையும் குறிப்பிடத் தக்கவை பள்ளப்பத்தி முறை, முழிமையான கற்கூரைஅமைப்பு, கருவறையில் கல்லால் அமைந்த நிலவறை, பாதுகாப்புப் பெட்டக வசதி, கற்சாளரங்கள், கற்குழாய், கற்சங்கிலி அமைத்தல் ஆகியனவாகும்

10. 13. தலவிருட்சங்களை வழிபடும் பண்டைய மரபு ஒன்பது நகரக் கோயில் களிலும் காணப்படுகிறது.

10. 14. அசுரர்களை அழிக்க விநாயகர், வயிரவர், முருகன் ஆகியோர் தோன்றினர் என நம்புவதால் இம்மூன்று தெய்வங்களையும் நகரத்தார் அதிகமான சிறப்புடன் வழிபடுகின்றனர்.

10. 15. ஒன்பது நகரக் கோயில்களிலும் காமிக ஆகமத்தில் உள்ளவாறு நாள் தோறும் ஐந்து வேளை பூசை நடைபெறுகிறது.

10. 16. இளையாத்தங்குடி, மாற்றூர், வயிரவன் பட்டி இலுப்பைக்குடி பிள்ளையார்பட்டி ஆகியஊர்க்கோயில்களில் மட்டுமே தற்பொழுது திருவிழாக்கள் நடைபெற்று வருகின்றன.

10. 17. நகரக் கோயில்களைச் சார்ந்துள்ள நாட்டார்களின் அம்மன் கோயில்களையும் பேணிப் பாதுகாத்து அக்கோயில் விழாக்களையும். நகரக் கோயில்!நிருவாகிகள் நடத்துவது மனிதாபிமானத்தையும் உண்மையான இறைத் தொண்டையும் நிருபிக்கின்றன.

10. 18. குருவழிபாடு நாகவழிபாடு ஆகியன நகரத்தார்களின் வழிபாடுகளுள் தனித்தன்மை வாய்ந்தவையாகும்.

10. 19. ஒரு தலைவர், ஒரு செயலாளர், ஒரு பொருளாளர் சற்றேறக்குறைய முப்பது உறுப்பினர்கள் கொண்ட நிருவாகக்குழு முறை பொதுவாகக் காணப்படுகிறது.

10, 20. கோயில் நிருவாகத்திற்கான பொருளைப் புள்ளி வரி மூலமும், திருக்குட நன்னீராட்டு விழா போன்ற அதிக

மான பொருளாதாரத் தேவைகளுக்குச் சொத்து வரி மூலமும், அவ்வக் கோயிலைச் சார்ந்த புள்ளிகள் செலுத்தி வருகின்றனர்.

10.21. கோயில் நடைமுறைச் செலவுகட்காகத் திரட்டும் பணத்தை முதலாக்கி, முதலைச் செலவிடாமல், வைப்பு நிதியாக அதனை வைத்து அதிலிருந்து கிடைக்கும் வட்டித் தொகையிலேயே செலவு செய்வதால், தொடர்ந்து கோயில் நடைமுறைப் பணிகள் தடையின்றி நடைபெறுகின்றன.

10.22. நகரத்தாரின் நிருவாகத்தில் பெரும் குறையாகக் குறிப்பிடத் தக்கது திருக்கோயில் திருப்பணியின்போது கல்வெட்டுகளையும், பழுதுபட்ட கற் சிற்பங்களையும் அப்புறப்படுத்தி விடுவதே ஆகும்

10.23. கல்வெட்டுகள், அக்கால கட்டிடத்தில் செட்டிநாட்டுப் பகுதியில் அமைந்திருந்த வளநாடு, நாடு, பெருந்தென் பழமையான ஊர்ப்பெயர், கோயில் பெயர், இறைவன் பெயர், இறைவி பெயர் ஆகியனவற்றைத் தெரிவிக்கின்றன.

10.24. நகரக் கோயில்கள் முன்பு சட்ட மன்றமாகவும், ஆட்சி மன்றமாகவும், நீதி மன்றமாகவும், விளங்கிச்சமுதாயப் பணிபுரிந்துள்ளன. இன்றும் கல்விப்பணி, மருத்துவப் பணி,திருமண உதவி, நீதிமன்ற அமைப்பு, நீர்நிலைப் பாதுகாப்பு, திருவிழாக்கள், தமிழாய்வு போன்ற மிகச் சிறந்த சமுதாயப் பணிகளை ஆற்றி வருகின்றன.

மனித உடல் அமைப்பும், கோயில் கட்டட அமைப்பும் :





## 3. நகரக்கோயில் பொதுத் தன்மைகள்:




1. சிவலிங்கம்
2. நடராசர்
3. அம்மன்
4. பள்ளியறை
5. வயிரவர்
6-10 தேவகோட்டத் தெய்வங்கள்:
   நடமாடும் விநாயகர்
   தட்சிணாமூர்த்தி
   அடிமுடிகாணா நாதர்
   பிரமன்
   துர்க்கை
11. சண்டேசர்
12. நவகோள்கள்
13. சோமாசுக்கந்தர்
14. விநாயகர்
15. முருகன்
16. கயலக்குமி

4. இளையாத்தங்குடிக் கோயில் அமைப்பு:




1. கைலாசநாதர்
2. வயிரவர்
3. சுக்கிரவார அம்மன்
4. பள்ளியறை
5. நித்தியகல்யாணி
6. நடமாடும்விநாயகர்
7. தட்சிணாமூர்த்தி
8. அடிமுடி காணாநாதர்
9. பிரமன்

10. துர்க்கை
11. சண்டேசர்
12. நடராசர்
13. விநாயகர்
14. சோமாசுக்கந்தர்
15. விசுவநாதர் & நாகம்
16. பெருமாள்
17. முருகன்
17.அ இலக்குமி

18&24 நந்தி
19&25 பலிபீடம்
20. சூரியன்
21. சந்திரன்
22. அரசமங்கல நாத சுவாமி
23. பேரசெந்தூர் விநாயகர்
24. கொடிமரம்
27. பெருமருதூர் விநாயகர்
28 வெளிமண்டபம்

# 5. மாற்றூர்க் கோயில் அமைப்பு




1. ஐந்நூற்றீசர்
2. பெரியநாயகி
3. வயிரவர்
4. பள்ளியறை
5 நடராசர்
6-10 தேவகோட்டம்
11. சண்டேசர்
12,19. நந்தி
13,20. பலிபீடம்
18. தலவிருட்சம்
21. கொடிமரம்
22. சூரியன்
23. சந்திரன்
24. கோபுரவிநாயகர்
25. முன்மண்டபம்

## 6. வயிரவன்பட்டிக் கோயில் அமைப்பு :




1. வளரொளிநாதர்
2. வயிரவர்
3. வடிவுடையம்மை
4. பள்ளியறை
5. விநாயகர்
6. நடமாடும் விநாயகர்
7. தட்சிணாமூர்த்தி
8. அடிமுடிகாணா நாதர்
9. பிரம்மா
10. துர்க்கை
11. சண்டேசர்
12. தலவிருட்சம்
13. நடராசர்
14. நந்தி
15. பலிபீடம்
16. கொடிமரம்
17. அறுபத்துமூவர்
18. சோமாசுக்கந்தர்
19. ஆறுமுகன்
20. மகாலெட்சுமி
21. நவகோள்கள்
22. சனி பகவான்
23. சந்திரன்
24. சூரியன்
25. கோபுர விநாயகர்
26. முப்பலிக் கருப்பர்

## 7. நேமம் கோயில் அமைப்பு :




1. செயம்கொண்ட சோழீசர்
2. நடராசர்
3. சௌந்தரநாயகி
4. பள்ளியறை
5. வயிரவர்

6-10 தேவகோட்டம்

11. சண்டேசர்
12. சோமாசுக்கந்நர்
13. செயங்கொண்ட விநாயகர்
14. ஆறுமுகன்
15. பெருமாள்
16. கயலக்குமி
17. சந்திரன்
18. சூரியன்

## 8. இலுப்பைக்குடிக் கோயில் அமைப்பு :




| | | | |
|---|---|---|---|
| 1 | தான்தோன்றி ஈசர் | 12 | விநாயகர் |
| 2 | நடராசர் | 13 | காசிவிசுவநாதர் |
| 3 | சவுந்தரநாயகி | 14 | முருகன் |
| 4 | பள்ளியறை | 15 | கயலக்குமி |
| 5 | வயிரவர் | 16 | தலவிருட்சம் |
| 6-10 | தேவகோட்டம் | 17 | சந்திரன் |
| 11 | சண்டேசர் | 18 | சூரியன் |

## 9. தூரைக்குடிக் கோயில் அமைப்பு:




1. தேசிகநாதர்
2 நடராசர்
3. ஆவுடைநாயகி
4. பள்ளியறை
5. வயிரவர்
6-10 தேவகோட்டம்
11. சண்டேசர்
12. நவகோள்கள்
13. சோமாசுக்கந்தர்
14. விநாயகர்
15. ஆறுமுகன்
16. கயலக்குமி

## 10. வேலங்குடிக் கோயில் அமைப்பு :




| | | | |
|---|---|---|---|
| 1 | கண்டீசர் | 6-10 | தேவகோட்டம் |
| 2 | நடராசர் | 11 | சண்டேசர் |
| 3 | காமாட்சி | 12 | நவக்கிரகம் |
| 4 | பள்ளியறை | 13 | சந்திரன் |
| 5 | வயிரவர் | 14 | சூரியன் |

# 11. இரணியூர்க் கோயில் அமைப்பு :




| | | | |
|---|---|---|---|
| 1 | ஆட்கொண்ட நாதர் | 15 | நடராசர் |
| 2 | சிவபுரந்தேவி | 16 | நந்திகேசுவர் |
| 3 | வயிரவர் | 17 | பலிபீடம் |
| 4 | விநாயகர் | 18 | கொடிமரம் |
| 5 | சோமசுக்கந்தர் | 19 | நவகோள்கள் |
| 6 | ஆறுமுகன் | 20 | சந்திரன் |
| 7 | கயலக்குமி | 21 | சூரியன் |
| 8-12 | தேவகோட்டம் | 22 | அலுவலகம் |
| 13 | சண்டேசர் | 23 | போகசாலை |
| 14 | பள்ளி அறை | | |

## 12. பிள்ளையார்பட்டிக் கோயிலமைப்பு :



குடைவரை கோவில் உள்ளிட்ட திருக்கோவிலின் வரைப்படம்.

1. மருதங்குடி நாயனார் (மருதீசர்), 2. அர்த்த மண்டபம், 3. மகாமண்டபம், 4. சண்டீசர், 5. வாடாமலர்மங்கை: 6. மருதமரம் (தலவிருட்சம்): 7. திருமுறை - திருமறை மண்டபங்கள்; 8. அலங்காரமண்டபம்; 9. மடைப்பள்ளி, 10. மருதீசர் திருவாயில் ராஜகோபுரம்; 11. சகடக்கூடம்; 12. சுனை; 13. நால்வர், அகோரமூர்த்தி, சப்தகன்னியர், காட்சி விநாயகர்; 14. தனியம்மன், சோமாஸ்கந்தர்; 15. பிரகார விநாயகர்; 16 விசுவநாதர், விசாலாட்சி வள்ளி-தெய்வானையுடன் ஆறுமுகப் பெருமான், பசுபதீசர் முதலிய மூர்த்திகள். 17. தெண்டாயுதபாணி; 18. துர்க்கை-லட்சுமி-சரஸ்வதி; 19. பைரவர்; 20. நவக்கிரக மண்டலம்; 21. பிள்ளையார் திருவாயில் ராஜகோபுரம்; 22. பள்ளியறை: 23. சிவகாமி; 24. வரைக்கிணறு.

## 13. இளையாத்தங்குடிப்பெருமாள் கோயில் அமைப்




| | | | |
|---|---|---|---|
| 1&4 | இராமர் | 11 | ஆண்டாள் |
| 2&5 | சீதை | 12 | கருடன் |
| 3&6 | இலக்குமணன் | 13 | கொடிமரம் |
| 7 | ஆண்டாள் | 14 | பலிபீடம் |
| 8 | நடமாடும் கண்ணன் | 15 | மடப்பள்ளி |
| 9 | தாயார் | 16 | அறை |
| 10 | அலர்மேலுமங்கை | 17 | ஆஞ்சநேயர் |

## 14. வேலங்குடிப் பெருமாள் கோயில் அமைப்பு :




| | |
|---|---|
| 1&4 | இராமர் |
| 2&5 | சீதை |
| 3&6 | இலக்குமணன் |
| 7 | ஆண்டாள் |
| 8 | நடமாடும் கண்ணன் |
| 9 | தாயார் |
| 10 | அலர்மேலுமங்கை |
| 11 | ஆண்டாள் |
| 12 | கருடன் |
| 13 | கொடிமரம் |
| 14 | பலிபீடம் |
| 15 | மடப்பள்ளி |
| 16 | அறை |
| 17 | ஆஞ்சநேயர் |

## 15. இரணியூர்ப் பெருமாள் கோயில் அமைப்பு :




| | | | |
|---|---|---|---|
| 1 & 4 | இராமர் | 11. | ஆண்டாள் |
| 2 & 5 | சீதை | 12. | கருடன் |
| 3 & 6 | இலக்குமணன் | 13. | கொடிமரம் |
| 7. | ஆண்டாள் | 14. | பலிபீடம் |
| 8. | நடமாடும் கண்ணன் | 15. | மடப்பள்ளி |
| 9. | தாயார் | 16. | அறை |
| 10. | அலர்மேலு மங்கை | 17. | ஆஞ்சநேயர் |

# 16. முகபத்திர வேலையின் கட்டட பிளான்



# நிழற் படங்கள்



1. சமணர் சிலை
இளையாத்தங்குடி (பக்கம் 39)



2. தேசி விநாயகப் பிள்ளையார் (கற்பக விநாயகர்)
பிள்ளையார்பட்டி (பக்கம் 66)



2 அ. தேசி விநாயகப் பிள்ளையார்
சிற்பத்தைச் செதுக்கிய சிற்பியின் பெயர் உள்ள
கல்வெட்டு (பக்கம் 67)



3. கைலாசநாதர் இலிங்கம்
இளையாத்தங்குடி (பக்கம் 69)



4. ஐந்நூற்றீசுவரர் இலிங்கம்
மாற்றூர் (பக்கம் 69)



5. வளரொளிநாதர் இலிங்கம்
வயிரவன்கோயில் (பக்கம் 69)



6. செயங்கொண்ட சோழீசர் இலிங்கம்,
நேமம் (பக்கம் 69)



7. தான்தோன்றி ஈசுவரர் இலிங்கம்,
இலுப்பைக்குடி (பக்கம் 69)



8. தேசிநாதர் இலிங்கம்,
சூரைக்குடி (பக்கம் 69)



9. கலாடீசுவரர் இலிங்கம்,
வேலங்குடி (பக்கம் 70)



10. ஆட்கொண்டநாதர் இலிங்கம்,
இரணியூர் (பக்கம் 70)



11. திருவீசர் இலிங்கம்,
பிள்ளையார்பட்டி (பக்கம் 70)



12. ஆவுடை நாயகி அம்மன், சூரைக்குடி (பக்கம் 70)



13. நித்தியகல்யாணி அம்மன், இளையாத்தங்குடி (பக்கம் 71)



14. பெரியநாயகி அம்மன்,
மாற்றூர் (பக்கம் 71)



15. வடிவுடையம்மை, வயிரவன்பட்டி (பக்கம் 71)



16. சவுந்தரநாயகி அம்மன்,
நேமம் (பக்கம் 71)



17. சவுந்தரநாயகி, இலுப்பைக்குடி (பக்கம் 71)



18. காமாட்சி அம்மை, வேலங்குடி (பக்கம் 71)



19 சிவபுரந்தேவி அம்மன், இரணியூர் (பக்கம் 71)



20. சிவகாமி அம்மன்,
பிள்ளையார்பட்டி *(பக்கம் 71)*



21. வயிரவர், சூரைக்குடி *(பக்கம் 74)*



௨௨. வயிரவர், இலுப்பைக்குடி (பக்கம் 74)



௨௩. தட்சிணாமூர்த்தி, இலுப்பைக்குடி (பக்கம் 80)



24. தலவிருட்சம் மருதமரம், பிள்ளையார்பட்டி
(பக்கம் 82)



25. தலவிருட்சம் : அழிஞ்சிமரம்,
வயிரவன்பட்டி (பக்கம் 82)



24. தலவிருட்சம் மருதமரம், பிள்ளையார்பட்டி
(பக்கம் 82)



25. தலவிருட்சம் : அழிஞ்சிமரம்,
வயிரவன்பட்டி (பக்கம் 82)



26. தலவிருட்சம் : இலுப்பைமரம்,
இலுப்பைக்குடி (பக்கம் 82)



27. தெய்யனாஞ் செட்டியார் சதாசேவைச் சிற்பம்
வயிரவன்பட்டி (பக்கம் 87)



28. சொக்கஞ் செட்டியார் சதாசேவைச் சிற்பம், வயிரவன்பட்டி (பக்கம் 87)



29. கல்லாப்பேட்டை சமீன்தார் சதாசேவைச் சிற்பம், இளையாத்தங்குடி (பக்கம் 88)



29. அ. குதிரைவீரர், வயிரவன்பட்டி (பக்கம் 96)



30. அனுமனை வணங்கும் இராமர்,
வயிரவன்பட்டி (பக்கம் 97)



31. காலசம்காரமூர்த்தி, இரணியூர் (பக்கம் 98)



32. நரசிங்கமூர்த்தி, இரணியாகரசம்
இரணியூர் (பக்கம் 100)



33. திருநிலைச் சிற்பங்கள், மாற்றூர் (பக்கம் 108)



33. அ. 1. நடராசர் செப்புத்திருமேனி (முன்புறத் தோற்றம்) பிள்ளையார்பட்டி (பக்கம் 108)



33. அ. உ. அ. நடராசர் செப்புத்திருமேனி (பின்புறத் தோற்றம்) பிள்ளையார்பட்டி (பக்கம் 108)



34. நடராசர் செப்புத் திருமேனி இளையாத்தங்குடி (பக்கம் 109)



35. சந்திரசேகரர் (முன்புறம்)
பிள்ளையார்பட்டி, (பக்கம் 110)



36. சந்திரசேகரர் (பின்புறம்)
பிள்ளையார்பட்டி, (பக்கம் 110)



37. சந்திரசேகரர் தனி அம்மன் செப்புத்திருமேனிகள் நேமம், (பக்கம் 110)



38. சந்திரசேகரர் செப்புத் திருமேனி இலுப்பைக்குடி (பக்கம் 110)



39. கௌரி செப்புத்திருமேனி (முன்புறத்தோற்றம்)
பிள்ளையார்பட்டி (பக்கம் 111)



40. கௌரி (செப்புத்திருமேனி (பின்புறத்தோற்றம்)
பிள்ளையார்பட்டி (பக்கம் 111)



41. கௌரி செப்புத்திருமேனி
இளையாத்தங்குடி (பக்கம் 111)



42. கௌரி செப்புத்திருமேனி மாற்றூர் (பக்கம் 111)



**43.** கௌரி செப்புத்திருமேனி
வயிரவன்பட்டி (பக்கம் 111)



44. கௌரி செப்புத்திருமேனி நேமம் (பக்கம் 111)



45. கௌரி செப்புத்திருமேனி
இலுப்பைக்குடி (பக்கம் 111)



46. சோமாசுக்கந்தர், சூரைக்குடி (பக்கம் 112)



47. சோமாசுக் கந்தர் நேமம் (பக்கம் 112)



48. வயிரவர், வயிரவன்பட்டி (பக்கம் 113)



**49. விமானத்திலுள்ள சுதைச்சிற்பங்கள், இரணியூர் (பக்கம்122)**



**50. நிலைக் கதவிலுள்ள மரச்சிற்பங்கள் (வயிரவன்பட்டி) (பக்கம்123)**



51. தேரிலுள்ள மரச் சிற்பங்கள், இலுப்பைக்குடி (பக்கம் 123)



52. இடபவாகனம், வயிரவன் பட்டி (பக்கம் 126)



53. அன்னவாகனம்,
பிள்ளையார்பட்டி (பக்கம் 26)



54. மயில்வாகனம், வயிரவன்பட்டி (பக்கம் 126)



**55.** மூன்று நிலை விமானம்,
இரணியூர் (பக்கம் 131)



**56.** குமுதம் செகதி வேலைப்பாடுகளுள்ள
அதிட்டானப்பகுதி, பிள்ளையார்பட்டி (பக்கம் 132)



57. 'ப' வடிவில் அமைந்த புதிய பாணி அதிட்டானம் வயிரவன் பட்டி (பக்கம் 132)



58. முன்னும் பின்னுமாய் அமைந்த புதிய பாணி அதிட்டானம், இலுப்பைக்குடி (பக்கம் 132)



59. புதிய பாணி அதிட்டானம்,
இரணியூர் (பக்கம் 132)



60. தெட்சினாமூர்த்தியின் அழகுமிகு தேவகோட்டம்
இலுப்பைக்குடி (பக்கம் 132)



61. உயர்வான பீடத்திலுள்ள நந்தி வாகனம், நேமம் (பக்கம் 135)



62. கபோதகத்தில் உள்ள கலைமிகு கூண்டுகள், இரணியூர் (பக்கம் 136)



63. அற்புதக் கோபுர வகையைச் சார்ந்த இராசகோபுரம், இளையாத்தங்குடி (பக்கம் 136)



64. இராசகோபுரமும் பிற விமானங்களும், மாற்றூர் (பக்கம் 136)



62. இராச கோபுரமும் பிற விமானங்களும்,
நேமம் (பக்கம் 186)



63 இராசகோபுரமும் பிற விமானங்களும்
இருப்பைக்குடி (பக்கம் 186)



67. இராசகோபுரம், சூரைக்குடி (பக்கம் 186)



68. இராசகோபுரமும் பிற விமானங்களும்,
வேலங்குடி (பக்கம்186)



69. இராசகோபுரமும் பிற கோபுரங்களும்,
இரணியூர் (பக்கம் 186)



70. இராசகோபுரம், பிள்ளையார்பட்டி (பக்கம் 186)



83. ராஜகோபுரம், வயிரவன்பட்டி (பக்கம் 136)



ஆய்வாளர் கண்டுபிடித்த சிற்பங்கள்
(இளையாத்தங்குடி.)



71. கற்சாளரம் அமைந்த அருத்த மண்டபம்,
பிள்ளையார்பட்டி (பக்கம் 139)



72. தலபுராண ஓவியங்கள்
வயிரவன் பட்டி (பக்கம் 140)



73. தலபுராண ஓவியம்,
இளையாத்தங்குடி (பக்கம் 141)



74. தலபுராண ஓவியங்கள்
வயிரவன் பட்டி (பக்கம் 141)



75. மீனாட்சி திருக்கல்யாண ஓவியம், இளையாத்தங்குடி (பக்கம் 142)



76. திருவிளையாடற் புராண ஓவியங்கள், (பக்கம் 148)



77. இராமாயண ஓவியங்கள்,
வயிரவன்பட்டி (பக்கம் 145)



78. குருவழிபாடு, மாற்றூர் (பக்கம் 179)



79. குருவழிபாட்டில் குருவின் தண்டம், வேலங்குடி (பக்கம் 180)



80. நாகவழிபாடு, பிள்ளையார்பட்டி (பக்கம் 183)



81. இருகை விநாயகர், குன்றக்குடி (பக்கம் 231)



82. இருகை விநாயகர்,
ஆப்கானிசுத்தான் (பக்கம் 282)

# 3. கல்வெட்டுகள்

## 3.1. இளையாத்தங்குடிக் கல்வெட்டுகள்

### 3.1.1. 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண் 14

சிதைந்த பெருமாள்கோவிலின் வடக்குச்சுவரில் உள்ளது
வரி : 6) (காலம் : கி.பி. 1526

1. ஸ்வஸ்தி ஸ்ரீவன் வஹா வண்டியவேரநு ராஜாயிரா ஜ ராஜவர ஸவேரன் ஸ்ரீ விரவ ர வஸ்ரீகூஷ (ண) ய எஒவ ஹாராயர் உரயிவிராஜல வண்ணி அருளானின்ற காத்த சததுளது ய அன்மெல் செல்லானின்ற விய ஞ உத்தராயனத்து கைச(ா)ரிது வாகிய கும்பனாயற்று சுவரவக்ஷ்வத்து உல உத்தியும் சுக்கிறவாரகும் பெற்ற அனுராதத்து நாள்

2. தக்கார்கு தக்கான் இராகுத்த மிண்டன் அய்யனையும் அரச னையும் ஒருவனையு(யின) ஒழிய சொரிவன்னிய சூரியன் பாண்டியன்படி அ(ழி)க்க பரியெறும் மானதன் கொனதவிரன் பதினெட்டு வன்னியரை முதுவு பிறம் கண்டான் சூரைக்குடி அரசு பள்ளி கொண்ட பெருமாள் விசையாலைய தெவர்.

3. குமாரர் வயிரவனயினுர் விசையாலையதெவர் நாநா ஓாதரத்து நாநா உலதெரத்து தலெஷவிஒஒவது ஹாஜகங்களுக்கும் யாராவ கவர வாகக குடுத்த கல்வாசல்நாட்டு நம்மிடனாயக்த் தனம் ஆன இளையாத்தக்குடி புரவில் அம்பனூரை பள்ளி கொண்டான் அகரம் என்று

4. ம் பாகம் ரு ய காம் ஙா ரு ய கா என்று நியமித்து குடுக்கை யில் இவ்வூற்கு பெருனுற்கு எல்லே ஆவது தெற்கு மெற்கு வடக்கு முன்னுள் பூறுவம் உள்ள எல்லேப்படியும் கிழ்பாற்கு எல்லேப்படிணசுவாமி ஊறணி மெல்கரைக்கு மெற்கும் ஆக இசைந்த பெருனார்கு எல்லேக்கு உட்பட்டதில் உண்டாகிய

5. தானமான்னியம் ஷ நிஞ்(ங்?)கலாக நியிஞீகெடிவ ஐய வாஷாணா ஓஷஹொடி தெ ஐ உலாவ ஓங்களும் தாநாயி விநியே ஷிஷயங்களுக்கு யொடிகாக சூவணாக(க) உாயியாக உலவது வாளுாக சூனுளுவித்துக் கொள்ளவுமா (ச)ங்குடி எப்பொதும் பொலெ .. நினறு மஹ(ாசு)ஐ நங்களுக்கு ஆம்ப னூர் குடுத்தமைக்கும்

6. வயிரவ நயினார் விசையாலையதெவர் ........ இப்படிக்கு இன்த தன்மதானம் குடுத்த நின்றையம் எழுதினென் கான ளூட்டு ஆதனூர் உடையான் கரணிக்கம் ஆலேவாய்ப் பெருமாள் குவலேயத்தரையன் எழுத்துஉ

## 3. 1. 2. 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண் 15

சிதைந்த பெருமாள் கோயிலின் வடக்குச்சுவரில் உள்ளது
வரி : 7) (காலம் : கி.பி 1229

1. ஸ்வஸ்தி ஸ்ரீ (iix) ஸ்ரீ மெல்கித்திக்கு மெல் ஸ்ரீ கொமாறபன் மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் எம்மண்டலமும் கொண் டருளியஸ்ரீ குலசெகர தெவற்குயாண்டு உயதுவது கல்வாயில் நாட்டுகாளையர்காலேப்

2. பெருந்தெருவான குலசெகரபுரத்துக் கல்வாயில் நாட்டு விண்ணவரெ(ா)ம் பெருமாள் கொயில் திருவடிப்பிடிக்கு நம்பி மாரும் சிகாரியஞ் செய்வார்களும் இந்நயநார் திருமடை விளா கத்து இ

3. (கு)க்கு (ம்) வெராஹணரில் எடுத்தான் கண்ணுளனுக்கு உலாயனம் பண்ணிக்குடுத்த பரிசாவது இத் திருவிடை

யாட்டத்து இவன் கொண்ட நிலத்துக்கெல்லை கிழக்குத் தில்லை நாயகப்பிள்ளை கிணற்றுக்கு மெற்கு

4. தெற்கெல்லை ஆழ்வான் பிள்ளை தொட்டத்து வடக்கும் (கி)ழக்கு எல்லை வ(லை)யான் காலுக்கு கிழக்கும் வடக் கெல்லை இக்காலுக்கு தெற்கும் இவ்வெல்லைக்கு உப்பட்ட மரம் எரிகிணறுமற்றும் மெப்பெறப்பட்ட

5. னவும் அனுபவித்து ஆண்டொன்றுக்கு இரண்டு பணங்கடமை இறுப்பானுகவும் மெலைத் திருவிதியில் முன்பு விலைகொண்டு டைய மனையும் தொட்டமும் வாநிளமும் நம்பிமாரில் உலக முண்ட பெருமாள் மனைக்கு

6. தெற்க்கும் அஞ்ஞூற்று நம்பி மனைக்கு வடக்கும் அருகதெவர் புன்சைக்கு கிழக்கும் திருவிதிக்கு மெற்கும் இவ்வெல்லைக் குட்பட்ட நிலத்துக்கு வடக்கு சிறகில் அஞ்சு மனை விழுக் காடு கடமை இறுத்து சந்திராதித்தவற்செல்

7. ...... கலநெல்லும் எள்வருகு திணைக்கு மாத்தால் தூணிப் பதக்கு (ம்ய) நெல்லொபாதி இறுப்பதாகவும்

## 3.1.3. 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண். 16

சிதைந்த பெருமாள் கோயிலின் வடக்குச்சுவரில் உள்ளது வரி 11) (காலம் கி. பி. 1223

1. ஸ்வஸ்திஸ்ரீ(lix) கொமாறபன்மரான திரிபுவனச் சக்கரவத்தி கள் சொணாடு வழங்கியருளிய ஸ்ரீ சுந்தரபாண்டி(யெ) தவற்கு யாண்டு எவது கற்கடகநா

2. யற்று இருபத்தெழாந் தியதியும் சனிக்கிழமையும் உத்திராட (த்)து நாள் கண்டந் ஆளுடையானை கல்வாயில்னுடாழ் வான் (என)ன் மாத்தூர் உடையான் வடகொ

3. புர முடையான் மணவாளப் பெருமாளுக்கு விற்ற செங்கரைக்கு எல்லையாவது கிழ்பாற்கெல்லை காளையர் காலப் பெருந்தெருவில் ஸ்ரீ கயிலாஸ முடையநாயனு

4. ர் தெவதானத்து மெலெல்லைக்கு மெற்கும் இத்தெவதான (த்த)து வடவெல்லைக்கு வடக்கும் தென்பாற்கெல்லை இவன் விலை (கொண்) ட குடிக் காட்டெல்லைக்கு வ

5. டக்கும் மெல் பாற்கெல்லை சிறுகுடி எல்லைக்கு கிழக்கும் வடபாற்கெல்லை இளையாத்தக்குடிககு எ……… இறக்கக் கட்டின குளவெல்

6. லைப்பரிப்புக்குத் தெற்கும் ஆக இவ்விசைந்த பெருநான்கெ (ல்$^{x}$) லையுள் அகப்பட்ட நிலம் உ(ண்)ணிலம் ஒழிவின்றி எம்மிலிசைந்

7. தவிலைப் பொருளுக்கு விற்று பொருளறக் கொண்டு விற்று விலை ஒலை செய்து குடுத்தொம் இச்செங்கரையில் நிர் நிலம் (ஆ)

8. (ய) விளைந்து வரி கொல்குடி தர …… நிலத்துக்கு இறை கடமை அந்தராயம் வரிவெட்டி முட்டாவான் எ பெற்பட

9. டதும் உளபட மாத்தால் இருதாணி. . . . யில் நாயக(ட்டு?) விண்ணகர் எம்பெருமாளுக்கு இந்நாட்டு க. . மரக்காலாலெ இது

10. ப்பதா (க$^{x}$ )வும் சந்திராதித்தவற் செ(ல்வதா)கவும் இப்படி ஸம்மதித்து வின்று கல்வெட்டிக்குடுத்தொம் கண்டன் ஆளுடையா

11. ன் ஆன கல்வாயி நாட்டாழ்வானென் மாத்தூர் உடையாந் வட கொபுரமு (டை$^{x}$) யா (ர் $^{2}$)மணவாளப் பெருமாளுக்கு IIX

# 3.1.4. 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண் 17

சிதைந்த பெருமாள் கோயிலின் வடக்குச் சுவரில் உள்ளது
வரி : 14) (காலம் : கி.பி. 1221

1. ........றபன்மரான திரிபுவனச் சகரவத்திகள் சொணாடு கொண்டருளிய ஸ்ரீ சுந்தர பாண்டியதெவற்க்கு யாண்டு ரு வது மினநாயிற்றுப் பதின் முன்றாந்தியதியும்

2. ... ....மயும் பெற்ற மகத்து நாள் கண்டன் ஆழ்வுடையா னான கல்வாயில் நாடாழ் வானென் காஙயகாலப் பெருந் தெருவில் மாத்தூருடையான் வடகொ

3. ........ணவாளப் பெருமாளுக்கு விற்றுக் குடுத்த குடிக்காட்டு வயலுக்கும் குளத்துக்கும் நத்தத்துக்கும் பெருநான் கெல்ஙல யாவுது கிழ்பாற்

4. ... .....தக்குடி வயலில் எழகச்சக்கரவத்தி வயக்கல் மெல்வரம் புக்கு மெற்கும் எழகச் சக்கரவத்தி வயக்கல் மெல்வரம் பின் கெர் வடக்கு

5. ..... ...க்கெல்ஙலயாக நாட்டின கல்லுக்கு மெற்கும் கல்வாயில் நாடன்கிழ் வரம்புக்கு மெற்கும் தெந்பாற்கெல்ஙல வளநலூர் குளவெல்ஙல

6. ....... தந்வரம்பின் நெர் மெற்கொடிய வரம்புக்கு வடக்கும் மெல் பாற்கெல்ஙல குலம்த எனரி வயல் சிவலவர் செக்கிழ் வரம்புக்கு கிழக்கும் இடைய

7. ... ன் செய்க் கிழ் வரம்புக்கு கிழக்கும் இக்குடிக்காட்டுக் குளக் கடை..குடி எல்ஙலக்குக் கிழக்கும் வடபாற்செல்ஙல இக் குடிக்காட்டுக் குளம் மார்வுகரைக்கு அப்

8. .... பால் இரண்டு மா நிலக்கொத்தாரம் இக்குளத்துக் கெல்ஙல யாவுதாகவும் இதுக்கு வடக்குறிமாறினிடம்ஏறக்கடவதாகவும் கல் வாயில்னுடன் அடயாவடவா

9 ளஞ் செய்து கொள்ளக் கடவனுகவும் ஆக இவ்விசைந்த பெருஞன் கெல்லையுள்ளகப்பட்ட நிலம் உண்ணில மொழி வின்றி அனைதீதும் இ

10. ... செங்கறைப் புறகரைக்குப் பாலுள்ள நிர்புகுது வதாகவும் ஆக இவ்வனைத்தும் எம்மிலிசைந்து விலைப்பொருளுக்கு விலைக்குற விற்று பொருளறக்

11. ... ல் செய்து குடுத்தொம் இக்குடிக்காட்டில் இறைகுடிமைவரி எப் பெற்பட்டதுக்கும் கல்வாயில் நாட்டுக் காணியகாலப் பெருந்தெருவுக்கும் அரசனுராயண

12. ... மெற்கொயிலான கல்வாயில் நாட்டுவிண்ணகர்எம்பெருமானுக்கு கொல்குடி தாங்கியால் புள்ளிபுக்க நிலம்ஒரு மாவுக்கு [இ] ரு கல நெல்லொ பாதிக்

13. ...இறுக்கக கடவுதாகவும் இப்படி சந்திராதித்தவற் செல்வதாகவும் இப்படி சம்மதித்து விற்றுக் கல்வெட்டிக் குடுத்தெந் கண்டன் ஆழ்

14. ... ல் நாடாழ்வானென் மாத்தூருடையான் வடகொபுரமு

## 3 1.5. 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண் 18

சிதைந்த பெருமாள் கோயிலின் வடக்குச் சுவரில் உள்ளது வரி : 14 ) (காலம் கி. பி. 1221

1. ஸ்வஸ்தி ஸ்ரீ (IIX) கொமாரபன்மரான தி(ரிபுவனச்) சக்கர வத்திகள் சொணாடு கொண்டருள்ளிய ஸ்ரீ விரஸுஜ ர பாண்டிய தெவக்கு (யாண்டு) ஐஞ்சாவதின் எதிராமாண்டு துலா நாயற்று

2. இருபத்தாளுந்தியதியும் சனிக்கிழமையும் உத்திராடமுமான நாள் கண்டன் ஆழியுடையானுன கல்வாயில் நாடாவாழ்வா னென் காஊய் காலப்பெருந்தெருவில் வியாபாரி கிளிப்

3. பற்றுழான் கணவதி திருவெகம்பமுடையான்ளுன இன்ன பூ நாட்டு வெளானுக்கு விற்றுக்குடுத்த நங்காணிப் பற்ருன கு(லம்) தனெரி மெஙலக்கு டிக்காட்டுக்கும் குளத்து

4. க்கும் பெரு நான்கெல்லேயாவது (வட) பாக்கெல்லே குலம்த னெரித் தென்கரைக்கிழ் நத்த(த் x )து தையடுத்த கங்கை நாடாழ்வான் புஞ்சைய்க்கும் கற்பதெவன் செய்க்கும் இராச

5. கெம்பிரப் பல்லவதரையன் செக்கு அழகாஊ விரப்பல்லவத ரையன் பெற்ரு வயக்கலுக்கும் மெற்கும் வல்லான் (ன) கொல்லேப் பற்றுக்கு மெற்கும் செட்டன் பஞ்சன் ஓமனங்

6. கைவயக்கல் மெ(ல்a x) வரம்புக்கு மெற்கும் தென்பாற் கெல்லே ஆமால நாராயணப்பல்லவ தரையன புன்சைய்யில் வரம்பு மெற்கு நொக்கிப் புன்னங்குடிக்கால்லி

7. லெ முட்டின செல்வைக்கு வடக்கும் மெல்பாற்கெல்லே(புன்) னாங்குடிக்காலுக்கும் இக்குடிக்காட்டுக் குளத்து முவ(ழிநிம) ந்தப் பற்றில் எல்லேக்கு கிழக்கு-

8. ம் வடபாற்கெல்லே நிறைஞ்சான் காலுக்கு தெற்கு இக் குளத் தில் வட கடைக் கொம்பு குலம்தனெரிக் குளக்கரைக்கெ முட்டவும் ஆக இவ் விசைந்த பெரு

9. நான் கெல்லேயுள்ளகப்(ப)ட்ட நிலமும் குளமும் குளவாய்த் தலேகளும் மற்றும் எப்பெர்ப்பட்(ட x )னவும் உண்ணில மொழி வின்றி எம்மிலி

10. சைந்த விலேப் பொருளுக்கு விலேக்குறவிற்று பொருறைக் கொண்டு விற்றுக் குடுத்த இக்குடிக் காட்டில் கடமை அந்த ராயம் வெட்டி முட்டா

11. வான் நாடுபடு குடிமை எல்லா மகப்படக் கொல்குடி தாங்கி யால் புள்ளிபுக்க நிலத்துக்கு மாத்தால் இ(ரு) கல நெல்லும் ஆடிக் குறுவைக்கும் அற்பசிக்குறு

12. வைக்குமாத்தால் கலநெல்லும் எள்திணைவரகுக்கு மாத்தால் தூணிப் பதக்காகவும் இப்படியால் வந்த இறை இறுப்பதாக வும் இவ்விறை காளையர் காலப்பெ

13. ருந்தெருவில் கல்வாயில் நாட்டு விண்ணகரெம் பெருமானுக்கு (பி)றந்த நாள் மிருகசிரஷத்தில்லெ விசெஷத் திருவாராதனைக் கும் திருப்பொகைத்துக்கும் உட

14. லாவுதாகவும் இபடி சந்திராதித்தவற் செல்வதாகவும் இக் கடமை...இப்படி சம்மதித்து விற்றுக்குடுத்த கண்ட(னு)ருடை யான் கல்வாயில் நாடாழ் வானென் இனை(ம்பரந்) (IIx)

## 3.1.6. 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண். 19

சிதைந்த பெருமாள் கோயில் வடக்குச் சுவரில் உள்ளது
வரி: 18] [காலம் :கி.பி 1223

1 ஸ்வஸ்திஸ்ரீ [IIx] கொமாறபன்மரான திரிபுவனச்சக்க

2 ரவத்திகள் சொனாடுவழங்கி அருளினசுந்தரபாண்

3. டியதெவற்கு யாண்டு எழாவது கல்வாயில் நாட்டு வெ

4. மல்வகை நாடாய் யிசைந்த நாட்டொம் இந்நாட்டு

5. க் காளைய் காலப் பெருந்தெருவில் வியாபாரிகளில் மாத்து

6. ர்ருடையான் வடகொபுரமுடையான் மணவாளப் பெருமாளு க்கும்கி-

7. ளிப்பற்றுழான்/கணவதி திருவெகம்பமுடையான் னுனஇன்ன ம்பு[Bx] நா

8. டுவெளானுக்கும்/எங்கள் னுயனர் உடையார் கல்வாயில் நா டாழ்வ

9. வார் காரண கிழமையாக விற்றுக்குடுத்த குடிகாடாவது அழகி யமண

10. வாள் நல்லூரும் இதுக்கு உடன்புரவான செங்கனர்பற்று அகப்பட்டவ

11. ஊயற் சுற்றும் குலம் தெரிமெல் பால் குடிக்காடு வஊயிற் சுற்றுக்கு

12. ம்னுயனுர் உடையார் சுல்வாயி நாடாழ்வார் கடமை யந்தராயம் வெட்டி

13. முட்டாவாள் கணக்கப்பெறு வாசல் கலம் வாமரக்கலம் மற்றும் மெப்பெ

14. ற் பட்டனவும் கல்வாயில் நாட்டு விண்ணகர் எம்பெருமான் கொயீரில்லெ

15. கல்வெட்டி குடுத் [தX]மையில் நாங்கலுமாதக்காசு நாடென்ற அச்சுவரி

16. பொன்வரி நாடெலக கடவன எப் பெற்பட்டனவு நா(ங்) களுந்தவி

17. ந்து நாட்டு புரவிலுயிறங்கிட்டு கல்வெட்டிக் குடுத்தொம்மெல்

18. வகை நாடாயிசைந்த நாட்டொம் (||x)

## 3.1.7. 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண். 20

சிதைந்த பெருமாள் கோயிலின் மேற்குச் சுவரில் உள்ளது
வரி: 3] [காலம்: கி.பி 1229

1. (ஸ்வஸ்திஸ்ரீ திர) புவநச்சக்கரவத்திகள்சிரிகுல செகரதெவற்கு யாண்டு யங்குவதி எதிர் எழாவது காத்திகைமாத...ை[கல்வாய்]

2. நாட் ...... ணி கிழவனுக்கு கற்புரவிலை கொண்டு காணிசெய்து குடுத்த நிலவணிகை மானுகாலுக்கு தெற்க்கு ..........ால் பொகிற காலுக்கு வடக்கும் மெற்எல்லை நிர் பொகிற வாக்காலுக்கு

3. ......ன் தொட்டத்துக்கு மெற்கும் இவெல்லைக் குட்பட்ட நிலத்துக்கு இறை எம்பெருமானுக்கு ஆட்டைக்கு அன........ க்கு புறக்கு குடுத்தொம் சந்தி

## 3.1.8. 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண். 21

சிதைந்த பெருமாள் கோவிலின் மேற்குச்சுவரில் உள்ளது
வரி 5) (காலம் கி. பி. 1229

1. ஸ்வஸ்திஸ்ரீ (XII) திரிபுவநச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலசெகர தெவற்கு யாண்டு யங ருவது எதிர் யஉடாவது மிதுந நாயற்று காந்நாடாந விருதராசபுய ..... யூர் ஊரர் இசைந்த..........லை நாட்டுக் காணிய காலப் பெருந்தெருவிலும் அரை

2. சநாராயணப் பெருந்தெருவிலும் திருமெற்கொயில் கல்வாயில் நாட்டு விண்ணகரெம் பெருமாநுக்கு எங்கள் ஊற்றியூர் வய ... கரும்பியூர் கி ..ஆழ்வாந் க..... .ாண்குடைய நிலந்......... விடங்கப் பெருமாளும் கண்ணந் அருளாளப் பெருமாளும்

3. இந்தக் கல்வாயில் நாட்டு விண்ணகர் எம்பெருமானுக்கு திரு விடையாட்டமாக நிர்வாத்துக் குடுத்த நிலங்கள் உய்யவந் தான் வயக்கலும் அதல செய்யும் கொறற......காடுந்தானும் திருப்பூவ...... ருவயக்கலும் ஆகத்தடி ஆறிநால் குடிதாங்கிக் கொலால் நிலம்.

4. இ(ர)ண்டு மாமுக்காணிக் கிழரைக்காலும் நாட்டார் நாட்டுப புரவு தவிந்து குடுத்தமையில் நாங்களும் ஊர்(ந்)து புரிலிலும் யிரங்கிட்டு எச்சொறு கூற்றரிசி வெட்.....ள் மற்றும் எப் பெற்ப...„ உள்ள(து× )ந் தவிந்து கல்வாயில் நாட்டு விண்ணகர் எம் பெருமா

5. நுக்கு நிர்வாத்துக் குடு(த்× ) தொம் ஊற்றியூர் ஊரார் இசைந்தஊரொம் கல்வாயில் நாட்டு விண்ணகர் எம்பெருமா நுக்குச் சந்திராதித்தவற்ச் செல்வதாக (க) (IIX)

## 3.1.9. 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண் 22

சிதைந்த பெருமாள் கோயிலின் தெற்குச்சுவரில் உள்ளது
வரி:5] [காலம்: கி.பி 1229

1. ஸவஸதிஸ்ரீ[IIx] திரிபுவநச் சக்கரவத்தி [கள்ஸ்ரீகுலை] செகரதெ வற்கு யாண்டு யநு வதின் எதிர் யப வதுபுரட்டாதிமாதம் கண்டந்[ா[நுடையா நா-

2. ந கல்வாயில் நாட்டாழ் வாநெந் பெருமுர் கிழவன் தெவன் தில்லை நாயகநுக்கு கற்பூர விலை கொண்டு காணி செய்து குடுத்த தொட்டம் வணிகைமான் காலு

3. க்கு வடக்கும் கூத்த குறுமணிக்கு கரைக்கு தெற்கும் கத்தரு றுணிவழிக்கு கிழக்கு பிடாரி மார் தொட்டத்துக்கு மெற்கும் இவ்வெல்லைக்குட்பட்ட தொட்டத்துக்கு இறை

4. கல்வாயில் நாட்டு விண்ணகர் எம்பெருமானுக்கு ஒராட்டை நாளைக்கு அரைக்காற் பழங்காசுஇறைதிருவிளக்குப் புறமாகக் குடுத்தொம் சந்திரா தித்தவற

5. செல்வதாக உ [IIx]

## 3.1.10. 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண் 23

சிதைந்த பெருமாள் கோவிலின் தெற்குச்சுவரில் உள்ளது
வரி 9) (காலம் கி. பி. 1235

1. ஸ்வஸ்திஶ்ரீ (IIX) கொமாறுபன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் எம்மண்டலமும் கொண்

2. டருளிய ஶ்ரீ குலசெகர தெவற்கு யாண்டு யசா ஐது கல்வாயில் நாட்டு இளையாத்தங்குடி ஊர்கு செந்

3. த ஊரொம் இ நாட்டு காளைய காலப் பெருந்தெருவில் கல்வாயில் நாட்டு விண்ணகர் எம்பெருமான் கொயி(ல் ×)

4. சி ெ(ன)(க) செனுபதியாற்குக் (கார்ன கிழமையாக) குடுத்த ஊராவது மாடக்குளகிழ் ம(து) ரையில் விய(ா) பாரி வ

5. ணிகைமா ராயநுக்கு காணியாகவும் இந்நாயனுர்க்கு கடமை(ம) யான செமநல்லூர்

6. இந்நா(ா)ய .......ம் இருதெ பொனமையில் இவர் பொன... கடமை...ற்ற வாழிட்டுப்பாடு பண்ணினமையில் இவ்வ...தல் இந் நாயனுர்கு இறையில்லி

7. காரணகிழ ...... நு வில்ப் பிரமாணம் பண்ணி குடுத்தொம் இவிளையாத்தக்குடி ஊர்ராக எம்... ஊர்ரொம் இக் கொயி(ல்) கரும்பில்...... பூந்தருள பண்ணிந மணவாள ஆழ்வாற்று

8. க்கு திருநா...தாக கல்லிலும் செம்பில்லும் வெட்டிக் குடுத் தொம் இளையாத்தக்குடி எ...ாயன் நாற்க்கு தமைதா நம்மாக வ...மனாத்து கலிங்கதரயன் எழுத்து

9. செம்பியன் பல்லவரையன் எழுத்து.. யன் எழுத்து தொண்டை மான் எழுத்து வழுதநாட்டுரைய(ர்) எழுத்து இப்...கள் சொல்ல இப்பிரம(ாண x )ம் எழுதினென்...கல்வாயில் நாட்டு வெள்ளன் எழுத்து(||x)

## 3.1.11. 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண் 24

சிதைந்த பெருமாள் கோயிலின் தெற்குச் சுவரில் உள்ளது
வரி. 5] [காலம்: சுமார் கி.பி 1235

1. ஸ்வஸ்திஸ்ரீ[||x] இப்ப
2. டை செய்தாந் நெ
3. ந் மலிச் செரி உடை
4. யாந் குழகந் சொ
5. ற்படி எணதந்மம்[||x]

## 3.1.12. 1926 ஆம் ஆண்டறிக்கைக் கல்வெட்டு எண் 25

சிதைந்த பெருமாள் கோயிலின் தெற்குச் சுவரில் உள்ளது
வரி: 16) (காலம் கி.பி. 1223

1. ஸ்வஸ்திஸ்ரீ[||x]சொணுடுவழங்கிஅருளியசுந்தரம்பாண்டியதெ
2. வற்க்கு யாண்டு எ வது கல்வாயில் நாடாழ்வான்னென் காணி
3. யர் காலப் பெருந்தெருவில் கல்வாயினுட்டு விண்ணகர் எ

